# புலவர் உலகம்

## கம்பன் கலை நிலை

மூன்றாவது தொகுதி.



ஆசிரியர்

ஜெகவீர பாண்டியனார்

மதுரை,
மதராஸ் சி. வரதராஜுலு நாயுடு பிரசில்
பதிப்பிக்கப் பெற்றது.

1944

# முகவுரை.

இது கம்பன் கலை நிலையுள் மூன்ருவது தொகுதி. காவிய நாயகன் ஆகிய இராமபிரான் கோசிக முனிவரோடு சென்றது, இடையே தாடகையைக் கண்டது, அவளைக் கொன்று தொலைத்து வென்றி வீரோடு சென்று வேள்வியை முடித்தது, உலக சரித்திரங்கள் பலவும் கேட்டது, அகலிகைக்கு நேர்ந்திருந்த சாபத்தை நீக்கி அக் குலமகளை அழைத்துக் கொண்டு போய்க் கவுதமரிடம் சேர்த்தது, மிதிலா புரியை அடைந்தது, இராச வீதியில் நடந்து செல்லுங்கால் சீதையைக் கன்னிமாடத்தில் கண்டு காதல் மீக்கொண்டது, பருகுகாதலோடு இருவரும் ஒருவரை ஒருவர் உவந்து நோக்கி உருகி நின்றது, அதன்பின் சனக மன்னனுடைய சபையினை அடைந்து வரிசை மிகப் பெற்றது, அங்கே அரிய வில்லை வளைத்து எவரும் துதி செய்து போற்ற அதிசய நிலையில் அமர்ந்தது, திருவயோத்தியிலிருந்து தசரதன் முதலாயினுர் வந்தபின் சீதையை மணந்து பெரு மகிழ்வுடன் இருந்தது, விசுவாமித்திர முனிவர் விடைபெற்றுச் சென்றபின் சிலநாள் மிதிலையில் தங்கியிருந்து மணமகளோடு திருவயோத்திக்கு எழுந்தது, இடையே வந்து பரசுராமன் எதிர்ந்தது, அத் தீரனை வலியடக்கி இவ்வீரன் வெற்றித்திருவுடன் மேன்மை எய்தி வந்தது முதலிய சரிதநிகழ்ச்சிகள் இதில் அடங்கியுள்ளன.

காவியச் சுவைகள் யாவும் சுரந்து சீவிய ஓவியமாய்ச் சிறந்து திகழ்கின்ற இந்தப் புனித சரிதத்தை மனித சமுதாயம் இனிது பயின்று இன்புற வேண்டும் என்று எம்பெருமானுடைய இணைமலரடிகளை மனம்மொழிமெய்களால் இறைஞ்சுகின்றேன்.

இங்ஙனம்
செகவீரபாண்டியன்.

# சிறப்புப்பாயிரம்.



மலர்தலை உலகில் நலனுற விரிந்த
கலைக்கடல் பலவும் கார்என மாந்தி
மன்பதை இன்புற அன்பெனும் மாரி
பண்புடன் பொழியும் பான்மையும் மேன்மையும்
விழுமிய நிலைமையும் மேதகு தலைமையும்
நுண்மாண் நுழைபுலம் உண்மாண் அமைந்து
புண்ணிய உருவாய்ப் புவிதனில் உதித்த
செகவீர பாண்டியச் செம்மல் அருளும்
அருமை நூல்கள் இருமையும் இன்பம்
உரிமையின் உதவி ஒளிசெய்து வரலால்
ஊழி தோறும் உயர்ந்து
வாழிய நலனே வாழிய நலனே.



சங்கத் தமிழைத் தனிவளர்த்த பாண்டியரே
இங்கத் தமிழை இனிதாகத்---துங்கமுடன்
மீண்டு புரக்க விழைந்து செகவீர
பாண்டியனாய் வந்தார் பரிந்து.

இராமன் அம்பு தாடகை மார்பைத் துளைத்துப் போயது என இவ்வளவில் சொல்லிவிடலாம்; அதனை எவ்வளவு எழிலுறுத்தி ஓவியநலங் கனிய இதில் இனிது இசைத்திருக்கிறார்! மொழிகளில் உணர்வொளிகள் தனிமிளிர்ந்துள்ளன.

அம்புக்குக் கொடுத்திருக்கும் அடைமொழிகள் ஆழ்ந்து ஆராயவுரியன. அரிய தவமுடைய பெரிய முனிவரது சாபமொழி போல் இராமபாணம் கருதியபடியே குறிதவறாமல் உடனே பயன் விளைக்கும் என்பார் "சொல் ஒக்கும் சரம்" என்றார்.

கடுமையும் வேகமும் விரைவையே குறிக்குமாயினும் முன்னது யாரும் தடுத்தற்கு அரிய வன்மையும் உடையது என்பதை உணர்த்தி நின்றது. எதிரே நேர்ந்த தடைகளனைத்தையும் கடந்து கருதிய குறியை உருவற அழிக்கும் உறுதி தெரிய வந்தது.

சொல் ஒக்கும் சரம், கடிய சரம், வேகச்சரம், சுடுசரம் எனத் தனித்தனி கூட்டி அடையின் தகைமைகளை நுனித்தறிந்து கொள்க. சோல் என்று பொதுவாகச் சொல்லியிருக்கிறதே, அது நல்ல தவமுனிவருடையது என்று கொண்டது எதனால்? எனின், அதன் இனமான பொருளின் தகுதி கண்டு என்க.

அருந்தவத்திற் சிறந்து உயர்ந்துள்ள முனிவர்கள் கருணை புரிந்து சொல்லினும், கடுத்து மொழியினும் உடனே வாழ்வும் வீழ்வும் முறையே விளைத்து விடும் ஆதலால் அச்சொல் மந்திரமாக மதித்துப் போற்றப்பட்டுள்ளது.

"நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த
மறைமொழி தானே மந்திரம் என்ப." (தொல்காப்பியம்)

என ஆசிரியர் தொல்காப்பியனார் அச் சொல்லைக் குறித்து இவ்வாறு செவ்வையாக ஓர் இலக்கணம் அமைத்திருக்கிறார்.

"நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
மறைமொழி காட்டி விடும்." (குறள், 28)

என நம் வள்ளுவப் பெருந்தகையும் வழங்கியுள்ளமை காண்க. யாதும் பழுது படாமல் யாண்டும் பயன் நிறைந்த சொல்லாளராயிருத்தலால் முனிவர் நிறைமொழி மாந்தர் என நின்றார்.

இந்த மாதவர் சொல்லை இராம பாணத்துக்கு உவமை குறித்தது அதிசயமான அதன் அருந்திறலமைதி கருதி என்க.

பொல்லாதவர்களை அழிக்க வல்லதுபோல் நல்லவர்களைக் காக்கவும் வல்லது; தருமநெறி தவறாதது; உலகம் நலமுற எழுவது; தொழில் ஆற்றுவதில் இளைப்பும் களைப்பும் யாதும் இல்லாதது; யாண்டும் குறிதப்பாது கொற்றம் புரிந்து வருவது; பகை எவ்வளவு வலிகளை யுடையதாயினும் அவ்வளவையும் எளிதே நீறாக்கி வெளிசெய்தருள்வது; மறைமுறை தழுவியது; என இன்னவாறான தன்மைகள் பல இராமசரத்துக்கு உண்மையால் அருந்தவர் சொல் அதற்கு உவமையாய் வந்தது.

மந்திரமொழியோடு ஒப்புரைத்ததனால் அதன் அற்புத சத்தியும் ஆட்சி முறையும் அறநிலையும் அறிய நின்றன.

வாய் திறந்து சொல்லுவதில் முனிவருக்கு யாதொரு வருத்தமும் இல்லை; இருந்தபடி யிருந்தே எளிதே சாவசைக்கின்றார்; அதனால் எதிரிகள் நாசமாகின்றார். இராமனும் அதிசுலபமாய் அம்பை விடுகின்றான்; அஃது அதிசய ஆற்றல்களை விளைத்து அவங்களை நீக்கி, தவம் புரிந்து நயம் பயந்து வருகின்றது என்க.

இடையே எத்துணைத் தடைகள் நிற்பினும், எவ்வளவு தூரம் ஆயினும், எல்லாவற்றையும் கடந்து சொல் ஒல்லையில் உறுபயன் விளைக்கும்; இராம சரமும் அவ்வாறே யாம்; ஆகவே, "சொல் ஒக்கும் கடியவேகச் சுடுசரம்" என அது நெடிது போற்றுகின்றது.

எல்லார் வாயிலும் சொற்கள் இருக்கின்றன; அவற்றிற்கு அத்துணை ஆற்றல் இல்லை; முனிவர் சொல்லுக்கே தனி மதிப்பு இருக்கின்றது; அதுபோல், மற்றவர்களிடமும் அம்புகள் உள்ளன; அவை அவ்வளவு வலிமையுடையனவல்ல; இராமனது அம்பே யாண்டும் உயர் மேன்மையுடையதாய் ஓங்கி ஒளிர்கின்றதென்க. திருந்திய அருந்தவர் நிலையில் இராமனை எண்ணியுள்ளமையால் அவனது பெருந்தகைமை உள்ளத்தூய்மை முதலியன உணர வந்தன. புனிதம் நிறைந்த புண்ணிய மூர்த்தி என்பதாம்.

இராமனது சரம் முனிவரது சொல்லை ஒக்கும் என இங்கே குறிப்பாகச் சொன்னது பின்னே தெளிவாக்கப்பட்டுள்ளது.

"தூயவன் அவனை மின்னைச் சுடுசரம் அனைய சொல்லால்
ஏயினன் அவையெலாம் வந்து இயைந்தன இமைப்பின் முன்னம்"
(அகலிகைப்படலம், 78)

கௌதமரது சாபத்தால் இந்திரன் அடைந்த அல்லல் நிலையை இராமனிடம் கோசிகர் சொல்லிவருங்கால் இப்படிச் சொல்லியிருக்கிறார். சொல்லில் உள்ள சூக்குமம் காண்க.

முன்னே சொல் ஒக்கும் சரம் என உவமையாய் நின்றது; இங்கே சுடுசரம் அனையசொல் என உவமேயமாய்வந்தது. அம்பைக் குறித்துத் தாம் முன்பு உரைத்ததை முனிவர் வாய்மொழியால் உறுதிப்படுத்திக் கவி ஈண்டு வெளியிட்டிருக்கிறார். ஓரிடத்தில்குறித் ததை மற்றோரிடத்தில் விருத்திசெய்து இடங்கள்தோறும் இவர் இசைத்து வரும் அழகு வியந்து நோக்கவுள்ளது.

சொல் என்றது யாருடையதோ? என முன்னம் ஐயமுற்ற வர் இங்கு நன்கு தெளிந்துகொள்வர். கோதமரைத் தூயவன் என்றது அவரது சித்த சுத்தியை உணர்ந்து. தாடகைமேல் விட்ட இராமபாணத்தின் நிலைமையை நேரே கண்ணாரக் கண்டு நின்றவர் ஆதலால் "நின்கைச் சுடுசரம்" என அதன் அடுதிற லாற்றலை ஆர்வத்தோடு சுட்டிக் கூறினர்.

இராமனது அம்பைக் குறித்துச் சொல்லும்போதெல்லாம் கவி ஆர்வ மீதூர்ந்து பேசி வருகின்றார். இங்கே அதற்கு ஒப்புக் காட்டியது உவகைக் காட்சியாம். அகத்திய முனிவர் சாபத் தால் அரக்கியாகித் தாடகை முன்னம் அவம் அடைந்தாள். இப்பொழுது அவளை அடியோடு அழித்த சாபச் சரத்திற்கு அச் சாபச் சொல்லையே உரிமையாக உவமை காட்டினர்.

"சரம் தரு சாபம் அல்லால் தடுப்பரும் சாபம்" (அகலிகை, 77)

எனப் பின்னரும் நன்னயமாக விளக்கியிருத்தலால் முனி வர் மொழிகளில் நம் கவிஞர்பிரான் கொண்டுள்ள மதிப்புத் தனி மாண்பாய் நின்றது. சாபம்—வில், சபிப்பு.

"சொல்லே அன்ன படைக்கலம்" (வேள்விப்படலம், 1)
"சொல் வில்லால் உலகு அளிப்பாய்" (கார்முகப்படலம், 21)
"வைவன முனிவர்சொல் அனைய வாளிகள்" (அதிகாயன் வதை, 116)
"சொல்லிற் பிழையாது ஒருசூலம்" (படைத்தலைவர்வதை,76)

என வருவன ஈண்டு எண்ணற்கு உரியன.

குறி தவருது கொல்ல வல்ல அம்புகளுக்கு நல்லோர் சொல்லை உவமை கூறியிருத்தலால் சொல்வன்மையில் நம் கவிக்கு உள்ள உறுதியும் உண்மையும் அநுபவமும் உணரலாகும்.

இறுதியில் சோழமன்னன் தம்மைக் கொல்ல அம்பு ஏவிய பொழுது அவனைநோக்கி இவர் சொல்லியுள்ளது அடியில்வருவது.

" வில்லம்பு சொல்லம்பு மேதினியில் உண்டிரண்டு
வில்லம்பிற் சொல்லம்பே வீறுடைத்து—வில்லம்பு
பட்டுருவிற்று என்மார்பில் பார்வேந்தா ! நின்குலத்தைச்
சுட்டெரித்தது என்வாயிற் சொல் " (கம்பன்)

இங்ஙனம் கம்பர் நொந்து சொன்னதனாலேதான் சோழ அரசர் குலம் பாழாய தென்பர். நமது அருமைக் கவிச் சக்கரவர்த்தியின் முடிவு இப்படி முடிந்திருப்பது வருந்தத்தக்கதே. இவரது சரிதம் தனியே எழுத நேருங்கால் இவ் வெண்பாவின் குறிப்பு விரித்து விளக்கப்படும் ; ஆண்டுக் காண்க.

சொல்லாற்றலைக் குறித்துப் பல்லாற்றானும் காவியத்தில் இவர் பாராட்டியிருக்கிறார். முதல்நாள் போரில் இராவணனது அரிய இரத்தின கிரீடத்தை இராமபாணம் உடைத்தெறிந்தது ; அதைக் குறித்துச் சொல்லும்பொழுது, " சிறந்த கவிஞனுடைய வசைப்பாட்டால் உயர்ந்த அரசகுடியும் அடியோடழிதல்போல் விலை வரம்பில்லாத அம்மணி முடியும் பொடியாய் உடைந்து ஒழிந்து போயது " * என்று உரைத்திருக்கிறார்.

சித்த சுத்தி வாய்ந்த உத்தமரது வாய்ச் சொல்லை இச்சுத்த வீரன் கைக்கணைக்கு ஒப்பாக்கி இப்படி உரையாடி வந்துள்ளார். வில் வீரத்தினும் வீறுடையதாகச் சொல்வீரத்தைச் சுட்டியிருத்தலால் கவியின் உள்ளக்கிடக்கை உய்த்துணர வந்தது.

" வயிரக் குன்றக் கல் ஒக்கும் நெஞ்சு "

என்றதனால், தாடகையுடைய உடல்வலியின் உயர் நிலை புலனும். மரம் கல்லுகளுள் கடினமான பாகம் வயிரம் எனப்படும். அத்தகைய கடிய நெடிய கல்மலையை ஒப்புரைத்தது அக் கொடிய நெஞ்சின் திண்மையும் திறலும் தெரிய என்க. எதற்கும் அஞ்சாது யாண்டும் கலங்காது உள்ளே வயிரம் பாய்ந்துள்ள வன்கொடுமையையும் இவ்வுவமை குறித்து நின்றது.

அல் ஒக்கும் நிறம், கல் ஒக்கும் நெஞ்சு

என்றது புறமும் அகமும் புலன் தெரிய வந்தது.

---

* உயுத்தகாண்டம், முதற்போர்ப் படலம், பாடல் 249 பார்க்க.

கூடிய கன்மலையை ஒத்த அக்கொடிய மார்பை இராம சரம் எப்படித் துளைத்தது? என இப்படி ஒரு கேள்வி வரும் என்று கருதி அதற்குப் பதில் உரைத்ததுபோல் இறுதியடியில் அதிசயமாகத் தெளிவுறுத்தியிருக்கிறார்.

“கல்லாப் புல்லர்க்கு நல்லோர் சொன்ன பொருள் எனப் போயிற்று அன்றே” என்ற இது எல்லாரும் ஆழ்ந்து சிந்திக்கத் தக்க அதிநயமுடையது.

அன்றே என்றது ஈற்றசையாத் தோற்றமுறினும் அக்கணமே என விரைவையும் ஆச்சரியத்தையும் ஒருங்கே உணர்த்தி நின்றது. அம்பின் போக்கை நோக்கி உம்பரும் வியந்தனர்.

கல்லாத மூடர்களுக்குக் கல்வியறிவுடைய நல்லோர்கள் உயிர்க்கு இதமான நல்ல உறுதிப் பொருளை நாடி நயந்து சொல்லினும் அதனை அவர் உவந்து கேட்டு உணர்ந்து கொள்ளார்; செவியில் பட்டவாறே அது பறந்துபோகும்; அதுபோல் இராம பாணம் தாடகை நெஞ்சில் பட்டு விரைந்து ஊடுருவிப் போயது என்பதாம். ஓட்டைச் செவி நிலை உணர வந்தது.

“சொல் ஒக்கும் சரம் பொருள் எனப் போயிற்று” என்றதிலுள்ள பொருள் நயம் நுணுகி யுணர வுரியது. சொல்லிலும் பொருளிலும் உல்லாச விநோதமாய்க் கவி இங்கே விளையாடியிருக்கிறார். சொல் என எழுந்தது பொருள் எனப் போனது.

சரத்தைச் சொல்லோடு முதலில் உவமித்தமையால் அதற்கு இயையக் கேள்வியில் முடித்தார்.

சொன்ன சொல் எனப் போயிற்று என்னாது பொருள் என்றது என்னை? எனின், சொல் ஒலி வடிவம்; அது காதில் விழும்; ஆனால் அதன் பொருளை மூடர் உட்கொள்ளார்; ஆகவே அவர் நெஞ்சில் உறுதிப்பொருள் யாதும் தங்காது ஒழிந்துபோம் என்க.

நல்லவர் சொன்ன நற்பொருள் புல்லர் நெஞ்சில் தங்காது புறம் போதல்போல் இராமசரம் தாடகை நெஞ்சில் நில்லாமல் ஊடுருவி ஒல்லையில் அயலே ஓடிப்போயது என்பதாம்.

இளமையில் கல்லாது போயினும் பலர் நல்லவராயிருக்கின்றனர்; அங்ஙனம் கல்லாமையோடு புன்மையும் தருக்கும் நிறைந்து புலை மண்டியிருக்கும் பொல்லாதாரே கல்லாப் புல்லர் என

நின்றார். இப் புன்மையாளர் நன்மையாளர் சொல்வதை நயந்து கேளார் ஆதலால் அத்தன்மை தெரிய வுரைத்தார்.

“ அவ்வியம் இல்லார் அறத்தா றுரைக்குங்கால்
செவ்வியர் அல்லார் செவிகொடுத்தும் கேட்கலார்
கவ்வித்தோல் தின்னும் குணுங்கர் நாய் பாற்சோற்றின்
செவ்வி கொளல்தேற் றாங்கு. (நாலடியார், 322)

என்ற இதில் புல்லியர் இயல்பும் இழிவும் காண்க.

குணுங்கர்=புலையர். புல்லர் உள்ளத்தில் உறுதிப்பொருள் பதியாமல் ஒழிந்துபோதலையும், அவரது இழிந்தநிலையையும் அறிந்து இரங்கிப் பல இடங்களிலும் கவி வருந்தி யுரைத்திருக்கிறார்.

நல்லோர் என்றது கல்வி யறிவோடு நல்ல சீலமுமுள்ள மேலோரை. கல்லார் என்றதற்கு நேரே கற்றார் என்னாது நல்லார் என்றது என்னை? எனின், உள்ளத்தே நன்மையான தன்மை யுடையவரே உண்மையாகக் கற்றவர் என்பது தெரிய என்க.

கல்லாப் புல்லரைத் தாடகைக்கும், நல்லோரை இராமனுக்கும் ஒப்பாக வைத்திருக்கும் நுட்பம் உய்த்துணரத்தக்கது.

எதிரே வந்து முதலில் அவள் அமர் தொடங்கியபொழுது இராகவன் ஆறி நின்று, ஒதுங்கி அவள் உய்ந்துபோகும்படி வித்தக வினைசெய்து பார்த்தான்; அதனை யாதும் உணர்ந்து கொள்ளாமல் கொடு மூடமாய்க் கொதித்து நின்றமையால் அடியோடு அழிந்துபட்டாள்; நல்லது கேளாத புல்லர் நீசம் அடைவதுபோல் அப்பொல்லாதவள் நாசம் அடைந்தாள் என்பதாம்.

தாடகை நெஞ்சை ஊடுருவி விரைந்துபோன இராமபாணத்துக்கு இங்கே கூறியிருக்கும் உவமை கூர்ந்து சிந்தித்து யாரும் என்றும் ஓர்ந்து பாராட்டி உவந்துகொள்ள நின்றது.

மேல்நாட்டிலிருந்து இங்கு வந்து தமிழ் மொழியை நன்கு கற்று நல்ல புலமை வாய்ந்து * வீரமாமுனிவர் என வியன் பேர் பெற்று நின்றவர் “ சொல் ஒக்கும் ” என்னும் இந்த அருமைப் பாடலைத் தாம் மதபோதனை செய்யும் இடங்களிலெல்லாம் பாடிக்

* இவரது இயற்பெயர் கான்ஸ்டாண்டினஸ் பெச்சி. (Constantinus Beschi.) இவர் கிறிஸ்துமத போதகரான பாதிரியார். 1702-ல் இத் தென்னாட்டுக்கு வந்தார். திருநெல்வேலி எல்லையில் வடக்கன்குளம் என்னும் ஊரில் இருந்தார். மணப்பாடு முதலிய இடங்களிலும் அமர்ந்து காரியம் புரிந்து வந்தார். கி. பி. 1746ல் இவர் இறந்து போனார்.

காட்டுவார். புல்லர்க்கு நல்லோர் சொன்ன பொருள் எனப் போகாதபடி என் சொல்லை அருள் செய்து கேளுங்கள் என்பார். பின்பு அவர் பாடிய தேம்பாவணி என்னும் நூலிலும் இக்கவியின் கருத்தை நயமாகப் புகுத்தியிருக்கிறார். அடியில் வருவது காண்க.

“வொளிகர் வடிவை வாளி வில்லிடை அவன்கோத் தெய்ய
வாளிகர் விலங்கல் தன்னை வானுரு மறுத்தாற் போலத்
தோளிகர் அமலேக்காகம் துளைத்தகோல் உருவி அப்பால்
காளிகர் மூடர்க்கோதும் கலையெனப் போயிற்றன்றே”
(தேம்பாவணி, 16-49)

அமலேக்கு என்பவனை மதியோன் என்பவன் அம்பு எய்து கொன்றதைக் கூறியபடியிது. நம் கவியின் சொல்லும் பொருளும் சந்தமும் இதில் வந்திருத்தல் அறிக. அயல் மொழியினர் நம் இயல்மொழி பயின்று இங்ஙனம் காவியப் புலமையும் வாய்ந்துள்ளமை கருதி வியக்கத்தக்கது. “எங்கள் தமிழ், எங்கள் தமிழ்” என்று வறிதே மாரடித்துக்கொண்டு தாமும் படியாமல், படித்தவரையும் பேணாமல் வீணே பாரிழவு கூட்டுவார் இப் பாதிரியார் மாதிரியை ஓரளவேனும் உணரவேண்டும். உரிய தாய் மொழியைப் பரிவு கூர்ந்து பயிலல் நலம். மறுபுல அறிவும் கம்பன் கலையின் உறுபுலம் நுகர்ந்து உவந்து களித்துள்ளது.

இவ்வாறே அறிஞர் பலருடைய கவனத்தையும் இக் கவி கவர்ந்திருக்கிறது. கவர்ச்சி சுவை நுகர்ச்சியைச் சுட்டிநின்றது.

இராமனைத் துணைதர வேண்டி முன்னம் தசரதனிடம் முனிவர் மொழிந்த கரிய செம்மல் என்னும் அப்பெயரையே இங்கும் குறித்திருக்கிறார். அவர் அன்று கருதியபடியே அப்போராளன் இன்று உறுதி செய்தருளி மேலும் உதவ ஆக்கியுள்ளான் என்பதாம். தவசி காதலித்துக்கொண்ட பொருள் ஆதரித்துவருகின்றது.

இங்ஙனம் இவ்வீரன் விட்ட சுடுசரம் ஊடுருவிப்போகவே அக் கோர அரக்கி அலறி வீழ்ந்தாள். ஆவி போயது. அவள் இறந்து பட்டபின் நிகழ்ந்த நிலைகளையும் விளைந்த விளைவுகளையும் கவி வரைந்து காட்டியிருக்கிறார். அவை விழைந்து நோக்கத் தக்கன. அடியில் வருவன.

பொன்னெடுங் குன்றமன்னான் புகர்முகப் பகழி என்னும் 389
மன்னெடுங் கால வன்காற் றடித்தலும் இடித்து வானில்
கன்னெடு மாரி பெய்யக் கடையுகத்து எழுந்த மேகம்
மின்னொடும் அசனி யோடும் வீழ்வதே போல வீழ்ந்தாள். (1)

பொடியுடைக் கானம் எங்கும் குருதிநீர் பொங்க வீழ்ந்த
390 தடியுடை எயிற்றுப் பேழ்வாய்த் தாடகை, நிலைகள்தோறும்
முடியுடை அரக்கற்கு அந்நாள் முந்தியுற் பாதமாகப்
படியிடை அற்று வீழ்ந்த வெற்றியம் பதாகை ஒத்தாள். (2)

கான்திரிந் தாழி யாகத் தாடகைக் கடின மார்பத்து
391 ஊன்றிய பகழி வாயூடு ஒழுகிய குருதி வெள்ளம்
ஆன்றவக் கானம் எல்லாம் ஆயினது அந்திமாலைத்
தோன்றிய செக்கர் வானம் தொடக்கற்று வீழ்ந்ததொத்தே.

வாசநாள் மலரோன் அன்ன மாமுனி பணிமறுத்த
392 காசுலாம் கனகப் பைம்பூட் காகுத்தன் கன்னிப்போரில்
கூசிவாள் அரக்கர் தங்கள் குலத்துயிர் குடிக்க அஞ்சி
ஆசையால் உழலும் கூற்றும் சுவைசிறி தறிந்ததன்றே. (4)

யாமுமெம் இருக்கை பெற்றேம் உனக்கிடையூறும் இல்லை
393 கோமகற் கினிய தெய்வப் படைக்கலம் கொடுத்தி என்று
மாமுனிக் குரைத்துப் பின்னர் விற்கொண்ட மழையனான்மேல்
பூமழை பொழிந்து வாழ்த்தி விண்ணவர் போயினாரே. (5)

(தாடகைவதைப் படலம், 73-77)

இராமசரத்தால் தாடகை இறந்துபட்ட நிலையை வருணித்த படியிது. வருணனைகள் பின்னிலையும் காவிய சரிதங்களோடு கலந்து, பாவிகங்கள் பல கனிந்து பயன் படிந்துவந்துள்ளன.

யுகமுடிவில் கல்மழை பெய்யக் கடுத்தெழுந்த மேகம் ஊழிக் காற்றால் உடைந்து வீழ்ந்ததுபோல் இராமசரத்தால் தாடகை அலறி வீழ்ந்தாள் என்பதாம். அசனி=இடி. அவளுடைய கரிய வடிவும், கோரப் பல்லும், பேரொலியும் நேரே தெரிய மேகம் மின் அசனிகள் ஏகமாய் மேவி வந்தன.

"கல்லின் மாரியைக் கை வகுத்தாள்" என முன்னம் சொல்லியதற்கு ஏற்ப இன்னவாறு உருவகித்துரைத்தார்.

கால வன் காற்று என்றது பகழியின் வேகமும் விறலும் தெரிய வந்தது. புகர்=ஒளி.

இராவணனுடைய வெற்றிக்கொடி அற்று விழுந்ததுபோல் தாடகை அன்று செத்து விழுந்தாள் என்றார். மேலே விளைய வுள்ளதை இங்கே நினைவுறுத்தி இங்ஙனம் வித்திட்டிருக்கிறார்.

தலைகள் தோறும் முடியுடை அரக்கன் என இராவணனை அறிமுகப்படுத்தியது அவனுடைய பெருமகிமைகளை ஒரு முகமாய் ஒருங்கிசை உணர்ந்துகொள்ள என்க.

...ஆல் அவனுக்கு நிகழும் பேரிழவுக்கு முன்னறி குறி ...இன்னவள் இன்னவாறு இன்று முடிந்தாள் என்பதாம். ...தம்=கெடுகுறி. பதாகை=கொடி. நீண்ட வடிவோடு ...பிறிட்டு விழுந்து கிடந்தாள் ஆதலால் நெடிய கம்பத் ...பிரிந்து தோன்றும் செவ்வாடைக்கொடியை இவ்வாறு ...றினர்·வெற்றிப்பதாகை என்றது வீறுதோன்றவந்தது.

கொடியும் குடையும் கோலும் முடியுடைமைக்குத் தலைமை ...முப்புக்கள் ஆதலால் அதன் முதன்மை தோன்றக் குறித் ... கொடி ஏற்றம் விழாக்குறியாய் முன்னுற நிகழும்; இறக் ...வு தெரிய முடிந்துநிற்கும்.

கொடி அறுந்தது என்றதனால் இன்றே அவன் முடி அழி ...அடிகோலியாயிற்று என்பதாம். காவிய நாயகன் கருதி ...உறுதியான குறிக்கோள் இன்னதுதான் என்பதை நம் ...த்தில் பதிய வைத்து இடையிடையே கவி இப்படி ...த்துச் செல்கின்றார்.

தடி = தசை. தந்தம் நிறம் மறைந்திடவே தசைகள் தின்று ...ளத் தொழில்புரியும் சழக்கி என்பார், "தடியுடை ...றுப் பேழ்வாய்த் தாடகை" என்றார். இராவணனோடு ...க்கு உண்டான தொடர்பு தெரிய உவமை குறித்தார்.

இவள் மார்பில் அம்பு ஊடுருவிப் போகவே அதிலிருந்து ...ம் பெருகியது; அப்பெருக்கு அயலெங்கும் சிவந்து பாவி ...ல் அந்திப்போதில் தோன்றிய செவ்வானம் ஆகாயத்தில் ...கொள்ளாமல் தலை பிரிந்து விழுந்து தரையைத் தழுவிக் கிடந் ...து போன்றிருந்தது என்றார். இப்போர் நடந்தது மாலைக் ...ம் ஆதலால் அப்பொழுதின் நிலையை இவ்வாறு புகலலானார்.

"காசுஉலாம் கனகப் பைம்பூண் காகுத்தன் கன்னிப்போர்" ...ம் இதில் கன்னி என்பது கவர்படுபொருளில் தவறுபட ...து. தாடகை ஒரு பெண்; அவளோடு புரிந்த போர் ஆத ...இது "கன்னிப்போர்" எனவந்தது என வெளியேதோற்றி ...வேறுபொருளைத் தனியே இஃது ஒளித்து வைத்துள் ...து.

ஒருவனை மணந்து இரண்டு பிள்ளைகளைப் பெற்றுப் படுகிழவியாய்க் கொடி தோங்கியுள்ள அவள் கன்னி என்னும் இனியபேருக்கு உரியளாகாள். இங்கே கன்னி என்றது இளமை புதுமை முதன்மைகளைக் குறித்து நின்றது.

கலைகள் பயின்று சிலை ஏந்தி வந்த இராமன் முதன் முதலில் புதிதாய்ச் செய்தது ஆகலான் இதனைக் கன்னிப் போர் என்றார்.

" மாண்டன மாற்றலர் நாள்கள் ; பூமகள்
ஈண்டுவந் திவனொடு திளைக்க லுற்றனள் ;
காண்டும்இக் காளைதன் கன்னிப் போரென
ஈண்டினர் விண்ணிடை அமரர் என்பவே "

(சூளாமணி, அரசியல், 79)

" கடாந் திறந்திட்டு வானிற் களகள முழங்கும் வேழம்
படாந் திறந்தூழித் தீயிற் பதுமுகன் காட்டி யிட்டான்
தடாம் பிறை மருப்புத் திண்கை அபரகாத்திரங்கள் தம்மால்
கொடாம் பிற குமிப்போருள் பிறர்க்கெனக் கொன்றதன்றே"

(சீவக சிந்தாமணி, 806)

" கடிக்கண்ணி வேந்தரை யாற்றுக்குடிக் கன்னிவாகைகொண்டே
முடிக்கண்ணி மேல்வைத்த மும்மதில் வேந்தன். "

(பாண்டிக்கோவை, 262)

இவற்றுள் கன்னிப்போர் வந்துள்ளமை காண்க.

கண்ணப்ப நாயனார் பருவம் நிரம்பித் தம்மரபின் முறைப்படி நல்ல முகூர்த்தம் பார்த்து முதல்முதல் வேட்டைக்குப் போனதைக் கன்னி வேட்டை என்பர்.

" மலைமருவு நெடுங்கானில் கன்னிவேட்டை மகன்போகக்
காடுபலி மகிழவூட்ட " (பெரிய புராணம், கண்ணப்ப; 47)

எனவரும் இதில் கன்னி குறித்து நிற்கும் பொருளை அறிக. புதிதாய் முதல்முறை செய்யும் காரியத்தைக் கன்னி என்பது மரபாய் வந்தது. ஆங்கிலேயரிடத்தும் இவ்வழக்கம் பரவியுள்ளது. முதலில் நிகழும் போரை Maiden battle என அங்கே அவர் வழங்கிவருகின்றனர்.

இராமன் இனி வீர சூடாமணியாய் விளங்குதற்குப் புத்தப் புதிதாய் முன்னுற இங்ஙனம் கன்னிப்போர்புரிந்து கன்னிமை கழிந்தவளைக் காட்டில் களப்பலி யூட்டினான் என்க.

மேலே செய்ய இருக்கும் அரிய பெரிய போருக்கு இப்பலி எல்லை துறையில் நாட் செய்து கொண்டபடியாம்.

இராவணனுடைய அதிகார ஆற்றல்களை நினைந்து அவனது ஆணையில் தோன்றிய எந்த அரக்கரிடமும் அந்தகன் அணுக அஞ்சி அயலே ஒதுங்கி நின்றான். இராமபிரான் புரிந்த இந்தக் கன்னிப் போரில் தாடகை உயிரை எமன் தைரியமாய்க் கவர்ந்து கொண்டான்; கொள்ளவே, இதுவரையும் நெருங்காமல் உழன்று நின்ற அவன் இன்று கொஞ்சம் சுவைகண்டு உவகை மீக்கொண்டான்; இந்த உறுதிநிலை அவனுக்கு உயர் ஊதியமாய் நின்றது என்பார்,

"வாளொள் அரக்கர் தங்கள் குலத்துயிர் குடிக்க அஞ்சி
ஆசையால் உழலும் கூற்றும் சுவைசிறிது அறிந்ததுஅன்றே"

என்றார். இதில் எவ்வளவு சுவை நிறைந்துள்ளது!

நல்லவர்களுக்கு அல்லல் இழைத்துவருதலால் அரக்கர்களைக் கொன்று தொலைக்கக் கூற்றுவனுக்கு ஆசையே; ஆயினும், அரக்கர் அதிபதிக்குப் பயந்து அலமந்திருந்தான் ஆதலால் அந்நிலை தெரிய, "ஆசையால் உழலும் கூற்று" என்றார். இங்ஙனம் உள்ளம் உளைந்திருந்த அவன் இவ்வீர வள்ளலது உதவியை நினைந்து ஊக்கம் மிகுந்து கருதியதை முடிக்க உறுதி பூண்டு நின்றான் என்பார் "சுவை சிறிது அறிந்தது" என்றார். கூற்றுவன் இனிக் கூசாமல் தன் ஆசையைப் பூர்த்திசெய்து கொள்வான் என்பதாம். தருமவீரன் துணையால் தருமன் களித்தான் என்க.

அரக்கர் குலம் இனிப் பாழாம் என்பதை இங்ஙனம் குறிப்பால் உணர்த்தினர். எமனது நிலை இவ்வாறாக அமரர் அனைவரும் ஒருங்கே திரண்டு ஆகாயத்தே அணுகி நின்று கோசிகரை நோக்கிச் சில வாசகங்கள் கூறினர்:

"யாமும் எம்இருக்கை பெற்றேம்; உனக்கும் இடையூறு இல்லை;
கோமகற்கு இனிய தெய்வப் படைக்கலம் கொடுத்தி"

என்று தேவர்கள் விசுவாமித்திரரிடம் ஆவலோடு கூறியிருத்தலால் அவர்கள் உள்ளங் களித்துள்ளமை அறியலாகும்.

இராவணனால் தங்களுடைய தெய்வ பதவியை இழந்து தேவர்கள் இப்பொழுது சிறழிந்துள்ளனர் ஆதலால் இனி இராமனால் அச்சிறுமை நீங்கிப் பெருமையடையலாம் என்று கருதி

அமரர் உவகை கூர்ந்தனர் என்க. இவ்வுண்மை அவர் உரைக ளால் உணர வந்தது.

பெறுவேம் என்றது பெற்றேம் என்றது தம் பேற்றில் அவர் கொண்டுள்ள துணிவும் தெளிவும் தோன்றிநின்றது.

முன்னிருந்த இடையூறுகள் யாவும் நீங்கி உமது அரிய வேள்வி இனிது முடிந்து கருதிய பயன் கைகூடி உறுதிமிக அடை வீர் என்பார், "உனக்கும் இடையூறு இல்லை" என்றார்.

விண்ணுறை தேவர்க்கும், மண்ணுறை முனிவர்க்கும், புண் ணிய நீரர்க்கும் இராமன் கண்ணொளியாய் நின்று எண்ணிய இன்ப நலங்களை இனிது நல்குவன் என்பது இதனால் அறிய நின்றது.

விற்கொண்ட மழை அன்னான் என இராமனைச் சொற் கொண்டு விளக்கி காட்டியிருக்கிறார். காலூன்றி மழை பொழியக் கவிந்துள்ள கார்மேகம் வில்லோடு விளங்கி நிற்றல்போல் இராமன் கோதண்டத்தோடு துலங்கி நின்றான் என்பதாம். ஞாலம் நல முற வந்த கோலம் குறித்த படியிது.

"பூமழை பொழிந்து வாழ்த்தி விண்ணவர் போயினாரே"

என்றது இவ்வண்ணல் புரிந்த அடலாண்மையை மகிழ்ந்து புகழ்ந்து அமரர் மலர்மாரி சொரிந்துபோயுள்ள நிலை தெரிய நின்றது. தம்குலம் புரக்கும் கோமகன் என அவர் உளங்களித் துப் போயினர்.

இவ்வளவோடு தாடகை வதைப் படலம் முடிகின்றது.

## இராமன் அற்புத ஆயுதங்களை அடைந்தது

இங்ஙனம் விண்ணவர் போனபின் விசுவாமித்திர முனிவர் இராமனை வியந்து தழுவி உவந்து போற்றி அன்று இரவு அங்கு ஓர் குளிர்பூஞ் சோலையில் தங்கியிருந்தார். பொழுது விடிந்தது. முனிவர் உழுவலன்புடன் இராமனை விழைந்து நோக்கி, "இராமையா! நெருநல் நீ புரிந்த வில்வீர நிலையை எண்ணுந் தோறும் என் உள்ளம் பூரிக்கின்றது; உவகை வளர்கின்றது; யாண்டும் வெற்றி வீரனாய்த்துலங்கி என்றும் நீண்ட புகழோடு நீ நிலைத்து விளங்குவாய்! யான் அருமையாக அடைந்துள்ள அத் திரவித்தைகளை இன்று உனக்கு உரிமையுடன் உதவுகின்றேன்" என்று உவந்து கூறினர். பின்பு நல்ல ஓரையில் நீராடி நியமம்

முடித்து வடக்கு முகமாய் அமர்ந்து இராமனைத் தம்வலப்புறத்தே இருக்கவைத்தார். மனஒருமையுடன் வீரதேவதையை விழைந்து சிந்தித்தார். சிவன் திருமால் பிரமன் ஆகிய மும்மூர்த்திகளையும், இந்திரன் எமன் அக்கினி வருணன் வாயு முதலிய அமரர்களையும் அதிதேவதைகளாக் கொண்டுள்ள அம்புகளை மந்திர முறையோடு உபதேசித்தார். காலபாசம் தருமசக்கரம் தண்டு பிண்டி பாலம் முதலிய திவ்விய ஆயுதங்களையும் செவ்வியின் அருளினார். எதிரிகள்மேல் ஏவிய பகழிகள் மீளவும் தன்பால் வந்து சேருதற்குரிய மந்திரங்களையும் உதவினார்.

மாதவர் அருளிய தெய்வப் படைக்கலங்கள் யாவும் தேசோமயமான ஒளி வடிவங்களாய்த் திரண்டு வந்து உரிமையுடன் சூழ்ந்து இராமனை உவந்துகொண்டாடின. வீரமூர்த்தியை வீரப் படைகள் விழைந்து போற்றின என்க. அடியில் வருவனகாண்க.

விண்ணவர் போயபின்றை விரிந்தபூ மழையி னாலே 394
தண்ணெனும் கானம் நீங்கித் தாங்கரும் தவத்தின் மிக்கோன்
மண்ணவர் வறுமை நோய்க்கு மருந்தன சடையன் வெண்ணெய்
அண்ணல்தன் சொல்லே யன்ன படைக்கலம் அருளினானே. (1)

மேவினம் பிரிதல் ஆற்றேம் வீரநீ விதியின் எம்மை
ஏவின செய்து நிற்றும் இளையவன் போல என்று 396
தேவர்தம் படைகள் செப்பச் செவ்விதென் றவனும் நேரப்
பூவைபோல் நிறத்தி னாற்குப் புறத்தொழில் புரிந்தவன்றே. (2)

(வேள்விப் படலம், 1, 3)

முனிவர் அத்திர சத்திரங்கள் அருளியதும், அவையாவும் இராமனை யடைந்து ஏவல் செய்ய ஆவலுற்று நின்றதும், ஆர்வ வுரைகள் ஆடியதும் இவற்றால் அறியலாகும்.

தம்மை அன்புரிமையுடன் ஆதரித்து வந்த சடையப்ப வள்ளலைக் கம்பர் இங்கே நண்புரிமையோடு நயந்து பாராட்டி யிருக்கிறார்.

“மண்ணவர் வறுமை நோய்க்கு மருந்து அன சடையன்”

என்றதனால் அவ்வுபகாரியின் உயர்பெருந் தகைமையும் உதவி நிலையும் உணரலாகும். திருவெண்ணெய் நல்லூரில் விளங்கி யிருந்த சிறந்த சீமான் என்பார் வெண்ணெய் அண்ணல் என்றார்.

அவர் சொன்ன சொல் தவருதவர்; யாண்டும் என்றும் எவ்வகையிலும் அவரது வாய்மொழி பொய்யாது ஆதலால் "அண்ணல் தன் சொல்லே அன்ன படைக்கலம்" என்ருர்.

சொல் ஒக்கும் சரம் என முன்னம் கூறினர்; அந்த ஞாபகமே இங்கும் தொடர்ந்து வந்துள்ளது. சடையப்பருடைய உரை செயல்களை உடனிருந்து அனுபவித்தவராதலால் இங்ஙனம் உளமுருகி யுரைத்தார். இவ்வாறு பல இடங்களிலும் காவியத்தில் அவரது பண்பு பாராட்டப்பட்டுள்ளது. எந்த இடத்தில் எந்த நிலையில் எவ்வாறு கதைத் தொடர்போடு இணைத்து இசைக்கவேண்டுமோ அவ்வாறே அழகுற இசைத்திருக்கிருர். அவை அன்பு கனிந்து வந்தன; பின்பு காணலாம்.

சொல்லும் போதெல்லாம் அவரது வள்ளற் குணத்தையே உள்ளம் உருகி உரைத்துள்ளார். உண்ட உளம் உருகும் அன்றே?

வறுமை உயிரினங்களுக்குத் துயர் மிக விளைக்கும் ஆகலான் அது நோய் என நின்றது. வறியவரெவர்க்கும் வரையாது வழங்கி அவர்தம் பசிப்பிணியை நீக்கியுள்ளமையான் நோய்க்கு மருந்து என்ருர். உரையை உரைக்க வந்தவர் முன்னதாக உருவை உணர்த்தியது, அதன் அருமையியல்புகளை அறிந்து மகிழ. வாக்கும் காயமும் நோக்க வந்தன. வாய்ச்சொல்லை இராமன் கை வந்த தெய்வ ஆயுதங்களுக்கு ஒப்பிட்டமையால் அச் சடையனைத் தம் உடையவராகிய இராமனுக்கே உய்த்துணர வைத்தார்.

மண்ணும் விண்ணும் ஒருங்கே நோய் தீர்க்கத் தெய்வ மருந்துபோல் வந்துள்ள அத்திவ்விய புருடனேடு இச் செவ்விய உபகாரியையும் சேர்த்தெண்ணித் தம் நன்றி யறிவை இங்ஙனம் நன்கு புலப்படுத்தினர் என்க.

## அத்திர தேவதைகள் ஆர்வம் புரிந்தது

இவ்வாறு முனிவர் அருளிய ஆயுதங்கள் இராமபிரானை நோக்கி "வீரமூர்த்தியே! தேவரீர் ஏவியபடியெல்லாம் குறிப்பறிந்து ஊழியம் செய்து உழையமர்ந்து நிற்கின்ருேம்" என்று உரிமையுடன் உவந்து மொழிந்தன. மொழியவே இராமன் அவைகளை நோக்கி, "எனக்குத் தேவையானபொழுது நான் விரும்பி அழைப்பேன்; அப்பொழுது வந்தருளுங்கள்; இப்

பொழுது உங்களுடைய இடங்களில் போய் உறைந்திருங்கள்" என உரைத்தருளினன். அவ்வாறே அவை யாவும் விடை பெற்றுப்போயின என்க.

"இளையவன் போல ஏவின செய்து நிற்றும்"

என்று தேவர் தம் படைகள் கூறியிருத்தலால் அவற்றின் பண்பும் உரிமையும் ஊக்கப்பாடும் உறுதிநிலையும் உணரலாகும்.

சடப்பொருளான படைக்கலங்கள் இப்படிப் பேசுமோ? எனின், அவற்றின் அதிதேவதைகளே ஒளி வடிவங்களாய் நின்று இங்ஙனம் உரையாடின என்க.

பேராற்றலோடு போராற்ற வல்ல அருந் திறல்கள் யாவும் நிறைந்து தறுகண்மையுடன் தழைத்திருந்த தெய்வப் படைகள் இதுவரை ஒரு செயலுமின்றிச் சோம்பிக் கிடந்தன; இன்று தக்க துணை அடைந்தமையால் மிக்க மகிழ்ச்சியால் அவை வீறு கொண்டு நின்றன. மகாவீரனாகிய இராமனை அடையப் பெற்ற மையால் மதிகண்ட கடல்போல் அவை குதிகொண்டு கூத்தாடின.

கோசிகர் தவசி ஆயினும் சிறந்த வீரமாயினர் ஆதலால் அரிய போர்க் கலைகள் பலவும் பயின்று தனு வேதத்தில் தலை சிறந்த புலமையாளராய் நிலவியிருந்தார். அவர் அரிய தவப் பேற்றால் அடைந்திருந்த அத்திர வித்தைகளை உரிய அதிதேவதைகளோடு இராமனுக்கு இங்கே உதவியருளினர்.

அக் குலமகன் தாடகையை வென்றருளிய வெற்றிக்குப் பரிசிலாக விழைந்து நல்கியதுபோல் இவ்வீரப் படைகளை அத்திர முனிவர் அவ்வுதவியாளனுக்கு உவந்து தந்தார் என்க.

பூவைபோல் நிறத்தினன் என இராமனைப் புனைந்து கூறியது அவனது வடிவழகைத் தெளிவாகத் தெரிந்து நினைந்து கொள்ள. பூவை=காயாம்பூ. பசுமை கலந்த நீல நிறமுடையது ஆகலான் இராமன் மேனிக்கு அது உவமையாய் வந்தது.

"எள்ளில் பூவையும் இந்திர நீலமும்" (மிதிலைக்காட்சி, 90) 569

"புயல்இவன் மேனிஎன்பார் பூவையும்பொருவும் என்பார்" (கார்முகம். 42) 70

"பூவை நிறவ என வேத முறை புகழ" (மூலபலவதை, 167) 9463

இவற்றுள் பூவை வந்துள்ளமை காண்க.

## மேல் நடந்தது

வீரதேவதை விழைந்து மகிழ வெற்றித்திருவுடன் விளங்கி நின்ற இந்தப் பேரழகனை ஆர்வமொடு பேணி மேலே வேள்வி செய்யும் வனத்துக்கு முனிவர் அழைத்துப்போனார். இரண்டு காவத தூரம் நடந்தார்; கோமதி நதியை அடைந்தார். அந்த அழகிய ஆற்றங்கரையில் மூவரும் அமர்ந்து இளைப்பாறியிருந்தார். பின்பு எழுந்து சென்றார். கௌசிகி நதியைக் கண்டார். விரிந்து பரந்து தெளிந்து செல்கின்ற அச்சீவ நதியின் வரலாற்றை முனிவர் இராமனுக்குக் கூறினார். அதில் அவரது சுயசரிதம் வெளியாயது; அஃது ஓர் இனிய அதிசயமாயிருந்தது.

## கௌசிகி நதியின் வரலாறு

"குசன் என்னும் நயனுடை அரசன் அயன் அருளால் தோன்றினன். அவன் வைதர்ப்பி என்னும் அழகிய குமரியை மணந்து அரிய போகங்களை நுகர்ந்து புதல்வர் நால்வரைப் பெற்றான். குசாம்பன், குசநாபன், ஆதூர்த்தன், வசு எனப் பேர் பெற்ற அந்நால்வரும் பருவம் அடைந்தபின் கவுசாம்பி, மகோதயம், தருமவனம், கிரிவிரசம் எனப் பெயரிய உயரிய நகரங்களில் முறையே அமர்ந்து அரசுபுரியலாயினர். அவருள் குசநாபன் என்பவனுக்கு அழகிய புதல்வியர் தோன்றினர். அவரைப் பிரம தத்தன் என்னும் பெருந்தகையாளனுக்கு மணமுடித்துத் தந்து பின்பு பிள்ளைப்பேறு கருதி அசுவமேத யாகஞ்செய்தான். கிருதாசி என்னும் அவனது இனிய மனைவியும் அரிய விரதம் இருந்தாள். அதன் பயனாக ஓர் அருமைப் புதல்வன் பிறந்தான். அவனுக்குக் காதி என்று பெயர். அந்நீதிமான் உரிய பருவத்தில் அரசு முடி புனைந்து அவனிபுரந்தான். அவனுடைய மனைவி பெயர் வசுமதி. அவள் திருவயிற்றில் முதலில் ஒரு பெண் குழந்தை பிறந்தது; அதற்குச் சத்தியவதி என்று பெயர். அதன் பின் நான் பிறந்தேன். தத்துவரதன் எனப் பேரிட்டார். என் தமக்கையை இருசிகன் என்னும் பெரியோன் மணந்தான்; சின்னாளில் இறந்துபோனான். இறந்தவன் அருந்தவப்பேற்றால் அயனுலகம் புகுந்தான். அவனைப் பிரிந்திருக்க ஆற்றாமல் உடனுயிர் துறந்து சத்தியவதி உடன் தொடர்ந்தாள். சிறந்த கற்பொழுக்கமுடைய அவள் உலகம் நலமுறும்படி ஓர் நதியாய்

அவனோடிருக்க நாயகன் நயந்து வேண்டினன். அவ்வாறே அவள் நதியாகி ஒழுகி வரலாயினள். அந்நதியே இது; அவள் பெயரால் கௌசிகி என வழங்கி வருகின்றது” என இவ் வண்ணம் முனிவர் சொல்லி முடித்தார். இதனைக்கேட்ட இராமனும் இலக்குவனும் பெரிதும் வியந்தார். தம் குருவின் பிறப்பும் சிறப்பும் பெற்றியும் தெரிந்து பெருமகிழ்ச்சியடைந்தார்.

குசன் மரபில் பிறந்துள்ளமையால் கோசிகன் எனவும், கௌசிகன் எனவும் இவர் கூற நின்றார் என்பது இங்கே தெரிய வந்தது. இயற்பெயர் மறைந்தது. குடிப்பெயர் விளங்கியது.

## யாகம் செய்யும் இடத்தை அடைந்தது

அன்று அவண் அமர்ந்திருந்து மறுநாள் எழுந்து நடந்தார். சோலைகளும் நிறைந்து குளிர்பூம் பொழில்கள் அடர்ந்துள்ள புனிய தவ வனத்தை யடைந்தார். அதன் இடையேதான் முனிவர் வேள்வி செய்தற்குரிய சித்தாச்சிரமம் என்னும் பரிசுத்த நிலையம் உள்ளது. அம்மலர் வனத்தைக் கண்டதும் இராமன் அதனை நோக்கிக்கொண்டு அதன் நிலைமையை வினவினன். முனிவர் அதில் மொழி பகர்ந்தார். அப்பூஞ்சோலையின் தூய்மையைக் குறித்து அவர் சொல்லியுள்ளது சிந்தனைக்குரியது.

பூமகள்நா யகரில் தெய்வம் தவம்பிறி திலவென் றெண்ணும்
மாமறையோர் சிந்தை போலத் தூயது; மற்றுங் கேளாய்!
நாமநான் மறைக்கும் தேவர் அறிவிற்கும் பிறர்க்குமெட்டாச்
சேமமாம் மால் இருந்து மேனாட் செய்தவம் செய்த தன்றே. (1) 408

ஆதியாம் விசும்பின் பாலும் பற்றறப் படிப்பது அன்னான்
சோதியான்பான் அவன்செய்மாயப்பெரும்பிணக்கொருங்கு தேர்வார் 409
வேதியான்பான் அமலமூர்த்தி கருதியது அறிதல் தேற்றும்
காலம்யான் ஊழிக்காலம் இருந்தவம் இயற்றியிட்டான். (2)
(வேள்விப்படலம், 16, 17)

இந்த வனம் முன்பு திருமால் அமர்ந்து தவம் புரிந்த இடம்; மிகவும் புனிதமானது; அநாதிமலமுத்தனான பரமனே பன்னெடுங்காலம் வதிந்திருந்து அரிய தவயோகங்களைச் செய்துள்ளான் ஆதலால் இதன் பெருமகிமையை எவர் அளந்துசொல்லவல்லார்? என இன்னவாறு கோசிகர் ஆர்வமுடன் கூறி நின்றார்.

சித்தாச்சிரமத்தின் பரிசுத்த நிலையை விளக்குதற்குப் பதிவிரதைகளுடைய சித்தத்தை உவமை குறித்திருக்கும் அருமை உவந்து நோக்கத்தக்கது.

புண்ணியம் விளைகின்ற புனிதமான தவநிலையம் ஆகலான் கண்ணியமான இருதயத்தை ஈண்டுஇணைத்து எண்ணியிருக்கிறார்.

## பத்தினிகளின் உத்தம நிலை

கொண்ட கணவனையே தெய்வம் ஆகவும், தவம் ஆகவும், தருமம் ஆகவும் கருதி ஒழுகுவது கற்புடைய மகளிர்க்கு இயற்கையான உரிமையாம் என்பதை நுட்பமாக இதில் உணர்த்தியிருக்கிறார். அவரது ஒழுக்க நெறி வியத்தகு நிலையது.

"தங்கள் நாயகரில் தெய்வம் தவம் பிறிது இல என்று எண்ணும் மங்கைமார்" எனப் பதிவிரதைகளை இங்கே விளக்கியிருக்கிறார். இல் ஐந்தனுருபு. எல்லைப் பொருளில் வந்தது.

எல்லாராலும் வணங்கி வாழ்த்தி வழிபடத்தக்கது ஆதலால் தெய்வத்தை இங்கே முதலில் வைத்தார்.

பொதுவாக உலகமெல்லாம் தொழவுரிய தெய்வத்தைக் கற்புடையார் நேரே தொழார்; தாம் கைப்பிடித்த தம் பதியையே தொழுவார்; அதன்மூலமே அப்பரமபதியும் அருள்புரியும் என்க.

"தெய்வம் தொழாஅள் கொழுநற் றொழுது எழுவாள்"

என வள்ளுவப் பெருந்தகையும் பதிவிரதைக்கு இலக்கணம் அருளியுள்ளமை காண்க. கொண்டானை இங்ஙனம் தொழுவாளைத் தெய்வங்களும் தம் குலதெய்வமாகவே கொண்டாடிவரும் என்பது "பெய் எனப் பெய்யும் மழை" என்றதனால் அறிய நின்றது.

"தெய்வம் தொழாஅள் கொழுநற் றொழுவாளைத்
தெய்வம் தொழுந்தகைமை திண்ணமால்—தெய்வமாய்
மண்ணக மாதர்க்கு அணியாய கண்ணகி
விண்ணக மாதர்க்கு விருந்து." (சிலப்பதிகாரம், 23)

தேவர் வாக்கை அடியொற்றி இது வந்திருக்கும் அழகைப் பார்க்க. தம்மைத் தொழாமல் தன் கணவனாகிய கோவலனையே யாண்டும் தொழுதுவந்த கண்ணகியை விண்ணுறை தெய்வங்கள் விழைந்து தொழுதன என இதில் விளக்கியிருத்தல் காண்க. இதனால் கற்புடை மகளிரது அரிய அற்புதநிலை அறியலாகும்.

"குலமகட்குத் தெய்வம் கொழுநனே" (நீதிநெறிவிளக்கம்)

"இற்பிறப் புடைய மாதர் யாதுரை செயினும் கேள்வன்
சொற்பணி புரிந்து தெய்வம் தொழாது அவற்றொழுது பேணிப்
பிற்பட நுகர்ந்து துஞ்சிப் பிறர்பழிப் பகற்றி முற்றும்
கற்பினில் வழாது நிற்றல் கடனவர்க் காகுமன்றே."

(பிரபோதசந்திரோதயம்)

என இவ்வாறு நூலோர் பலரும் நுவன்றிருக்கின்றனர்.

கணவனையே தெய்வம் என்று கருதி உரிமையுடன் பணி புரிந்து வரின் அதுவே எல்லா அற நலங்களையும் மனைவிக்கு ஒருங்கே உதவியருளும் என்பதாம்.

இக்கருத்து இன்றி வேறு விரத ஒழுக்கங்களை வெளியே விழைந்து செய்யின் அவை விருத்தியாகா என்பது குறிப்பு.

## மருதியின் மன நிலை

பண்டு காவிரிப்பூம்பட்டினத்தில் மருதி என்று ஒரு பார்ப்பனி இருந்தாள். அவள் சிறந்த பதிவிரதை. நல்ல அழகி. மறந்தும் பிறனை மனத்தாலும் நினைந்தறியாதவள். ஆயினும் கதைகள் கேட்பதிலும், வேடிக்கை விநோதங்களைப் பார்ப்பதிலும், திருவிழாக்களுக்குச் செல்லுவதிலும் சிறிது பிரியம் வைத்திருந்தாள். ஒருநாள் காவிரி நதியில் நீராடி விட்டு அவள் வீட்டை நோக்கி வந்தாள். வருங்கால் அந்நாட்டு மன்னன் மகனாகிய காமந்தன் என்பவன் அவளைக்கண்டு காதல் மீக் கொண்டான். தீது செய்ய விரைந்தான்; கையை நீட்டி "இங்கே வா" என்று சைகை செய்து அழைத்தான். இவள் உள்ளம் பதைத்து உயிர் துடித்து ஐயகோ! "என்னை இவ்வாறு எண்ணினனே! இனி இவ்வுடலோடு இரேன்" என்று வெய்துயிர்த்தழுது சாகத்துணிந்து பூதசதுக்கம் புகுந்தாள். அஃதாவது வீதி நடுவே பலிபீடம் அமைந்த ஒரு தெய்வ நிலையம் என்க. நான்கு தெருக்களும் ஒருங்கே வந்து கூடு கின்ற சந்தியில் தெய்வீகமான பூதம் ஒன்று அந் நகர்க்கு அதி தேவதையாய் அமர்ந்திருந்தது. சோழமன்னரது நீதிநிலைக்கு வழி முறையே உறுதுணையாய் உதவி நின்றது. அரசு அறியாதபடி மறைமுகமாகத் தீதுசெய்தவரைப் பாசத்தால் கட்டி யீர்த்துவந்து உலகம் அறியக் காட்டி உயிர் வதை செய்துவிடும். தீமை நிகழ்ந்த

பொழுது அது ஆதாளிசெய்து ஊர் முழுதும் கேட்கும்படி நேரே வாய்விட்டலறும். அடியில் வருவது காண்க.

" தவமறைந் தொழுகும் தன்மை யிலாளர்,
அவமறைந் தொழுகும் அலவைப் பெண்டிர்,
அறைபோகு அமைச்சர், பிறர்மனை நயப்போர்,
பொய்க்கரி யாளர், புறங்கூற் றாளர்என்
கைக்கொள் பாசத்துக் கைப்படு வோர்எனக்
காதம் நான்கும் கடுங்குரல் எடுப்பிப்
பூதம் புடைத்துணும் பூத சதுக்கமும்" (சிலப்பதிகாரம், 5)

இதனால் அந்நகரின் அமைப்பும், அரச நீதியும், அக்கால நிலையும் அறியலாகும். இத்தகைய அற்புதமான பூதப்பீடத்தின் அருகுவந்து தன்னைக் கொன்று விடும்படி மருதி கன்றி நின்றாள். அத் தெய்வப் பூதம் அவளை நோக்கி ஆதரவுடன் சில போதனைகளைக் கூறியது: " மருதி, நீ நல்ல பதிவிரதையே; கொழுநனே தெய்வம் என்று உழுவலன்புடன் ஒழுகி வருகின்றாய்; வரினும் பொய்க் கதைகளைக் கேட்கின்றாய்; பிறருடைய ஆடல் பாடல்களையும், விழாக்களையும் விழைந்து காண்கின்றாய்; இச் சிறுபிழையினால் உன் அரிய மகிமை ஆற்றல் குன்றி யுள்ளது; இக்குறை நீங்கினால் உன் மொழி வழியே மழை பொழியும்; பத்தினியான உன்னைப் பழுது நினைத்தவனை அரசன் விரைந்து தண்டிப்பான்; ஏழு நாளைக்குள் அவன் தண்டியாவிடின் நான் அக்குற்றவாளியைக் கொன்று தீர்ப்பேன்; நீ குணமுடன் போய்க் கணவனை வழிபட்டு ஒழுகுக" என்று உணர்த்தி விடுத்தது. இச்சரித வுண்மையைச் சாத்தனார் என்னும் புலவர் பெருமானார் அழகுற விளக்கி யிருக்கிறார். அடியில் பார்க்க.

" தெள்ளுநீர்க் காவிரி ஆடினள் வரூஉம்
பார்ப்பனி மருதியைப் பாங்கோர் இன்மையின்
யாப்பறை என்றே எண்ணினன் ஆகிக்
காவிரி வாயிலிற் ககந்தன் சிறுவன்
நீவா என்ன நேரிழை கலங்கி
மண்டிணி ஞாலத்து மழைவளம் தரூஉம்
பெண்டிர் ஆயின் பிறர்நெஞ்சு புகாஅர்;
புக்கேன் பிறனுளம் புரிநூல் மார்பன்
முத்தீப் பேணும் முறை எனக்கு இல்லென

மாதுயர் எவ்வமொடு மனையகம் புகாஅள்
பூத சதுக்கம் புக்கனள் மயங்கிக்
கொண்டோற் பிழைத்த குற்றம் தானிலேன்
கண்டோர் நெஞ்சிற் கரப்பு எளிதாயினேன்
வான்தரு கற்பின் மனையறம் பட்டேன்
யான் செய் குற்றம் யானறி கில்லேன்
பொய்யினை கொல்லோ பூத சதுக்கத்துத்
தெய்வம் நீ எனச் சேயிழை அரற்றலும்,
மாபெரும் பூதம் தோன்றி மடக்கொடி!
நீ கேள் என்றே நேரிழைக்கு உரைக்கும்:
தெய்வம் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யும் பெருமழை என்ற அப்
பொய்யில் புலவன் பொருளுரை தேறாய்
பிசியும் நொடியும் பிறர்வாய்க் கேட்டு
விசிபிணி முழவின் விழாக்கோள் விரும்பிக்
கடவுட் பேணல் கடவியை ஆகலின்,
மடவரல்! ஏவ மழையும் பெய்யாது;
நிறையுடைப் பெண்டிர் தம்மே போலப்
பிறர்நெஞ்சு சுடூஉம் பெற்றியும் இல்லை;
ஆங்கு அவை ஒழிகுவை ஆயின் ஆயிழை
ஓங்கிரு வானத்து மழையும் நின் மொழியது
பெட்டாங்கு ஒழுகும் பெண்டிரைப் போலக்
கட்டாது உன்னைஎன் கடுந்தொழிற் பாசம்
மன்முறை எழுநாள் வைத்தவன் வழூஉம்
பின்முறை அல்லது என்முறை இல்லை;
ஆங்கெழு நாளில் இளங்கொடி நின்பால்
நீங்கா நெஞ்சின் மயரியை வாளால்
ஈர்ந்தன் கேட்டுக் கடிதலும் உண்டென
இகந்த பூதம் எடுத்துரை செய்ததப்
பூதம் உரைத்த நாளால் ஆங்கவன்
மாதை வாளால் தடியவும் பட்டனன்.'' (மணிமேகலை, 22)

இந்தப்பாட்டில் படிந்துள்ள சரித்திர நிலையையும், கருத்துக் கலையுட்குறிப்புகளையும் கூர்ந்துநோக்கி ஓர்ந்து சிந்திக்கவேண்டும்.

தெய்வம் தொழாள் என்னும் தேவர் வாய் மொழியை எடுத்துக்காட்டி, அவரைப் பொய்யில் புலவன் எனப் புகழ்ந்து

போற்றி, உத்தம பத்தினி நிலையைப் பூதம் இதன்கண் உணர்த்தியுள்ளது. உணர்வு நலங்கள் பல இதில் நுணுகி மிளிர்கின்றன.

பண்டைக்காலத்தில் இந் நாட்டில் நகரங்கள் அமைந்திருந்த நிலைமையும், அரசு புரிந்த முறைமையும், பதிவிரதைகளின் தகைமையும், அவரது சித்தசுத்தியும், தெய்வப்பெற்றியும் இதனால் நன்கு உணர்ந்து கொள்ளலாம். இப்படி ஒரு சோதனைப் பூதம் இக்காலத்தில் இருந்தால் நம்முடைய நிலைமைகள் எப்படியாம்?

ஆதி அந்தம் இல்லான் முதல் தெய்வமேயாயினும் தனக்கு உரிமையாகத் தந்துள்ள சொந்தநாயகனையே தெய்வம் என மதித்து மனைவி ஒழுக வேண்டும்; அதுவே அந்த ஏகநாயகனுக்கு உவகையாம் என்பதாம். உடனுறை தெய்வத்தை விடுத்துக் கடவுளைப் பேணினமையால் மடவாலே! உனக்குக் குறைவு நேர்ந்ததென்று பூதம் குறித்திருத்தலறிக. கடவியை = கடமையாகவுடையை. இனி, கணவனையே தெய்வமாகக் கருதிப் பேணுக என்பதாம்.

பெண்களை மிகவும் அடிமைப்படுத்தி என்றும் தமக்குக்கீழ்ப் படிந்து ஊழியம் புரிந்து வரும்படி ஆண்கள் எழுதிவைத்த அநியாயச் சூழ்ச்சிகளே கற்பிலக்கணங்கள் என்று நூல்களில் கலித்திருக்கின்றன; அவை பெண்ணினத்துக்கு இழிவு தருவன; அவற்றை ஒப்புக்கொள்ளக்கூடாது; ஒழித்து விடவேண்டும் என இக்காலத்தில் சிலர் சிணுக்குகள் செய்கின்றனர்.

உண்மையையும் உரிமையையும் குறிக்கோளையும் ஊன்றி உணராமல் மகளிர் இனத்துக்கு மாண்பு செய்ய வந்தவர் போல் தமக்குத் தோன்றியபடியே அவர் வீம்பு புரிகின்றார். இவ்வீம்பில் இருபாலும் கூம்பியுள்ளன. கற்புடையார் அன்புரிமையுடன் இயல்பாக உவந்துகொள்ளும் ஒழுக்கம் கற்பிலார்க்கு இப்படி மயலாகின்றது! ஆகவே அஞ்சி அயர்ந்து அவம்பேசுகின்றனர்.

ஆணும் பெண்ணும் உயிரும் உடலும் போல் ஒன்றை ஒன்று தழுவி ஒளிபெற்றுள்ளன. ஒன்றுக்கு ஒன்று செய்யும் உரிமையும் ஆதரவும் இரண்டிற்கும் இதமாய் இனிதமைகின்றன. உரிமையில் வழுவுறின் இருமையிலும் இழவுறும். இதில்உயர்வுதாழ்வு காணல் மயலேயாகும்.

ஒரு மனிதன் பதினாறு வயது வரையும் தாய் தந்தையரால் பாலிக்கப்படுகிறான்; அதன் பின் அவன் வாழ்வு முழுவதும் மனைவி கையிலேயே மருவியுள்ளது. வாழ்க்கைத்துணை என மனைவிக்கு

வைத்திருக்கும் பெயரின் பொருளால் கணவனது உயிராதார நிலையாய் அவள் ஒளிசெய்துள்ளமை உணரலாகும். ஆகவே பெண்மையின் பெருமையும், உலகுக்கு உறுதியாய் அது உதவி நிற்கும் தன்மையும் ஒருங்கே தெளிய நின்றன.

மனைவி இனியளாயின் மணாளன் என்றும் இன்ப நலங்களையுடையனே; அல்லனேல் அவனுடைய அல்லல்கள் அளவிடலரியன. இல்லாள் பொல்லாளானல் எல்லாம் புலையாம்.

இங்ஙனம் உலக நலத்துக்குத் தலைமைக் காரணமாய் நிலவியுள்ள குலமகளிரது குண நலங்களை இதமாகவும் விநயமாகவும் நூல்கள் நினைவுறுத்தி நிற்கின்றன. தாலி வேலியால் தளையுற்றுள்ள அவர் தாம் கைப்பிடித்த கணவனைக் கருத்தூன்றிப் பேணிவரின் இருபாலும் இன்பமாய் முப்பாலும் பெறலும் அப்பாலும் ஆனந்தம் பெறுவர் ஆதலால் அப்பேற்றுக்கு இனிய மூலவூற்றான சீலத்தை மேலோர் ஞாலம் அறிய இவ்வாறுநாட்டி வைத்திருக்கின்றார்.

பெண்மைக்குப் பெருமதிப்புத்தந்து புனித நிலையில் இந்நாடு அதனைப் பேணியுள்ளது போல் வேறு எந்நாடும் இது வரை பேணியவில்லை. பத்தினிப் பெண்டிர்க்குக் கோயில் அமைத்து இன்றும் இந்நாட்டவர் கொண்டாடி வருகின்றனர்.

கற்புடை மகளிர் அற்புத நிலையினர் என அவரது தெய்வீக மகிமையைக் காவியத்தில் நம் கவிஞர் பிரான் பலவாறு பாராட்டியிருக்கிறார்.

சித்தாச்சிரமம் பத்தினிகளுடைய சித்தம் போல் பரிசுத்தமானது என்றதனல் பெண்மையின் கண்ணியமான புண்ணிய நிலையைக் குறித்து இவர் எண்ணியுள்ளமை இனிது புலனும்.

ஆதிமூலப் பொருளான திருமால் முன்பு இருந்து தவம் புரிந்தது; மிகவும் புனிதமானது; கருதிய அறநலங்களெல்லாம் எளிதில் அருள வல்லது என அத் தவநிலையத்தைக் குறித்து இவ்வாறு வியந்துரைத்து மேலும் தொடர்ந்து சிலமொழியலானர்.

## மாவலி மன்னன்

இங்ஙனம் மாயவன் அமர்ந்து மாதவம் புரிந்து வருங்கால் மாவலி என்னும் அசுர குலத்தலைவன் உலக முழுவதையும் தன் அரசாக் கொண்டு தனிச் செங்கோல் செலுத்தி வந்தான். அவன்

அரிய போர்வீரன். பெரிய கொடையாளி. பெருந்திருவும் அருந்திறலும் ஒருங்கே நிறைந்தவன். தேவர்களும் அவனுக்கு அடங்கி ஏவல் செய்து வந்தனர். விண்ணும் மண்ணும் தொழ எண்ணரிய நலங்களோடு நெடுங்காலம் நிலைத்து வந்தமையால் தனக்கு நிகர் எவரும் இலர் என்ற ஒரு செருக்கும் அவன் நெஞ்சில் நிமிர்ந்து நின்றது. தமது தலைமை நிலையை இழந்து அவமானமாய் அலமந்துழன்ற அமரர் ஒருமுறை மறைவாய்க் குழுமிச் சதியாலோசனைகள் செய்தார். முடிவில் இங்கே தவம் செய்துள்ள திருமாலிடம் வந்தார். தமது தாழ்வினை நீக்கி வாழ்வு அளிக்க வேண்டினர்.

அப் பெருமான் இசைந்தான். அமரர்க்கு ஆதரவுகூறி அயல் அகல விடுத்தான். மாவலியின் தன்மையையும் புண்ணிய நிலையையும் எண்ணி மகிழ்ந்தான். தன் பதம் தந்து அவனைத் தனி நிலையில் வைக்கவேண்டும் என்று துணிந்தான். அதற்குத் தக்கவாறு அவதரிக்க நேர்ந்தான்.

## திருமால் வாமனனாய் வந்தது

அவ்வமயம் காசிபன் மனைவியாகிய அதிதி என்பவள் ஓர் அருமை மகப்பேற்றை விரும்பி அரியை நோக்கி அருந் தவங் கிடந்தாள். அவளுக்குப் பிள்ளையாய் வந்து அப்பெருமான் பிறந்தான். அப்பிறப்பு மிகவும் விசித்திரமானது. இருசாண் அளவாய்க் குறுகிய உருவில் அது மருவியிருந்தது. எண்சாணுடம்புடைய மனித உலகம் அதனை விழைந்து நோக்கி வியந்து நின்றது. நெடியோன் இப்படிக் குறியனாய் வந்து இனிது வளர்ந்து கலைகள் பல பயின்று கபட நாடகங்கள் செய்து பருவம் வரவும் கருதியதை முடிக்க உறுதிசெய்தெழுந்தான். அவன் வரவு செலவுகள் அடியில் வருவன.

காலம் நுனித்துணர் காசிபன் என்னும்
413 வாலறி வற்கு அதிதிக்கு ஒரு மகவாய்
நீல நிறத்து நெடுந்தகை வந்தோர்
ஆலமர் வித்தின் அருங்குறள் ஆனான். (1)

முப்புரி நூலினன், முஞ்சியன், விஞ்சை
414 கற்பதோர் நாவன், அனற்படு கையன்,
அற்புதன் அற்புதரேயறியுந்தன்
சிற்பதம் ஒப்பதோர் மெய்க்கொடு சென்றான். (2)

அன்றவன் வந்தது அறிந்துல கெல்லாம்
வென்றவன் முந்தி வியந்தெதிர் கொண்டான்
என்றனின் அந்தணர் இல்லை நிறைந்தோய்!
என்றனின் உய்ந்தவர் யாருளர்? என்றான். (3)
(வேள்விப்படலம், 20-23)

மாயவன் வாமனனாய் அவதரித்ததும், மாவலியிடம் வந்ததும், அவன் கண்டு மகிழ்ந்ததும் இங்கே நாம் காண்கின்றோம்.

வாமனன் என்பதற்குக் குள்ளன் என்பது பொருள்.

ஒரு பெரிய ஆலமரம் சிறிய வித்துள் ஒடுங்கி யிருத்தல்போல் தெரியாமல் இக்குறிய வடிவில் மருவியிருந்தான் என்பார்,

ஆல் அமர் வித்தின் அரும் குறள் ஆனான்

என்றார். பின்னர் நெடி தோங்க நிற்கும் நிலையை முன் னுற இங்ஙனம் உணர்த்தியருளினார். "அருங்குறள்" என அப்பெருந்தகைக்கு ஓர் அருமைப்பேரை உரிமையுடன் வைத்தார்.

பின் வளர்ச்சியைச் சுட்டி இங்கே உவமானமாய் வந்திருக்கும் ஆலம்வித்து கச்சியப்பர் வாக்கில் வேறொரு நோக்கில் சீரோடு வந்துள்ளது. அடியில் வருவது காண்க.

சீலம் இல்லவர்க்கு உணர ஒண்ணாத சிற்பரனைப்
பாலன் என்றனை அவனிடத் திற்பல பொருளும்
மேலை நாள்வந்து தோன்றிய சிறியதோர் வித்தின்
ஆலம் யாவையும் ஒடுங்கியே அவதரித் ததுபோல்.
(கந்தபுராணம், சூரன் அமைச்சியல், 125)

முருகப் பெருமானது பரமதத்துவ நிலையைக் குறித்துச் சிங்கமுகன் சூரபன்மனுக்கு உணர்த்தியபடி யிது.

சீவகோடிகளும் அண்ட கோடிகளுமாய் அளவிடலரியபடி வெளியே பரந்து விரிந்துள்ள இந்தத் தோற்றங்களுக்கெல்லாம் மூலமுதலாயுள்ள பொருளைப் பாலன் என நினைந்து மால்கொண்டு மயங்கியுள்ளாயே! உண்மையை உணர்ந்து உய்க என்பதாம்.

இந்த ஆலும் வித்தும் மாலுக்கு உவமையாய் நூலில் பின்னும் வந்துள்ளது. கருமூலம் இல்லாத ஒரு மூலம் தெரியவந்தது.

காலமும் கருவியும் இடனும் ஆய்க்கடைப்
பாலமை பயனுமாய்ப் பயன்துய்ப் பானுமாய்ச்
சீலமும் அவைதரும் திருவு மாயுளன்
ஆலமும் வித்தும் ஒத்து அடங்கும் ஆண்மையான்.

(உயுத்தகாண்டம் இரணியன்வதை, 74)

வித்தும் மரமும் போல் உலகுயிர்களும் அவனும் ஒத்துள்ளார் என்னும் இத் தத்துவ நுட்பம் உய்த்துணரத் தக்கது.

இங்ஙனம் ஆதிமூலமான இந்த அற்புத மூர்த்தி இரண்டடி உயரமுடைய சிறிய வடிவனாய் மாவலியிடம் ஆவலுடன் வந்தான்.

இவனைக் கண்டதும் அம்மன்னவன் வியந்து நோக்கி விழைந்தெதிர்கொண்டு புகழ்ந்து போற்றி மகிழ்ந்து உபசரித்தான்.

"உலகு எல்லாம் வென்றவன்" என்றதனால் அவனது வீரப்பாடும், வெற்றித் திறனும் வியனுல காட்சியும் விளங்கி நின்றன. யாவராலும் வெல்லமுடியாத அரிய பெரிய வலியினையுடையவன் ஆகலான் மாவலி என நின்றான்.

அத்தகைய மகாவீரனை சக்கரவர்த்தி வந்தவனது உருவு கண்டு எள்ளாமல் மிகவும் மரியாதையுடன் வணங்கி உவகையுரையாடியுள்ளமையால் அவனுடைய உள்ளப்பான்மையும் உயர்பெருந்தகைமையும் வள்ளற் குணமும் நன்கு உணர வந்தன.

தன்பால் வந்தவர் எவராயினும் அவர்பால் அன்புமீதூர்ந்து அள்ளிக்கொடுக்கும் பெருங் கொடை வள்ளல் ஆதலால் அடைந்தவனைக் கண்டதும் உள்ளம் உவந்து கொண்டான். வந்தவன் விரத ஒழுக்கமுடைய பிரமச்சாரி என்று தெரிந்தமையால் நல்ல பாத்திரம் என்று நயந்து நின்று நயமொழி புகன்றான். இங்ஙனம் அகமகிழ்ந்து முகமலர்ந்து முகமனுரை கூறவே வந்த வாமனர் சிந்தை யுவந்து அழகாகச் சில வார்த்தைகள் ஆடினார்.

ஆண்டகை அவ்வழி கூற அறிந்தோன்
வேண்டினர் வேட்கையின் மேற்பட வீசி
நீண்ட கையாய்! இனி நின்னுழை வந்தோர்
மாண்டவர் அல்லவர் மாண்பிலர் என்றான்.

(வேள்விப் படலம், 24)

வந்தவர் பேசியிருக்கும் பேச்சுக்களைப் பாருங்கள். வார்த்தைகளில் மன்னன் கீர்த்தி ஆர்த்தியுடன் போற்றப்பட்டுள்ளது. புகழ்ச்சி மொழிகள் உணர்ச்சிநலங்கனிந்து வெளிவந்துள்ளன.

வேண்டினர் வேட்கையின் மேற்படவீசி நீண்டகையாய்!

என்றது அந்த ஆண்டகையின் அதிசயக் கொடை நிலையை விளக்கி நின்றது. கொடுப்போர் திறனையும், கொள்வோர் நிலையும் கூர்ந்து சிந்தித்து இதனை ஓர்ந்துகொள்ளவேண்டும்.

இரவலர் வேண்டின அளவு விரும்பிக்கொடுப்போர்; விருப்பின்றி நல்குவோர்; வேண்டிய அளவினும் சிறிது குறையத் தருவோர்; மிகவும் குறைத்து ஈவோர்; அளவுக்கு மிஞ்சி ஆர்வமொடு உதவுவோர் என இன்னவாறான பாகுபாடுகளைக் கொடையாளிகளிடம் காணலாம்.

இங்கே குறித்த மாவலி மன்னனுடைய கொடைத் திறம் இந்த வகையுள் யாதும் சேராமல் எவரும் வியந்து நோக்கும்படி தனியே உயர்ந்து நிற்கின்றது.

ஒருவன் உள்ளத்தில் உள்ள வேட்கை வெளியில் எளிதில் தெரியாது; விரும்பியபடியெல்லாம் எவனும் வெளியே கேட்கத் துணியான். வேட்கை ஆயிரமாயின் கேட்பது நூற்றினும் குறையாம்; அந்த அளவையும் எந்தக் கொடையாளியும் உடனே கொடுத்திடலரிது; உலகில் வண்மை இந்த வண்ணம் இருக்க, "வேண்டினர் வேட்கையின் மேற்பட வீசு"கின்ற இந்தக் கொடை நிலை எவ்வளவு அதிசயமுடையது? அதனைத் துதி செய்துள்ளவனையும் நினைந்து சூழ்ந்து சிந்திக்க வேண்டும்.

"ஆசைக்கு ஓர் அளவில்லை" என்றபடி எல்லையற்று நிற்கும் மனித வேட்கையைத் தன்னுள் அடக்கி மாவலி வள்ளன்மை மாட்சிமையுடையதாய் யாவரும் துதி செய்யப் பாவரு புகழோடு மேல் உயர்ந்து ஓங்கி உள்ள தென்பதாம்.

அவனுடைய செல்வச் சிறப்பு, கல்வி நலன், ஆட்சித் திறம், போர்வீரம் முதலியவற்றுள் எதனையும் விதந்து கூறாமல், கொடை நிலையை மட்டும் புகழ்ந்து பேசியது என்னை? எனின், வந்து யாசகம் வாங்க ஆதலால் அந்த வாசம் படிந்து இந்த வாசகம் இங்ஙனம் வந்துள்ளது என்க.

நீண்ட கையாய்! என்று கையில் வாய் வைத்தது தான் வேண்டி வந்துள்ளதை விரைந்து தந்தருள. இனி இவன் நீளும் காவலன் ஆதலை நினைவுறுத்தி அவ்வினமுந் தெரியவந்தது.

மன்னர் மன்னவா! ஏதேனும் ஒரு பொருளை விரும்பி உன்னிடம் வந்தவர் உயர்ந்த பாக்கியவான்களாய்ச் சிறந்து மகிழ்வர் என்பார், "நின் உழை வந்தோர் மாண்டவர்" என்றார். உழை = பக்கம், இடம். மாண்டவர் = மாட்சிமை யுடையவர். வந்து நிற்கின்ற தனது மாண்பினை நுனித்துணரும்படி இவ்வாக்கியம் தொனித்துள்ளது.

மாவலி பெரிய கொடை வள்ளல்; குறிப்பறிந்து எதையும் அளவுக்கு மிஞ்சி அள்ளிக்கொடுப்பவன்; அவன்பால் வந்த இரவலர்கள் மானம் மரியாதைகள் யாதும் குன்றாமல் கருதியன வெல்லாம் கைவரப் பெற்றுப் பெருமையுடன் திகழ்வார்; வரப் பெறாதவர் உறுகுறை நீங்காமல் அயலிடம் போய்ச் செயலிழந்து சீரழிந்து அவமான மடைந்து அல்லற்படுவர் என்னும் கருத்து வெளிபட "வந்தோர்மாண்டவர்; அல்லவர் மாண்புஇலர்" என வரைந்து மொழிந்தார்.

உன்னிடம் வந்தவர் எவராயினும் அவரை மாட்சிமைப் படுத்திவிடும் மகிமையுடையவனாதலால் இன்று வந்துள்ள நான் நன்மை மிகப் பெற்றேன் என்பதாம். நான் கருதிவந்துள்ளதை உறுதியுடன் விரைந்து உதவியருள்க என்பது குறிப்பு.

தேவரே எனினும் வேறு யாவரேயாயினும் ஒருவனிடம் ஒன்று பெற விரும்பினால் அவனை வாய் குளிரப் புகழ்ந்து துதிப்பர் என்பது இதனால் உணர்ந்துகொள்ளலாம்.

இப் புகழ் மொழியைக் கேட்டதும் மாவலி உள்ளங் குளிர்ந்து உவகைமீக் கூர்ந்தான். அவரை விழைந்து நோக்கினான்; "அடிகளுக்கு நான் என்ன செய்யவேண்டும்?" என்று ஆர்வமொடு கேட்டான். கேட்கவே அவர் மிகவும் நளினமாக நயமொழிகள் புகன்றார். அவருடைய உரையாடல்கள் விரகும் விநயமும் விரவியுள்ளன. அருகே வருவன அறிக.

வாமனர்:—மன்னர் மன்னவா! உன்பால் இன்று அன்பால் வந்தேன்; யாதொன்றையும் அடைய வரவில்லை.

மாவலி:— தேவரீர் ஈண்டு என்னை நாடிவந்தது என் முன்னோர் செய்த புண்ணியமே; நான் பரம பாக்கியவான் ஆயினேன்; தங்களுக்குத் தருவது இன்னதென்று தெரி

யாமல் தந்தளிக்கின்றேன்; ஏதேனும் வேண்டியதை விளம்பியருளுங்கள்.

வாமனர்:—நமக்கு வேண்டியது வேண்டாமையே.

மாவலி:— என்னிடம்வந்தவர்களை நான் சும்மா அனுப்புவதில்லை; யாதாவது கொடுத்துவிடுவது வழக்கம்; அடிகள் கொள்ளாது போனால் என் குடிக்கு இழுக்காம்.

வாமனர்:—கொடுத்து வந்த நல்ல குலமகன் ஆதலால் கொடையில் இவ்வளவு சுவை கண்டிருக்கின்றாய்! இந்த ஈதல் இன்பத்தை இழிமக்கள் எங்ஙனம் உணர்வார்? புகழும் புண்ணியமும் பயக்கத்தக்க பொருளைப் பழியிலும் பாவத்திலும் பாழ்படுத்திஅநியாயமாய் அழியும் மருளுடை மாக்கள் நிறைந்துள்ள இவ் இருளுடையுலகில் உன் போன்ற தெருளுடையாரைக் காண்டல் மிகவும் அரிதாம்; இன்று நான் கண்டுமகிழ்ந்தேன்; நீ என்றும் பொன்றாப் புகழுடன் பொலிந்து விளங்க வேண்டும்; அவ்வளவே எமக்கு வேண்டியது.

மாவலி:— தேவரீருக்கு யாதும் தேவையில்லை ஆயினும் நான் உய்யும்படி என்னலங் கருதியேனும் ஒன்றைப் பெற்றருளுங்கள்.

வாமனர்:—அப்படியாயின் நான் தனியே இருந்து தவம்புரிதற்கு உன் நகர்ப்புறத்தில் சிறிது இடம் கொடுத்தருளுக.

மாவலி:— எவ்வளவு நிலம் தேவையோ, அவ்வளவும் எடுத்துக் கொள்ளுங்கள்.

வாமனர்:—அதிகம் வேண்டியதில்லை. என் கால் அளவுக்கு மூன்று அடி மண் போதும்; முடியுமானால் தந்தருள்க.

மாவலி:— என்ன சுவாமி இது!

வாமனர்:—மன்னர் பெரும! நான் சொன்ன அளவு கொடுத்தால் போதும்; அதுவே எனக்குப் பெரிதாம்.

மாவலி:— தந்தேன்; அளந்துகொள்ளுங்கள்.

அரசன் வாயிலிருந்து இந்த வார்த்தை வரவே அருகே நின்ற அமைச்சராகிய சுக்கிராச்சாரியார் தடுத்தார். அவர் தடுத்து நிறுத்தியதும், எடுத்து மொழிந்ததும் அடுத்து வருவன காண்க.

### வாமனர்க்கு வழங்கியது

சிந்தை உவந்தெதிர் என்செய? என்றான் ;
அந்தணன் மூவடி மண் அருள் உண்டேல்
வெந்திறலாய்! இது வேண்டும் என்றான்
தந்தனென் என்றனன் ; வெள்ளி தடுத்தான். (1)

### சுக்கிரன் தடுத்தது

கண்ட திறத்திது கைதவம் ஐய
கொண்டல் நிறக்குறள் என்பது கொள்ளேல் ;
அண்டமும் முற்றும் அகண்டமும் மேனாள்
உண்டவன் ஆம்இது உணர்ந்துகொள் என்றான். (2)
(வேள்விப்படலம், 25, 26)

மாவலி மன்னனுடைய நெஞ்சம், வாமனரது வஞ்சம், சுக்கிரனுடைய சூழ்ச்சித்திறம் இவற்றுள் துலங்கியுள்ளன.

வந்தவரது துதிமொழிகளால் மாவலி மனம் பரவசமடைந்துள்ளமை சிந்தை உவந்து என்றதனால் தெரிய நின்றது. அங்ஙனம் உள்ளங் களித்தவன் அவர்க்கு வேண்டியவற்றையெல்லாம் விரைந்துகொடுக்கத் துணிந்தான் ஆதலால் "என்செய?" என்றான். நான் செய்யவேண்டியதைச் சொல்லியருளுங்கள், உடனே உவந்து செய்கின்றேன் என்பது கருத்து. தன் அன்புரிமையும், என்பும் உதவ வல்ல இதமும் நிறைந்து இத்துணிவுரை வந்தது.

இதற்கு வாமனர் சொன்ன பதில் என்ன? முதலில் ஒன்றும் வேண்டாதவர்போல் நடித்தார்; முடிவில், "மூவடி மண் அருள் உண்டேல்" என்றார். இதில் உண்டேல் என்ற இழுப்பு எதற்கு? குள்ளர் பேச்சில் உள்ளே கள்ளம் கனிந்துள்ளது.

உனக்குப் பிரியம் உண்டானால், என்பால் அருள் உண்டானால் கொடு என இன்னவாறு வெளிப்படத் தோன்றினும் அச்சொல் ஒளிப்புடனின்றது.

என்னுடைய இந்தச் சின்னக் கால் அளவுக்கு மூன்று அடி மண் உன்னிடம் இருக்குமானால் அருள் என்ற பொருள் இதில் அடியுறைந்துள்ளது. உண்டேல் என்ற தொனிக் குறிப்பால் இராது என்பது நனித்துணர வந்தது.

பூமண்டல முழுவதும் ஆளுகின்ற சக்கரவர்த்தியிடம் வந்து மூவடி மண் உண்டேல் என்றது ஆளரவம் தெரியாமல் எளனம்

...டியாம். உனது கோலின் கீழ் உள்ளனவெல்லாம் எனது ... கால் அளவுக்கும் காணாது என்பது குறிப்பு.

...ள் விரகுரையின் கரவு தெரியாமல் மன்னன் மனமிக ...ந்து வேண்டியதை விரைந்து தந்தான். இதனை அதியூக ...க் கவனித்துவந்த மதியூகியான மந்திரி எதிர்மொழி கூறி ... மறுத்தான்: "மன்னர் பெரும! வந்திருக்கும் இவர் வஞ்ச ...னர்; மாயங்கள் வல்லவர்; இனி என்ன நிகழுமோ? என்று ... நெஞ்சம் அஞ்சுகின்றது. நிலைமை சரியில்லை. கள்ளனை ...லும் குள்ளனை நம்பலாகாது. உள்ளதை உரைத்தேன். ...வறிந்து தெளிக." என்று உரிமையுடன் உணர்த்தினான்.

...கிசன் இங்ஙனம் சொல்லவே மன்னன் புன்னகை புரிந்து ...மன் முகத்தை விழைந்து நோக்கினான். அக் குறிப்பை அறிந்து அமைச்சன் துணிந்து உரைத்தான்.

"கண்ட திறத்து இது கைதவம்" என்றது அவன் கருதி ஆராய்ந்த உறுதியைக் குறித்தது. உருவம், பருவம், முகக் குறிப்பு, உரைத்திறம் முதலியவற்றை நுணுகி நோக்கினேன்; முடிவாக மாயச் சூழ்ச்சி என்றே தெரிகின்றது என்றவாறு. கைதவம்=வஞ்சனை. செய்தவன் அல்லன் என்பதாம்.

கொண்டல் நிறக்குறள் என்பது கொள்ளேல் என்றது உற்று ...ற்றும் வடிவம் உண்மை அன்று; வித்தையாக வந்துள்ளான்; ...க ஆளை நம்பற்க; நம்பினால் மோசம் என்பது கருத்து. இங் ...ம் குறிப்பாகக் கூறியதை அரசன் குறிக்கொள்ளாமையால் ...யில் உறுதியாகத் தெளிவுறுத்தினான்.

"அண்டமும் முற்றும் அகண்டமும் மேனாள்
உண்டவன் ஆம் இது உணர்ந்துகொள்"

என நேரே கண்டவன் போல் உண்மையைக் காட்டியருளி னான். "மூன்று அடி மண் கேட்டு உன்னிடம் இங்கே வந்திருக் கின்ற ஆளை எளிதாக எண்ணி ஏமாந்து போகாதே; ஆள் யார் தெரியுமா? அண்டங்களையெல்லாம் ஒருங்கே உண்டவன்; உலகம் உண்ட பெருவாயனான அம்மாயனே தூய தவமுனிவன்போல் இம்மாயவேடங்கொண்டு அமரர்களுக்கு ஆதரவாக நமர்களுக்கு ...ம் கருதி ஈண்டு இப்படி வந்திருக்கின்றான்; ஆண்டவனே! உடனே வெளியேற்றி விடுக" என்று மந்திரி விரைந்து நின்றான்.

இதனால் சுக்கிரனுடைய மதி நுட்பமும், குறிப்பறியும் திறனும், உறுதியுண்மைகளைத் தெளிந்துரைக்கும் திட்பமும், உரிய அரசனைப்பேணி ஆட்சியைப் பாதுகாக்கும் மாட்சியும் நன்கு அறிய நின்றன. அவனது ஆய்வு எங்கும் அதிவியப்புடையது.

இங்கே சில ஐயங்கள் தோன்றலாம்.

திருமால் வாமனனாய் வந்துள்ளது; தேவரகசியம்; இந்த அவதார மருமம் சுக்கிரனுக்கு எப்படித்தெரிந்தது? என இப்படி ஒரு சங்கை எழும்; எழின், அவனது கலைஞானத்தாலும் யோகக் காட்சியாலும் உய்த்துணர்ந்துகொண்டான் என்க.

தந்தேன் என்று முதலில் வாக்குத் தத்தம் செய்துவிட்டோமே என்று வருந்தவேண்டா; வஞ்சித்தார் பால் வாக்கு மாறலாம்; அது குற்றம் ஆகாது. நமது குல்விரோதிகளாகிய தேவர்களுக்கு இதமாய் மாயவன் வஞ்சம் புரிகின்றான் ஆதலால் அவனை மதிக்கலாகாது; உடனே ஒதுக்கி விடுக என்று மாவலி முன் சுக்கிரன் மன்றாடி நின்றான். அன்று அவன் உரைத்த உரைகளுள் சில அடியில் வருவன.

சுக்கிரன் சொன்னது

"தேசு பெற்ற திருப்புணர் மார்பினன்
காசிபற் குறுங் காதலன் ஆகி யிங்கு
ஆசை யுற்ற மூன்றும் உலகம் கொளா
வாசவற்கு அளிப்பான் இவண் வந்தனன். (1)

ஆமொர் மூவடி மண்ணளிப் பேன் என்றாய்!
பூமி ஓரடி, பூமியின் மேலெலாம்
வாம ஓரடி யாக வளர்குவன்;
நாம ஓரடி எங்ஙனம் நல்குவை? (2)

கொடுக்கின் ஈது கொடையன்று; குற்றமோடு
அடுத்துளோரையும், சுற்றம் என்பாரையும்
கெடுத்து, நீயும் கெடுநரகு எய்துவை;
விடுக்க வேண்டும்இக் குற்ற விழைவையே. (3)

வஞ்ச முற்று மருவினர் தம்மொடு
நெஞ்ச முற்று நிகழ்த்துமெய் நீக்கலும்,
தஞ்ச மற்றுத் தனதுயிர் ஈறுறின்
அஞ்சி மாற்றுபொய் யும்மழ காகுமே. (4)

ஐயம் ஏற்றுணும் ஆச்சிர மத்தினோர்
செய்யும் செய்கை திறம்பிச் செழும்பொருள்
கையின் ஏற்பவள் காதலித் தார்களேல்
பொய்யின் மாற்றிடி னும்புரை இல்லையே. (5)

அள்ளி லைத்தரு அஞ்ச அளிக்குங்கை
வெள்ள வேல்! ஒரு மாமறை யோனென
உள்ளல்; ஓங்குலகு உண்டவன் என்றுமுன்
வெள்ளி கூறஅவ் வேந்தனும் கூறுவான்." (பாகவதம்)

**சுக்கிரனுடைய உறுதிமொழிகள் இதில் தெளிவாயிருக்கின்றன. உரைப் பொருள்களையும், உள்ளக்கருத்துக்களையும் ஊன்றி உணர்ந்து கொள்ளவேண்டும். சிறந்த மதிமானாகிய அவன் அரசன்பால் கொண்டுள்ள அன்பும் ஆதரவும் இடித்துரைக்கும் திறமான அமைச்சியல்புகளுக்கு எடுத்துக்காட்டாயுள்ளன. "மந்திரிக்கு அழகு வரும்பொருள் உரைத்தல்" என்றபடி பின் வருவதை முன் ஓர்ந்து மன்னனுக்கு இங்ஙனம் நன்மதி கூறினான்.**

**மந்திரி இன்னவாறு சொல்லியும், மன்னன் யாதும் இசைந்திலன். தான் முதலில் சொன்னபடியே தானம் கொடுக்கத் துணிந்தான். அங்ஙனம் துணிந்தவன் கொடையின் பெருமையைக் குறித்துப் பெரிதும் புகழ்ந்து போற்றினான். தனக்கு அறிவு கூறிய சுக்கிரனை நோக்கி மாவலி பதில் உரைத்தது அதிமேன்மையுடையதாய் மதிநலஞ் சுரந்து எவரும் துதிசெய்ய வுள்ளது.**

### மாவலி உரைத்தது

"நினக்கிலை என்கை நிமிர்ந்திட வந்து 419
தனக்கிய லாவகை தாழ்வது தாழ்வில்
கனக்கரி யானது கைத்தலம் என்னின்
எனக்கிதன் மேனலம் யாதுகொல்? என்றான். (1)

துன்னினர் துன்னலர் என்பது சொல்லார்
முன்னிய நன்னெறி நூலவர் முன்வந்து 420
உன்னிய தானம் உயர்ந்தவர் கொள்க
என்னின் இவன்துணை யாவர் உயர்ந்தார்? (2)

வெள்ளியை யாதல் விளம்பினை மேலோர்
வள்ளிய ராக வழங்குவ தல்லால் 421
எள்ளுவ என்சில? இன்னுயி ரேனும்
கொள்ளுதல் தீது கொடுப்பது நன்றால். (3)

மாய்ந்தவர் மாய்ந்தவர் அல்லர்கள் ; மாயாது
ஏந்திய கைகொடு இரந்தவர் எந்தாய் !
வீந்தவர் என்பவர் வீந்தவர் ஏனும்
ஈந்தவர் அல்லது இருந்தவர் யாரே ? (4)

அடுப்ப வரும்பழி செய்ஞ்ஞரும் அல்லர் ;
கொடுப்பவர் முன்பு கொடேல் என நின்று
தடுப்பவ ரேபகை ; தம்மையும் அன்னார்
கெடுப்பவர் ; இன்னதொர் கேடிலை என்றான். (5)

கட்டுரை யிற்றம கைத்துள போழ்தே
இட்டிசை கொண்டுஅறன் எய்த முயன்றோர்
உட்டெறு வெம்பகை யாவது லோபம்
விட்டிடல் என்று விலக்கினர் தாமே. (6)

எடுத்தொரு வருக்கொருவர் ஈவதனின் முன்னே
தடுப்பது நினக்கழ கிதோ ? தகவில் வெள்ளி
கொடுப்பது விலக்குகொடி யோய் ! உனது சுற்றம்
உடுப்பதுவும் உண்பதுவும் இன்றிவிடு கின்றாய்.'' (7)
(வேள்விப்படலம், 27-33)

தனது கொடையை இடையே தடைசெய்து உரைத்த சுக்கிரனை நோக்கி மாவலி மன்னன் இப்படிப் பேசியிருக்கிறான். கவிகளில் குறித்துள்ள கருத்துக்களைக் கருத்தூன்றிக் கவனியுங்கள். ஈகையின் மகிமை இங்கே இனிதாக விளக்கப்பட்டுள்ளது.

''வந்துள்ளவன் வறியனான யாசகன் அல்லன்; திருவின் கேள்வனான பெருமானே ; தேவர்களுக்குத் தஞ்சம் அளித்து உன்னை வஞ்சிக்க வந்திருக்கின்றான் ; இந்தக் குள்ளக் கள்ளன் சொல்லை நம்பாதே ; ஒன்றும் நல்காதே'' என்று சுக்கிரன் புத்தி கூறினான் ஆதலின் அவனுக்கு எதிராக மாவலி இவ்வாறு உரைத்திருக்கிறான்.

சாதாரணமான ஒரு பிராமணப் பிரமச்சாரி என்றே நான் எண்ணுகின்றேன் ; நீர் சொல்லுகின்றபடி நாராயணன் என்பது உண்மையானால் நான் எவ்வளவு பெரிய பாக்கியவான் ஆனேன் ! என மன்னவன் பரவசமாய்ப் பேசலானான்.

தேவதேவனான திருமால் கை கீழாய் வந்தவும், என் கை மேலாய் வழங்கவும் வாய்த்தது ஆனால் இந்த அரும்பெறல் நலத்தினும் வேறு பெரும்பேறு என்ன உள்ளது ? இருந்தால்

சொல்லும் என்பான், "எனக்கு இதன்மேல் நலம் யாது கொல்?" என்றான். இதுவே எனக்குப் பரமபதம் என்பது குறிப்பு.

கனக் கரியான் என்றது கார்மேகம் போன்ற கரிய கோலத் திருமேனியான் என்றவாறு. கனம்=மேகம்.

கைமாறு கருதாமல் உலகிற்கு உயிராதாரமாய் உதவி வருகின்ற மேகமே தன் மேனி வண்ணம் என வானும் வையமும் எண்ண நின்றவன் என்றவாறு. எனவே அவனது இயல்பான அருள் நீர்மையும் உயர்மேன்மையும் உணர வந்தன.

"தாழ்வு இல் கரியான் கை தாழ்வது" என்றது யாண்டும் தாழாமல் எவர்க்கும் வாழ்வளித்து வருகின்ற திருவின் நாயகன் ஈண்டு என்பால் தாழ்ந்து வாங்க வந்தது ஆழ்ந்து சிந்திக்க வுரியது என்பதாம்.

தாழாத கை தாழ்ந்து வந்துள்ளமையால் அத் தாழ்வில் எனக்கு ஓர் தெய்வீக வாழ்வு உண்டு என்பது கருத்து.

இலட்சுமி நாயகன் இலட்சையின்றி ஓர் இரவலனாய் நம்பால் இப்படி விரகோடு வந்திருப்பின் இது நமக்குப் பெரு மகிமையேயாம்; இவ்வுயர்வுண்மையை நீர் உணரவில்லை; சிறந்த மதிமானாயிருந்தும் இந்த உணர்ச்சி உமக்குப் புலப்படாது போயதே என்பான் "நினக்கு இலை" என்றான்.

எனக்கு வருகின்ற மதிப்பும் மாட்சியும் உமக்கு இங்கே உணர முடியவில்லை; உமது ஊகத்தின் எல்லையையும் கடந்து எனது யோகம் ஓங்கியுள்ளது என்பதாம்.

பாத்திரம் அறிந்து கொடு என்றபடி தானம் நல்ல உத்தமர்களுக்கே உதவவேண்டும்; அப்படியானால் புருடோத்தமனை இவனைவிட உயர்ந்தவன் யாண்டு உளன்? இவ்வாறு அரியபொருள் எளிய வந்து வாய்த்தது ஆயின் அது எவ்வளவு ஊதியம்? எண்ணித் தெளிக. நிலைமையை உணராமல் புலமை பேசலாகாது.

தம்மை விழைந்து வந்தவர்க்கு உள்ளம் உவந்து அள்ளிக் கொடுப்பதே நல்ல குலமக்கள் இயல்பாம். தம் கை மேலாகக் கொடுத்தருள்வோரே மேலோர் என்னும் உயர்பெயர்க்கு உரியராவர்; கைகீழாக ஏந்திவருவோர் கீழோர் என நின்றார். எவ்வழியும் கொடுத்தலே உயர்வு; எடுத்தல் யாண்டும் இழிவாம்.

உயர்வற உயர்ந்த ஒருவன் இளிவாய் வந்து ஏற்று நிற்க, அவனுக்கு நான் கொடுக்கும்படியாக வாய்த்திருக்கும் இந்நாளே எனக்கு நன்னாளாம்; இன்று கிடைத்திருக்கும் பாக்கியத்தை நினைந்து என் உள்ளம் பேரானந்தம் அடைகின்றது. ஆன்ம லாபமாகிய இந்த அருமைப் பேற்றை உணராமல் தடைபுரிகின்றீரே! என்று இடை எதிர்ந்து மொழிந்தான். மொழியில் இகழ்ச்சிக் குறிப்பும் இசைந்து நின்றது.

"வெள்ளியை ஆதல் விளம்பினை!"

என்றது உள்ளே எள்ளலாக இளித்துச் சொல்லியபடியாம். சுக்கிரன் வெண்ணிறம் உடையனாதலால் அவனுக்கு வெள்ளி என்று ஒரு பெயரும் உண்டு.

வெள்ளை என்பது புறத்தே நிறத்தைக் குறித்தல்போல் உள்ளே மடமையையும், பேதைமைகளையும் உணர்த்திவரும்.

இங்கே வெள்ளி என்றது உரியபொருளில் உயர்வாகவும், உட்குறிப்பில் இழிவாகவும் உறழ்ந்து வந்தது.

நீர் எனக்குக் குலகுருவாயும் மந்திரியாயும் இருத்தலால் உலகநோக்கில் உமது கடமையை விளம்பினீர் எனவும், கொடையின் புண்ணியத்தையும், கொடுப்பவன் நிலைமையையும் உணராமல் மடமையாய் உரைத்தீர் எனவும் அது மருவியுள்ளது.

அரிய பொன் கொடுத்தும் அடைய முடியாத பெரிய புகழைக் கொஞ்சம் மண்ணைக்கொடுத்துப் பெறும்படி வாய்த்திருந்தும் தங்கமான இச்சமயத்தைப் பங்கப்படுத்துகிறீரே! இப்படி வெள்ளைப் புத்தி யிருத்தலினாலேதான் உமக்கு வெள்ளி என்று பெயர் வந்ததுபோலும்? என்று எள்ளியபடி யிது. இவ்வாறு சாதுரியமாகத் தொனிக் குறிப்பில் திட்டுவது காவியத்தில் ஒருவகை நகைச் சுவையாகும்.

பாண்டவர் ஐவரும் வனவாசம் போய் வந்த பின் அரசுரிமையைப் பெறத் துரியோதனனிடம் ஒரு தூது அனுப்பவேண்டும் என்று கண்ணன் சொன்னான். அதனைப் பலராமன் மறுத்தான். சூதில் இழந்ததை மறுபடியும் விழைந்து கொள்ளுதல் தீது என்று வாது புரிந்தான். அப்பொழுது அருகே யிருந்த

...யோகிய சாத்தகி அவனை நோக்கி மிகவும் விநயமாக இடித்துக் ...றினன். அடியில் வருவதைப் படித்துப் பாருங்கள்.

" இளைய சாத்தகி தமையனை மிகக்கரிது இதயம்
 ஆயினும் நாவில்
விளையு மாற்றம்நின் திருவடி வினுமிக வெள்ளை
 ஆகிய தென்ன
உளைய வார்த்தைகள் உரைத்தனன் உரைத்தலும்
 உற்றவர் இடுக்கண்கள்
களையு மாப்புயல் இருவரும் ஒழிமினுங் கட்டுரை
 யினி என்றான்." (பாரதம், உலூகன் தூதுச்சருக்கம், 4)

உமது உள்ளமோ கறுப்பு, வாயில் வருகின்ற சொல்லோ ...ம் உடலினும் வெள்ளையாயுள்ளதே! என இளையவன் மூத்த ...னை இதில் இகழ்ந்திருக்கும் அழகைப் பார்க்க. பலராமர் ...ளுப்பு நிறம் உடையராதலால் இங்ஙனம் இளிப்புரையாடி...ன். மனக் கோட்டத்துடன் மடத்தனமாகப் பேசுகிறீரே ...ன்று வைதபடியிது.

முன்னே வெள்ளியை என்றதைப்போல் இதில், வெள்ளை ...ன்னற் குறிப்பில் வந்து இசைந்துள்ளமை காண்க.

மாவலி உள்ளம் ஈகை யின்பத்தில் திளைத்து வந்துள்ளமை...யால் அதற்குத் தடை கூறியபோது குலகுரு என்பதையும் ...ராமல் இவ்வாறு எதிரே இகழநேர்ந்தான். பின்பு தனது மன...நிலையைத் தெளிவாக அவன் உணர்த்தலானான்.

" இன்உயிர் எனும் கொள்ளுதல்தீது ; கொடுப்பது நன்று" ...ன்றதனால் கொடையைக் குறித்து அவன் கருதியிருக்கும் ...றுதியும் உவகையும் உணரலாகும்.

உண்மையான உயர்ந்த கொடையாளிகள், புறத்தே உடை...மைகளாயுள்ள பொன் மணி நெல் நிலம் முதலிய பொருள்களை வாரிக்கொடுப்பதோடு மட்டுமல்லாமல் தமது இனிய உயிரையும் விரும்பி வேண்டின் பிறர்க்கு உவந்து கொடுத்துவிடுவர் என்பதாம்.

உயிரின் அருமையும் பெருமையும் இனிமையும் தெரிய முன்னும் பின்னும் அடையும் உம்மையும் அமைந்து வந்தன.

கொடுக்கப்படும் பொருளின் அளவுக்குத் தக்கபடி புகழும் புண்ணியமும் உயரும் ஆகலான் எவற்றினும் உயர்ந்த உயிரை இங்கு எடுத்துக் காட்டினன். கொடையின் பேரெல்லைக்கு ஓர் எல்லைக் கல்லாக இது நாட்டப்பட்டது.

கொடுத்தலால் புண்ணியம் உண்டாகின்றது; ஆகவே அதனால் எல்லா இன்ப நலங்களும் ஒருங்கே விளைகின்றது; விளையவே, உதவிய அவ்வுயிர் பேரானந்தப் பெரும் பேறுடையதாய் உயர்ந்து மகிழ்கின்றது ஆகலான் கொடுப்பது நன்று என்றான்.

கொடுப்பது மேன்மையாய் இன்ப நலத்துக்கு ஏதுவாதல் போல், எடுப்பது ஈனமாய் இன்னமைக்கு இடம் ஆதலால் "கொள்ளுதல் தீது" என்றான்.

"நல்லா றெனினும் கொளல்தீது மேலுலகம்
இல்லெனினும் ஈதலே நன்று." (குறள், 222)

என்ற இந்த அருமைத் திருக்குறளை அடியொற்றி இப்பாடல் இங்கே பதமாய் வந்துள்ளது.

கொளல் ஈதல்களுக்குத் தனி உரிமையாக இனிய உயிரை இதில் இணைத்திருப்பது நுணுகி உணரற்பாலது.

உயிர் உயர்ந்தது; எப்பொருளினும் சிறந்தது; மிகவும் அருமையானது; இத்தகைய அரிய உயிர்க்கு அபாயம் நேர்ந்தாலும் பிறரிடம் இரந்துகொள்ளலாகாது; இரவாமல் நின்று இறந்து போதலே நல்லது என்பார், "உயிர்எனும் கொள்ளுதல் தீது" என்றார். உயிர் போன்ற அருமைப் பொருளாயினும் அதனையும் இரந்துகொள்ளாதே எனவும் இது பொருள்பட நின்றது. படினும் முன்னதே உன்னிய உயர்பொருளாம் என்க.

நல்ல மானிகள் யாண்டும் எவ்வழியும் இரத்தலிழிவைச் செய்யார் என்பதற்குக் குலமக்கள் பலருடைய சரித்திரங்கள் நமக்குச் சான்று பகர்ந்துள்ளன. வேறு எங்கும் போகாமல் நம் காவியத்துள்ளேயே ஒன்று காண்போம்.

கும்பகருணன் பெரும் போர் புரிந்து முடிவில் படைகள் அனைத்தையும் இழந்து உடல் முழுவதும் அம்புகளால் துளை பட்டு அயர்ந்து நின்றான். அந்நிலையினைக்கண்டு இராமன் மிகவும் இரங்கினன்; எதிரே நெருங்கிநின்று உரிமையுடன் அவனை உவந்து நோக்கினன்; அமர் புரிவதைவிட்டுத் தன்னுடன் வந்து

அமர்ந்துகொள்ளும்படி விழைந்து வேண்டினான். அந்த ஆண் மை கூறிய வாசகம் அடியில் வருவது.

"ஆழி யோடெதிர் பெருந்துணை இழந்தனை; எதிர் ஒரு தனி நின்றாய் மேயோனுடன் பிறந்தனை; ஆகலின், நின்னுயிர் நினக்கு ஈவேன்; போதியோ? பின்றை வருதியோ? அன்றெனில் போர்புரிந் திப்போதே மாதியோ? உனக்குறுவது சொல்லுதி தெரிவுறச் சமைந்தம்மா." 1594

என இவ்வாறு வினவிய இராமனுக்கு அவன் சொன்ன பதில் என்ன? அடுத்து வருவதைப் படித்துப்பாருங்கள்.

## கும்பகருணன் உரைத்தது

"ஒருத்தன்நீ தனி யுலகொரு மூன்றிற்கும் ஆயினும், பழிஒரும் கருத்தினால் வரும் சேவகன் அல்லையோ? சேவகர் கடன் ஓராய்! பொருத்தின் வாளினால் இறத்திறன் உங்களை அமர்த்துறை சிரம்கொய்து பொருத்தினால் அதுபொருந்துமோ? தக்கது புகன்றிலை போலென்றான்." 1599

(கும்பகருணன் வதைப் படலம், 330)

நின்னுயிர் நினக்கு ஈவேன்; என்னுழை வருக என்று இராமன் கூறியதற்குக் கும்பகருணன் இப்படிப் பதில் உரைத்திருக்கிறான். அவனுடைய உரைகளிலுள்ள பொருள் நுணுக்கங்களையும், உள்ளக் கிடக்கைகளையும் ஊன்றி யுணர்ந்துகொள்ளுங்கள். "என் உயிர் போயினும் போக; அதனை நான் இரந்து கொள்ளேன்; மானம் அழியாமல் நின்று ஆனவரையும் பொருது இறந்தே படுவேன்" என்று அந்த அருந்திறல் வீரன் அமைந்து நின்றநிலை ஈண்டு விழைந்து நோக்க வந்தது. உயிரையும் இரந்துகொள்ளாமல் அண்ணனுக்காக அதனை உவந்து கொடுத்துள்ளமையால் மானம் வீரம் வண்மைகளுக்கு உண்மையான ஓர் உதாரண புருடனாய் அவன் ஒளி செய்து நின்றான்.

கொள்ளுதல் ஈனம்; கொடுப்பது மேல்; என்னாது தீது, நன்று என்றது என்னை? எனின், அவற்றால் ஆன்மா அடையும் தீமையையும் நன்மையையும் ஓர்ந்து சிந்தித்து உணர்ந்து கொள்ள வந்த. ஈகை உயிரை ஒளிசெய்து உயர்த்தும் என்பதாம்.

"ஏற்பது இகழ்ச்சி" என்றபடி இரந்துகொள்வதால் அவமானம் மட்டும் அன்று; அக்கொள்கையில் சுவை கண்டு மேலும் மேலும் வாசனை மண்டி வழிவழியே இழிந்து உயிர் இன்னலடைதற்கு ஏதுவாதலால், "கொள்ளுதல் தீது" என்றார்.

கொடுப்பதால் புகழும் புண்ணியமும் வளர்ந்து இருமையி லும் இன்பம் பயந்து வருதலான் அது நன்று என வந்தது.

ஈதலின் நன்மையைக் கூறுகின்றவன், ஏற்றலின் தீமையை யும் இணைத்து உணர்த்தினன். இது நல்லது; அது தீயது என்றபடி. தான் இழிந்த தீமையை ஏற்றுக்கொண்டு நமக்கு உயர்ந்த நன்மையைச் செய்ய இந்த ஆள் இங்கே விழைந்து வந்துள்ளதே; இதனை நீர் உணர்ந்துகொள்ளவில்லையே என்பது குறிப்பு.

## கொடையாளிகளின் பெருமை.

இங்ஙனம் ஈதல் ஏற்றல்களாகிய வினைகளின் உயர்வு தாழ்வு களைக் குறித்துப் பேசினவன் பின்பு அவ்வினையாளர்களைப்பற்றி மேலும் விரித்துப் பேசினன். தருமத்தைக் காட்டுவதிலும் தருமியை எடுத்துக் காட்டின் அக்காட்சி எளிதே தெளிவாம் என்று கருதி அவ்வழியில் இறங்கி உறுதிமொழி பகர்ந்தான்.

4. யாசகம் வாங்குகின்றவர் உயிரோடிருந்தாலும் செத்த வரே; கொடுக்கின்றவர் இறந்துபோனாலும் என்றும் அழியாமல் இவ்வுலகில் நின்று வாழ்பவரே யாவர் என நிலைமைகளைத் தெளி வுறுத்தித் தன் மன நிலைமையை நன்கு வலியுறுத்தினன்.

எந்தாய்! என்று சுக்கிரனை இங்கே மாவலி விளித்திருக்கின் றான். குரு என்பது தெரிய இம்மரியாதை வாசகம் வந்தது. இவ்வளவு மதிப்பும் அன்பும் வைத்திருந்தும், தன் கொடைக்குத் தடை செய்தமையால் மன்னன் கொதிப்பேறினன்; ஆகவே ஈகையில் அவன் உள்ளம் பதிந்து உயிர்க்காதல் மண்டி அதனை உவந்து போற்றியுள்ளமை உணர நின்றது.

உடல்கள் பிணங்களாய்விழ உயிர் நீங்கிப் போனவரையே உலகில் இறந்தவர் என்று சொல்லுகின்றனர். உண்மையை ஆய்ந்து பார்த்தால் அவர் மாய்ந்தவர் அல்லர்; பின்பு யார்? எனின், "ஏந்திய கைகொடு இரந்தவரே மாய்ந்தவர்" என்க. அரிய மனிதப் பிறவியை இனிது அடைந்தும் உரிய உணர்ச்சி யின்றி, மானம் கெட்டு யாசித்துத் திரிபவர் ஈனமாயிழிக்கப் படுதலால் உயிரோடிருந்தாலும் செத்தவராகவே அவரை எண்ண வேண்டும் என்பதாம். சிறப்பான பிறப்பை எடுத்தும் அதன் பயனை யடையாமல் இரப்பால் இழிந்து நிற்றலால் கடைப்பட்ட

அவர் நடைப் பிணங்களே யாவர் என்பது கருத்து. யாசகத் தின் நீசமும் நாசமும் இதனால் நன்கு தெளிவாம்.

இரக்கின்றவர் இறந்தவரே என இரவின் இழிவு கூறிப் பின்பு தனக்கு உவகையான ஈகையின் உயர்வு கூறினான்.

உற்ற உடம்பு மறைந்து வள்ளல்கள் இறந்து போனாலும் யாண்டும் உலகம் அவரைப் புகழ்ந்து போற்றி வரலால் என்றும் இறவாதவராய் அவர் நின்று நிலவுகின்றார் என்பதாம்.

"ஈந்தவர் அல்லது இருந்தவர் யாரே?"

என்றதில் வந்திருக்கும் கேள்வியின் கிளர்ச்சி நிலை காண்க.

ஈதலால் புகழும் புண்ணியமும் விளையும் ஆதலால் அதனை யுடையவர் அழியா வாழ்வினராய் ஆனந்தம் அடைவர் என்ற வாறு. ஈகை சாவா மருந்தாய் ஓகை விளைத்துள்ளது என்க.

5. இத்தகைய கொடைப்பயனை நான் அடையாவாறு நீர் இடையே தடை செய்கின்றீரே! இது எவ்வளவு கேடு? எனக்கு நன்மை செய்யவேண்டிய நீர் இப்படிப் புன்மையாய்த் தீமை செய்கின்றீர்! இச்செயல் மிகவும் கொடிது; ஒழித்து விடுக.

"கொடுப்பவர் முன்பு கொடேல் என நின்று, தடுப்பவரே பகை" என்னும் இதில் மன்னன் கடுப்பு நேரே கதித்து நின்றது.

இதம் செய்பவன் நண்பன்; கேடு செய்கின்றவன் பகைவன் ஆதலால் அவரது மிகை நிலை தெரியப் பகை எனப் பழித்துப் பேசினான். இனியவர்போல் நின்று இன்னாபுரிகின்றீர் என்றவாறு.

உயிர்க்கு ஊதியமாய் அழிவின்பம் அருள்வதாய கொடையினை விலக்குவது மிகக் கொடிய பாவம்; இக்கொடுந் தீமையைச் செய்வது உமக்குப் பெருங் கேடாம் என்பான் "இன்னதோர் கேடிலை" என்றான். குடிகேடு செய்கின்றீர் என்பது குறிப்பு.

6. பொருள் ஒரு நிலையின்றி ஒழியும் இயல்பினது; அது கையில் அமர்ந்திருக்கும்போதே விரைந்து உதவி உய்யவேண்டும் என்பதை ஈண்டு உறுதியாக உணர்த்தி நின்றான்.

கட்டுரை = உறுதிமொழி. நூல்களில் மேலோர் கூறி யுள்ள நீதிவாக்கியப்படி கையில் பொருள் உள்ள பொழுதே பிறர்க்கு உதவி இசைகொள்ளவேண்டும் என்று இசைத்தான்.

“ தம கைத்துஉள போழ்தே இட்டு இசைகொண்டு அறஞ் எய்த முயன்றோர் ” என்றது தம்முடைய கையில் செல்வம் நிலைத்துள்ள சமயத்தே இரவலர்க்குக் கொடுத்துப் புகழும் புண்ணியமும் அடைகின்ற மேலோர் என்றவாறு.

நிலையில்லாத புன் பொருளை வழங்கி என்றும் நிலைத்துள்ள நன்பொருள்களைக் காலம் உள்ளபொழுதே விரைந்து கைக்கொள்ளவேண்டும் என்பதாம்.

“ மற்றறிவாம் நல்வினை யாம்இளையம் என்னாது
கைத்துண்டாம் போழ்தே கரவாது அறஞ்செய்ம்மின் !
முற்றி யிருந்த கனிஒழியத் தீவளியால்
நற்காய் உதிர்தலும் உண்டு. ” (நாலடியார்)

“ நாளைச் செய்குவம் அறமெனில் இன்றே
கேள்வி நல்லுயிர் நீங்கினும் நீங்கும் ;
இதுவென வரைந்து வாழுநாள் உணர்ந்தோர்,
முது நீர் உலகின் முழுவதும் இல்லை. ”(சிலப்பதிகாரம்)

என்னும் இவ்விழுமிய உரைகளைத் தழுவி இதுவெளிவந்துள்ளது.

“ உள்தெறு வெம்பகை ஆவது உலோபம் ”

உள்ளே இருந்துகொண்டு உறுதி நலங்களை அழிக்கும்கொடிய பகை உலோபமே என்பதாம். தெறுதல்—கெடுத்தல், அழித்தல்.

இசையும் அறனும் எய்த முயன்றோர் வசையான உலோபத்தை ஒழித்துவிடவேண்டும் என உணர்த்தியுள்ளனர் என்பான் விளம்பினர் என்றான். மூத்தோர் வார்த்தையைப் போற்றியபடியிது.

இட்டு இசை கொள்ள விரும்பினரை இடையே தடுத்து “ உலோபம் விட்டிடல் ” என்று நட்பினர் போன்று துற்புத்தி சொல்லுவோரே கெட்ட உட்பகைவர் எனச் சுக்கிரனைச் சுட்டியுரைத்தபடியாகவும் இது பொருள்கொள்ள வுள்ளது. விட்டு இடல் எனப் பிரித்தால் உலோபத்தைக் கைவிட்டு உன் பொருளைப் பிறர்க்குக்கொடாதே என உரைத்ததாகப் பொருள்படும்.

தானத்தைத் தடுப்பது எவ்வழியும் ஈனப்படுத்தும் என்பதாம். அந்த ஈனத்தை இங்கே செய்யற்க என்பது கருத்து.

இங்ஙனம் தன் உள்ளக் கிடக்கையை உறுதியுடன் உரைத்தும் சுக்கிரன் தளராது தடுத்து நின்றான் ஆதலால் இறுதியில் மாவலி மிகவும் கடுத்து வைதான். அடுத்து வருவதை அறிக.

7. "கொடுப்பது விலக்கு கொடியோய்! உனது சுற்றம்
உடுப்பதுவும் உண்பதுவும் இன்றி விடுகின்றாய்!"

என்ற இது எவ்வளவு வெகுளியை வெளிப்படுத்தியுள்ளது? கொடையில் பேராவல் உடையன் ஆதலால் அதன் தடை கண்டு இவ்வாறு கொதித்துக் கூறினன்.

என் கையில் உள்ளதைக் கொடுத்து நானும் என் குடியும் வாழவிரும்பினேன்; அதனை நீர் கெடுக்கின்றீர்; இக் கேட்டை உணர்ந்து ஒதுங்குக என்று இங்ஙனம் உறுத்தி உணர்த்தினன்.

உடையை முதலில் குறித்தது அதன் நிலையை நினைந்து. உணவின்றி மனிதர் சில நாள் இருக்கலாம்; உடையில்லாமல் ஒரு கணமும் இருக்க இயலாது ஆதலால் அது முதன்மை பெற்றுத் தோன்றவந்தது.

வறுமையால் வாடிவந்த இரவலர்க்கு ஒன்று கொடுக்குங்கால் இடையே ஒருவன் தடுப்பானாயின் அப்பாவம் அவனோடு அல்லாமல் அவன் கிளையையும் வளைத்துப் பிடித்துக்கொள்ளும் என்பதாம். ஆகவே அத்தீமையின் கனம் தெரிய நின்றது.

உடை உணவுகள் கிடையாமல் உழந்து வந்தவர்களுக்கு இடையூறு செய்தமையால் அவ்வாறே அவன் சுற்றமும் உழல நேர்க தென்க. சுற்றம் அப்படியாயின் அவனுடைய துயரத்தின் எல்லை சொல்லவேண்டாதாயிற்று.

"ஈவது விலக்கேல்" (ஔவையார்)

"ஈவாரை ஈயஒட்டான் ஈனனவான்; எழு பிறப்பினும் ஈனனாம் அவன் பிறப்பே" என்றதனால் கொடைத் தடையின் கொடுமை புலனாம். இடுவதைத் தடுப்பதில் ஈவானுக்குப் புகழழிக்கலும், ஏற்பானுக்குப் பொருளின்பங்களும் அழியும்ஆகலான் அது குடி அழிக்குங் கொடுங் கேடாகக் குறிக்க நின்றது.

"கொடுப்ப தழுக்கறுப்பான் சுற்றம் உடுப்பதூஉம்
உண்பதூஉம் இன்றிக் கெடும்." (குறள், 166)

என்னும் இம்மறைமொழியை இடைமருவி இப்பாட்டு வந்துள்ளது. அழுக்கறுத்தல்=பொறாமைப்படுதல்.

ஈகை என்னும் அதிகாரத்தில் தேவர் குறித்துள்ள கருத்துக்களைக் கருத்தூன்றி எடுத்து மாவலி வாய் வைத்துக் கொடை மறுத்தவர்களை இதனிடையே கம்பர் இங்ஙனம் விரித்திருக்கிறார்.

ஈதலைப் புகழ்ந்து போற்றி, ஏற்றலை இகழ்ந்து தூற்றியது எவ்வழியும் இரவாது நின்று இனிது முயன்று மானமும் வண்மையும் உடையராய் மாந்தர் மருவி வரவேண்டும் என்றுகருதி என்க. கதையைக் கவினுற இழைத்து வருவதோடு உயிர்க்கு உறுதியான உயர் நலங்களையும் பயனுடன் விளைத்து நயனுற உணர்த்தி வருகின்றார்.

## திருமால் நெடுமால் ஆனது

சுக்கிரன் எவ்வளவு தடுத்தும் யாதும் கேளாமல் வாமனர் வேண்டியபடியே மூன்றடி மண் அளந்துகொள்ளும்படி மாவலி தாரை வார்த்துக் கொடுத்தான். கொடுக்கவே அம்மாயக் கள்ளன் வானுற வளர்ந்து உலக முழுவதையும் ஓரடியால் அளந்து, மற்றோரடியை வானுலகில் நீட்டினன். இரண்டு அடிகளால் மண்ணையும் விண்ணையும் கவர்ந்துகொண்டு மீண்டும் மாவலியை நோக்கி, "மூன்றடி மண் தருவதாய் வாக்களித்தாயே! இன்னும் ஓர் அடிக்கு இடம் எங்கே? மன்னா!" என்று புன்னகையுடன் கேட்டான். குள்ளர் செயலைக் கண்டு உள்ளம் அதிசயித்து நின்ற அவ்வள்ளல் தன் முடித் தலையை வணங்கி, "உன் அடித் தலத்தால் அளந்து கொள்க" என அமைந்திருந்தான். அவ்வாறே மாயவன் திருவடியை மாவலி முடியில் வைத்துப் பாதலத்தில் அழுத்திப் பின்பு அவனுக்குப் பரமபதத்தை அளித்தான். கவர்ந்துகொண்ட உலகை இந்திரனுக்கு உரிமையுடன் கொடுத்து விட்டு மாயவன் மறைந்து போயினன்.

திருமால் கொண்ட பத்து அவதாரங்களுள் இது ஐந்தாவது ஆகும். இந்த அவதாரம் நகைப்பு உவப்பு வியப்பு விம்பிதங்களுடன் விளங்கியுள்ளது. இதனை ஆழ்வார்கள் பலரும் விழைந்து பாராட்டியுள்ளனர்.

"மாலுக்கு, வையம் அளந்த மணாளற்கு" (நம்மாழ்வார்)

"ஒரு குறளாய் இருநிலம்மூ வடிமண் வேண்டி
உலகனைத்தும் ஈரடியால் ஒடுக்கி, ஒன்றும்
தருகவெனா மாவலியைச் சிறையில் வைத்த
தாடாளன் தாள் அணைவீர்.!" (திருமங்கையாழ்வார்)

"சிறியன் என்று என் இளஞ்சிங்கத்தை இகழேல் கண்டாய்
சிறுமையின் வார்த்தையை மாவலியிடைச் சென்று கேள்.!"
(பெரியாழ்வார்)

"ஓங்கி உலகளந்த உத்தமன்" (ஆண்டாள்)

"தாளால் உலகம் அளந்த அசைவே கொல்
வாளா கிடந்தருளும் வாய்திறவான்—நீள்ஓதம்
வந்தலைக்கும் மாமயிலை மாவல்லிக் கேணியான்
ஐந்தலைவாய் நாகத் தணை." (திருமழிசையாழ்வார்)

"தாவியன்று உலகமெல்லாம் தலைவிளாக்கொண்ட எந்தாய்!"
(தொண்டரடிப்பொடியாழ்வார்)

"வாய்மொழிந்து வாமனனாய் மாவலிபால் மூவடிமண்
நீயளந்து கொண்ட நெடுமாலே—தாவியநின்
எஞ்சா இணையடிக்கே ஏழ்பிறப்பும் ஆளாகி
அஞ்சா திருக்க அருள்." (பேயாழ்வார்)

"கொண்டானை அல்லால் கொடுத்தாரை யார்பழிப்பார்?
மண்தா எனஇரந்து மாவலியை—ஒண்தாரை
நீரங்கை தோய நிமிர்ந்திலையே நீள்விசும்பில்
ஆரங்கை தோய வடுத்து." (பொய்கையாழ்வார்)

"அடிமூன்றில் இவ்வுலகம் அன்று அளந்தாய் போலும்
அடிமூன் றிரந்துஅவனி கொண்டாய்—படிநின்ற
நீரோத மேனி நெடுமாலே! நின்னடியை
யாரோத வல்லார் அறிந்து." (பூதத்தாழ்வார்)

"உவந்த உள்ளத்தனாய் உலகம் அளந்து அண்டமுற
நிவந்த நீள்முடியன்." (திருப்பாணாழ்வார்)

திருமால் வாமனனாய் வந்து மாவலியிடம் மண்கேட்டு அடி அளந்ததை அடியார் இப்படிப் படி அளந்து துதித்திருக்கின்றார். பாசுரங்களில் பதிந்துள்ள பொருள் நயங்களையும், அன்பு நலங்களையும் ஆழ்ந்து சிந்தித்துவரின் இன்பநலங்கள் இனிது பெருகி வரும். படி அளந்தவன் படி அளப்பான் என்பது பழமொழி.

"மடியிலா மன்னவன் எய்தும் அடியளந்தான்
தாஅய தெல்லாம் ஒருங்கு." (குறள், 610)

எனத் தேவர் கூறியிருத்தலும் அறிக.

சோம்பலின்றி முயலுகின்ற அரசன் உலக முழுவதையும் ஒருங்கே அடைவான் என்பதை இங்ஙனம் உணர்த்தியிருக்கிறார்.

மடியின்றி முயன்ற இந்திரன், அடி அளந்தான் தாயதையெல்லாம் எய்தியுள்ளதையும் குறிப்பாக இது சுட்டி நின்றது.

அடி யளந்தான் என மாலுக்கு ஒரு பெயர் விளைந்து மக்கள் மடியுறாமல் மாட்சிமையுறும்படி அடிகள் அருளியிருக்கும் அருமை இங்கே ஒருமையுடன் ஊன்றி யுணரத்தக்கது.

அம்மாயனார் அடியளந்ததினும் நம் நாயனார் படியளந்துள்ளமையை இப்பாவடியாலும் பார்த்தறியலாம். குள்ளக் குறளில் நம் வள்ளுவப் பெருந்தகை உள்ளம் பதிந்துள்ளமை இதனால் உணர வந்தது. அடியில் வருவதும் அறிக.

> "மாலும் குறளாய் வளர்ந்திரண்டு மாணடியால்
> ஞாலம் முழுதும் நயந்தளந்தான்—வாலறிவின்
> வள்ளுவரும் தம்குறள்வெண் பாவடியால் வையத்தார்
> உள்ளுவவெல் லாமளந்தார் ஓர்ந்து." (பரணர்)

நமது அருமைத் திருக்குறளின் பெருமை கூறிய படியிது. குறள் என்னும் பெயர் ஒற்றுமையால் இவ்வுவமை கூற வந்தது.

திருமால் உருமாறி வந்து வஞ்சித்து உலக முழுவதையும் அளந்தார்; திருவள்ளுவப் பெருமானோ இருந்தபடி யிருந்தே உலகங்களையும், உலகிலுள்ள உயிரினங்களுடைய எண்ணரிய எண்ணங்களையும் ஒருங்கே அளந்து உயர் உறுதி தந்தார் என்பதாம். மாலறிவு கடந்துள்ளமையால் வாலறிவால் விசேடிக்க நின்றார். உலகம்உள்ளுவன எல்லாம் வள்ளுவர் அளந்தார் என்க.

குறளின் அருமை பெருமைகளை முன்னோர் எவ்வாறெல்லாம் எண்ணி ஆராய்ந்து ஏத்திப் போற்றியிருக்கிறார் என்பதை இதனால் அறிந்துகொள்ளலாம்.

குறள் வெண்பா உருவில் வாமனர் போலக் குறுகியது; பொருளில் அவரது வளர்ச்சிபோன்ற அதிசயமான பெருக்கத்தை யுடையது என நுணுக்கமாக இதில் உணர்த்தப்பட்டுள்ளது.

இவ்வாமனரைக் காவியத்துள்ளும் சில இடங்களில் பாவனை செய்து சிந்திக்கும்படி ஞாபக மூட்டியிருக்கிறார்.

> இன்னமுருந் தொருநான்கும் பயோததியைக்
> கலக்கிய ஞான்று எழுந்த; தேவர்
> முன்னி யமைத்தனர்; மறைக்கும் எட்டாத
> பரஞ்சுடர் இவ்வுலகம் மூன்றும்
> தன்னிருதாள் உள்ளடக்கிப் பொலிபோழ்தில்
> யான்முரசம் சாற்றும் வேலை
> அன்னவைகண் டியாவுதலும் தொன்முனிவர்
> அவற்றியல்எற் கறிவித்தாரால். (மருத்துமலைப்படலம், 28)

இது, சஞ்சீவியைக் குறித்து அனுமானிடம் சாம்புவன் சொன்னது. மாவலியிடம் மால் வந்து அடியளந்து கொண்டபொழுது அச் செய்தியை உலகம் அறிய இவன் பறைசாற்றி உலாவி யுணர்த்தியிருக்கிறான் என்பது இதனால் தெரியவந்தது.

"அடங்கு மேமற்றப் பெரும்படை அரக்கர்தம் யாக்கை
அடங்கு மாயவன் குறளுருத் தன்மையின் அல்லால்." 9303
(மூலபலவதை, 5)

வாமனன் உருவில் உலகங்கள் ஒடுங்கி யிருந்தமைபோல், மூலபலச் சேனைகள் இலங்கையில் அடங்கி யிருந்தனஎன்பதாம்.

பலகளந்தலை மௌலியோ டிலங்கலிற் பகைரேருள்
அலகளந்தறி யாநெடும் படைகளோ டலங்க
விலகளந்தரு கடற்றரை விசும்பொடு வியப்ப
உலகளந்தவன் வளர்ந்தனன் ஆமென உயர்ந்தான். 9668
(இராவணன் தேர்ஏறு படலம், 27)

இராவணன் இறுதியில் போர் செய்ய உறுதியாகத் தேர் ஏறி ஊக்கி நின்ற நிலையை உரைத்தபடி யிது. இதில் உலகளந்தவனை அவனுக்கு உவமை கூறி யிருத்தல் காண்க.

வாமனக் கதையைத் தம் காவியத்தில் இவ்வாறு கவி வழங்கி யிருக்கிறார். மாவலி மூலமாக ஈகையை இதன்கண் இனிது விளக்கியுள்ளார். இன்னுயிரேனும் கொடுப்பது நன்று என்று அவன் கூறியபடியே தனது உடல் பொருள் ஆவி யாவும் ஒருங்கே உதவி மாவலி மன்னன் உயர்புகழ் பூண்டுள்ளான் என்க.

சுக்கிரன் தடுத்தும் மாறாமல் கொடுத்தது அவனது உண்மையான வண்மையையும், உள்ளத் திண்மையையும், உயர் பெருந் தகைமையையும் உலகம் அறிய எடுத்துக் காட்டியுள்ளது.

கன்னனது வண்மை நிலையும் இதனைப் பல வகையிலும் இணையொத்து இசைந்து நிற்கின்றது.

இங்கே தேவர்கள் திருமாலை ஏவி விட்டனர்; அங்கே கண்ணன் தேவர்கோனை ஏவி விடுத்தான். ஏவவே அவன் வயது முதிர்ந்த வேதியன்போன்று மாயவேடங்கொண்டு வாமனன் போலவே வந்து வஞ்சமொழிகள் பல புகன்றான். முடிவில் கவசத்தை

யும் குண்டலத்தையும் கேட்டான்; அவை தெய்வீகமுடையன. எல்லாவகை யிடையூறுகளையும் நீக்கவல்லன; அவற்றை அணிந்திருந்தால் அவனை யாராலும் வெல்லமுடியாது; தனக்கு உயிர் நிலையமாயிருந்த அவ்வுறுதிப் பொருள்களையும் உடனே அவன் கழற்றிக் கொடுத்தான்; கொடுக்குங்கால், "கன்ன! கொடாதே; வந்துள்ளவன் யாசகன் அல்லன்; வாசவனே; கேசவன் ஏவலால் உன்னை மோசம் செய்ய வந்திருக்கின்றான்" என்று வானிலிருந்து அசரீரியாக ஓர் ஒலி எழுந்தது; எழுந்தும் அவன் யாதும் கலங்காமல் உவந்து கொடுத்தான். அவனது கொடையினை வியந்து அமரரும் புகழ்ந்து போற்றினர். இதனை அமரர் கோன் போய்ச் சொல்லவே கண்ணனும் கண்ணீர் மல்கிக் கரைந்து துதித்தான்.

"உண்மை யாகவெஞ் சமர்முகத் தெறிபடை
ஒன்றும்வந் துடலுற ஒட்டாத்
திண்மை யாலுயர் கவசகுண் டலங்களைச்
சென்றிரந் தவற்கிவன் கொடுத்தான்;
எண்மையாயினும் கிளைஞரே ஏற்பினும்
ஈவிலாப் புன்செல்வர் ஈயார்;
வண்மை யாளர்தம் ஆருயி ராயினும்
மாற்றலர் கேட்பினும் மறாரே."
(பாரதம், கிருட்டிணன் தூதுச்சருக்கம் 246)

எனக் கன்னன் போற்றப்பட்டுள்ளமை காண்க.

இன்னவாறு உயிரையும் உதவவல்ல வள்ளல்கள் பலரைப் பெற்று வழிமுறையே இந்நாடு தலை சிறந்து வந்துள்ளமையால் வாமன சரித்திரத்தில் வால்மீகியில் இல்லாத கொடைத் தருமங்களைக் கம்பர் இங்ஙனம் இடையே நிறைத்து இன்புறுத்தி அன்பு அறங்களின் குலநலங்களை ஆர்வமுடன் அருளியிருக்கிறார்.

"இலன்என்னும் எவ்வம் உரையாமை ஈதல்
குலனுடையான் கண்ணே உள." (குறள், 223)

என்றதனால் ஈகைக்குணம் உடையவரே குலமக்கள்; இல்லாதவர் இழிமக்களேயாவர் எனத் தேவர் அவரை நயமாகப் பழித்துள்ளமை புலனும்.

"இல்லது நோக்கி இளிவரவு கூறாமுன்
நல்லது வெஃகி வினைசெய்வார்." (பரிபாடல், 10)

எனப் பாண்டிநாட்டாரைக் குறித்துக் கரும்பிள்ளைப்பூதனார் என்னும் புலவர் பெருமானார் இப்படிப் பாராட்டி யிருக்கிறார்.

"இல்லம்என் கிளவி அந்நாட் டிருப்பவர் இசைக்கும் காலை
வெல்லருங் கேள்வி மேலோர் விதித்திடும் இலக்கணத்துள்
சொல்லிடும் பெயரே ஏனைத் தொழிற்குறிப் பிரண்டி னுள்ளும்
நல்லதோர் பெயரே யன்றி நவின்றிட நாடிடாரே."
(சேதுபுராணம், திருநாட்டுச் சிறப்பு, 109)

"இகத்தில் நன்கொடைப் பெருமையை அறிந்துளோர் இல்என்று
அகத்தின் நாமமும் உரைசெயார்; அவர் அரிதாகத்
தொகுத்த ஓர்பொருள் நல்குவர் என்பதுஎன்? துணிந்து
மிகுத்த ஆவியும் கொடுப்பரால் வேண்டுமுன் விரும்பி."
(திருக்கூவப் புராணம்)

இல் என்னும் சொல் பெயராய் வீட்டைக்குறிப்பதாயினும், இல்லை என வினைக் குறிப்பாகவும் கூடும் ஆதலால் அதனைவாயால் சொல்லவும் கூசுவர் என இவை சொல்லியுள்ளமை காண்க.

பழங் கால மக்களுடைய உபகார நிலையைக் குறித்து இவ் வண்ணம் பாடல்கள் பல வந்துள்ளன. புலவர் புனைந்துரைக ளாய்ச் சில பொலிந்து தோன்றினும் பழமையான வண்மையைக் கிழமையோடு வெளிப்படுத்திப் புதுமையின் புன்மையைத் தெளிவாக அவை உணர்த்தி நிற்கின்றன.

"இல்லாத நிலைமையிலும் தன்பால்வந்து
இரந்தவருக்கு இல்லை என்று
சொல்லாமல் தலைகொடுத்துத் தலைக்கொடையான்
எனக்குமணன் தோன்றிநின்றான்
மல்லாரும் மலையளவு வளமுறினும்
அரைக்காசும் வழங்கா தந்தோ
கல்லான மனமுடைய பொல்லாதார்
இக்காலம் கலித்தார் அம்மா!" (இந்தியத்தாய்நிலை)

என்றதனால் அக்காலக் கொடைமையும், இக்காலக் கொடு மையும் அறியலாகும். கழிந்து போனதை வியந்து புகழ்ந்து பேசலும், எதிரே நின்றதை எளிதா இகழ்ந்து காணலும், இயல் பான்மயலாம் எனினும் உண்மையை நடுவு நிலைமையுடன் ஊன்றி உணர்ந்து உறுதி நலங்களைத் தெளிந்துகொள்ளவேண்டும்.

யாண்டும் கொள்ளாதே; எல்லார்க்கும் கொடு என்று நூல் கள் நுவன்று வந்திருத்தலால் ஈதல் இரவுகளின் ஆக்கக் கேடுகள்

ஆய்ந்து நோக்கத்தக்கன. ஈகை மேன்மைக்கு எல்லையாயிருத் தல்போல் இரத்தல் கீழ்மைக்கு வரம்பாயுள்ளது. எவற்றினும் ஈனமானது எது? என்று ஒரு முறை எச்ச தேவன் தருமனிடம் வினவியபொழுது "அயல்கரத்து ஏற்றல்" என அதற்கு அவர் பதில் உரைத்தார். அத்தெய்வம் அதனை உவந்து ஒத்துக் கொண்டது. அதனால் இரவின் இழி நிலை தெளிவாய் நின்றது.

"ஆவிற்கு நீர்என்று இரப்பினும் நாவிற்கு
இரவின் இளிவந்த தில்" என்றார் நாயனார்.

இவ்வுலகில் இழிந்தவற்றுள் எல்லாம் மிகவும் இழிவானது யாது? எனின், ஒருவனிடம் போய் ஒன்று இரத்தலேயாம்; அதனினும் இழிந்தது, அங்ஙனம் இரந்தவனுக்கு இல்லை என்று சொல்லுவது என்க. யாசகனினும் உலோபி நீசன் என்பது இதனால் அறியலாகும்.

"ஈயென இரத்தல் இழிந்தன்று; அதன்எதிர்
ஈயேன் என்றல் அதனினும் இழிந்தன்று;
கொள்ளெனக் கொடுத்தல் உயர்ந்தன்று; அதன்எதிர்
கொள்ளேன் என்றல் அதனினும் உயர்ந்தன்று."
(புறம், 204)

என்னும் இந்த அருமைப் பாட்டை ஊன்றிப் பார்க்கவேண் டும். கழைதின் யானையார் என்னும் புலவர் பெருந்தகை வல்வில் ஓரி என்னும் வள்ளலை நோக்கி இங்ஙனம் கூறியிருக்கிறார்.

இரத்தல், கரத்தல், கொடுத்தல், கொள்ளாமை ஆகிய நால் வகை நிலைகளைக் குறித்துக்காட்டி உத்தமமான உயர் கொடைப் பண்பினைப் புலமை நலம் கனியப் போதித்துள்ள திறம் ஓதி யுணருந்தோறும் உணர்ச்சி யுதவி உவகை விளைத்து வருகின்றது.

எவரிடமும் இரவாதே; யார்க்கும் ஈ என்றால் இது எப்படிப் பொருந்தும்? இரப்பவர் இருந்தால்தானே ஈந்து இசைபெற முடியும்? இரவலர் இலராயின், ஈவாரும் இலராவர்; ஆகவே,

"ஈவாரும் கொள்வாரும் இல்லாத வானத்து
வாழ்வாரே வன்க ணவர்."

என்றபடி வையமும் வையப்படுமே! எனின், அந்த ஐயப்பாடு செய்யவேண்டாம். உரிமையான உய்திநிலையை ஓர்ந்துகொள்ளுக.

இரப்பு இழிவு என்று பழித்தது மனிதன் அதனை அணுகாமல் வெறுத்து ஒழித்து உரிய முயற்சிசெய்து உயர்ந்து கொள்ள வேண்டியே; அங்ஙனம் முயன்று பொருள் அடைந்தவன் மேல் அருள் அடையும்பொருட்டு அதனை ஆருயிர்கட்கு அவன் வழங்க வேண்டும்; அவ்வாறு கொடுக்க வருங்கால், "கொளல் தீது" என்று உணர்ந்த நாட்டிலே கொள்வாரைக் காண்டல் அரிதாம்; ஆகவே யாரும் விழைந்து நயந்து நல்கநேர்வர்; கொடையாளிகள் தம் பொருளை அருளோடு ஏற்றுக்கொள்வாரை நாடிச்சென்று நயந்து நின்று இரந்து நல்குதலால் அந்த இரவு உயர்ந்த மதிப்புடையதாய் ஓங்கி ஒளிரும் என்க.

கொள்ளும் இரவு பழியும் தீமையும் உடையது; கொடுக்கும் இரவு புகழறங்களை விளைத்து உயர்மேன்மையாய் ஒளிசெய்து நிற்கும். அழிந்து போகின்ற இழிந்த பொருளைப்பெற்றுக்கொண்டு என்றும் அழியாத உயர்ந்த புண்ணிய நலங்களைப் பொருந்தக் கொடுத்தலால் இரவலர்களைக் கருணை நிறைந்த சிறந்த கொடை வள்ளல்களாகவே கருதிப் போற்றவேண்டும் என்பதாம்.

"பரப்புநீர் வையகத்துப் பல்லுயிர்கட் கெல்லாம்
இரப்பாரில் வள்ளல்களும் இல்லை—இரப்பவர்
இம்மைப் புகழும் இனிச்செல் கதிப்பயனும்
தம்மைத் தலைப்படுத்த லால்." (அறநெறிச்சாரம்)

எனவரும் இதனை ஈண்டு மனனஞ் செய்துகொண்டு உள்ளே உணர்த்தியுள்ள பொருள் நலங்களை ஊன்றி உணரவேண்டும்.

வறுமையால் வாடி வந்தவரைச் சிறு நோக்குடன் இகழாமல் தமக்கு இருமையும் உதவ வந்த அருமையாளராகவே கருதி மதித்து உரிமையோடு உவந்து போற்றுக என்பது கருத்து.

இத்தகைய அரிய உள்ளப் பான்மையும், பெரிய வள்ளற் குணமும் மாவலி மன்னனிடம் மருவியிருந்தமையால் அந்தப் பெருந்தகைமையை வியந்து அருந்தவராகிய கோசிகரும்புகழ்ந்து பேசினர். பேச்சில் பேருணர்ச்சிகள் விளைந்திருக்கின்றன.

வாமனர் கதையை இவ்வாறு கூறி முடித்து, அருகேயிருந்த குளிர்பூம் பொழிலுள் புகுந்து, "இதுதான் நான் வேள்வி செய்தற்கு உரிய இடம்" என விசுவாமித்திரர் இராமனிடம்உரைத்து நின்றார். உரைக்கவே, அவ்வீர வள்ளல் முனிவரை உவந்து

நோக்கி, " அடிகள் விரைந்து யாகம் செய்யுங்கள் ; யாதொரு இடையூறும் நேராதபடி நானும் தம்பியும் அருகே நன்கு காத்து நிற்கின்றோம் " என்று ஆர்த்தியுடன் மொழிந்தான்.

## வேள்வியைக் காத்தது

அருந்தவர் நல்ல ஓரையில் மௌனவிரதம் பூண்டு உபகரணங்களை யெல்லாம் ஒருங்கே தொகுத்து மருங்கு வைத்து மந்திரமுறையுடன் வேள்வி செய்யத் தொடங்கினர்.

இராம இலக்குவர்கள் இருவரும் ஏந்திய வில்லினராய் அயலே நின்று அதிக எச்சரிக்கையுடன் காத்துவந்தார். அந்தப் பாதுகாவலில் இக்குமரர்கள் நின்ற நிலையைக் கண்டு அமரர்களும் அதிசயிக்கலாயினர். அதனைத் தெளிவாக விளக்குதற்குக் கவி ஓர் உவமையைக் காட்டியிருக்கிறார். அடியில் வருவது காண்க.

433 எண்ணுதற் காக்கரிது இரண்டு மூன்றுநாள்
விண்ணவர்க் காக்கிய முனிவன் வேள்வியை
மண்ணினைக் காக்கின்ற மன்னன் மைந்தர்கள்
கண்ணினைக் காக்கின்ற இமையிற் காத்தனர்.
(வேள்விப் படலம், 41)

மாதவர் ஆற்றிய யாகத்தின் சிறப்பையும், அதன் காப்புத் திறத்தையும் இப்படி விளக்கியிருக்கிறார். கரும கருத்தாக்களுடைய அருமை பெருமைகளை அறிந்து மகிழும்படி இது விளைந்து வந்துள்ளது. வேள்வியும், காப்பும் வியத்தகு நிலையின என்பதாம்.

எண்ணுதற்கு ஆக்கு அரிது என்றது பிறர் நினைத்தற்கும், செய்தற்கும் அரியது என்றவாறு. தல் என்னும் தொழிற் பெயர் விகுதி பின்னும் கூட்டிப் பொருள் கொள்ளும்படி முன்னுற நின்றது. செயற்கரிய செயல் என உயர்ச்சி உணரவந்தது.

அந்த வேள்வி ஆறு தினங்களாகச் செய்யவேண்டியிருந்தமையால் அதன் அளவு கூறினர். இரண்டு மூன்று என்றது ஆறு என்றவாறு. இயைந்த ஆறுநாள் என்னமல் இங்ஙனம் இருவகையாகப் பகுத்துக் கூறியது, முதல் மூன்று நாள் மந்திரமுறையாயும், மறு மூன்று நாள் யாக சித்தியாயும் அமைந்துள்ளமை தெரிய என்க.

வேறு யாராலும் செய்யமுடியாத அரிய தவ வேள்வியை ஆறு நாளாக ஒரே உறுதியுடன் ஊக்கி உஞற்றி வந்தார்.

அது எதன் பொருட்டு? யாரைக் குறித்து? என எவரும் அறிய விரும்புவார் என்பது கருதி விண்ணவர்க்கு என்றார். புண்ணியவாசிகளாகிய தேவர்களுக்குப் பிரீதி செய்யின், அச்செயலாளன் புண்ணியவானாய் எண்ணிய நலங்களையெல்லாம் இனிதுபெறுவான் என்பதாம். இங்கே முனிவர் புரிந்தது உலக நன்மையைக் கருதி உம்பருக்கு உரிமை செய்தார் என்க.

இங்ஙனம் இனிமையான அரிய வேள்வியை அவர் செய்து வருங்கால், இடையே கொடியவர்களால் இடையூறு நேராதபடி இராகுவீரர் காத்து நின்ற காட்சியை இனி நாம் கண்ணூன்றிக் காண வருகின்றோம்.

"மண்ணினைக் காக்கின்ற மன்னன் மைந்தர்கள்"

என்றது பாதுகாக்குந் திறத்தில் பரம்பரையாக அவர் உரம் பெற்று வந்துள்ளமை உணர நின்றது. நல்ல அறங்களையும், நல்லோர்களையும் இயல்பாகவே காத்தருளுதல் அவரது குலத் தொழில் என்பதாம்.

முனிவரது வேண்டுகோளுக்கு இணங்கித் தன்னுடைய அருமைத் திருமக்களைத் தசரதன் உரிமையுடன் அனுப்பியருளினான் ஆகலான் அவனை ஈண்டு இணைத்து எண்ணினார்.

மன்னன் நாட்டில் இருந்துகொண்டு உலகுயிர்கள் பலவற்றையும் காக்கின்றான்; மக்கள் காட்டில் வந்து ஒருவன் தருமத்தைக் கண்ணூன்றிக் காத்து நிற்கின்றார் என்பதாம். அவரது காவல் நிலைக்குக் கூறியுள்ள உவமை கருதி மகிழத் தக்கது.

"கண்ணினைக் காக்கின்ற இமையிற் காத்தனர்"

பிறர் ஏவிச் செய்யாதபடி இயல்பாகவும் உரிமையாகவும் அப்புண்ணிய வீரர் இருவரும் எதிரெதிராய் நின்று ஒருமைப்பாட்டுடன் முனிவர் வேள்வியை இனிது காத்தருளினர் என்பதை இமையின் என்றதனால் எளிது உணர்ந்துகொள்ளலாம்.

கண் யாகசாலைக்கும், இமைகள் இராம இலக்குவர்களுக்கும் உவமைகளாம். அந்த வேள்விக்கு ஏதேனும் தீது நேர்ந்தால் ஒருவனுக்குக் கண் கெட்டதுபோல் உலகிற்குக் கேடாம் என்க.

அத்தகைய உத்தம நிலையத்தை இச்சுத்தவீரர்கள் சுற்றித் திரிந்து முற்றும் ஓர்ந்து சூதானமாகப் பாதுகாத்து வந்தனர்.

மேல் இமை கீழிமையைத் தட்டி எழுவதுபோல் இளையவனை மூத்தவன் இடையிடையே சுட்டி எச்சரிக்கை செய்துவந்தான் எனவும் சிலர் இதற்கு உச்சமாகப் பொருள் கூறுவதுண்டு. இருவரும் ஒரு நிகராகவே சாரி திரிந்து உரிமை கூர்ந்து கருமமே கண்ணாய்க் கருத்தூன்றி ஓம்பி வரலாயினர் என்க.

கண்ணில் தூசி முதலியனபடியாமல் இமை காப்பது போல் அவ்வேள்வியில் நீசங்கள் யாதும் நிகழாமல் இயற்கை உரிமையுடன் அக்குமரர் பாதுகாத்துப் பேணி வந்தனர் என்பதாம்.

இவ்வாறு ஐந்து நாட்கள் கடந்தன. ஆறுவது நாள் தொடங்கியது. கருதியது முடிந்ததென்று கோசிகர் காரிய சித்தியில் கண்ணூன்றி யிருந்தார்.

"முனிவர் கூறியபடி அரக்கர்களால் யாதொரு இடையூறும் நேரவில்லையே!" என்று இராமன் ஐயம் மீக்கூர்ந்து ஆர்த்தியுடன் அருகெங்கும் பார்த்து வந்தான். தடையொன்றும் காணோம். வீரமகன் ஆதலால் நேரலர் நேராமைக்குக் காரணம் யாதோ? என்று கருதி நின்று முடிவில் முனிவரிடம் கேட்டான்.

"காத்தனர் திரிகின்ற காளை வீரரில்
434 மூத்தவன் முழுதுணர் முனியை முன்னி நீ
தீத்தொழில் இயற்றுவர் என்ற தீயவர்
ஏத்தருங் குணத்தினாய்! வருவது என்று? என்றான்."

இங்ஙனம் இராகவன் வினவியதற்குக் கோசிகர் யாதொரு பதிலும் கூறவில்லை. வாய் திறந்து பேசினால் விரதபங்கமாகும் ஆதலால் அவர் யாதும் பேசாமல் கருமமே கண்ணாய்க் காரியம் புரிந்திருந்தார். அக்குறிப்பினை யறிந்து அக்கோமகன் அகன்றான்.

## அரக்கர் புகுந்தது.

அக்கணமே அயலிடமெங்கும் பயங்கரமான போரொலிகள் கேட்டன; அருகே வனங்களில் இருந்த தவசிகள் எல்லோரும் அலறி ஓடினர். நெருப்புத் துண்டங்களும், இரத்தக் கண்டங்களும்யாகுண்டத்தில் வந்து விழுந்தன. இராமன் நிமிர்ந்து பார்த்தான்; ஆகாயம் எங்கணும் ஆயுதபாணிகளாய் அரக்கர்கள் திரண்டு ஆரவாரித்து நின்றனர். எய், எறி, கொல், அடி, பிடி, கடி, சுடு, அழி என்னும் கோர ஒலிகள் நேரே மீறி எழுந்தன.

“அஞ்சி ஓடிப்போன கோசிகன் வஞ்சகமாய் வந்து நமக்குத் தெரியாமல் யாகத்தைச் செய்கின்றான்; இன்று இவன் சாகத் தான் போகின்றான். இதுவரை தெரியாமல் இருந்துவிட்டோம். காரியம் கைகூடாதபடி வேள்வியைச் சிதையுங்கள்; அவனைக் கொன்று தொலையுங்கள்: நமக்கு என்றும் விரோதி; இன்றுவிடக் கூடாது; கடித்துத் தின்று விடவேண்டும்” என இன்னவாறு கொடுமொழிகள் கூறி அடுபடைகளுடன் ஆர்த்துவந்தார்.

அவரைக் கண்டதும் இராமன் தம்பியை அழைத்துத் தன் அருகே நிறுத்தி அரக்கர் நிலையைச் சுட்டிக்காட்டினான்.

“கவருடை எயிற்றினர்; கடித்த வாயினர்; 439
துவர்நிறப் பங்கியர்; சுழல்கட் டீயினர்;
பவர்சடை அந்தணன் பணித்த தீயவர்
இவர்என இலக்குவற்கு இராமன் காட்டினான்.”

இங்ஙனம் காட்டியது, “நான் முன்னேறிப் பொருது முடிக்கின்றேன்; நீ முனிவர் பக்கல் நின்று அவரை இனிதுகாத்தருள்” என்று காப்பு நிலையைக் கைவகுத்துக் கருமவிரைவுகூறியபடியாம்.

அரக்கரை இன்னவண்ணம் அண்ணன் காட்டியபொழுது, தம்பி என்ன செய்தான்? உடனே அவன் உருத்து நின்று உறுதிபூண்டு சொன்னது ஊன்றி நோக்கத்தக்கது.

இலக்குவன் உரைத்தது.

“கண்ட அக் குமரனும் கடைக்கண் தீயுக
விண்தனை நோக்கித்தன் வில்லை நோக்கினான் 440
அண்டர் நாயக! இனிக் காண்டி சண்டவர்
துண்டம் வீழ் வனஎனத் தொழுது சொல்லினான்.”
(வேள்விப்படலம், 48)

இலக்குவனுடைய மனநிலையும், வீராவேசமும், தீர மொழிகளும் இங்கே சொலித்து நிற்கின்றன. பாட்டைக் கண்ணூன்றிப் படித்துப்பாருங்கள். அந்த இளஞ்சிங்கத்தின் உயர் வீர நிலையை உயிரோவியமாக் கவி தீட்டிக் காட்டியிருக்கிறார்.

“விண்தனை நோக்கித், தன் வில்லை நோக்கினான்.”

இதில் உள்ள சொல்லை நோக்கும் பொழுதே நம் உள்ளம் அத்த வீரத்தை நோக்குகின்றது. அவனது விண் நோக்கும்,

வில் நோக்கும் எண்ணிநோக்குந்தோறும் இன்ப வுணர்ச்சியை எழுப்பி என்றும் இறும்பூது விளைத்துவருகின்றன.

அரக்கர் திரளைப் பார்த்தவுடனேயே அவ்வளவு பேரையும் ஒருங்கே வென்றுவிடவேண்டும் என்று இளையவன் விரைந்து மூண்டுள்ளமை வில்லை நோக்கினன் என்றதால் விளங்கிநின்றது. அங்ஙனம் விரைந்தவன் அண்ணனிடம் தன் விழைவினை வெளிப் படுத்திப் பின் இரண்டடிகளில் பெருவீரம் தெரியப் பேசியிருக் கின்ற ஆண்மை அழகுகள் அதிமேன்மையுடையன. அண்டர் நாயக! என்றது ஆராமை மீதூர்ந்து வந்தது.

அடல் மூண்டு நின்ற போர்த் துடிப்பிலும் தொழுதுசொல்லி னன் என்றமையால் அண்ணன்பால் இத்தம்பி கொண்டுள்ள உழுவலன்பும் உயர் மரியாதையும் உணர வந்தன.

## இராமன் நிருதரை அழித்தது.

இங்ஙனம் இளையவன் கூறி வில்லைவளைக்கு முன்னமே மேலி ருந்து உதிரம் தசைகள் சிந்தாதபடியாகசாலைமேல் பந்தரிட்டது போல் அந்தரத்தில் இராமன் விரைந்து சரக்கூடம் கட்டினன்.

கொடுஞ் செயலாளராய்க் கொலைத் தொழில் மண்டி அடுந் திறலோடு ஆர்த்துவந்த இராக்கதர்களைக் கண்டதும் அயலே ஆச்சிரமங்களிலிருந்த அருந்தவர்களெல்லாரும் பெரும் பயங் கொண்டு உள்ளங்கலங்கி ஓடி வந்து இராமனிடம் ஒருங்கே அடைக்கலம் புகுந்தார். புகவே அம்மாதவர்கட்கு ஆதரவு செய்து, "நீவிர் யாதும் அஞ்சவேண்டா; இப்படி ஒதுங்கியிருங் கள்;" என்று உறுதி கூறிவிட்டு உடனே இராமன் காவேகமாய்க் கணைகள் பல ஏவினன். தலைகள் பல விழுந்தன. கொதித்துவந்த அரக்கர்கள் கொலையுண்டு வீழவே அவர்க்குத் தலைவராய் நின்ற மாரீசன் சுபாகு என்னும் இருவரும் வானில் மறைந்து மாயப் போர் புரிந்தார். இராமன்கனன்று கடுத்து வாயுவாத்திரத்தையும் அக்கினியாத்திரத்தையும் ஒரே தொடையில் தொடுத்து விடுத் தான். முன்னது மாரீசனை வாரி வீசிக் கடலில் எறிந்தது; பின்னது சுபாகுவைச் சின்னபின்னமாச் சிதைத்து அழித்தது. எஞ்சி நின்றவர் அஞ்சி ஓடி அடவியில் மறைந்தனர்.

இராமனது இந்த வீரவெற்றியைக் கண்டதும் தேவர்கள் மகிழ்ந்து திரண்டு பூமாரி சொரிந்து புகழ்ந்து போற்றினர்.

அரக்கர் வந்ததும், அமர் புரிந்ததும், அழிந்து போனதும், தலைவர் மூண்டதும், தொலைவு கண்டதும் ஆகிய இந்நிகழ்ச்சிகளைக் குறித்துள்ள கவிகள் ஈண்டு நினைந்து கொள்ளவுரியன.

### முனிவர் அஞ்சி அடைந்தது.

நஞ்சட எழுதலும் நடுங்கி நாண்மதிச் 442
செஞ்சடைக் கடவுளை அடையும் தேவர்போல்
வஞ்சனை அரக்கரை வெருவி மாதவர்
அஞ்சன வண்ணநின் அபயம் யாம் என்றார். (1)

### இராமன் அரக்கரை அழித்தது.

கவித்தனன் கரதலம் கலங்கல் நீர்எனச்
செவித்தலம் நிறுத்தினன் சிலையின் தெய்வநாண் 443
புவித்தலம் குருதியின் புணரி ஆக்கினன்
குவித்தனன் அரக்கர்தம் சிரத்தின் குன்றமே. (2)

### மாரீசன் மறைந்ததும், சுபாகு மாய்ந்ததும்.

திருமகள் நாயகன் தெய்வ வாளிதான் 444
வெருவரு தாடகை பயந்த வீரர்கள்
இருவரின் ஒருவனைக் கடலில் இட்டது, அங்கு
ஒருவனை அந்தக புரத்தின் உய்த்ததே. (3)

(வேள்விப் படலம், 50-52)

வேள்விக் காவலில் இராமன் புரிந்துள்ள போர்த் திறத்தை இங்கே நாம் பார்த்து நிற்கின்றோம். வினை நிகழ்ச்சிகளில் மருவியுள்ள மனப் பண்புகளும், மாண்புகளும் நுணுகியுணருந்தோறும் இனிமை சுரந்து வருகின்றன. மூன்று பாடல்களையும் ஊன்றிப் படித்து உவமைநிலையையும் உருவக்காட்சிகளையும் ஓர்ந்துகொள்ள வேண்டும்.

அஞ்சி வந்து அபயம் புகுந்த முனிவருக்கு அபாயமான அமர் நெருக்கடியிலும் அன்பு கூர்ந்து தன் கையைக் காட்டி இராமன் ஆறுதல் ஊட்டியிருப்பது அவனது அருளாண்மையையும் குலமேன்மையையும் உலகறிய உணர்த்தி நிற்கின்றது.

அந்தப் போரமளியில் எல்லாரிடமும் பேசமுடியாது; ஆகவே தன் வலக்கையை எதிரே அசைத்து, "அஞ்சாதிருங்கள்" என்னும் குறிப்புத் தோன்றச் சைகை காட்டி உய்தியூட்டினான் ஆதலால் கவித்தனன் கரதலம் என்றார். அதற்குப் பொருள் நீர் கலங்கல் என்பதாம். கலங்கல் நீர் என்றது நீங்கள் நெஞ்சம்

கலங்காமல் இருங்கள்; அரக்கரை நான் விரைந்து தொலைத்து விடுகிறேன் என்றவாறு.

"செவித்தலம் நிறுத்தினன் சிலையின் தெய்வ நாண்"

இராமன் கோதண்டத்தை வளைத்து, அம்பு தொடுத்து, இடக்கையை முன் நீட்டி, வலக் கையில் பிடித்திருந்த வில்நாணைக் காதளவும் ஈர்த்துக், கடுங் குறிப்புப் பார்த்து அடுந்திறலோடு அன்று நின்ற அந்தப் போர்க்கோலத்தை இந்த ஓரடி இன்றும் நேரே காட்டி நிற்கின்றது. சிவிய ஓவியமாய்த் திகழ்ந்துள்ள தென மானச நோக்காளரெவரும் இதனை மகிழ்ந்துகொள்ளுவர்.

சிலை நாணைச் செவித்தலத்தில் நிறுத்தவே அடுத்து நிகழ்ந்தது என்ன? புவித்தலத்தில் இரத்த வெள்ளம் பெருகியது; அரக்கருடைய தலைகள் மலைகளாய்க் குவிந்தன; பிணங்களும் நிணங்களும் எங்கணும் நிறைந்துகிடந்தன என்க. எனவே அந்த அற்புதப் போர்த்திறல் அறிய நின்றது.

"தாடகை பயந்த வீரர்கள்" என்றது மாரீசனையும், சுபாகுவையும். இவருடைய செயல் இயல்கள் முன்னமே குறிக்கப் பட்டுள்ளன. மாயமும் வஞ்சமும் வன்மையும் கொடுமையும் உடையவர்கள். பெரிய பலசாலிகள். தம்முடைய தாயைக் கோசிக முனிவன் ஒரு வீரனைக் கையோடு துணைக்கூட்டி வந்து கொன்றுவிட்டான் என்று அவர் கேள்விப்பட்டு உள்ளங்கொதித் திருந்தார். வேள்வி செய்யும் பொருட்டுச் சித்தாச்சிரமத்திற்குத் தவசி வந்திருக்கின்றான் என்று தெரிந்தவுடனே நெடுந்தூரத்தி லிருந்த அவ்விருவரும் படைகளோடு விரைந்து வந்தார். யாகம் தொடங்கி நான்கு நாள் வரையும் அவர்க்கு யாதொரு தகவலும் தெரியாதிருந்தது. ஐந்தாவது தினம் தான் தெரியவந்தது. தெரியவே உரிய துணைகளோடு வந்து ஆறுவது நாள் முற்பகலில் இவ்வாறு மூண்டு பொருதார். படைகள் மாண்டு போகவே, மாயமாய் மறைந்து நின்று கல்மழையும் கடுங்காற்றும் வல்லிருளும் விளைத்துப் பொல்லாத்தீமைகளைப் போராடிச் செய்தார்.

செய்யவே இராமன் கந்தருவக் கணையோடு காற்றையும் நெருப்பையும் அதிதேவதைகளாகக் கொண்டுள்ள மந்திரப் பகழி களை முந்துற ஏவி அவ்வெந்திறலாளரை வேரோடு ஒழித்தான்.

" இருவரின் ஒருவனைக் கடலின் இட்டது " என்றது மாரீசனை.

சுபாகு உடனே இறந்தொழிந்தான் ஆதலால் " ஒருவனை அந்தக புரத்தின் உய்த்ததே " என்றார். அந்தகன் = எமன். ஏகாரம் அதிசயம் தோன்ற நின்றது.

நாயகன் கருதி எய்தபடியெல்லாம் விரைந்து செய்துவரும் திவ்விய மகிமையுடைமையால் தெய்வ வாளி என்றார்.

தேவர்களை வாழ்விக்க வந்த வாளி எனவுமாம்.

இங்கே கொல்லாமல் விடப்பட்ட மாரீசனே பின்பு இராமனுக்குப் பொல்லாத் தீமை செய்ய வருகின்றான். கொன்றிருந்தால் பொன் மானாய் வந்து புலையாட்டம் செய்திரான். அங்ஙனம் செய்யாது விடுத்தது தேவர்களுக்கு உய்தி ஆயது ஆதலால், அவ்வுறுதியைச் செய்துள்ள உரிமை கருதி வாளிக்குத் தெய்வஅடை வந்தது என்க. வினைவிளைவுக்கு வேண்டிய வித்துகள் இங்ஙனம் விளைக்கப்பட்டுவருகின்றன. கடலில் இட்டுவைத்த கருமம்கருதுக.

தீங்கு செய்யவந்தாரை இவ்வாறு இராமன் தீர்த்தொழிக்கவே மாதவரும் வானவரும் மகிழ்ச்சி மீக்கூர்ந்து அவனைப் போற்றிப் புகழ்ந்து வாழ்த்தி நின்றார்.

## வேள்வி முடிந்தது.

தருவனத்துள் யான் இயற்றும் தவவேள்வியை நிருதர் விலக்காவண்ணம் செருமுகத்தில் காத்தருள நின் சிறுவருள்ளே கரிய செம்மல் ஒருவனைத் தா என்று முன்னம் தசரதனிடம் கோசிகர் துணைபெற்று வந்தபடியே அவ் ஆண்டகை ஈண்டு பாது காத்தருளியது. அருளவே முனிவர் யாகத்தை இனிது முடித்துவிட்டுப் பெருமகிழ்ச்சியுடன் ஒளிமிகுந்து வெளியே வந்தார்.

## விசுவாமித்திரர் இராமனை வியந்து புகழ்ந்தது.

அந்தவர் இராமனை வாரியணைத்து ஆனந்த பரவசராய்ப் புகழ்ந்து துதித்தார். அங்கிருந்த முனிவர்களும் அவனைச் சூழ்ந்துகொண்டு காட்டுப்பூக்களை வாரிச் சொரிந்து போற்றி நின்றார்: " ஆருயிர்களையும் அருந்தவங்களையும் பேருலகங்களையும் நேரே காத்தருளவந்த கமலக்கண்ணா ! " என்று ஆர்த்தி மீதூர்ந்து வார்த்தைகள் கூறித் தோத்திரம் செய்தார்.

செய்யமுடியாமல் கையகன்றிருந்த அரிய வேள்வி இனிது பூர்த்தியானமையால் உள்ளம் பூரித்துநின்ற விசுவாமித்திரர் இவ்வீர வள்ளலையும் தம்பியையும் அமர் இளைப்பு நீங்கும்படி நீராடச் செய்து, புனித ஆச்சிரமத்திலிருத்தி, அதிமதுரமான இனிய கனிகளை உதவித், தவசிகள் புடைசூழ அமர்ந்து உவகை ததும்ப முகமனுரையாடினார். அவருடைய வாசகங்கள் நனிநயமுடையன. அடியில் வருவன.

449 பாக்கியம் எனக்குளதென நினைவுறும் பான்மை
போக்கி நிற்கிது பொருளென உணர்கிலென் ; புவனம்
ஆக்கி மற்றவை அகிலமும் அணிவயிற் றடக்கிக்
காக்கும் நீஒரு வேள்விகாத் தனையெனும் கருத்தே.
(வேள்விப்படலம், 57)

தமது யாகத்தைப் பாதுகாத்தருளிய இராமனைப் பார்த்துக் கோசிகர் இப்படிப் பேசியிருக்கிறார். செய்த நன்றிக்கு உள்ளம் உவந்து பதில் உபசாரம் கூறியபடி யிது.

இதிலுள்ள மரியாதையும் விநயமும் நாகரீகமும் உறுதிநலனும் நளினமும் நயந்து நோக்கத்தக்கன. அரிய காரியத்தைச் செய்து உதவிய ஒருவனை உடனே உரிமை கூர்ந்து பாராட்டிப் பேசுதல் உலக இயற்கை. அந்த இயல்பு முனிவர் செயலில் இங்கேவந்துள்ளது. வரினும் அகம் உவந்து எழுந்த முகமன் உரை அதிசய நிலையில் மதிநலஞ் சுரந்து துதிசெய்ய நின்றது.

“ இராமச்சந்திரா! எனக்கு நேர்ந்த இடையூற்றை நீக்கி, என் வேள்வியைக்காத்து, யாரும் செய்ய முடியாத பேருபகாரத்தைச் செய்திருக்கிறாய்! இதற்கு நான் என்ன கைம்மாறு உனக்குச் செய்வேன்? நீயும் உன் குலமும் என்றும் சேமமாயிருக்கவேண்டும் என எல்லாம் வல்ல இறைவனை நினைந்து மனம் உருகுவதைவிட அரசகுமாரனை உனக்கு வேறு என்னால் என்ன செய்ய முடியும்?” என்று இன்னவாறு பேசியிருக்கவேண்டும்; பெரும்பாலும் இந்த வகையிலேதான் உபசார வார்த்தைகள் வந்து சேரும்; ஆனால் இங்கே தவசி பேசியிருப்பது என்ன? எந்த வகையில் சேர்ந்துள்ளது? அவரது நெஞ்சம் கனிந்து வந்துள்ள உரைகளைக் கொஞ்சம் சிந்தனை செய்து நோக்கவேண்டும்.

449 “ பாக்கியம் எனக்கு உளது என நினைவுறும் பான்மை
போக்கி, நிற்கு இது பொருள் என உணர்கிலென்.”

என்றது இரகுநந்தனா! நீ செய்து உதவியுள்ளதைக்குறித்து நான் ஒன்றும் உன்னை இங்கே புகழ்ந்து பேசகில்லேன்; எனது புண்ணிய நிலையையே எண்ணி எண்ணி இன்புறுகின்றேன்; எண்ணில் காலம் தவம் புரிந்தாலும் விண்ணவராலும் காண முடியாத ஓர் அற்புத மூர்த்தி வில்லும் கையுமாய் வந்து எனக்குக் காவல் காத்து நின்று நான் கருதியபடியெல்லாம் உறுதி செய்து உதவுகின்றது என்றால், என்னுடைய பெரும் பாக்கிய நிலையை எவர் அளந்து சொல்லவல்லார்? எனக்குக் கிடைத்துள்ள பரம பாக்கியத்தை நினைந்து நினைந்து நெஞ்சு உருகி என்னையே நான் புகழ்ந்துகொள்வதைத் தவிர உன்னைப் புனைந்து கூறல் புன்மையாம் என்றவாறு.

"அகிலமும் காக்கும் நீ ஒரு வேள்வி காத்தனை எனும் கருத்தே!" என்னும் இதிலுள்ள குறிப்பைக் கூர்ந்து பார்க்க. பேராற்றலும் பெருமகிமையுமுடைய உன்னை ஓராற்றால் ஒரு சிறிது உணர்ந்தாலும் இக்காத்தலை உனக்கு ஒரு பொருளாக வியந்து கருதி எவரும் உவந்து போற்றார் என்க.

கருத்தே என்றது குறிப்புமொழி. பழைய காப்பு நிலையை விடுத்துப் புதிதாய் எடுத்துள்ள அவதாரத்திற்குத் தக்கபடி நீ ஒரு வேலை கருதினும், நான் அவ்வாறு கருதேன் என்பதாம்.

அகில வுலகங்களையும் படைத்துக் காத்துவருகின்ற நீ ஒரு வேள்வியைக் காத்தருளினாய் என்று புகழ்ந்து கூறின், அது எனக்கு ஒரு பெரிய பேதைமையாம் என்பது கருத்து.

நீ காப்புக்கு அதிதேவதை; காவலோ என்றும் எங்கும் உன்னால் நடந்து வருகின்றது; அங்ஙனம் நிகழ்ந்துகொண்டிருக்க, "காத்தனை" என முடிவாக வரைந்து கூறுதல் வழுவாம் என்பது குறிப்பு.

திருமாலாகவே இராமனைஎல்லாரும் அறிய இங்கே வெளிப்படையாக முனிவர் பேசியிருக்கிறார். "அந்த ஆதிமூர்த்தியே இந்த உருவில் ஒரு வில்லோடு வந்துள்ளது; இல்லையானால், என் காரியம் முடிந்திராது" எனத் தம் காரிய சித்தியை நினைந்து களிப்பு மிகுந்து இங்ஙனம் குதூகலித்துக்கொண்டாடினார் என்க. அவரது தத்துவக் காட்சியும் வித்தக வசனமும்இடங்கள்தோறும் வியந்து நோக்கும்படி உணர்வொளிவீசி உயர்ந்து வருகின்றன.

இவ்வாறு உள்ளங் கனிந்து உவகை யுரையாடி இப்பிள்ளைகளோடு அப்பெரியவர் அன்று அங்குத் தங்கியிருந்தார். இரவு இனிது கழிந்தது. மறுநாள் எழுந்தனர். நீராடி நியமம் முடித்த பின் இராமன் கோசிகரை நோக்கி, "இனி அடியேன் செய்ய வேண்டிய பணி யாது?" என்று பணிவுடன் வினவினன்.

"இன்று யான்செயும் பணி என்கொல்? பணி என இசைத்தான்" என்றதனால் முனிவருடைய பணிவிடையில் இக்குலமகன் கொண்டுள்ள உவகையும் ஊக்கமும் உரிமையும் உணரவந்தன.

"வேள்வியைக் காக்கத்தானே தந்தையாரிடமிருந்து முனிவர் நம்மை அழைத்துவந்தார்; அது நேருநல் முடிந்தது; இனி நமக்கு இங்கு என்ன வேலை? அயோத்திக்கே திரும்ப அனுப்பி விடுவார்; அல்லது உடன் வந்து அப்பாவின்பால் ஒப்பித்து மீளுவார்" என இன்னவாறு இராமன் ஈண்டு எண்ணியிருக்கவேண்டும். அந்த எண்ணம் யாதும் தோன்றுமல் அதிசாதுரியமாய் "யான் செயும் பணி இன்று என்?" என மாதவரிடம் வினவியுள்ளான். கருதியபணி முதல் நாள் நிறைவேறிவிட்டமையால் அன்று செய்ய வுரிய பணியை இவ்வாறு கேட்க நேர்ந்தது.

என்ன காரியம் சொன்னுலும் அதனைத் தடையின்றிச்செய்கின்றேன் என்பது கருத்து. இதற்கு முனிவர் சொன்ன பதில் என்ன? அயலே பாருங்கள்.

"அரிய யான்சொலின் ஐயநிற்கு அரியதொன் றில்லை;
பெரிய காரியம் உளஅவை முடிப்பது பின்னர்
விரியும் வார்புனல் மருதம்சூழ் மிதிலையர் கோமான்
4551 புரியும் வேள்வியும் காண்டுநாம் எழுகென்று போனுர்."
(வேள்விப்படலம், 59)

இனி யான் செய்யவேண்டிய காரியம் யாது? என வினவிய இராமனை நோக்கிக் கோசிகர் இங்ஙனம் பேசி மிதிலாபுரிக்கு ஓர் ஆசையோடு அழைத்துக்கொண்டு போயிருக்கிறுர்.

பிறரெவரும் செய்யமுடியாத அரிய காரியங்களை யெல்லாம் நீ எளிதே முடிக்க வல்லவன்; உன்னுல் முடியாத காரியம் ஒன்றும் இல்லை என இராமனுடைய வினையாண்மையை வியந்து புகழ்ந்த முனிவர் முடிவில் மறைபொருளாக விநயமொழி பகர்ந்தார். தாம் அழைத்துவந்துள்ள வீரமகன் பார காரியங்கள்

செய்ய வந்துள்ளமையையும், இனிமேல் நேரே நேர நின்ற நிலைமைகளையும் நெடிது உணர்ந்து முடிவு செய்திருக்கின்றார்.

"பெரிய காரியம் உள ; அவை முடிப்பது பின்னர் ;"

என்ற இதில் எண்ணங்கள் பல நிறைந்துள்ளன. எவற்றை நினைந்துகொண்டு இங்கே அவர் "பெரிய காரியும் உள" என்றார்? அவரது இனிய உரை அரிய ஒரு மறையாய்ப் பெருகியுள்ளது.

அகலிகை சாபம் தீர்த்தல், மிதிலையில் வில் வளைத்தல், சீதையை மணம் முடித்தல், பரசுராமரைப் பங்கப்படுத்தல் முதலிய காரியங்களைக் கருதி உரைத்திருப்பாரோ? என யூகமாய்க் கருத நேரும் ஆயினும் பெரிய என்றதனாலும் "முடிப்பது பின்னர்" என்றமையாலும் இராவண வதத்தைக் குறித்துள்ளதாகவே கூர்ந்து நோக்கி ஓர்ந்து கொள்ள உறுதியாய் நின்றது.

பெரிய காரியம் என்பது இந்நாட்டில் பெரும்பாலும் கலியாணத்தையே குறிப்பாகச் சுட்டிவருகின்றது. அவ்வரவு நிலையில் முதலில் காதல் மணமும், முடிவில் வீரமணமும் உரிமையாக இங்கே கருத நின்றன. முன்னுற வந்து உற்ற திருவே பின்னே வெற்றித் திருவுக்கு வித்தாயுள்ளமை உய்த்துணரத்தக்கது. தத்துவக் காட்சியில் தலைசிறந்துள்ள வித்தக முனிவர் ஆதலின் இத்திறம் உரைத்தார். உரைகள் எதிர்கால நிலைகளையெல்லாம் இனிது உள்ளடக்கி அறிவுப் பிழம்பாய் அமைந்திருக்கின்றன.

## மிதிலைக்குச் சென்றது.

வேள்வி முடிந்தவுடன் திருவயோத்திக்கு மீளாமல் மிதிலைக்குப் போகத் துணிந்தார். அப்போக்கு இராமனுக்கு வாவுரிய திருமணம் முதலிய உயர்நலங்களையெல்லாம் எதிர் நோக்கியெழுந்தது. செய்யும் வினைகள் தெய்வகதியில் செழித்து வருகின்றன.

ஞான குணசீலனை சனகமன்னன் அரிய யாகம் ஒன்று செய்கின்றான் ; அதற்குப் பெரிய அரசர்களும் முனிவர்களும் பெருந் திரளாய் வந்திருப்பார்கள் ; சிறந்த விழா நடைபெறும் ஆதலால் அங்கே போய் வருவோம் என்று இராமனிலக்குவர்களை அழைத்துக்கொண்டு விசுவாமித்திரர் மிதிலைக்குப் புறப்பட்டார்.

அவ்வனத்தில் தவஞ்செய்திருந்த இருடிகளும் உடன் தொடர்ந்து சென்றார். அப்பயணம் உயர்மகிழ்ச்சியாய் ஓங்கி நின்றது.

இவ் வளவில் வேள்விப் படலம் முடிகின்றது.

அவ்வண்ணம் சென்ற முனிவர் சோணை நதியை அடைந்தார். பொழுதும் அடைந்தது. நதி யருகே யிருந்த இனிய குளிர் பூஞ்சோலையில் தங்கினர். ஆதவன் மறைந்த அந்த மாலைக் காலநிலையைக் குறித்துக் கவி சாதுரியமாக வருணித்திருக்கிறார். பொழுது அடைவதை நாமும் நாள் தோறும் பார்த்துவருகிறோம். அதிசயமாக யாதும் தோன்றுவதில்லை. பாராமுகமாய் இருந்துவிடுகின்றோம். கலைஞான முடைய கவிஞன் அதனைக் காணுங்கால் அவனுக்குப் புதிய காட்சிகள் பல புலனாகின்றன. அவற்றை உலகம் அறிய உரைக்கின்றான். அவ்வுரைகள் உவகை நிலையமாய் உணர்வு நலங்களை விளைத்து வருகின்றன. அடியில் வருவன காண்க.

நதிக்கு வந்தவர் எய்தலும் அருணன்றன் நயனக்
கதிக்கு முந்துறு கலினமான் தேரொடும் கதிரோன்
உதிக்கும் காலையில் தண்மைசெய் வான்தன துருவில்
கொதிக்கும் வெம்மையை ஆற்றுவான் போற்கடற் குளித்தான்.

கறங்கு தண்புனற் கடிநெடுந் தாளுடைக் கமலத்
தறங்கொள் நாண்மலர்க் கோயில்கள் இதழ்க்கத வடைப்பப்
பிறங்கு தாமரை வனம்விட்டுப் பெடையொடு களிவண்டு
உறங்கு கின்றதோர் நறுமலர்ச் சோலைபுக் குறைந்தார்.

(அகலிகைப் படலம், 2-3)

அவர் சோணைமா நதியை அடையவும் சூரியன் மறைந்தான். மறைவு மேற்கும், உதயம் கிழக்குமாய்த் தோற்றலின் இரு திசைக்கடல்களினும் முறையே குளித்து எழுவதாகக் குறிக்க நேர்ந்தார்.

முதல் நாள் பகலில் உண்டான வெயில் கொதிப்பை ஆற்றவும், மறுநாள் காலையில் குளிர்ச்சியாகத் தோன்றவும் கருதிக் கதிரோன் மேல்கடலில் குளித்தான் என்பதாம். அருணன் சூரியனுடைய தேர்ப்பாகன். கலினமான் என்றது குதிரைகளை சாரதியின் கண்பார்வை எவ்வளவு தூரம் செல்லுமோ அவ்வளவினும் முந்திப்பாயும் என அப்பரிகளின் கதிவேகங்களை அதிசயமாகக் காட்டியிருக்கிறார். நயனம்=கண்.

அருணன்தன் நயனக் கதிக்கு முந்துறு கலினமான்

என்னும் இது எவர்க்கும் பெருவியப்பை யூட்டி அரிய ஒரு வேக விவேகத்தை யுணர்த்திக் கதிர் நிலையை விளக்கியுள்ளது. உயிர்க்கு உயர் நயனு யுள்ளமையான் கண் நயனம் என வந்தது.

பகலில் வண்டுகள் தாமரை மலர்களில் தேன் உண்டு உலாவும்; மாலை வரவும் நீர்ப்பூக்கள் தாமாகவே குவிந்துகொள்ளும்; கொள்ளவே, அவ்வண்டினங்கள் அயலேயுள்ள சோலைகளில்போய் இரவு தங்கி யிருக்கும்; இந்த இயற்கைநிலையை எழிலுறுத்திக் கவியின் வருணனை தருமநலம் கனிந்து இங்ஙனம் வந்துள்ளது!

"அறங்கொள் நாள்மலர்க் கோயில்கள் இதழ்க் கதவு அடைப்ப"

என உருவகம்செய்திருக்கிறார். இதில்மருவியுள்ள பொருள் நலங்களைத் துருவி நோக்குக. தம்மை அடைந்தவர்க்கு உணவும் நீரும் உதவி இனிதுபேணும் தருமநிலயங்களாகத் தாமரைகள் இங்கே கருதப்பட்டுள்ளன. வண்டுகள் உண்டு மகிழ மது அளித்துப் பராமரித்து வந்தமையால் அறங்கொள் நாள்மலர்க் கோயில்கள் என அவை புகழ்ந்து போற்ற நின்றன.

உண்ணும் காலம் ஆனவுடன் புண்ணிய நிலயமான தரும சத்திரங்களில் கதவுகள் பூட்டப்படும் ஆதலால் அந்நிலையினை எண்ணி நோக்கும்படி இதழ்க் கதவு அடைப்ப என்றார். அறச் சாலைகளில் வயிறு நிறைய உண்டவர் புறத்தேபோய் நல்ல இடம் பார்த்து அமைதியாய் உறங்கிக்கிடப்பர் ஆகலான், உறங்குகின்றதோர் நறுமலர்ச் சோலை என அதன் தரந்தெரிய வுரைத்தார்.

மாலைப்பொழுதில் உலகில் இயல்பாக நிகழுகின்ற இயற்கை நிலைகளை இவ்வாறு உணர்ச்சிநலங் கனிய உரைத்தருளினர்.

அளிகள் மதுவருந்திக் களிதுயில் கொள்ளும் குளிர்பூம் பொழிலில் அன்று இரவு இராம இலக்குவர்களோடு முனிவர் இனிது தங்கி இருந்தனர் என்பதை இங்ஙனம் இங்கிதமாய் இசைத்திருக்கிறார். அவர் உறைந்த இடத்தின் உயர்வுணரவந்தது.

அவ்வண்டமர் சோலையில் உண்டு அமர்ந்து உல்லாசமாய்க் கோசிகர் உரையாடி வருங்கால் உயர்கலைகளும், உலக நிலைகளும், அமரர் இயல்புகளும், பழங்கால சரிதங்களும் பலபேசப்பட்டன. அவற்றுள் பாற்கடல் கடைந்த செய்தி மேற்பட எழுந்தது.

## துருவாசர் சபித்தது.

ஒரு நாள் நளினி என்னும் அழகிய வித்தியாதர மங்கை வைகுண்டம் புகுந்து திருமகள் முன்னிலையில் இன்னிசைபாடினாள். அதிமதுரமான அந்த இசைக்கு மகிழ்ந்து பரிசில் பல தந்து தான் சூடியிருந்த இனிய மலர் மாலையையும் அப்பாடினிக்குத் திருவின் செல்வி உரிமையுடன் கொடுத்து விடுத்தாள். அவள் தொழுது வாங்கி உளமிக உவந்து அயனுலகம் வந்தாள். இடையே துருவாச முனிவரைக் கண்டாள். பரிமளமுடைய அந் நறுமலர்மாலையை "இது திருமகள் உதவியது" என அதன் அருமையை உணர்த்தி அவரிடம் அளித்தாள். அவர் அதனைப் பெருமகிழ்வுடன் பெற்றுப் பொன்னுலகை அடைந்தார். அப்பொழுது இந்திரன் தேவர்கள் புடைசூழ அயிராவதத்தின்மேல் அமர்ந்து சிறந்த ஆடம்பரங்களுடன் பவனி வந்தான். இராசகம்பீரமாய்த் தேசுமிகுந்து வருகின்ற அவனுடைய சீர்மையை வியந்து நோக்கித் தம் கையில் இருந்த பூமாலையை இவ்வாசர் அவ்வாசவனிடம் நேசமுடன் நீட்டினார். நீட்டியதை அவன் தோட்டியால் வாங்கி யானைமேல் வைத்தான். அதனைத் துதிக்கையால் ஈர்த்து அது காலில் மிதித்தது. முனிவர் கொதித்துச் சீறினார்: "ஓ இந்திரா! தெய்வ நாயகி சூடிய திவ்விய மாலையை உன் செல்வி கண்டு மரியாதையுடன் கொடுத்தேன்; அதன் மகிமையை உணராமல் உனது செல்வச் செருக்கால் இச் சிறுமையைச் செய்தாய்! அறிவிலியே! உன் திருமுழுவதும் இழந்து நீ வறியனாயுழலுக" என்று வைது சபித்தார். சபிக்கவே தெய்வத் திரவியங்கள் யாவும் கடலில் போய் ஒளித்தன.

> "அரமடந்தையர் கற்பகம் நவநிதி அமிர்தம்
> சுரபி வாம்பரி மதமலை முதலிய தொடக்கற்று
> ஒருபெரும்பொருள் இன்றியே உவரிபுக் கொளிப்ப
> வெருவி ஓடின வெண்ணெய்வாழ் கண்ணன்மே வாரின்"

இவ்வாறு போகவே விண்ணகம் வெறுமையாய்ச் சிறுமையுற்றிருந்தது. இந்திரன் மறுகி நொந்து தேவர்களுடன் பிரமனையும் அழைத்துக்கொண்டு திருமாலிடம் சென்று நிகழ்ந்ததை நேரே யுரைத்து வணங்கி வாழ்த்தி வாழ்வருள வேண்டினன்.

## பாற்கடல் கடைந்தது.

அப்பெருமான் இரங்கியருளிக் கடல்கடைதற்கு வேண்டிய உபாயங்களை உரைத்தான். அவ்வாறே மந்தரகிரியை மத்தாக நாட்டி, வாசுகியைத் தாம்பாக அமைத்துச், சந்திரனைத் தூணாக நிறுத்தித், திவ்விய மூலிகைகளை இடைமடுத்துக் கடையலாயினர். கடையுங்கால் மத்தாய் நின்ற மலை நிலைகுலைந்தது; குலையவே மால் ஓர் ஆமையாய் அமைந்து அருள்புரிந்து தாங்கினர். அமரரும் அசுரரும் அரும்பாடுபட்டுக் கடைந்து வந்தனர்; வரவே மறைந்துபோனவை யாவும் மிதந்தெழுந்தன; முடிவில் அமிர்தம் திரண்டு வந்தது. அதனைத் தமது என விழைந்து வானவரும் தானவரும் வாதாடலாயினர். மாயவன் ஒரு மோகினியாய்த் தோன்றி அசுரரை வஞ்சித்து அமிர்தத்தை அமரருக்கே உதவினன். முதலில் மண்டிய ஆலகால விடத்தைச் சிவபெருமான் உண்டான். இடையில் வந்த சுரபி முதலிய தெய்வப் பொருள்களை இந்திரன் கொண்டான். இறுதியில் எழுந்த திருவையும் மணியையும் திருமால் அடைந்தான்.

வெருவும் ஆலமும் பிறையும் வெள்விடையவற் கீந்து,
தருவும் வேறுள தகைமையும் சதமகற்கு அருளி,
மருவு தொல்பெரு வளங்களும் வேறுற வழங்கித்,
திருவும் ஆரமும் அணிந்தனன் சீதர மூர்த்தி.
(அகலிகைப் படலம், 26)

என ஆழி கடைந்த கதையை அருந்தவர் இங்ஙனம் இராமனிடம் கூறினர். இச்சரித்திரம் விசித்திரமாகத் தோன்றும். கடல் கடைதல், அமிர்தம் அடைதல் முதலிய நிலைகளெல்லாம் நமக்குத் தெளிவாக விளங்காமையால் அவற்றைத் தெய்வ முறைகளாகக் கருதி நாம் அமைதியுறுகின்றோம். பாலைக் கடைந்தால் அதிலிருந்து வெண்ணெய் எழுகின்றது. அதனை உண்டால் மனிதனுக்கு உடல் உரமும், ஆயுள்வளர்ச்சியும் உண்டாகின்றன. இவ்வுண்மையைப் பாற்கடலில் அமுதம் எடுத்து அமரர் உண்ட கதை நமர்களுக்கு ஒருவாறு உணர்த்தி நிற்கின்றது. உணர்வுக் காட்சியில் உறுவன உயர் மறைகளாய் ஒளிபெற்று வருகின்றன.

"மறிதிரைப் பரவைப் புடைவயிறு குழம்பத்
துலக்குமலை ஒருநாட் கலக்குவ போல." (கல்லாடம் 30)

" வடவரையை மத்தாக்கி வாசுகியை நாண் ஆக்கிக்
கடல்வண்ணன் ! பண்டொருநாள் கடல்வயிறு கலக்கினையே !
கலக்கியகை யசோதையார் கடைகயிற்றால் கட்டுண்கை
மலர்க்கமல உந்தியாய் ! மாயமோ மருட்கைத்தே. "
(சிலப்பதிகாரம், 17)

" திகழொளி மூந்நீர் கடைந்தக்கால் வெற்புத்
திகழ்பெழ வாங்கித்தம் சீர்ச்சிரத் தேற்றி
மகர மறிகடல் வைத்து நிறுத்துப்
புகழ்சால் சிறப்பின் இருதிறத்தோர்க்கும்
அமுது கடைய இருவயின் நாண் ஆகி
மிகாஅ இருவடம் ஆழியான் வாங்க." (பரிபாடல்)

" பரிய மாசுணம் கயிறாப் பருப்பத மதற்கு மத்தாகப்
பெரிய வேலையைக் கலங்கப் பேணிய வானவர் கடையக்
கரிய நஞ்சது தோன்றக் கலங்கிய வவர்தமைக் கண்டு
வரிய வாரமுதாக்கும் அடிகளுக் கிடமரசிலியே." (தேவாரம்)

கடல் கடைந்த நிலையை இவை காட்டியுள்ளன காண்க.

" மேலாடை யின்றிச் சவைபுகுந் தால்இந்த மேதினியோர்
நூலாயிரம்படித் தாலும் எண்ணார் நுவல் பாற்கடலோ
மாலானவர் அணி பொன்னாடைகண்டு மகளைத் தந்தே
ஆலாலம் ஈந்தது தோலாடை சுற்றும் அரன்தனக்கே."
(தனிப்பாடல்)

உயர்ந்த ஆடையை உடுத்தியிருந்தமையால் திருமாலுக்குப் பாற்கடல் தன் மகளைக் கொடுத்தது ; தோல் ஆடை சுற்றி நின்றமையால் சிவனுக்கு நஞ்சைத் தந்தது ; ஆதலின் இவ்வுலகில் எவ்வளவு படித்திருந்தாலும் வெளியே கொஞ்சம் ஆடம்பரம் இல்லாமல் போனால் யாரும் மதியார் என்பதாம்.

பழைய சரிதம் ஒன்றை அதிசாதுரியமாக எடுத்துக்காட்டி உலகநிலையை இஃது உணர்த்தி நிற்கும் அழகைப்பார்க்க.

பாற்கடல் கடைந்த கதையை முன்னோரும் பின்னோரும் இன்னவாறு எண்ணி வழங்கி ஏத்தி வந்திருக்கின்றனர்.

இவ்வண்ணம் பல சரிதங்களைக் கூறிவந்த கோசிகர் இராமனை உறங்கும்படி பணித்து அவரும் அயர்ந்து தூங்கினார். பொழுது விடிந்தது ; தினகரன் எழுமுன் அனைவரும் எழுந்தனர். அன்று சூரிய உதயத்தைக் குறித்து வந்துள்ள கவி அடியில் வருவது.

காலன் மேனியிற் கருகிருள் கடிந்துல களிப்பான்
நீல வார்கலித் தேரொடு நிறைகதிர்க் கடவுள்
மாலின் மாமணி யுந்தியின் அயனொடு வந்த
மூல தாமரை முழுமலர் முளைத்தென முளைத்தான்.
(அகலிகைப் படலம், 31)

திருமாலின் உந்தியந் தாமரையிலிருந்து பிரமன் தோன்றினதுபோல் கரிய கடலில் நின்று சிவந்த கிரணங்களை வீசிச் சூரியன் உதயமாயினன் என்பதாம். ஆர்கலி—கடல். அச்சம் தருதலின் இருள் காலன் என வந்தது.

இராமனுடைய மிதிலைப் பிரயாணத்தில் இடையே கழிந்த நாள்களின் உதய அத்தமனங்களை இங்ஙனம் உவகை கனிய வருணித்து வருகிறார்.

அதிகாலையில் அந்த இனிய சோலையிலிருந்து புறப்பட்டு வடமேற்காக நடந்து கங்கையை வந்து அடைந்தார்.

"அங்கு நின்றெழுந்து அயன்முதல் மூவரும் அனையார்
செங்கண் ஏற்றவன் செறிசடைப் பழுவத்தின் நிறைதேன்
பொங்கு கொன்றையீர்த்தொழுகலால் பொன்னியைப்பொருவும்
கங்கை என்னுமக் கரைபொரு திருநதி கண்டார்."

அயன் முதல் மூவர் என்றது பிரமன், மால், சிவன், என்க. கோசிகன், இராமன், இலக்குவன் என்னும் இம் மூவரையும் முறையே திரிமூர்த்திகளோடு ஒப்ப வைத்து உரிமையுடன் குறித்தார். தகுதி, தன்மை, தறுகண்மைகளைக் கருதியுரைத்தபடியிது.

பொன்னி—காவிரி நதி. அதனை இங்கே கங்கைக்கு உவமை கூறியிருக்கிறார். தாம் பிறந்த நாட்டில் உள்ள நதி ஆதலால் அதனைக் கங்கையினும் உயர்ந்ததாகக் கவி காட்டி நின்றார். இதனால் இவரது தேசாபிமானமும், தன் மதிப்பும், உரிமையைப் பாதுகாக்கும் ஊனும், உறுதிநிலையும் உணரலாகும். பிறந்த நாடு பெற்றதாய் எனப் போற்றத்தக்கது என்னும் பெற்றியை உணர்த்திப் பெருமை தோன்ற நின்றது.

"கங்கையிற் புனிதமாய காவிரி" என்றார் தொண்டரடிப் பொடியாழ்வாரும். நாட்டுப்பற்றுடன் இங்ஙனம் பாட்டுகள் பல வந்துள்ளன.

"கூறுவதும் காவிரிக்கு வையையோ?", என்று ஒட்டக் கூத்தர் சோழ நாட்டு நதியைப் புகழ்ந்துசொன்னபோது உடனே

"கரை எதிர் எடு எறியது காவிரியோ?" என்று புகழேந்திப் புலவர் பாண்டி நாட்டின் வையை நதி மகிமையை எடுத்துக்காட்டிக் கூத்தனை இடித்துரைத்துள்ளது ஈண்டு எண்ணத்தக்கது.

புண்ணிய நதியாய்ப் புகழ்மிகப்பெற்றுள்ள கங்கைக் கரையில் தங்கியிருக்குங்கால் அதன் ஆதி வரலாற்றை இராமனுக்கு முனிவர் விளக்கி யருளினர்.

## கங்கையின் வரலாறு.

சூரிய குலத்தில் சகரன் என்று ஒரு சக்கரவர்த்தி யிருந்தான். பல நிலைகளிலும் அவன் தலை சிறந்தவன். அவனுக்கு மனைவியர் இருவர். கேசினி, சுமதி என்னும் பெயரினர். அந்த அழகிகளுடன் அமர்ந்து அரிய போகங்களை நுகர்ந்து வருங்கால் முதல் மனைவி ஒரு புதல்வனைப் பயந்தாள். அவனுக்குப் போசணன் என்று பெயர். யாரோடும் அதிகம் பழகாமல் ஞானநோக்குடன் உன்மத்தனாயிருந்தமையால் அவனை அசமஞ்சன் என்றார். அவனுக்கு அஞ்சுமான் என ஒரு குமரன் தோன்றினன். அவன் உயர்ந்த மதிமான். மூத்தவள் வழி இங்ஙனம் இருக்க, இளையாள் வயிற்றிலிருந்து சிலகாலங் கழித்து ஒரு தசைப் பிண்டம் தோன்றியது. அதனைக் கண்டு அவள் நாணி வருந்தினள். அவ்வமயம், "இதிலிருந்து அறுபதினாயிரம் குமாரர்கள் தோன்றுவர்; நீ யாதும் வருந்தாதே" என்று வானிலிருந்து ஒரு ஒலி எழுந்தது. அவ்வாறே அத்தசைத்திரள் வெடித்து அதிலிருந்த உதிரத்துளிகள் யாவும் தனித்தனியே உருவங்களாயின. பருவமாய் வளர்ந்தன. அவரனைவரும் சகரர் எனப் பேர் பெற்று ஒரு நிகராய் நின்றனர். மக்கட் பெருக்கை நினைந்து வியந்து மன்னன் அரிய ஓர் அசுவமேதயாகம் செய்ய விழைந்தான். அதற்கு விதித்து விடுத்திருந்த குதிரையை இந்திரன் கவர்ந்து கொண்டுபோய்ப் பாதலத்தில் அருந்தவம் புரிந்திருந்த கபில முனிவர் பக்கல் பக்குவமாக் கட்டிவிட்டுப் போயினன். அப்பரியைப் பல இடங்களிலும் தேடித் திரிந்த சகரர் முடிவில் கபிலரிடம் வந்து கண்டார். அவரே கரவாகக் கவர்ந்து வந்துள்ளார் என்று கருதிக் கடுத்து வைதார். அவர் கொதித்து விழித்தார்; உடனே அனைவரும் எரிந்து சாம்பராயினர். அதனைச் சகரன் அறிந்து பெரிதும் கவன்று தன் பேரனாகிய அஞ்சுமானை அனுப்

பினான். அவன் விரைந்து சென்று முனிவரை வணங்கிக்குதிரை யைக் கொண்டுபோய்ப் பாட்டனிடம் கொடுத்தான். அவன் வேள்வியை முடித்தான். பின்பு பேரனுக்கு முடி சூட்டிவிட்டு அவ்வீரன் முடிந்துபோனான். அஞ்சுமான் அரசுபுரிந்து வந்தான். அவனுக்கு ஒரு புதல்வன் பிறந்தான். அம்மகனுக்குத் திலீபன் என்று பெயர். பல கலைகளிலும் வல்லவன். உரிய பருவம் வரவும் அவன் அரசை யடைந்தான். தனது மூதாதையருக்கு நேர்ந்துள்ள அழிவை நினைந்து இரங்கி அவரை நற்கதியில் உய்த்தற்குக் கங்கை நீரைக் கருதி முயன்றான். யாதும் முடியவில்லை; அவன் முடிந்துபோனான். அவனுடைய மகன் பகீரதன் அரசுக்கு வந்தான். தந்தை முயன்றும் முடியாது போனதை இம்மைந்தன் அறிந்திருந்தான் ஆதலால் எந்த வகையிலாவது கங்கையைக் கொணர்ந்து தன் முன்னோரை உயர் கதியில் உய்க்கவேண்டும் என்று சிந்தை துணிந்து அரசை மந்திரியிடம் ஒப்பித்துவிட்டு இமயமலையை அடைந்து பிரமனை நினைந்து பெருந் தவம் புரிந்தான். அயன் தோன்றி, "ஆகாய கங்கை வரின் இந்நிலம் தாங்காது; அவளை அடக்கிவிடவல்லவன் சிவன் ஒருவனே ஆதலின் அப்பரமன் அருளை முதலில்வேண்டிக்கொள்" என உரிமையுடன் உரைத்துப் போயினான். போகவே, கண்ணுதல் கடவுளை எண்ணிக் கடுந்தவம் புரிந்தான். அவ்வண்ணல் வந்தான்: "கங்கைவரின் நான் காத்தருளுவன்; அவளை வரவழை" என்று அம்மங்கை பங்கன் மறைந்தான். மறையவே, கங்கையை நினைந்து ஐயாயிர வருடங்கள் அருந்தவம் புரிந்தான். அந்நீர்த் தெய்வம் நேரே தோன்றி, "ஐயோ! பகீரதா, நான் வரின் என்னை வையம் பொறுமோ; முன்னம் அரன் உன்னிடம் சொன்னதை நம்பாதே; அது வினோத வார்த்தை; மறுபடியும் வேண்டி நன்றாக உறுதிசெய்துகொள்" என உரைத்துப் போனாள். மீண்டும் உமாபதியை நோக்கி இம்மன்னன் மாதவம் செய்தான். யாதும் சலியாமல் பரஞ்சோதியை நினைந்து படு சாதனையாய்ச் சலம் சாதிக்க இவன் உரம் சாதித்தான்.

"கரந்தை மத்தமோடு எருக்கலர் கூவிளை கடுக்கை
நிரந்த பொற்சடை நின்மலக் கொழுந்தினை நினையா
அரந்தை யுற்றவன் இரண்டரை யாயிரம் ஆண்டு
புரிந்து நற்றவம் பொலிதர, வரைமகள் புனிதன்"

அருள்புரிந்து வந்தான். இதில் இறைவனுடைய தலைக் கோலத்தைக் குறித்தது இனி வருங் கங்கையை ஒடுக்கும் நிலை கருதி என்க. தரங்கை=ஒருவகைக் காட்டுப்பூண்டு. மத்தம்= ஊமத்தம்பூ. கடுக்கை=கொன்றை. கூவிளை=வில்வம். எல்லாமுடையவன் சடைமுடி புல்லியுள்ளமை சொல்லியபடியிது. நின்மலக் கொழுந்து என்னும் பதம் நெஞ்சை உருக்கிநிற்கின்றது. சுவை கனிந்த மொழிகள் நம் கவிக்கு இடங்கள் தோறும் வந்து தனியே இனிது உதவுகின்றன. இங்ஙனம் தோன்றிய பரமன் அத்தோன்றலை நோக்கி, "சான்றோய்! நீ அஞ்சி மருண்டு அகன்று போம்படி அந் நீர்மகள் உன்னை வஞ்சித்திருக்கிறாள்; நீ யாதும் அஞ்சல்; அவ்வஞ்சிவரின் நான் தஞ்சமாக வந்து தற் காத்தருளுவன்; அவளை வேண்டிக் கொண்டுவா" என விளம்பி வெளியே காந்து போனான். அதன்பின் கங்கையை நினைந்துருகி அக்குலமகன் பலகாலமாக நிலைகுலையாமல் அரியதவம் ஆற்றினான்.

"பெருகு நீரொடு பூழியும் வாயுவும் பிறங்கு
சருகும் வெங்கதிர் ஒளியையும் நுய்த்துமற் றதையும்
பருகல் இன்றியே முப்பதி னாயிரம் பருவம்
உருகு காதலின் மன்னவன் அருந்தவம் முயன்றான்."

அப்பெருந்தகை இங்ஙனம் முயன்று வரவே முடிவில் கங்கை மூண்டு எழுந்தாள். அவள் கொதித்தெழுந்த ஒலிகளைக் கேட்டு எல்லா உலகங்களும் எதிர்நடுங்கின. விண்ணும் மண்ணும் நடுங்க எண்ணுக்கு அடங்காத தண்ணீர்ப் பெருக்கம் அண்டகூடம் யாவும் ஆர்த்து வரவே நீலகண்டன் அதன் நேரே நிமிர்ந்து நின்றான். ஆங்காரத்தோடு ஆரவாரித்து வந்த அந் நீரெல்லாம் நிமலன் சடை நுனியின் ஓர் புடையில் ஒடுங்கி மறைந்தது. பகீரதன் மதிமயங்கி மறுகி உருகி நின்றான். பெருமான் அவன் அருகணைந்து, "அரச குல திலக! நீ கருதிய கங்கை இதோ என் சடையில் உள்ளது; உலகம் நலமுற உனக்கு வேண்டிய அளவு ஒழுகவிடுகின்றேன்; கொண்டுபோ" என்று குறித்து விடுத்தான். விடவே வெள்ளை நிறமாய்த் துள்ளிக் குதித்து வெள்ளப்பெருக்காய் விரைந்து நீண்டது. அரசன் அதன்முன்னே முடுகி ஓடினான். அவனைத் தொடர்ந்து அது பின்னோடி வந்தது; இடையே சன்னு என்னும் முனிவர் தம் தவ வலியால் அக்கங்கையைக் கைக்கொண்டு உண்டார். அவரிடம்

வணங்கி வேண்டி வேந்தன் மீண்டும் அதனைவிரைந்து கொண்டு வந்தான். சாம்பராய்க் கிடந்த தன் மூதாதையரை நினைந்து ஆதரவோடு உய்த்தான். அவரனைவரும் பிதிர் உலகில் திவ்விய மகிமையுடையராய்ச் சிறந்து பின்பு பேரின்ப நிலையை அடைந்தார். மன்னன் உளமிக மகிழ்ந்து தன் வளநகர் அடைந்தான்.

*நிரய முற்றிய சகரர்கள் நெடுங்கதி செல்ல*
*விரை மலர்ப்பொழிந் தார்த்தன விண்ணவர் குழாங்கள்*
*முரச முற்றிய பல்லிய முறைமுறை முழங்க*
*அரசன் அப்பொழு தணிமதில் அயோத்திமீண் டடைந்தான்.*

*சகரர் தம்பொருட் டருந்தவம் பெரும்பகல் தள்ளிப்*
*பகிர தன்கொணர்ந் திடுதலால் பகிரதி யாகி*
*மகித லத்திடைச் சன்னுவின் செவிவழி வரலால்*
*நிகரில் சானவி எனப்பெயர் படைத்ததிந் நீத்தம்.*

(அகலிகைப்படலம், 60, 61)

எனக் கங்கை வந்த வரலாற்றைக் கோசிக முனிவர் இராமனிடம் இங்ஙனம் கூறிமுடித்தார்.

## பகீரதனது உதவி நிலை.

பெறுதற்கு அரிய தெய்வ கங்கையை மனித வுலகிற்குக் கொண்டு வந்து கொடுத்த மகிமை பகீரதனுக்குத் தனி உரிமையாயது. அதனால் அவன் புகழ் உலகம் எங்கணும் பரவி நின்றது. அவன் பெயரால் கங்கைக்குப் பாகீரதி என ஒரு பெயரும்வந்தது. தாம் பிறந்த குடியை உயர்த்திப் பெற்றோரையும் மரபையும் மாட்சிமைப்படுத்தும் குலமக்களுக்குள்ளே அவன் ஒரு தலை மகனாய்த் தழைத்து நிற்கின்றான். அரிய பெரிய முயற்சியைக் குறித்துப் பேசும்பொழுது பகீரதப் பிரயத்தனம் என இந்நாட்டில் இன்றும் வழங்கிவருகின்றனர். இப்பழமொழி அவனுடைய முயற்சியின் உயர்ச்சியை விளக்கிக் கீர்த்தியை என்றும் நிலை நாட்டி நிற்கின்றது. எண்ணியார் திண்ணியராயின் விண்ணின் உள்ளதையும் வெளியே கொண்டு வரலாம் என்பதை உணர்த்தி அம்மன்னன் வினைத்திறம் உயிர்கட்கு ஊக்கத்தை யூட்டியுள்ளது.

கங்கையின் வரலாற்றோடு தன் மரபின் முன்னோன் ஒருவனது சரிதத்தையும் கேட்டு இராகவன் உவகை மீக்கூர்ந்தான்.

## விசாலை நகரில் தங்கியது.

அன்று அங்கு அமர்ந்திருந்து மறுநாள் எழுந்து கங்கை கடந்து வடகரை வந்து சிறிது வழி நடந்தார். ஆண்டு விசாலை என்னும் நகரிலிருந்து அரசுபுரிகின்ற சுமதி என்னும் அரசன் முனிவர் வரவை அறிந்து எதிர்கொண்டு வந்து கண்டு மூவரையும் ஆவலுடன் அழைத்துப் போய் விருந்து புரிந்தான். போந்துள்ள அருமைக் குமாரர்களை இனந்தெரிந்து பெரு மகிழ்ச்சியடைந்து உரிமை மீதூர்ந்து உவந்து உபசரித்தான். அவனிடம் விடைபெற்று உவகையுடன் நடந்து விதேகநாட்டை அடைந்தார்.

## விதேக நாடு சேர்ந்தது.

அந்நாடு எங்கணும் செழுமையான இனிய வளங்களையுடைய தாய் விழுமிய நிலையில் விளங்கி யிருந்தது. அதன் பொழில் எழில்களையும், வயல்வெளிகளையும், நீர் நிலைகளையும், நில நலங்களையும் பல இடங்களிலும் பார்த்து உளமிக மகிழ்ந்தனர். விழைவு நீங்கிய முனிவரும் விழைந்து நோக்கும்படி செல்வ வளங்கள் பல்வகை நிலைகளிலும் சிறந்து உள்ளங் கவர்ந்து உயர்ந்தோங்கி நின்றன. அந்நாட்டின் செழிப்பைக் குறித்த பாட்டுக்கள் சில அடியில் வருவன.

பள்ளி நீங்கிய பங்கயப் பழனநன் ஞரை
வெள்ள வான்களை களைவுறு கடைசியர் மிளிர்ந்த
கள்ள வாள்நெடுங் கண்ணிழல் கயலெனக் கருதா
அள்ளி நாணுறும் அகன்பணை மிதிலைநா டடைந்தார். (1)

வரம்பில் வான்சிறை மதகுகள் முழவொலி வழங்க
அரும்பு நாண்மலர் அசோகங்கள் அலர்விளக் கெடுப்ப
நரம்பின் நான்றதேன் தாரைகொள் நறுமலர் யாழின்
சுரும்பு பாண்செயத் தோகைநின் றாடுவ சோலை. (2)

பட்ட வாணுதல் மடந்தையர் பார்ப்பெனும் தூதால்
எட்ட ஆதரித் துழல்பவர் இதயங்கள் வெறுப்ப
வட்ட நாண்மரை மலரின்மேல் வயலிடை மள்ளர்
கட்ட காவியம் கட்கடை கழிப்பன கழனி. (3)

தூவி அன்னம்தம் இனமென்று நடைகண்டு தொடரக்
கூவு மென்குயிற் குதலையர் குடைந்ததண் புனல்வாய்
ஓவில் குங்குமச் சுவடுற ஒன்றொடு ஒன்றாடிப்
பூவு றங்கினும் புள்ளுறங் காதன பொய்கை. (4)

முறையி னின்முது மேதியின் முலைவழி பாலும்
துறையி னின்றுயர் மாங்கனி தூங்கிய சாறும்
அறையு மென்கரும் பாடிய அமுதமும் அழிதேம்
நறையும் அல்லது நளிர்புனல் பெருகலா நதிகள். (5)

இழைக்கும் நுண்ணிடை இடைதர முகடுயர் கொங்கை
மழைக்கண் மங்கையர் அரங்கினில் வயிரியர் முழவம்
முழக்கும் இன்னிசை வெருவிய மோட்டிள மூரி
உழக்க வாளைகள் பாளையிற் குதிப்பன ஓடை. (6)

படைநெ டுங்கண்வாள் உறைபுகப் படர்புனல் மூழ்கிக்
கடையர் முன்கடற் செழுந்திரு வெழும்படி காட்டி
மிடையும் வெள்வளை புள்ளொடும் ஒலிப்ப மெல்லியலார்
குடைய வண்டினம் கடிமலர் குடைவன குளங்கள். (7)
(அகலிகைப்படலம், 63-69)

வயல்கள், சோலைகள், நதிகள், குளங்கள் முதலிய வளங்கள் இங்கே வருணிக்கப்பட்டுள்ளன. அத் தேசத்தைக் குறித்து இவ்வளவு ஆசையோடு கவி பேசியிருத்தற்குக் காரணம் என்ன? தம் காவியத் தலைவனுக்குப் பெண்தரும் இடம் ஆதலால் அதன் பெருநலங்களைக் கண்ணியமாக இங்ஙனம் காட்டினர் என்க. பிறந்த கோசலம் போலவே புகுந்த விதேக நாடும் பெரு மகிமை யுடைய தென்பதாம். சக்கரவர்த்தித் திருமகன் கலியாணம் செய்ய வந்துள்ளமையால் அதன் பல வகையான செல்வ வளங் களை விழைந்து கண்டு நாம் உளங்களி கூர உணர்த்தியிருக்கிறார்.

1. குமுதம் குவளை முதலிய நீர்ப் பூக்களே வயல்களில் களைகளாயுள்ளன. அவற்றை உழத்தியர் பறிக்கின்றார்; குனிந்து களை எடுக்குங்கால் அவருடைய கண்கள் நீரில் தோன்றுகின்றன; அந் நிழல்களைக் கயல்மீன்கள் என்று கருதி அங்கே திரிகின்ற செங்கால் நாரைகள் ஆவலோடு கொத்துகின்றன; வாயில் ஒன் றும் காணாமையால் அவை நாணி அகல்கின்றன என்பதாம்.

நாரை அள்ளி நாணுறும் அகன்பணை மிதிலை நாடு
என்றது ஆண்டு உளநிலையை ஈண்டு உள்ளி உணர வந்தது.

உள்ளுறை பொருள்களை ஊன்றி யுணராமலே பாடல்களை உவந்து படித்துக்கொள்ளும்படி சொற்கள் சுவை மலிந்து இன் னோசை தழுவி இனிமை செழுமி இசைமிகுந்து நிற்கின்றன.

பள்ளி = படுக்கை, உறக்கம். பங்கயம் = தாமரை. பழனம் = வயல். பணை = மருத நிலம். அகன்று பரந்து விரிந்து எங்கும் நீர்நலம் நிறைந்து, நிலவளம் சுரந்து, சீர்மையும் சிறப்பும் செறிந்து, பேரிசை மண்டிப் பெருகியுள்ள விதேக தேசம் என்பார் அகன்பணை மிதிலை நாடு என்றார். மிதிலா நகரம் அந்நாட்டின் இராசதானியாய்த் தலை சிறந்துள்ளமையால் அதன் மகிமை தெரிய இடை மருவி யுரைத்தார்.

கடைசியர் என்றது வயல்களில் வேலை செய்யும் பள்ளிகளை. கண்டவர்களுடைய உள்ளங்களைக் கவர்ந்து கொள்ளை கொள்ள வல்ல கண்ணழகுடையவர் என்பது, "கள்ள வாள் நெடும் கண்" என்றதனால் அறிய வந்தது. வெளியில் வந்து தொழில் செய்கின்ற தாழ்ந்த சாதிப் பெண்களுடைய கண்களே இவ்வளவு அழகுடையனவாயின், உள்ளே அமர்ந்துள்ள உயர்ந்த குல மகளிருடைய விழிகளின் எழில்கள் எவ்வளவு விழுமிய நிலையில் வீறுற்றிருக்குமோ? என விழைவூட்டி அந்நாட்டின் ஏற்றத்தையும், எழில் நலங்களையும், இயற்கை மாட்சிகளையும் இனிது விளக்கி இஃது இன்சுவை பயந்துள்ளது.

கடைசியர் கண்களைக் கயல்மீன் என மயங்கி வயல் நீர்களில் நாரைகள் அள்ளி நாணுறும் என்றது, தெய்வத் திருமாது ஆகிய சீதையை ஒரு வைய மகள் என மையல் கொண்டுவந்து கவ்விப் பார்த்துக் கவ்வையே கண்டு கையிழந்து வெள்கிக் காய்ந்து போயுள்ள வேந்தர் நிலைகளையும் உள்ளுற உணர்த்தி நின்றது.

மீனைக் கவர்வதில் நாரை மிக விரகுடையது ஆதலின் அது இங்கே உறவாய் வந்தது. "வயலமர் கழனி வாயிற்பொய்கைக், கயலார் நாரை" (புறம், 354) என்றதனால் அதன் இயல் காணலாகும்.

"நீளிரும் பொய்கை இரைவேட்டு எழுந்த
வாளை வெண்போத் துணிஇய நாரைதன்
அடியறி வுறுதல் அஞ்சிப் பைப்பயக்
கடியிலன் புகூஉம் கள்வன் போலச்
சாஅய் ஒதுங்கும் துரைகேழ் ஊரனொடு
ஆவ தாக இனிநாண் உண்டோ?
வருகதில் அம்ம எம்சேரி சேர

அரிவேய் உண்கண் அவன் பெண்டிர் காணத்
தாரும் தானையும் பற்றி ஆரியர்
பிடிபயின்று தரூஉம் பெருங்களிறு போலத்
தோள்கந் தாகக் கூந்தலிற் பிணித்தவன்
மார்புகடி கொள்ளேன் ஆயின், ஆர்வுற்று
இரந்தோர்க்கு ஈயா தீட்டியோன் பொருள்போல்
பரந்து வெளிப்படா தாகி
வருந்துக தில்லயாய் ஓம்பிய நலனே." (அகம், 276)

தன்னைத் தழுவி நீங்கிய தலைவனைக் குறித்து ஒரு பரத்தை சொல்லியபடி யிது. அடி ஓசை தெரியாமல் மெதுவாக வந்து அதிசாதுரியமாக நாரை மீனைக் கவருதல் இதில் அறியலாகும். அங்ஙனம் கள்ளத்தனமாக மெள்ள வந்து என்னைக்கலந்துபோன அவ் வூரனை இனி வெளி அகலாதபடி நான் வசப்படுத்திக்கொள்ளேன் ஆயின், ஈயாத உலோபி பொருள் போல் என் அழகு இழிந்து ஒழிவதாக என அவள் மொழிந்துள்ளமை காண்க.

ஒரு சிறுகருத்தை உரைப்பதில் பல குறிப்புக்களைக் கவிகள் வெளிப்படுத்திவிடுகின்றனர். அகப் பொருள் துறையில் காதல் நலங்கனியச் சிருங்காரரசங்களைக் கூறுங்கால் மருதநில வளங்களை மருவி யுரைப்பது பழங்கால வழக்கமாய்ப் படிந்து வந்துள்ளது.

இப் படி முறையில் பல படிகள் ஏறிக் கம்பர் கைதேர்ந்திருக்கின்றார். காதல் நிலைகளையும், காமச்சுவைகளையும் கழறுங்கால் பல தத்துவ மறைவுகளை எளிதே விளக்கி இதம்புரிகின்றார்.

2. மதகுகளிலிருந்து பாய்கின்ற நீரோட்டங்கள் மத்தளங்கள் போல் முழங்க, அசோக மலர்கள் மணி விளக்குகளாய்ச் சொலிக்க, வண்டுகள் யாழ் எனப் பாட, மயில்கள் கலாபங்களை விரித்து அழகிய மங்கையர்போல் அங்கே நடித்தன என்பதாம்.

இசையரங்கில் நிகழுகின்ற ஒரு இனிய நாட்டியக் காட்சி இப்பாட்டில் காட்டப்பட்டுள்ளது. நான்றல் = ஒழுகல்.

3. உழவர்கள் களைகளாகக் களைந்தெறிந்த குவளைப் பூக்கள் வயல் அயலே தாமரை மலர்கள் மேல் கிடந்தன; அவர்பால் காதல் மண்டி வந்த மடந்தையர் அம்மலர் நிலைகளைக்கண்டு மனம் கறுத்து மறுகி வெறுத்து மாறி நின்றார் என்பதாம்.

தங்கள் முகங்களும் கண்களும் போன்ற அழகிய மலர்களை இரக்கமின்றிப் பறித்தெறிந்துள்ளாரே என்று உள்ளங் கடுத்து மங்கையர் ஒதுங்கிப் போயினர் என்றவாறு. பார்ப்பு=கண் பார்வை. தம் கண் நோக்காலேயே குறிப்புணர்ந்து காதலிகள் காரியங்களைச் சாதித்துக்கொள்வர் ஆகலான் "பார்ப்பு எனும் தூதால் எட்ட" என்றார். எட்ட=எண்ணியதை அடைய.

4. அன்னம் போன்ற அழகிய நடையும், குயில் அனைய இனியமொழியும் உடைய மகளிர் பொய்கைகளில் புகுந்து நீர் ஆடுகின்றனர்; ஆடுங்கால் அவரணிந்திருந்த மஞ்சள் குங்குமச் சாந்து முதலிய வாசனைப் பொருள்கள் கரைந்து நீரில் தோய்ந்து கரையோரங்களில் செந்நிற வண்டல்களாய்ச் செறிந்துபடுகின்றன. அச் சேற்றில் படிந்து நீர்வாழ்பறவைகள் நிறம் மாறுகின்றன. அம்மாறுபாட்டால் வேறுபட்டு ஊடல்கொண்டு இரவு முழுதும் கண்ணுறங்காமல் விடாவிழைவுடன் தடாகங்களிலே அவை கலாம் விளைத்திருந்தன என்பதாம்.

பூ உறங்கினும் புள் உறங்காதன பொய்கை

என்ற இது நம் உள்ளம் உறங்காமல் உவகை விளைத்துள்ளது.

இரவில் தாமரைப் பூக்கள் குவிந்திருக்கும் ஆதலால் அவை உறங்கின என்றார். நள்ளிரவிலும் புள்ளினங்கள் அங்கே ஒலித்திருந்தன என்பதை இங்ஙனம் உவகை கனிய உரைத்தருளினர். ஊடி உலாவிக் கூடிக்குலாவிப் பாடிக் களித்துப்பலவகைப் பறவைகளும் பனி மலர்ப் பொய்கைகளில் இனிது படிந்திருந்தன என்க.

"தூவி அன்னம் தம் இனம் என்று நடை கண்டு தொடர" என்றதனால் அந்நாட்டுப் பெண்களின் நடையழகைக் காட்டியருளினர். எழில் வளம் நிறைந்து இன்ப நலங்கள் யாவும் சுரந்து இனியமங்கையர் எங்கும் பொங்கியிருந்தனர் என்பதாம்.

5. நீரில் படிந்து கார்முகில்கள் போல் நடந்து வருகின்ற எருமைகளுடைய முலைகளிலிருந்து ஒழுகுகின்ற பாலும், மாங்கனிகளிலிருந்து துளிக்கின்ற மதுரச்சாறும், ஆலைகளில் நின்று பாய்கின்ற கரும்பின்பாகும் இடங்கள் தோறும் பெருகி ஓடின.

6. நடனசாலைகளில் தருண மங்கையர் நடிக்க, அங்கே முழங்குகின்ற முழவங்களின் ஒலிகளைக் கேட்டு எருமைகள்

வெருவி ஓடி நீரோடைகளில் பாய, ஆண்டுள்ள வாளை மீன்கள் மேலேதுள்ளிக் கமுகம் பாளைகளில் தாவ இவ்வகையான செவ்விய வளங்களை வழிகள் தோறும் விழி களிப்ப விளங்கி நின்றன.

7. பரந்து விரிந்துள்ள பெரிய குளங்களில் அழகிய கன்னியர் முழுகி எழுகின்ற நிலை, பாற்கடலில் இலக்குமி எழுந்தது போல் விழுமிய இன்பக் காட்சியாய் இனிது திகழ்ந்திருந்தது. பெண்டுகள் நீரில் குளிக்க, வண்டுகள் மலருள் குளித்தன என்க.

இன்னவாறு பலவகையான இனிய காட்சிகளையும், எழில் நலங்களையும், செல்வச் செழிப்புகளையும் இடங்கள் தோறும் கண்டு அத்தேசத்தின் தேசுடைமைகளையும் நீதி முறைகளையும் பேசி மகிழ்ந்து கோசிக முனிவரும் குமாரும் குலாவிச் சென்றார்.

## அகலிகை சாபம் தீர்ந்தது.

மிதிலா நகரத்தை நெருங்கினர். அந்நகரின் அயலே இனிய பூஞ்சோலையின்கண் மேட்டின்மீது கருங்கல் ஒன்று கவிழ்ந்து கிடந்தது. அவ்வழியே இயல்பாக நடந்து போனார். இராமன் அக் கல்லருகே செல்லவும் ஒரு பேரழகுடைய பெண்ணுருவம் நேரெழுந்து நின்றது. அவ்வீரன் அதிசயித்து நின்றான். இளையவன் உளந் திகைத்தான். கோசிகமுனிவர் ஆனந்த பரவசராய்க் கண்ணீர் மல்க வந்து இராமனை மெய்பிறுகத் தழுவிக்கொண்டு முன்விளைந்த செய்தி முழுவதையும் முறையே விளக்க நேர்ந்தார்.

நடந்து செல்லும் பொழுது இராமனுடைய காலில் ஒட்டிய புழுதி அக்கல்லில் பட்டமையினாலேதான் அப்பத்தினி வடிவம் சித்திரப்பதுமைபோல் விசித்திரமாக விரைந்தெழுந்தது.

> ‘கண்ட கல்மிசைக் காகுத்தன் கழல்துகள் கதுவ
> உண்ட பேதைமை மயக்கற வேறுபட் டுருவம்
> கொண்டு மெய்யுணர் பவன்கழல் கூடியது ஒப்பப்
> பண்டை வண்ணமாய் நின்றனள் மாமுனி பணிப்பான்.’’
> (அகலிகைப்படலம், 71)

கல் உரு ஒழிந்து நல் உரு அமைந்து அகலிகை நின்ற நிலையை ஓர் உவமையால் விளக்கி உணர்வு நலங்கனியக் கவி இங்ஙனம் சொல்லியிருக்கிறார். தத்துவநிலை இதில்உய்த்துணரவுள்ளது.

உற்ற மயக்கம் ஒழிந்து உண்மை தெளிந்த தத்துவ ஞானி ஈனப்பிறப்பு நீங்கி இறைவனை அணுகித் திவ்விய தேகியாய்ச் சிறந்துநிற்றல் போல் சாபம் தீர்ந்ததும் பாப வடிவம் போய்ப் பழைய தூய உருவில் அகலிகை துலங்கி நின்றாள் என்பதாம்.

உண்ட பேதைமை = உயிரை விழுங்கியுள்ள மடமை. ஆன்மா உட்கொண்டுள்ள மூடம் எனவுமாம். உண்மை நிலையை உணர ஒட்டாமல் மயக்கிக் களிப்பூட்டி உயிரினங்களைத் துயரினங்களில் இயக்கி நிற்றலால் பேதைமை மயக்கு என வந்தது.

பழைய மேதைமையை இழந்து பாழாய் இழிந்து பிறவித் துயரில் விழுந்து உயிர்கள் ஓயாது உழலும்படி பேதைமையே பிழைசெய்துள்ளமையால் அது நீங்கின் உயர் கதியாம் என்றார்.

"பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னும்
செம்பொருள் காண்பது அறிவு." (குறள், 358)

"பேதைமை என்னும் வித்தில் பிறந்துபின் வினைகள் என்னும்
வேதனை மரங்கள் நாறி வேட்கைவேர் வீழ்த்து முற்றிக்
காதலும் களிப்பும் என்னும் கவடுவிட்டு அவலம் பூத்து
மாதுயர் இடும்பை காய்த்து மரணமே கனிந்து நிற்கும்."
(சீவக சிந்தாமணி, 1389)

"பேதைமை சார்வாச் செய்கை ஆகும்,
செய்கை சார்வா உணர்ச்சி ஆகும்,
உணர்ச்சி சார்வா அருவுரு ஆகும்,
அருவுருச் சார்வா வாயில் ஆகும்,
வாயில் சார்வா ஊறு ஆகும்மே!
ஊறு சார்ந்து நுகர்ச்சி ஆகும்
நுகர்ச்சி சார்ந்து வேட்கை ஆகும்
வேட்கை சார்ந்து பற்றாகும்மே!
பற்றில் தோன்றும் கருமத் தொகுதி
கருமத் தொகுதி காரணமாக
வருமே ஏனை வழிமுறைத் தோற்றம்;
தோற்றம் சார்பின் மூப்புப்பிணி சாக்காடு
அவலம் அரற்றுக் கவலைகை யாறு எனத்
தவலில் துன்பம் தலைவரும் என்ப." (மணிமேகலை, 30)

பிறப்புக்கு மூலகாரணம் பேதைமையே; அதன் அடியாகவே துன்பங்களெல்லாம் தொடர்ந்து வந்திருக்கின்றன என்பதை

இவற்ருல் அறிந்துகொள்ளலாம். பொருள் நிலைகளை நுணுகி உணர்தலோடு சந்ததமும் சிந்தனை செய்து தெளிதல் இனிதாம்.

அஞ்ஞானமாகிய சாபத் தீட்டினுல் மனிதன் அகலிகை போல் அவம் அடைந்திருக்கிருன்; அஃது ஒழியின் ஆதியிலிருந்த தெய்வத் தேசினை அடைந்து அவன் மகிழ்வான் என்பதாம்.

கல் உரு ஒழிந்த இந்தக் கதை நிகழ்ச்சியில் நல்ல ஒரு உண்மை நிலையை இங்ஙனம் உரிமையுடன் கவி உணர்த்தி யிருக்கிருர்.

மின்னல் கொடிபோல் பொன்னொளி வீசித் தன்முன் நின்ற அப்பெண்மணியின் வரலாற்றை முனிவர் பின் சொல்லநேர்ந்தார்.

"மாயிரு விசும்பிற் கங்கை மண்மிசை இழித்தோன் மைந்த!
மேயின உவகையோடு மின்என ஒதுங்கி நின்ருள்
தீவினை நயந்து செய்த தேவர்கோன் தனக்குச் செங்கண்
ஆயிரம் அளித்தோன் பன்னி அகலிகை ஆகும் என்ருன்."

கூறப்புகுந்த சரித்திரத்திற்கு இது பாயிரமாய் வந்தது.

இதில் அப்பெண்ணின் பெயர், அவளைக் கொண்டவன் நிலை, குடிகெடுத்தவன் புலைகளைக் குறிப்பாகச் சுட்டியிருக்கிருர்.

அவள் கன்னி அல்லள்; ஒருவனுக்குக் கலியாணம் ஆனவளை என்பார் பன்னி என்ருர். பன்னி = மனைவி. உயர்ந்த தவசிகளுடைய வாழ்க்கைத் துணைவிகளைப் பன்னி என்பது மரபு.

மாயிரு விசும்பின் கங்கை மண்மிசை இழித்தோன் மைந்த!

என்று இராமனை இங்கே விளித்திருக்கிருர். சிறிது முன்னதாகப் பகீரதனது மகிமையைப் பாராட்டிப் பேசியுள்ளார் ஆகலான் இச்சீராளன் இது பொழுது செய்துள்ள அதிசய நிலையைக் கண்டவுடன் பழைய அப்பேராளனது கிழமையைத் தழுவி வளமையோடு கூறினுர். விண்ணில் உயர்ந்திருந்த கங்கையை அவன் மண்ணில் கொணர்ந்தான்; இவன் மண்ணில் இழிந்து கிடந்த மங்கையை விண்ணும் வியப்ப வெளியேற்றி அருளினுன்.

பல்லாயிரம் ஆண்டுகளாக அருந்தவம் புரிந்து அரியதைச் செய்த பெரியவன் மரபில் பிறந்தவனே! என்றது, தேவர் முதல் யாவரும் செய்தற்கரிய அற்புத நலங்களை எளிதே ஆற்றவல்ல வழி முறை வளமையும், விழுமிய நிலைமையும் தெளிவுற என்க.

உலகிற்கு நலம் பல புரியும் நயனுடையாளரது குலமரபில் வந்த ஓ குலமகனே! இக்குலமகள் நிலைமையை அறிந்தால் நீ உளமிக வருந்துவாய்! என்பதாம்.

அகலிகைக்கு நேர்ந்ததை விரித்துரைக்காமல் கூடமாக இங்ஙனம் குறிக்கவே இராமன் இரங்கி நோக்கி, "அந்தோ! இந்த அம்மைக்கு இப்படி நேர்ந்தது என்னே?" என்று பரிதபித்து நின்று முழுவதும் தெரிய விழைந்தான்.

"பொன்னைஏய் சடையான் கூறக் கேட்டலும் பூமி கேள்வன்
என்னையே என்னையேஇவ் வுலகியல் இருந்த வண்ணம்?
முன்னையூழ் வினையினாலோ? நடுவொன்று முடிந்ததுண்டோ?
அன்னையே அனையாட்கு இவ்வாறு அடுத்தவாறருளு கென்றான்"

இராமனுடைய நெஞ்சின் தன்மையும், மென்கண்மையும், தண்ணளியும், புண்ணிய நோக்கமும் இதன்கண் பொங்கியுள்ளன.

என்னையே! என்னையே! இவ்வுலகியல் இருந்த வண்ணம்!

என்றது அவன் உள்ளம் இரங்கி உலகை வெறுத்துள்ளமை உணர நின்றது. புனிதமான இனிய நெஞ்சம் ஆதலின் அநியாயத்தைக் கண்டவுடன் சகிக்கமாட்டாமல் அலமந்திருக்கின்றது. நல்லோர்கட்கு இப்படி அல்லல் வரலாமா? சீ! இது என்ன உலகம் என உலக நிலையை வெறுத்து இகழ்ந்தான். கண்ணோட்டத்தால் விளைந்துள்ள எண்ணத் துடிப்புகள் அடுக்குகளால் அறிய நின்றன. உள்ளுணர்ச்சிகளை உரைகள் வெளிப்படுத்துந் திறனும், அந்நிலையில் கவிகள் செய்தருளும் சதுரப்பாடும் நுணுகி உணரத்தக்கன. உரையொலிகளில் உயிர்நிலைகள் தனி மிளிர்கின்றன.

அன்னையே அனையாள்! என அகலியைப் புகழ்ந்து போற்றியுள்ளது இக்குலமகனது உயர்ந்த உள்ளப்பான்மையை உணர்த்தி நின்றது. மாதவனுடைய பத்தினி என்று தெரிந்தமையால் மாதாவாக மதித்துத் துதித்தான்.

தன் திருவடித்துகள் பெற்றளித்த புத்திரி என அவ்வுத்தமியை முத்தர்களும், சித்தர்களும் வித்தகமாய்ப் பின் மொழிய நேர்ந்தாலும் இவன் சித்தம் எளிமையில் கனிந்து அளிமிகுந்து உழுவலன்புடன் இங்ஙனம் தொழுது நின்றது.

**இந்த அன்னைக்கு இன்னவாறு இன்னல் நேர்ந்தது என்னே? என இராமன் இரங்கி வினவவே அவளது சரிதம் முழுவதையும் முதலிலிருந்து கோசிக முனிவர் முறையே கூறத் தொடங்கினர்.**

*அவ்வுரை இராமன் கூற அறிஞனும் அவனை நோக்கிச்*
*செவ்வியோய்! கேட்டி மேனாள் செறிசுடர்க் குலிசத் தண்ணல்*
*அவ்வியம் அவித்த சிந்தை முனிவனை அற்றம் நோக்கி*
*நவ்விபோல் விழியினாள் தன் வனமுலை நணுகல் உற்றான். (1)*

*தையலாள் நயனவேலும் மன்மதன் சரமும் பாய*
*உய்யலாம் உறுதி நாடி உழல்பவன் ஒருநாள் உற்ற*
*மையலால் அறிவு நீங்கி மாமுனிக்கு அற்றம் செய்து*
*பொய்யிலா உள்ளத் தான்தன் உருவமே கொண்டுபுக்கான். (2)*

*புக்கவளோடும் காமப் புதுமண மதுவின் தேறல்*
*ஒக்கவுண் டிருத்தலோடும் உணர்ந்தனள் உணர்ந்த பின்னும்*
*தக்கதன் றென்ன ஓராள் தாழ்ந்தனள் இருப்பத் தாளா*
*முக்கணான் அனைய ஆற்றல் முனிவனும் முடுகி வந்தான். (3)*

*சரந்தரு சாபம் அல்லால் தடுப்பரும் சாபம் வல்ல*
*வரந்தரு முனிவன் எய்த வருதலும் வெருவி மாயா*
*நிரந்தரம் உலகில் நிற்கும் நெடும்பழி பூண்டாள் நின்றாள்;*
*புரந்தரன் நடுங்கி ஆங்கோர் பூசையாய்ப் போகல் உற்றான்; (4)*

*தீவிழி சிந்த நோக்கிச் செய்ததை உணர்ந்து செய்ய*
*தூயவன் அவனை நின்கைச் சுடுசரம் அனைய சொல்லால்*
*ஆயிர மாதர்க்குள்ள அறிகுறி உனக்குண் டாகென்று*
*ஏயினன் அவையெலாம்வந் தியைந்தன இமைப்பின் முன்னம்.*

*எல்லையில் நாணம் எய்தி யாவர்க்கும் நகைவந் தெய்தப்*
*புல்லிய பழியி னோடும் புரந்தரன் போய பின்றை*
*மெல்லிய லாளை நோக்கி விலைமகள் அனைய நீயும்*
*கல்லியல் ஆதி என்றான் கருங்கல்லாய் மருங்கு வீழ்வாள்; (6)*

*பிழைத்தது பொறுத்தல் என்றும் பெரியவர் கடனே என்பார்;*
*அழற்றரும் கடவுள் அன்னாய்! முடிவிதற்கு அருளு கென்னத்*
*தழைத்துவண் டிமிரும் தண்டார்த் தசரத ராமன் என்பான்*
*கழல்துகள் கதுவ இந்தக் கல்லுருத் தவிர்தி என்றான். (7)*

*அங்கதுஇந் திரனைக் கண்ட அமரர்கள் பிரமன் முன்னா*
*வங்கு கோதமனை வேண்ட மற்றவை தவிர்த்து மாறாச்*
*சிந்தையின் முனிவு தீர்ந்து சிறந்தஆயிரங்கண் ஆக்கத்*
*தந்தர துலகு புக்கார் தையலும் கிடந்தாள் கல்லாய். (8)*

இவ்வண்ணம் நிகழ்ந்த வண்ணம் இனியிந்த உலகுக்கெல்லாம்
உய்வண்ணம் அன்றி மற்றோர் துயர்வண்ணம் உறுவதுண்டோ?
மைவண்ணத் தரக்கி போரில் மழைவண்ணத் தண்ணலே! உன்
கைவண்ணம் அங்குக்கண்டேன் கால்வண்ணம் இங்குக்கண்டேன்
(அகலிகைப்படலம், 74—82)

இந்திரன் கரவாக வந்து அகலிகையைக் கற்பழித்துப்போயுள்ள நிலையை முனிவர் இப்படி உரைத்திருக்கிறார்.

காமத்தின் கொடுமை, தவத்தின் மகிமை, இழிவினையால் விளையும் பழிதுயர், தெய்வத்திருவருள் என்பன இச்சரிதத்தின் சாரமாய் இங்கே சிந்தித்து உணரவுள்ளன. வாசவன் மோசம் செய்ய வருமுன் அகலிகை வாசம் செய்திருந்த நிலையை முதலில் நாம் அறிந்துகொள்ளவேண்டும்.

## கோதமரது குடிவாழ்க்கை.

கௌதமர் பேரறிவாளர். பல கலைகளிலும் வல்லவர். சிறந்த விரத ஒழுக்கமுடையவர். சாந்த குண சீலர். உலகநசையின்றிப் பிரமச்சாரியாய் இமயமலைச் சாரலில் இவர் அமைதியுற்றிருந்தார். அங்ஙனம் இருக்குங்கால் அகலிகை அகில வுலகங்களிலும் அதிசய அழகுடையளாய்த் துதிகொண்டு நின்றாள். அவள் முற்கல முனிவருடைய அருந்தவத்தால் பிறந்தவள். சிறந்த குண நலங்கள் நிறைந்தவள். உருவ நலனுக்கு ஓர் தனி நிலையமாய் ஒளி மிகுந்திருந்தாள். தெய்வத் தேசுடன் சிறந்திருந்த அப்பேரழகியை வையமும் வானும் அவாவி நின்றன. அவள் யாரையும் விரும்பாமல் கவுதமரையே கருதி யிருந்தாள். அவரும் உழுவலன்புடன் அவளை உவந்து மணந்தார். பின்பு மிதிலையின் தென்பால் வந்து ஓர் தனியிடத்தில் அழகிய ஆச்சிரமம் அமைத்து அங்கே அமர்ந்தார். யோக ஞானங்களில் சிறந்திருந்த அவர் இவளோடு அமர்ந்து போகநலன்களை நுகர்ந்து புனித நிலையில் பொருந்தி மகிழ்ந்தார். காதலின்பம் துய்ப்பினும் மாதவ நெறியில் மாண்புடன் வாழ்ந்தனர். ஓர் ஆண் குழந்தை பிறந்தது. அவனுக்குச் சதானந்தன் என்று பெயரிட்டு இவர் சதானந்தமாய்த் தவ வாழ்க்கை நடத்தி வந்தார். விண்ணுறை மகளிரும் விழைந்து நோக்கத்தக்க பெண்ணமுதமாய் அகலிகை பெருகி யுள்ளதை ஒரு முறை நாரதர் கூற இந்திரன் அறிந்தான்.

## அகலிகை கற்பழிந்தது.

அவன் பெரும் போகி ஆதலால் உடனே கடுங் காதல் மண்டிக் கருத்தழிந்து நின்றான். அவளைக் கலந்து மகிழப் பல முறை முயன்றும் ஒன்றும் பலியாமல் ஊசலாடி யுழன்றான். அவள் சிறந்த கற்புடையவள் ஆகலான் எவ்வகையிலும் இசையாள் என்பதைச் செவ்வையாகத் தெரிந்தான்; சிந்தை துடித்தான். தெய்வ போகங்களையெல்லாம் வெறுத்தான். வையகத்தே திரிந்து வழி நாடி யலைந்தான். ஒரு நாள் படுசூழ்ச்சி செய்தான். நடு நிசியில் வந்து ஆச்சிரமத் தருகே நின்று கோழி போல் கூவினான். பொழுது விடிந்தது என்று கருதிக் கோதமர் விரைந்தெழுந்தார். நீராடி நியமம் முடித்துவர வெளியே நதியை நோக்கிப் போனார். போகவே, பாதகம் செய்ய விழைந்த அக்காதகன் இம்மாதவர் போலவே வடிவங்கொண்டு உள்ளே புகுந்தான். பாவம்! பேதை அகலிகை பேதம் தெரிந்திலள். தனது கணவன் என்றே முழுதும் நம்பினாள். கள்ள இந்திரனும் மெள்ள நெருங்கினான். பள்ளம் பாயும் புனல்போல் உள்ளம்பாய்ந்துவிழ, உடனே கலவிக்கு விரைந்தான். தலைவி திகைத்தாள்; அருகு அணைவதை நிறுத்தி உரிமையுடன் உரைத்தாள்.

"ஒருநாளும் ஒழுகாத ஒழுக்கம் அருந்தவஎன்னே ஒழுகப் புக்காய்!
முருகாரு மலர்ப் பொய்கைப் புனலாடிச் சந்திசெப முறையின் ஆற்றிப்
பெருகார்வத் தொடுங்கடவுட் பூசைபுரி காலத்துப் பிழையே சாலத்
தருகாமப்பொருள்விழைதற்குவது நுமக்குஎன்! என்னச்சாற்றினாள்",

இங்ஙனம் சாற்றவே வேற்றுருக்கொண்டு வந்த அக்கூற்றுவன் யாதும் கலங்காமல் ஏற்ற மாற்றம் இனிதாக இசைத்தான்.

"பட்டிமையிற் கவுதமனார் வடிவெடுத்துப் படர்ந்தபெரும் பாவிசெய்கை
கட்டழகி அறியாது தன் கணவன் என இதனைக் கரைந்த எல்லைச்
சட்டமக வான்மொழிவான் தையலாய்! நீர்ஆடச் சார்ந்தேன் ஆங்கு
வட்ட முலை ஒருமாது துகிலின்றி நீராடும் வனப்புக் கண்டேன்."

(விநாயக புராணம்)

ஆதலான் அங்கே என் மனம் நிலைகொள்ள வில்லை; இது பொழுதே கூட வேண்டும்; நீ மாறொன்றும் கூறலாகாது; வா என்று கையைப் பிடித்து மெய்யணைத்தான். அவளும் இணங்கினாள். இருவரும் கலந்தார்; பொருவருங் காதலோடு மருவி மகிழ்ந்து உருகியழுந்தி உயர் இன்பம் துய்த்தார். காம போகத்

தில் கருத்தழிந்து பரவசராய் இங்ஙனம் அவர் நுகர்ந்து கிடக்க, நீர் நிலையை நோக்கிச் சென்ற கவுதமர் நேரம் தெரியாமல் வந்தமை அறிந்து நெஞ்சம் திகைத்தார். “இடையாமத்தில் எழுந்துவிட்டோம்; உரியபருவம் வரவில்லையே! என்னே இது!” என்று எண்ணி உள்நோக்கி யுணர்ந்தார். அந்தயோகக் காட்சியில் இல்லில் நிகழும் ஈனம் தெரிந்தது. விரைந்து மீண்டார். தாழிட்டிருந்த கதவைத் தாளால் உதைத்தார். வந்தனர் முனிவர் என்று இந்திரன் நடுங்கினன். உள்ளங்கலங்கிய அகலிகை உதறி எழுந்து ஒன்றும் தோன்றாமல் பதறி வந்து கதவைத் திறந்து அயல்ஒதுங்கி அமைந்து நின்றாள். அருந்தவர் உள்ளே புகுந்தார். வானவர்கோன் அஞ்சி ஒரு பூனையாய் ஓடினன். ஓடவே முனிவர், “அடே குடிகேடா! நில்” என்று நிறுத்தினர். அவன் நிலை குலைந்து நின்றான். “புலைமகனே! உன்னை நீறாக்கி இக்கணமே நிலத்தில் ஒழிப்பேன்; ஆயினும் அது செய்யாது பொறுத்தேன். ஒரு பெண் குறியை நாடி வந்தாய்! அவ்வாறு ஆயிரம் உனக்கு இன்று நான் கொடுத்திருக்கிறேன்; வேறு எங்கும் போயலையாமல் உன் உடம்பின் கண்ணேயே இரவும் பகலும் அவற்றைக் கண்டு களித்துக் கலந்திரு போ” என்று கடுத்துச் சபித்தார். உடனே அவன் மெய்யெல்லாம் மெய்யாகவே அவை மேவி நின்றன. மேனி முழுவதும் யோனிகளாய்த் தோன்றவே அவன் உள்ளம் துடித்து உயிர் பதைத்து அழிதுயரோடு ஓடி ஒளிந்தான். அயலே திரும்பினர். அங்கம் குலைந்து நின்ற அகலிகையைக் கண்டார். “நீ பொல்லாதது புரிந்தாய்! கல்லாகுக” என்றார். அவள் கருங்கல்லாய் மருங்கே வீழுமுன் அவருடைய அடியில் விழுந்து, “அடியாள் தவறு நினைந்திலேன்; அறியாமல் நேர்ந்தது; கெடுவான் செய்த கேட்டால் கேடு நிகழ்ந்தது; இப்பிழை பொறுத்து என் பழிக்கு ஒரு முடிவு அருளவேண்டும்” என்று கண்ணீர்சொரிந்து கரைந்து கேட்டாள். கேட்கவே, அவர் உள்ளம் இரங்கி உறுவதை ஓர்ந்தார்: “தசரத மன்னனுக்கு அருமைத் திருமகனாய் ஒருவன் தோன்றுவான்; அந்தப் புண்ணிய மூர்த்தியின் பாத தூளி படுமேல் கல்லுருவம் நீங்கி நீ நல்லுருப் பெறுவாய்” என்று சொல்லியருளினர். அது சொல்லி முடியவே அவள் கல்லாய் விழுந்தாள். இல்லாளை இழந்தபின் கவுதமர் உள்ளம் கவன்று உலக நிலையை வெறுத்து அயலிடத்தே ஒதுங்கி அருந்தவ நிலையில் தனியே அமர்ந்திருந்தார்.

## இந்திரன் சாபம் மாறியது.

இழிந்த மேனியனாய் ஒழிந்துபோன இந்திரன் யாண்டும் தலைதெரியாமல் அடர்ந்த ஒரு வனத்தே விரைந்து மறைந்தான். தன் உடம்பைக் காணுந்தோறும் உள்ளங் கலங்கி உறுபழியோர்ந்து வெளிவர வெருவிப் பருவரலோடு பதுங்கிக்கிடந்தான்.

"ஒருகுறி யுடையரும் உடைபுனைந்துமே
தெருவிடை நின்றிடச் சிந்தை நாணுவார் :
பருகுறி ஆயிரம் பதிந்த மேனியான்
வெருவர லன்றிவே றென்செய் வானரோ !"

என அப்புன் செயலாளன் நிலைக்கு உலகம் இரங்கி நின்றது.

தங்கள் மன்னன் இங்ஙனம் இன்னலுழந்து இழிபழியுடையனாய் ஒளிந்திருந்ததை அமரர்கள் அறிந்து அலமாலடைந்து பிரமனிடம் போய் முறையிட்டனர். அனைவரையும் அழைத்துக் கொண்டு அயன் கவுதமரிடம் வந்து கருணை புரிய வேண்டினான்.

"நீற்று மேனியர் மாரனை நீற்றினாற் போல
ஆற்றல் மாதவ, அரும்பிழை புரிந்த வாசவனைக்
கூற்றம் வாய்மடுத் துணக்கொழுஞ் சாம்பராக்காது
போற்றி வைத்ததும் புண்ணியா! எம்பொருட்டன்றே?"

என்று விண்ணவரெல்லாரும் வேண்டி நின்றார். வேண்டவே மாதவர் பிரமனைப் பார்த்து, "அப் பழிமகன் என் குடியைக் கெடுத்துள்ளதை எண்ணுந்தோறும் நெஞ்சம் புண்ணாகின்றது ; உயர் நிலையிலுள்ள அவனை இவ்வாறு புலைபுரிவானாயின் உலக நிலை என்னாம் ? ஆயினும், முன் விதித்ததை உங்களுக்காகச்சிறிது மாற்றுகின்றேன்: பிறர் பார்வைக்கு அழகியகண்களாகவும், அவனுக்கு மட்டும் பழைய பகங்கள் ஆகவே இருக்கும் போங்கள்" என்று புகன்று விடுத்தார். எல்லாரும் உவந்து இந்திரனிடம் வந்தார். விழிகளாகவே தோன்றின ; அவனை வெளி வர வேண்டினார். அவன் உடம்பை நோக்கி வெட்கத்தால் உட்கி நின்றான். பிரமன் உண்மையை உரைத்தான்: எங்களுக்கெல்லாம் கண்களாகவே தோன்றுகின்றன ; உலகுக்கெல்லாம் என்றும் அப்படியே தோன்றும் ; நீ நாணமல் வெளி வரலாம் என்று நயந்து கூறினான். ஆயினும், அவன் மாறி மாறி நோக்கி மறுகி புளைந்தான். நேர்ந்த பழியை நினைந்து நெஞ்சழிந்து கண்ணீர்விட்டுக் கதறி அழுதான்.

"கற்ற கல்வியும், அவுணர்கள் கருந்தலை உருட்டிப்
பெற்ற செல்வமும், விண்ணவர சாட்சியும், பிறவும்
உற்ற காமத்தின் ஒருதழற் பொறியின் ஊர்அவிந்தாங்கு
அற்றவோ! என அழிந்தனன், கரைந்தனன், அழுதான்."
(விநாயக புராணம்)

அங்ஙனம் அழுகின்றவனை அயன் சினந்து நோக்கி, "இந்த மதி முன்னம் உனக்கு எங்கே போயிற்று? இனி அழுது பயன் என்ன? இவ்வளவாவது பிழைத்தாயே! எழுந்து வா" என்று வலிந்து அழைத்துக்கொண்டுபோய்ச் சுவர்க்கம் சேர்த்தான்.

அகலிகை இங்கே நீண்ட காலமாய்க் கல்லாய்க் கிடந்தாள். இன்று நின் அடிப்பொடி தீண்டவே அல்லலெல்லாம் தீர்ந்து பழையபடி நல்லுரு அமைந்து இவ்வண்ணம் நம் கண்ணெதிரே அப்புண்ணியவதி நண்ணியுள்ளாள் அண்ணலே! என்று இராகவன் முன்னிலையில் விசுவாமித்திரர் கூறி முடித்தார்.

இந்தக் கதையில் பல்வேறு வகைப்பட்ட கருத்துக்களும், குறிப்புக்களும் உள்ளே புதைந்து கிடக்கின்றன.

உய்யலாம் உறுதி நாடி உழல்பவன்

என்றதனால் காதலால் இந்திரன் அடைந்துள்ள நோதல் நிலை அறியலாகும். பலகாலமும், பலமுறையும், பலவகையிலும் முயன்றிருக்கிறான் என்று தெரிகின்றது. தன் கருத்தை நிறைவேற்ற ஒரு வழியிலும் முடியாமையால் முடிவில் ஓர் உபாயந் துணிந்து முனிவனை வஞ்சித்து வெளியேற்றி யிருக்கின்றான்.

"மையலால் அறிவு நீங்கி மாமுனிக்கு அற்றம் செய்து"

என்றது காமம் காழ்ப்பேறி அவன் செய்திருக்கும் தீமையைச் சுட்டி நின்றது. அற்றம்=வஞ்சகம், மோசம்.

'தையலார் மயலில்பட்டோர் தமக்கு ஒருமதியுண்டாமோ" என்றார் பிறரும். காமம் ஒருவன் உள்ளத்தைக் கவர்ந்து கொள்ளின், அவன் அறிவு கேடுறப் பழி பாவங்களை யாதும் நாணாமல் எல்லாத் தீமைகளையும் எந்த வழியிலும் துணிந்து செய்வான் என்பதை இந்திரன் செயல் இங்கே தெளிவுறுத்தி நின்றது.

"கொலையஞ்சார் பொய்ந்நாணார் மானமும் ஓம்பார்
களவொன்றோ ஏனையவும் செய்வார்—பழியொடு
பாவமிஃ தென்னார் பிறிதுமற் றென்செய்யார்
காமம் கதுவப்பட்டார்." (நீதிநெறிவிளக்கம், 79)

இவ்வாறு காமக் கேடனை அவன் வஞ்ச வேடனாய் நெஞ்சு பாழ்போய்க் கவுதமர் வடிவம் கொண்டு உள்ளே புகுந்தான்.

"பொய்யிலா உள்ளத்தான்" என்றது சத்திய சீலராகிய அவ்வுத்தமருக்கு இக்காமப் பித்தன் இவ்வாறு சதிமோசம் செய்கின்றானே! என்று இரங்கிய படியாம். பொய் இல்லாத அந்தத் தூய உள்ளமும் உணர்வும் இத்தீயவனிடம் இல்லை என்பதாம்.

"உருவமே கொண்டு புக்கான்" என்றது அத்தோற்றத்தின் ஊற்றம் தெரியவந்தது. மெய்யனது மெய்வடிவைப் பொய்யன் புனைந்து வெய்யது செய்யவிழைந்து பைய வீட்டுள் நுழைந்தான். பேதை இசைந்தாள். பெரும் போகம் நுகர்ந்தான்.

காமப் புதுமண மதுவின் தேறல் என்றது இருவரும் மருவி அன்று அனுபவித்த இன்பச்சுவையின் இயல்புணர்த்தி நின்றது.

கலவியில் காம பரவசையாய்க் கருத்தழிந்து கிடந்த அகலிகை இடையே "இவன் என் நாயகன் அல்லன்; தேவர் நாயகனே" என்று தெரிந்து கொண்டாள். தெரிந்தும் இசைந்தே இருந்தாள்.

"ஒக்க உண்டு இருத்தலோடும் உணர்ந்தனள்; உணர்ந்தபின்னும்
தக்கது அன்று என்ன ஓராள்; தாழ்ந்தனள் இருப்ப"

என்றது இங்கே ஆழ்ந்து சிந்தித்து ஆராய உரியது.

கள்ளன் என்று தெரிந்தும் உள்ளம் இசைந்திருக்கலாமா? என்னும் கேள்விக்குப் பதில் அவரவரே ஆராய்ந்து ஓர்ந்து கொள்ளவேண்டும். ஓராள் என்ற உரைப்போக்கால் பேராளமாய் உருகி நிறைபோகத்தில் ஆழ்ந்து நினைவிழந்து நிறை தாழ்ந்து அவள் நிலை மறந்துள்ள அப்போழும் தெரியலாகும்.

காரியம் கைகடந்து போன பின் வேறு என்ன செய்ய முடியும்? என்று எளிதே தள்ளிவிட லாகாது. தவறு தெரிந்த பின் புன்சுவையில் உவகை மண்டி உளம் இசைந்தே இருந்துள்ளமையால் அந்த இன்ப நிலையும், இருந்தவள் இயல்பும் உணர்ந்து கொள்ளவந்தன. வரவே பெண்மை நிலை பேச நின்றது.

தலைமையான தன்மையில் நிலை குலையாது நிலைத்து நிற்பவர் ஒருபோவழி மிகவும் சபல சித்தராய்த் தாழ்ந்து படுவது

பெண்களது இயல்பாய்ப் பெருகியுள்ளது. அவ்வுண்மை அக லிகை செயலால் இங்கே வியனுக அறியவந்தது.

மெல்லியலார் என்பது நல்லியல்பு குறித்து வந்திருப்பினும் புன்மையான மென்மையையும் அது புலப்படுத்தி யுள்ளது.

"Frailty, thy name is woman!" (Hamlet, I, 2)

"பேதைச் சபலமே பெண்" என்றார் மேல்நாட்டுக் கவிஞரும்.

இந்தப் பொல்லாத இன்ப இசைவே பின்பு கல்லாக நேர்ந் தது. நெஞ்சறிந்த தீமை ஆதலின் நெடுந்துயர்க்கு இடமாயது என்க. இருவரும் இங்ஙனம் காமபோகத்தில் மூழ்கிக் கிடக்க மாதவர் அதிவேகமாய் வந்தார்.

முக்கணன் அனைய ஆற்றல் முனிவனும் முடுகி வந்தான்

முக்கட் பரமனோடு ஒக்க உரைத்தது பார்த்த பார்வையி லேயே எல்லாவற்றையும் சுட்டெரிக்கவல்ல அவரது தவஆற்றல் தெரிய. தேவர்கோனும் திகிலடைய வந்தமையால் தேவதேவன் என நின்றார்.

விரைந்து வந்த அவர் உள்ளே புகுந்தவுடனே இந்திரன் நடுநடுங்கி வெளியே ஓட நினைந்து ஒரு பூனையாய் மாறினன். எலி பெருச்சாளி பறவை என வேறு யாதாவது ஒரு பிராணி யாய்ப் போகாமல் பூனையாயது, அது வீட்டுள்ளே மனிதர் கண் முன்னும் காலடியிலும் நாளும் பழகிவருவது ஆதலின் உளவ றியாமல் வெளியேற அதன் உருவைக் கூடினன். முதலில் கோழியாய் வந்து கூவினன்; முடிவில் பூனையாய் ஓடலாயினன். காலரவம் தெரியாமல் மெல்லப்புகுந்து பாலை நக்கிவிட்டுப் பதுங் கிப் போகும் இயல்பினது ஆகலான் கரந்து நுகர்ந்து களித்தெ ழுந்த அக்கள்வன் பூனையாய் மெள்ள ஒளித்துப்போக நேர்ந்தான் என்க.

யானை யாசேறி அமரர் புடை சூழ வானுலகம் துதிக்க மாமகிமையுடன் வாவுரிமை அவன் ஒரு ஈனத்தை எண்ணி வந்தமையால் இப்படி மானம் அழிந்து மரியாதை கெட்டு ஈன வடிவங்களில் உழன்று இழிவு மிக அடைந்து பழிபட நேர்ந் தான். யாவராயினும் நிலையில் இழிந்தால் தலையின் இழிந்த மயிர் போல் அவர் தாழ்ந்துபடுவர் என்பது இங்கே தேர்ந்துகொள்ள வந்தது. பாவ காரியம் யாவரையும் சீரழித்துவிடும் என்க.

கள்ளத் தனமாகத் தீமை செய்ய வந்தவனுக்கு உள்ளத்தே உறுதியிராது ஆதலால் பேடிமகன்போல் அவன் ஓடி ஒளியலானன். காமப்பித்தனுய்ப் பிறன்மனைவியை நச்சி ஒருவன் வீட்டுக்குள் வந்து அகப்பட்டுக் கொண்டவன் பாடு பரிதாப நிலையாம் என்பது அமரர்பதியால் அங்கே தெளிவாகி நின்றது.

" தீவிழி சிந்த நோக்கி " என்றதனுல் முனிவர் அன்று உள்ளங்கொதித்து உருத்துநின்ற நிலை உணரலாகும்.

காலாந்த உருத்திரன்போல் கடுங்கோபங்கொண்டு கனன்று விழித்த அவர் உடனே நீறுக அவனை எரித்துவிடாமல்,

" ஆயிரம் மாதர்க்குள்ள அறிகுறி உனக்கு உண்டாக "

என்று சபித்தது நினைக்குந்தோறும் எவர்க்கும் சிரிப்பு உண்டாக்கும். அறிகுறி என்றது நாகரீகமான நயமொழி. நீ இங்கே வந்ததற்கு இவை அறிகுறி எனவும் பொருள்பட நின்றது.

ஒன்றை நச்சி வந்தாய் ஆயிரம் கொண்டுபோ என்று கொடுத்தருளினர். நீ விரும்பிய பண்டத்தின் அழகைக் கண் குளிர நேரே கண்டு களி அப்பா! என்று காட்டி வைத்த படியிது.

பிறர் மனை விழைவால் விளையும் பழிதுயர்களை நாளும் இந்திரன் நினைந்து நாணவும், உலகம் அவனைப் பார்த்து உணர்ந்து உய்யவும் உணர்த்திய படியாய் இச்சாபம் உருக்கொண்டுள்ளது.

வந்தவனை இங்ஙனம் சபித்துத் தொலைத்தபின் இருந்தவள் பக்கம் அருந்தவர் திரும்பினர். இல் என்னுமல் ஒல்லென உருத்தார்.

" விலைமகள் அனைய நீயும் கல்இயல் ஆதி "

என்று அகலிகையை நோக்கிக் கவுதமர் சொல்லியிருத்தலால் தம் மனைவியைக் குறித்து முன்னம் அவர் மதித்திருந்தமை அறிய நின்றது.

நல்ல குலமகள் என்று உன்னை நம்பி இருந்தேனே! நீ இப்படிப் பொல்லா விலை மகளாயினையே! என அவர் உள்ளம் கடுத்து வெறுத்துள்ளமை இதில் வெளிப்பட்டுள்ளது. தாம் கூறும் சாபத்திற்குக் காரணம் காட்டிய படியிது.

சொல்லியல் என்றது அவளது உருவ எழில் உணர வந்தது. அந்தப் போழுதே ஓர் அறிவுமில்லாத கல்லாய்ப்போகும்படி இப்படிப் பரிதாப கூட்டிப் படுதுயர்செய்துள்ளது என்பதாம்.

தமக்கு வாய்த்துள்ள இல்லாளது மாண்பை வியந்து எல்லாரும் புகழ்ந்து துதிக்க உவந்து வாழ்ந்துவந்த கௌதமர் அவளிடம் ஒரு பிழையைக் கண்டவுடனே உள்ளம் வெறுத்து உதறித் தள்ளியிருக்கிறார்.

ஒரு மனிதனது இகவாழ்வின் உயர்வெல்லாம் அவனுடைய மனைவியின் புனிதநிலையிலேயே பொருந்தியுள்ளது; அவளிடம் புலை நிகழ்ந்தால் அவன் குடி குலைந்தது என்பதை முனிவர் வாழ்க்கை இங்கே அறிவுறுத்தி நின்றது.

" A virtuous woman is a crown to her husband: but she that maketh ashamed is as rottenness in his bones. "

(Solomon)

" கற்புநலனுடைய மனைவி தன் கணவனுக்கு மணிமகுடமாய் மகிமை மிகச் செய்கின்றாள்; பழி நிலையினள் கொழுநனுக்கு அழிதுயராகின்றாள் " என்னும் இது ஈண்டு அறிய வுரியது.

ஞான நலங்களில் சிறந்து எவ்வளவு பொறுமையாளராய் உயர்ந்திருப்பினும் தமது மனைவியைப் பிறனொருவன் விழைந்து பிழைசெய்வனாயின் அவர் உள்ளங் கொதித்து உயிர் துடிப்பார் என்பதைக் கவுதமர் செயல் ஈண்டு நன்கு உணர்த்தியுள்ளது.

நான் எத்தனை காலம் கல்லாய்க் கிடப்பது; தண்டனைக்கு ஒரு எல்லை யில்லையா? உள்ளம் பொறுத்து அதற்கு முடிவை உரைத்தருளுங்கள் என்று அகலிகைதொழுது வேண்டியபொழுது, "தசாதராமன் கழல்துகள் கதுவ இந்தக் கல் உருத் தவிர்தி" என்றார். எனவே, இராமன் அவதரித்து வருவதை முன்னதாகவே கௌதமர் உணர்ந்திருக்கிறார் என்பது பெறப்பட்டது.

அவருடைய தத்துவக் காட்சியும் வித்தக நிலையும் எத்திறத்தோரும் வியந்து போற்ற விளங்கியுள்ளன.

" இக்குவாகுவின் குலத்திடை இராமனென் றணங்கே
அக்கராசலம் காத்தவன் அவதரித் திடும் அத்
தக்க காவலன் தாள்படும் பொழுது வெஞ்சாபத்
துக்கம் நீங்கிமுன் போலெனைத் தோய்வைஎன் றொழித்தான்."

(விநாயகபுராணம், இந்திரன் சாபம் பெற்றபடலம், 30)

நாரத முனிவர் உருக்குமாங்கதனிடம் கவுதமர் கதையை உரைத்தபடியிது. கராசலம் என்றது யானையை.

இராமன் அவதரிப்பது மாதவர் சிலர்க்கு முன்னதாகவே தெரிந்திருக்கின்றது. அவருள் விசுவாமித்திரரும் ஒருவர். "இராமன் கழல் துகள் கதுவ இந்தக் கல்லுருத் தவிர்தி" எனக் கோதமர் கூறிப்போனார் என்று தன் எதிரே கோசிகர் சொன்ன பொழுது இராமன் என்ன எண்ணியிருப்பான்?

மண்ணில் வந்து உதிக்கு முன்னரே அந்தப்புண்ணியமூர்த்தியின் புகழொளி மேலோர் எண்ணங்களில் எங்கும் பொலிந்து பரந்துள்ளமை இதனால் உணர்ந்துகொள்ளலாம்.

அகலிகையை விழைந்து இந்திரன் அவமானம் அடைந்துள்ள இந்தச் சரிதம் முன்னோர் பலருடைய கவனத்தையும் கவர்ந்திருக்கின்றது.

ஐந்தவித்தான் ஆற்றல் அகல்விசும்பு ளார்கோமான்
இந்திரனே சாலும் கரி. (குறள், 25)

" இந்திரன் பூசை ; இவள் அகலிகை ; இவன்
சென்ற கவுதமன் சினனுறக் கல்லுரு
ஒன்றிய படிஇது என்று உரைசெய்வோரும்." (பரிபாடல், 19)

" மாதவன் மடந்தைக்கு வருந்துதுயர் எய்தி
ஆயிரம் செங்கண் அமரர்கோன் பெற்றதும்."
(மணிமேகலை, 18)

" சந்திரற்கு நேருவமை சாலும் திருமுகத்துப்
பைந்தொடிக்கை நல்லார் பலரும் புடைசூழக்
குந்தம் ஒத்த நாட்டத்துக் கோதமனார் பன்னியினால்
இந்திரற்கு நீங்கா இடர்ப்பழியொன் றெய்தியதே."
(கந்தபுராணம்)

"விண்கு லாவுயர் விண்ணவர் ஆயினும்
பெண்கள் காமம் பிடித்தவர் உய்வரோ?
புண்க ளாகிப் புரந்தரன் மெய்யெலாம்
கண்க ளானது காமத்தி னாலன்றோ" (திருக்குற்றாலப்புராணம்)

" இந்திரன் பிறனில் காமுற்று இழிகுறி முழுதும் பெற்றான் "
(தணிகைப் புராணம்)

" விண்ணெல்லாம் தான்புரந்த வேந்தனுக்கு மெய்ந்நிறைந்த
கண்ணெல்லாம் நீபொருத காயம் அன்றோ." (மதனமாலை)

விழுமிய அருந்தவன் மேகவாகன
ஒழுகுறு மறைநெறி ஒருவிக் கற்பெனும்
செழுவிய பெண்மையைச் சிதைத்த நின்குறி
அழுகிமண் விழுகெனச் சாபம் ஆக்கினன்.
(திருவானைக்காப் புராணம், கவுதமப்படலம், 13)

ஏர்கனிந்தொழுகும் இளமுலைத் துவர்வாய் அகலிகை
நகைவிருந் தருந்த
வார்ஒலி கழற்கால் இந்திரன் எய்தி மருவுதல்
கோதமன் நோக்கிச்
சீர்கெழு பலம்வீழ்ந் திடுகெனச் சபித்துச் சேயிழை
தன்னை ஊன் இன்றி
ஆர்தரும் அடலை பாயலாய்ப் பன்னாள் அரூபியா
யுறைகெனச் சபித்தான். (கூர்மபுராணம்)

என்னே அகலிகையால் இந்திரனும் தன்பெருமை
கொன்னே இழந்தான் குமரேசா — அன்னே
எனைத்துணையர் ஆயினும் என்னும் தினைத்துணையும்
தேரான் பிறனில் புகல். (திருக்குறட் குமரேச வெண்பா, 144)

மகவான்கண் பார்த்தவர்க்கு மாண்பாய்த் தனக்குப்
பகமாய் இலச்சைவிடாப் பண்பாய்ச் — செகமாணக்
கண்ணூறி போல்வேடக் கண்ணுடி காட்டுதவம்
எண்ணூழி காலமிருந் தென்? (ஒழிவிலொடுக்கம்)

அகத்தே ஒழுக்கமின்றிப் புறத்தே தவவேடத்தைக்கொண்டு நிற்கும் வேடதாரிகளை இகழ்ந்தபடி இது. பிறர் பார்வைக்கு இந்திரன் உடலில் கண்களாகத் தோன்றினும் அவனுக்கு அவை இலச்சையாய் இருத்தல்போல் வஞ்சவேடரை உலகம் மயங்கிப் போற்றினும் அவர் நெஞ்சம் அவரை உள்ளே நாளும் இகழ்ந்து பழித்து இளித்து நிற்கும் என்பதாம்.

இந்திரன் பிழை புரிந்து பழி எய்தியுள்ள நிலையை நூல்கள் இவ்வண்ணம் நுவன்று நிற்கின்றன.

கள்ளத் தனமாய் உள்ளே நுழைந்து தன்னை நெருங்கிய பொழுது இந்திரன் என்று இனந் தெரிந்துதான் அகலிகை உவந்து இசைந்து இணங்கி யிருந்தாள்; கவுதமர் கண்டு சினந்து அவனுடைய பீசங்கள் இரண்டும் அற்று விழும்படி சபித்தார் என வால்மீகி உரைத்துள்ளார். அவற்றை மாற்றிக் கம்பர் இவ்வாறு உணர்வு நலம் கனியக் கதையைச் சுவை செய்திருக்கிறார்.

பெண்மையின் மகிமையைப் பாதுகாத்து நல்ல நீதி உண்மைகளைக் கோதுநீக்கி உலகம் நலமுற நயமாக ஓதியுள்ளமையால் இவருடைய திருந்திய பண்பும் சீரிய நாகரீகமும் தெரிய நின்றன.

ஆடவரே பெரும்பாலும் பெண்களைக் கெடுத்துவிடுகின்றனர்; அவர் நெறியுடையராயிருப்பின் நல்லார் என்னும் பெயருக்கு ஏற்பமகளிர்எல்லாரும் நல்லவராகவே இல்வாழ்க்கையை நடத்தி விளங்குவர். இங்கே மகவான் புரிந்த பொல்லாத் தனத்தால் ஒரு மாதவன் இல்லம் மாண்பிழந்து வீண் போயுள்ளமையால் ஆண் பிழையே வெளியே காண்பழியாய்க் கதித்து நின்றது.

"நல்லார்கள் எல்லாரும் நல்லாரே தன்மையால்
வல்லாரால் கேடு படாராயின்—நல்லறிவு
ஆண்மக்கள் பற்பலர்க்கே உண்டாகும் பெண்மேரும்
மாண்பு கெடுக்கா விடின்." (ஔவையார்)

என நம் பாட்டி காட்டியிருக்கும் இப்பாட்டின்படி நாட்டு நிலையை ஆராய்ந்து கேட்டு நிலைக்குக் காரணம் ஆண்பாலாரா? பெண்பாலாரா? என அனுபவங்களிலுள்ள நிகை வகைகளைத் தொகையாகக் கூட்டி நோக்கித் தூய்மை நிலை தெளியவேண்டும்.

இருபாலும் கோடா தொழுகின் இங்கே யாதொரு கேடுமின்றி இன்ப நலங்கள் வாடாது வளர்ந்து வரும் என்பதாம்.

அகலிகை சரிதையை இவ்வண்ணம் கூறிவந்த கோசிகர் முடிவில், "இனி இந்த உலகுக்கெல்லாம் உய்வண்ணம் அன்றி மற்றோர் துயர்வண்ணம் உறுவது உண்டோ?" என உவந்து குதித்தார். அவரது உவகைநிலை உரைகளில் ஒளிர்கின்றது.

இராமன் காலில் ஒட்டியிருந்த ஒரு தூளே இழிந்துகிடந்த கல்லை உயர்ந்த பொன் மயமான பெண்ணுருவாக்கி அருளியது என்றால், அந்த மூர்த்தியால் இனிமேல் இந்த உலகம் அடையவுள்ள நலங்களை யார் அளந்து சொல்ல வல்லார்? என ஆராமை மீதூர்ந்து வியந்து பாராட்டியிருக்கிறார்.

உயிரினங்களெல்லாம் துயரினங்கள் நீங்கி இவனால் உயர் நலங்களை அடையும் என்பது கருத்து.

மழை வண்ணத்து அண்ணலே! என்றது பார் உய்யவந்த படிவம் கருதி நேரே பரவசமாய்க் கூவினார் என்க.

"கைவண்ணம் அங்குக் கண்டேன்; கால் வண்ணம் இங்குக் கண்டேன்" எனத் தாம் கண்ட காட்சிகளை முனிவர் இவ்வண்ணம் சொல்வண்ணம் கனியச் சொல்லியிருக்கிறார்.

அங்கு என்றது தாடகை போராடிய அந்த இடத்தை.

யாராலும் வெல்ல முடியாத பொல்லாத வல்லரக்கியை ஒரே பகழியால் எய்து வீழ்த்திய கைத்திறத்தை முதலில் கண்டு களித்திருந்தார் ஆதலின் அதனை ஈண்டுக் காலோடு கொண்டு கூட்டிக் கொண்டாடினார். கல்லைப் பெண்ணாக்கி அருளிய காலின் அற்புத மகிமையைப் பார்த்தவுடனே முன்னே கை செய்துள்ள காரியத்தையும் சேர்த்து ஆர்த்தி மீதூர்ந்து துதித்தார் என்க.

அங்கே பாப வடிவை அழித்தது; இங்கே சாப நிலையை ஒழித்தது. கையால் வீரத் திறலை அறிந்தேன்; காலால் தெய்வத் தன்மையை உணர்ந்தேன் என்பதாம். திவ்விய மகிமை யுடைய இவனால் இவ்வுலகம் நலம் பல கண்டு இனி உய்தியடையும் என உவந்துகொண்டார்.

## அகலிகையைக் கவுதமரிடம் சேர்த்தது.

எவரையும் மதியாத அதிமேதையான கோசிகர் இங்ஙனம் வியந்து நிற்கவே, எதிரே உள்ளம் நாணி உடல் குழைந்து பேரன் போடு தொழுது நிற்கின்ற அகலிகையை இராமன் வணங்கி "அம்மா! மாதவரிடம் போவோம் வாருங்கள்" என்று ஆதரவுடன் வேண்டினன். அவள் உவந்து இசைந்தாள். நால்வரும் நடந்தார். கௌதமரது ஆச்சிரமத்தை அடைந்தார். தனியே வாசம் செய்திருந்த அந்தப் புனித மாதவர் கோசிகரைக் கண்டதும் வியந்தெழுந்து உவந்து உபசரித்தார். நாயகனைக் காணவே அகலிகை கண்ணீர் மல்கிக் காலில் விழுந்தாள். விசுவாமித்திரர் கவுதமரை நோக்கி, "அருந்தவப் பெரியீர்! இந்தப் பெருந்தகையின் அடிப்பொடிபடவே முன்னை வண்ணமாய் அன்னை எழுந்து வந்தாள்; வஞ்சம் அறியாதவள்; நெஞ்சினால்பிழையில்லாதவளை அடிகள் தஞ்சமாகவே அணைத்தருளவேண்டும்" என அன்புரிமையுடன் வேண்டினார். வேண்டவே, முனிவர் இராமனைநோக்கி உளமிக மகிழ்ந்து, "நான் மனைவியைப் பிரிந்திருந்தமையினாலே தான் என் மனை இன்று பரமனையும் கண்டது" என உணர்வுரையாடினார். அதன்பின் இனிய கனிகளைக் கொணர்ந்து

அகலிகையிடம் கொடுத்து எல்லாருக்கும் பரிமாறச் சொன்னார். அவள் பேரானந்த முடையளாய் இனிது வழங்கினாள். உண்டு எழுந்த பின் கவுதமரையும் அகலிகையையும் ஒருங்கே இருத்தி இராமன் வலங்கொண்டு வணங்கி விடைபெற்று எழுந்தான்.

குணங்களால் உயர்ந்த வள்ளல் கோதமன் கமலத் தாள்கள்
வணங்கினன் வலங்கொண் டேத்தி மாசறு கற்பின் மிக்க
அணங்கினை அவன்கை யீந்தாண் டருந்தவ னோடும் வாச
மணங்கிளர் சோலை நீங்கி மணிமதிற் கிடக்கை கண்டார்.
(அகலிகைப் படலம், 86)

அருந்தவர்பால் இராமன் புரிந்துள்ள பெருந்தகைமைகள் வியந்து மகிழ வந்தன. வழியிடையே சாபம் நீங்கி வெளி எழுந்த மங்கையை "அம்மா! உன் நாயகனிடம் போய்ச் சேர்" என்று தள்ளிவிட்டுப் போகாமல் உடனழைத்துவந்து உடையவனிடம் ஒப்பித்து ஒப்புரவு செய்திருக்கும் உதவிநிலை உவகை நிலையமா யுள்ளது. அவனுடைய உள்ளப் பண்புகள் உணருந்தோறும் அமிர்தமயமாய் ஓங்கி ஒளிர்கின்றன. அந்நிலைகளை யெல்லாம் நினைந்துதான், குணங்களால் உயர்ந்த வள்ளல் எனக் கவி உள்ளம் உருகி இங்கே உரைத்திருக்கிறார். இழந்துபோன நங்கையை எழுப்பிக்கொணர்ந்து உளங்கனிந்து விழைந்துவேண்டி தவசிக்கு வழங்கியுள்ளமையால் வள்ளல் என வாழ்த்த நின்றான்.

அருமை மனைவியை உரிமையுடன் உதவி அருந்தவரை இல்லற நெறியில் உய்த்தது, தான் செல்லும் காரியத்திற்கு ஓர் நல்ல அறிகுறியாய் இச்செல்ல மகனுக்குச் சீருடன் நேர்ந்தது.

இந்த ஒரு மணம் தனக்கு இனி வருகின்ற திருமணத்திற்கு ஒரு நறுமணமாய் வந்தது. ஒருவன் பிறரை மணப்படுத்தினால் அவன் உயர் மணமுடையனாய் உயர்ந்து விளங்குவன் என்னும் உபகார தத்துவமும் இதன்கண் உய்த்துணர நின்றது.

அகலிகை சாபம் தீர்த்து அவளைக் கணவரிடம் சேர்த்த இச் சேர்க்கை தனது திருவின் சேர்க்கைக்கு இனமாயதென இரண்டையும் சேர்த்துக் கவிகள் மனமார இராமனைத் துதித்திருக்கின்றனர்.

"பொய்யாத தவமுனிபின் போயருளித் தாடகைதன்
மெய்யாவி கெடவென்ன வெஞ்சரத்தால் அழுத்தியபின்
மையாழி முகில்வண்ணன் வாங்கியன பூங்கமலக்
கையாலும் ஒருசாபம் காலாலும் ஒருசாபம்."
(பாரதம், பன்னிரண்டாம் போர்ச் சருக்கம், 1)

இராமனது கைவேலையையும், கால் வேலையையும் இதில் காட்டியிருக்கும் அழகு காண்க. ''கைவண்ணம், கால்வண்ணம்'' என முன்னம் நம் கவியில் சொன்னதை எண்ணியே இவ்வண்ணம் இது வந்துள்ளது. சீதையை மணக்க மிதிலையில் வில் வளைத்ததையும், அகலிகை சாபம் நீக்கியதையும் ஒருங்கே உணர்த்தி இராமனுடைய ஆண்மை அருள்களைப் போற்றியபடியிது. வாங்கல் = வளைத்தல், நீக்கல்.

"கவின்வடிவ மான அகலிகைபெண் ஆன
கமலபத மாயன் மருகோனே."

"கல்லிலேபொற் றுள்பட வேயது
நல்ல ரூபத் தேவர கானிடை
கௌவை தீரப் போகும் இராகவன் மருகோனே."
(திருப்புகழ் 549, 601)

"வாழாது வாழவே இராமன் அடியால் சிலையும்
மடமங்கை யாக இலையோ?" (தாயுமானவர்)

ஓரறிவே இல்லாமல் உற்றஒரு கல்ஆறு
பேரறிவார் பெண்மணியாப் பெற்றது நின்—சீரடியால்
என்றால்அவ் ஆறறிவும் ஏய்ந்தமக்கள் நின்தாளால்
ஒன்றாத பேறும் உளதோ?" (அகலிகை வெண்பா)

"இகலறு கோசிகன் இனிதின் ஆற்றிய
மகமொரு குறைவற மகிழ்ந்து காத்தபின்
அகலிகை சாபமும் அகற்றி அற்புதன்
மிருவளம் விளங்கிய மிதிலை எய்தினன்." (பாகவதம்)

அகலிகைக்குச் சாபம் தீர்த்து இராமன் அருள்புரிந்துள்ளதை நூல்கள் இங்ஙனம் விழைந்து குறித்திருக்கின்றன.

கௌதமருடைய ஆச்சிரமத்திலிருந்து புறப்பட்ட மூவரும் ஆவலுடன் வடகிழக்காக நடந்து மிதிலாபுரியை அடைந்தார்.

தூர வரும் பொழுதே அந்நகரின் மாடமாளிகைகளும் கூட கோபுரங்களும் உவகை நிலையங்களாய் ஓங்கி ஒளி வீசி நின்றன.

இதிலிருந்து மிதிலைக் காட்சிப் படலம் தொடங்குகின்றது.

சனக மன்னனுடைய முன்னோருள் மிதி என்னும் அரசனால் அதிசயமாக ஆதியில் அமைக்கப்பட்டது ஆதலின் அவனுடைய பேரை உரிமையோடு மருவி அந்நகரம் மிதிலை என நின்றது.

பேரழகுடைய அந்த நகரத்தின் செல்வச் சிறப்புக்களையும் பல்வகை நலங்களையும் கவி உரிமையுடன் வருணித்திருக்கிறார்.

## மிதிலையை அடைந்தது

மதில்களிலும் கோபுரங்களிலும் நட்டியுள்ள கொடியாடைகள் ஆகாயம் அளாவிக் காற்றில் உல்லாசமாய் அசைந்து நிற்கின்றன. அவற்றை நாம் காணும் பொழுது நமக்கு என்ன தோன்றுகின்றன? கலைநிலையில் நிலவியுள்ள நிலைகளைக் காண்போம்.

மையறு மலரின் நீங்கி யான்செய்மா தவத்தின் வந்து
செய்யவள் இருந்தாள் என்று செழுமணிக் கொடிகள் என்னும்
கைகளை நீட்டி அந்தக் கடிநகர் கமலச் செங்கண்
ஐயனை ஒல்லை வாவென் றழைப்பது போன்ற தம்மா!

(மிதிலைக்காட்சிப்படலம், 1)

தாமரைச் செல்வியாகிய சீதை யான் பண்ணிய பெரும் புண்ணியத்தால் என்னிடம் வந்து அமர்ந்திருக்கின்றாள்; பருவம் நிறைந்து உருவ நலம் கனிந்துள்ள அத்திருமகளை மணந்து கொள்ள விரைந்து வந்தருள் என இராமனை மிதிலமா நகரம் கைகளை நீட்டி உவந்து அழைப்பது போல் மதிலின் கொடிகள் ஒய்யாரமாய் உலாவி மேலே விளங்கி நின்றன என்பதாம்.

நகர் ஐயனை அழைப்பது போன்றது என்க.

அரண்வலி முதலியவற்றால் சிறந்த பாதுகாவலை யுடையது ஆகலான் கடிநகர் என்றார். எப்பொழுதும் கலியாணக்கோலமாய் மங்கலம் பொருந்தி யிருப்பதையும் குறித்து நின்றது. கடி = காவல், மணம். பெருமகிமையான திருமணம் விரைவில் நிகழவுள்ளமையான் அவ்வுரிமையும் உடனுணர வந்தது. பொங்கொளி ததும்பி, மங்களம் நிறைந்து இன்ப நலங்கள் பொலிந்து எங்கணும் எழில் மிகுந்திருந்த தென்பதாம்.

மிதிலை நகரமாகிய பெண்தெய்வம் இராமன் வருவதைப் பார்த்துப் பெருமகிழ்ச்சியடைந்து தனது கொடிகளாகிய நெடிய கைகளை நீட்டி அவனை வருக வருக என்று உரிமை மீதூர்ந்து அழைத்தது என உருவகித்துள்ளார். ஒல்லைவா என்றது அவன் பாலுள்ள ஆராமையும் பேராவலும் உணர வந்தது.

அண்ணலே! உனக்குத் தகுதியான பெண்ணை நான் அரிய தவம் செய்து பெற்று வைத்திருக்கிறேன்; பக்குவம் அடைந்

துள்ளாள் ; நல்ல பருவம் ; ஒல்லையில் வந்து அச்செல்வியை மணந்துகொள் என்று மகிழ்ச்சி மீதூர்ந்து சொல்லிய படி யிது.

கமலச் செங்கண் ஐயன் என்றது கமல மலரை விட்டுத் தன்னிடம் வந்துள்ள அக்குமரியைக் கண்டு களித்தற்குரிய அமைதி கருதி என்க. இக் கண்ணே அப்பெண்ணமுதத்திற்கு உண்ண உண்ணத்தெவிட்டாத உயர்போக நிலையம் என்பதாம். இவ்வண்ணலது கஸ்தூரி மணிபோல் அப்பெண்மணி அங்கே பெருகி யுள்ளாள் ; இருவரும் மருவின் உலகம் ஒளிமிகப்பெறும் என்க.

பின்னே நிகழவுள்ள கலியாண நலங்களை மிதிலைப் பிரவேசத் திலேயே முன்னுற இங்ஙனம் உணர்த்தியருளினர்.

காற்றில் இயல்பாக அசைகின்ற கொடியாடைகளைக் கவி இப்படி அற்புதமாகக் கற்பனை செய்திருக்கிறார்.

" குஞ்சிமாண் கொடிக்கையால் கூவிவிட்டது ஒத்ததே "
(சிந்தாமணி, 143)

" போருழந் தெடுத்த ஆரெயில் நெடுங்கொடி
வாரல்என் பனபோல் மறித்துக்கை காட்ட "
(சிலப்பதிகாரம், 13)

மதிலின் கொடியைக் கை என இவற்றுள் குறித்திருத்தல் காண்க. " கொடிகள் என்னும் கைகளை நீட்டி வா " என்ற நம் கவிக்கு இவை கைகாட்டியா யிருக்குமோ? என்று கருதவுள்ளன.

"குழைப்புறம் கடந்த செங்கட் குறுநகைக்கொவ்வைச்செவ்வாய்
இழைப்பொலி முலையி னாளுக் கிற்றைநாள் வதுவை என்று
மழைப்புற மாடம் ஏறி வருநரை மலர்க்கை காட்டி
அழைப்பன போன்ற வீதி அணிகொடி யாடை எல்லாம்."
(பாரதம், திரௌபதி மாலையிட்ட சருக்கம், 20)

ஐயனை ஒல்லைவா என்று அழைப்பது போன்றது என்ற நம் செய்யுளை அடியொற்றி இது வந்துள்ளமை அறியலாகும்.

காவியக் கவிஞர்களுடைய கற்பனைகளும் கலைக் காட்சிகளும் இங்ஙனம் விற்பனங்கள் பொலிந்து விளைந்து வந்திருக்கின்றன.

இராமனது வரவில் ஊரே இவ்வளவு பேரானந்தம் அடைந்து நின்றது என்றதனால் இனி ஊரிலுள்ள மன்பதைகளுடைய அன்புரிமையும் இன்ப நிலையும் அளவிடலரியன என்பது எளிதே தெளிவுறலாகும். உடையவன் அடையவே உவகைகள் பொங்கின என்க. திருவின் கேள்வனே வருகின்றான் என்பதாம்.

புறத்தே நின்ற மதிளின் கொடிகளை இவ்வாறு குறித்தார்; பின்பு அகத்தே மாடகூடங்களின் மேல் நிலவுகின்ற அழகிய துவசங்களின் நிலைமைகளை உரைக்கின்றார்.

நிரம்பிய மாடத் தும்பர் நிரைமணிக் கொடிகள் எல்லாம்
தரம்பிறர் இன்மை உன்னித் தருமமே தூது செல்ல
வரம்பில்பே ரழகி னாளை மணஞ்செய்வான் வருகின்றான் என்று
அரம்பையர் விசும்பின்ஆடும் ஆடலின் ஆடக் கண்டார்.

மாளிகைகள்மீது உலாவித் திகழ்கின்ற கொடிகளின் நிலைகளைக் குறித்தபடி யிது. வரிசை வரிசையாய் அமைந்து, செல்வ வளங்கள் செறிந்து, பல்வகை நலங்கள் படிந்து, எல்லா எழில் களும் நிரம்பி யுள்ளமையான் நிரம்பிய மாடம் என்றார்.

"கோடியும் தேடிக் கொடிமரம் நட்டி
நீடி யிருந்த நிறைபெருஞ் செல்வர்"

என்றபடி வெளியே கொடிகள் விளங்க உயர்ந்த செல்வக் குடிகள் அங்கே ஒளிமிகுந்து நிறைந்து உவந்திருந்தன என்க.

அம்மாடங்கள் மேல் அமைந்து நின்ற துகில்கொடிகள் வானம் அளாவி அசைந்து விளங்கின. அக்காட்சியை மானசக் காட்சியில் கண்டு மகிழும்படி மற்றோர் இனிய நாடகக் காட்சியை இணைத்து இசைத்தருளினார்.

சானகியை இராமன் திருமணம் செய்ய வருகின்றான்என்று தெரிந்து தெய்வ மங்கையராகிய அரம்பையர்கள் பெருமகிழ் வடைந்து ஆகாயத்தே கூடி ஆனந்தக்கூத்தாடினதுபோல் அழகிய கொடியாடைகள் மேமேலே ஆடி நின்றன என்றார். ஒல்கி ஒசியும் மெல்லியலார்போல் மெல்லிய துவசங்கள் உல்லாசமாய் உம்பரில் உலாவின என்பதாம். கவியின்நோக்கு உவகையூக்கி வருகின்றது.

யாவராலும் அளவிட முடியாத பேரெழிலுடைய பெரு மாட்டி ஆதலின் வரம்பு இல் பேர் அழகினாள் எனச் சீதையை வரைந்து குறித்தார்.

இத்தகைய அருமைப் பெண்ணுக்குத் தக்கமாப்பிள்ளையைத் தாம் தெரிந்து நாடி நிச்சயித்து வர மக்களுள் ஒருவரும் தாம் இல்லை என்று தரும தேவதையே மருமமாய்ப்போய் உரிமை யுடன் அழைத்து வருகின்றது என்பார், "தருமமே தூது செல்ல

வருகின்றான்'' என்றார். அழைத்து வருவது அருந்தவராகிய விசுவாமித்திரர் ஆதலால் அந்தப் பெருந்தகையின் பெருமகிமை தெரியத் தருமம் என்று சுட்டித் தகவுரை வைத்தார்.

பெண்வீட்டார் மாப்பிள்ளையைத் தேடி மறுகி யுழலாமல் அரிய மணமகனே வலிய வருகின்றான் என அவ்வரவின் உயர்வும் அருளும் உரிமையும் உணர வந்தது.

இந்தத் திருமணத்தை அறக்கடவுளே இடைநின்று ஆர்வத்துடன் முடித்து வைக்கின்றது என்றதனால் அதன் நீர்மையும் நிலைமையும் நேரே ஓர்ந்து நிலை தெரிய வந்தன.

தருமம் தழைத்தோங்க, தவம்பெருக, அன்பு நலங்கள் வளர, மன்பதை இருமையும் இன்புற இக்கலியாணம் இங்கே இசைந்துள்ள தென்க. தருமமே தூது செல்ல என்ற அருமை வாசகத்தில் அரிய பல பொருள்கள் மருவி யுள்ளன. உரிமையுடன் ஊன்றி உணர்ந்துகொள்ளவேண்டும்.

இராமன் மணத்தை எண்ணிப் புண்ணியம் களித்தது; புரமெலாம் மகிழ்ந்தன; விண்ணுறை மகளிரும் விழைந்து நடித்தனர் எனவே மண்ணவர் மகிழ்ச்சி நிலை சொல்லவேண்டாதாயிற்று. எல்லாரும் இன்புற இம்மன்றல் மருவிநின்றதென்பதாம்.

வையமும் வானமும் உய்ய நம் ஐயன் இங்கே செய்யவனை மணம்செய்யச் செய்தவனோடு இங்ஙனம் சேர்ந்துவந்தான் என்க.

சீதையை மணந்துகொண்டு போகவே இராமன் மிதிலைக்கு வருகின்றான் என்பதை அவன் உள்ளே நுழையு முன்னமே அவ்வுண்மையை நம்உள்ளத்தில் நுழைத்து இவ்வண்ணம் உயர் களிப்பூட்டியுள்ளார். பின்னே நிகழவுள்ளதைப் படலத்தில் முதல் பாட்டிலேயே நன்னயமாகக் காட்டியருளினர்; அக்கருத்தை மேலும் வலியுறுத்தி விருத்தி செய்து வருகின்றார்.

மதிலின் புறத்தே நின்று இவ்வாறு கொடி வளங்களைக் கண்டு நெடிது மகிழ்ந்தவர் பின்பு நகரின் உள்ளே புகுந்தார்.

### மூவரும் மிதிலை புகுந்தது

ஆதரித் தமுதிற் கோல்தோய்த்து அவயவம் அமைக்கும் தன்மை
யாதெனத் திகைக்கும் அல்லால் மதனற்கும் எழுத ஒண்ணாச்
சீதையைத் தருத லாலே திருமகள் இருந்த செய்ய
போதெனப் பொலிந்து தோன்றும் பொன்மதில் மிதிலை புக்கார்.

தெருவில் நடந்துபோனது

சொற்கலை முனிவன் உண்ட சுடர்மணிக் கடலும் துன்னி
அற்கலந் திலங்கு பன்மீன் அரும்பிய வானும் போல
விற்கலை நுதலி னாரும் மைந்தரும் வெறுத்து நீத்த
பொற்கலன் கிடந்த மாட நெடுந்தெரு வதனில் போனார்.

மிதிலை நகருள் புகுந்து அரசிளங்குமாரர்களோடு வீதி வழியே மாதவர் சென்றார். சீதை இருத்தலால் திருமகள் உறையும் தாமரைப்பூ என அவ்வூர் பொலிவுற்றிருந்தது. மையறு மலரின் நீங்கி வந்து செய்யவள் இருந்தாள் என முன் செப்பியதற்கு ஏற்ப இவ் ஒப்புமை குறித்தார். யாரை யுடைமையால் இவ்வளவு பேரும் மகிமையும் இங்கே பேசப்படுகின்றனவோ அப்பேரழகியைத் தலைமையாகப் பேசி வருகின்றார்.

எழுதுகோலை அமுதில் தோய்த்து அழகுத் தெய்வமாகிய மன்மதனே கண்ணூன்றி எழுதினாலும் முழுவதும் எழுத முடியாத திவ்விய சவுந்தரமுடையவள் என்பது "மதனற்கும் எழுத ஒண்ணாச் சீதை" என்றதனால் தெரியவந்தது. நினைவிய ஓவியத்தாலும் பாவனை செய்ய இயலாதென்றபடி. யாரும் துதிசெய்து தொழத்தக்க அதிசய அழகுடையள் என்பதாம்.

மதனனும் வரைய முடியாமல் மறுகி அயரும் பிராட்டியின் அழகைக் கவி இவ்விதம் இதமாக வரைந்து காட்டியிருக்கிறார்.

நகரின் அமைதியை உரைத்துப் பின்பு அதன் தெருக்களின் நிலைகளைக் குறித்தார். "சொற்கலை முனிவன்" என்றது அகத்தியரை. அவர் கடலைப் பருகியபொழுது நீர் முழுதும் வற்றியது; வற்றவே அங்கே முத்து பவளம் மரகதம் மாணிக்கம் முதலிய மணிகள் ஒளிவிட்டிருந்தன ஆதலின் அது போலவும், நட்சத்திரங்கள் போலவும் இரத்தின ஆரங்களும் மணியணிகளும் வீதிகளில் சிதறிக்கிடந்தன என்பார், "மணிக்கடலும், பன்மீன் அரும்பிய வானும் போலப் பொற்கலன்கிடந்த மாட நெடுந்தெரு" என்றார். கடல் வான் என்றது தெருவின் அகலமும் நீளமும் தெரியவந்தது.

ஆடவரும் மகளிரும் விதவிதமான மணி அணிகளைப் புதிது புதிதாக அணியும் தோறும் பழைமையானவைகளைக் கழித்து எறிந்து விடுவார்; அவ்வணிகள் தெருக்களில் சிந்திக் கிடந்தன.

எல்லாரும் செல்வர்கள் ஆதலால் அவற்றை யாரும் தீண்டுவதில்லை; ஆகவே அவை விழுந்தபடியே வீதிகளில் விரிந்து கிடக்கலாயின என்க. அந்நகரின் உயர்ந்த செல்வச் சிறப்பைக் குறித்தபடி யிது. நோக்கிய இடமெல்லாம் பாக்கியங்கள் படிந்திருந்தன என்பதாம்.

இவ்வாறே பலவகை நிலைகளையும் நலமாகக் கவி பாராட்டிப் பாடியிருக்கிறார். வீதி வழியே மூவரும் நடந்து செல்லுங்கால் அங்கே அவர் கண்டு சென்ற காட்சிகளுள் சிலவற்றை இங்கே நாம் கண்டு செல்வோம்.

### தெருவின் நிலைமை

தாறுமாய் நறுகட் குன்றம் நடமத அருவி தாழ்ப்ப
ஆறுமாய்க், கலின மாவிலாழியால் அழிந்து ஒராருய்ச்
சேறுமாய்த், தேர்கள் ஓடத் துகளுமாய், ஒன்றேடொன்று
மாறுமாருகி வாளா கிடக்கிலா மறுகிற் சென்ருர். (1)

### நடன சாலை

நெய்திரள் நரம்பில் தந்த மழலையின் இயன்ற பாடல்
தைவரு மகரவீணை தண்ணுமை தழுவித் தூங்கக்
கைவழி நயனம் செல்லக் கண்வழி மனமும் செல்ல
ஐயநுண் இடையார் ஆடும் ஆடக அரங்கு கண்டார். (2)

### ஊஞ்சல் ஆடல்

பூசலின் எழுந்த வண்டு மருங்கினுக் கிரங்கிப் பொங்க
மாசுறு பிறவி போல வருவது போவ தாகிக்
காசறு பவளச் செங்காய் மரகதக் கமுகிற் பூண்ட
ஊசலின் மகளிர் மைந்தர் சிந்தையோ டுலவக்கண்டார்.

### கடைகளின் நிலை

வரப்பறு மணியும் பொன்னும் ஆரமும் கவரி வாலும்
சுரத்திடை அகிலும் மஞ்ஞைத் தோகையும் தும்பிக் கொம்பும்
குரப்பணை நிரப்பு மள்ளர் குவிப்புறக் கரைகள்தோறும்
பரப்பிய பொன்னி அன்ன ஆவணம் பலவும் கண்டார். (4)

### இசை விருந்து

வள்ளுகிர்த் தளிர்க்கை நோவ மாடகம் பற்றி வார்ந்த
கள்ளென நரம்பு வீக்கிக் கண்ணொடு மனமும் கூட்டி
வெள்ளிய முறுவல் தோன்ற விருந்தென மகளிர் ஈந்த
தெள்விளிப் பாணித் தீந்தேன் செவிமடுத் தினிதுசென்ருர்.

குதிரை ஓட்டம்

கொட்புறு கலினப் பாய்மா குலால்மகன் முடுக்கி விட்ட
மட்கலத் திகிரி போல வாளியின் வருவ மேலோர்
நட்பினின் இடையறுவாய் ஞானிகள் உணர்வின் ஒன்றுய்க்
கட்புலத் தினைய வென்று தெரிவில தெரியக் கண்டார். (6)

யானைப்போர்

தயிருறு மத்திற் காம சரம்படத் தலைப்பட் டுடும்
உயிருறு காதலாரின் ஒன்றையொன் றொருவ கில்லா
செயிருறு மனத்த வாகித் தீத்திரள் செங்கண் சிந்த
வயிரவான் மருப்புயானை மலையென மலைவ கண்டார். (7)

மாடங்களில் நின்ற மங்கையர் நிலை

வாளரம் பொருத வேலும் மன்மதன் சிலையும் வண்டின்
கேளொடு கிடந்த நீலச் சுருளும்செங் கிடையும் கொண்டு
நீளிரும் களங்க நீக்கி நிரைமணி மாட நெற்றிச்
சாளரந் தோறும் தோன்றும் சந்திர உதயம் கண்டார். (8)

மகளிர் பந்தாடல்

மெய்வரு போகம் ஒக்க உடனுண்டு விலையும் கொள்ளும்
பையர வல்குலார்தம் உள்ளமும் பளிங்கும் போல
மையரி நெடுங்கண் நோக்கம் படுதலும் கருகி வந்து
கைபுகிற் சிவந்து காட்டும் கந்துகம் பலவும் கண்டார். (9)

நீராடல்

பங்கயம் குவளை ஆம்பல் படர்கொடி வள்ளை நீலம்
செங்கிடை தரங்கம் கெண்டை சினைவரால் இனைய தேம்பத்
தங்கள்வே றுவமை யில்லா அவயவம் தழுவிச் சாலும்
மங்கையர் விரும்பியாடும் வாவிகள் பலவும் கண்டார். (10)

மைந்தர் வாள் ஆடல்

இயங்குறு புலன்கள் அங்கும் இங்கும்கொண் டேக ஏகி
மயங்குபு திரிந்து நின்று மறுகுறும் உணர்வி தென்னப்
புயங்களில் கலவைச் சாந்தும் புணர்முலைச் சுவடும் நீங்காப்
பயங்கெழு குமரர் வாள்ஆட் டாடிடம் பலவும் கண்டார்.

குமரர்களின் நிலை

வெஞ்சுடர் உருவிற் றன்ன மேனியர்; வேண்டிற்று ஈயும்
நெஞ்சினர்; ஈசன் கண்ணின் நெருப்புறு அனங்கன் அன்னார்;
செஞ்சிலைக் கரத்தர்; மாதர் புலவிகள் திருத்திச் சேந்த
குஞ்சியர் சூழநின்ற மைந்தர்தம் குழாங்கள் கண்டார். (12)

(மிதிலைக்காட்சிப் படலம்)

இவ்வாறு பல்வேறு வகையான செல்வக் காட்சிகளை இடங்கள் தோறும் கண்டு வீதிகளில் மூவரும் நடந்து சென்றார்.

இந்தக் கவிகளைக் கண்ணூன்றிப் படித்துக் கருத்துக்களைத் திருத்தமாகத் தெரிந்துகொள்ளின் நகரின் நிலை நன்கு புலனும்.

**1.** யானைகள் போகும் பொழுது அவற்றின் மதங்கள் ஒழுகி வீதிகளில் ஆறு ஆகின்றது; பின்பு வாய் நுரை சிந்தக் குதிரைகள் பாய்ந்து செல்வதால் அது சேருய் மாறுகின்றது; அதன்பின் தேர்கள் ஓடுதலால் அச் சேறு துகள்களாய்ப்புழுதிபடுகிறது; இவ்வாறு ஒரு நிலையின்றி மறுகுகள் மருவியுள்ளன என்பதாம். தாறு=முட்கோல். விலாழி=குதிரையின் வாய்நுரை. மறுகு =பெரிய தெரு. யானைகளும், குதிரைகளும், தேர்களும் அந்நகரில் நிறைந்திருந்த நிலை இதனுல் அறிந்துகொள்ளலாம்.

நிறை பெருந் திருவின் அறிகுறிகளாகக் கரி பரி இரதங்கள் கருத வந்தன. இத்தகைய நெடுந் தெருவில் நடந்து செல்லுங்கால் அந்நகரில் நிகழ்ந்த நிலைகள் தொடர்ந்துகாண நேர்ந்தன.

வீணையை மீட்டி இனிய கானம்பாடி அபிநயம் காட்டி நடன மாதர்கள் அரிய சதுர்கள் ஆடினர். அவ்வாடலைக் கண்டு நீங்கவே, அயலே பசிய கமுக மரங்களில் பூட்டிய உயரிய ஊஞ்சலில் அழகிய மங்கையர் உல்லாசமாய் அமர்ந்து பல்லிசை பாடிப் பண்புடன் ஆடி ஆடவர் மாலுற நாடி மகிழ்ந்தனர்.

"மாசுறு பிறவிபோல வருவது போவது ஆகி"

என இவ்வூசலாடலைக் குறித்திருக்கும் உவமை நயம் பார்க்க.

இருபுறங்களிலும் கயிறு பூட்டித் தொங்கவிட்டிருக்கும் பலகையில் அமர்ந்து ஆடுங்கால் முன்னும் பின்னும் ஓடி ஊசல் ஆடி வரும்; அவ்வாறே உயிரினங்களும் பிறவியில் சிக்கி ஓயாமல் மாறி மாறி உழன்று வருகின்றன என்பதாம்.

கட்டியுள்ள வடங்கள் இரண்டும் அற்ற போது தான் ஊசல் ஆட்டம் ஓய்ந்து நிற்கும்; அதுபோல் தொட்ட வினைகள் இரண்டும் விட்ட பொழுதுதான் பிறவி முற்றும் ஒழியும் என்க.

உல்லாசமான சிறிய விளையாட்டைச் சொல்லி வரும் பொழுதே உயிர்க்கு உறுதியான அரிய உண்மை எளிதே உணர்த்

தப்பட்டுள்ளது. ஊன்றி உணர்ந்து உய்திபெறுதற்குரிய தத்துவ வித்துக்களைக் கவி இப்படி விதைத்துப் போகின்றார்.

“உருமாறிப் பவக்கடல் வீழ்ந்து ஊசல் எனத்
தடுமாறி உழலுமாக்கள்
கருமாறிக் கதியடையக் கால்மாறி நடித்தவரைக்
கருத்துள் வைப்பாம்.” (திருவிளையாடற் புராணம்)

பிறவிக்கு ஊசல் உவமை இதன்கண்ணும் வந்துள்ளமை காண்க. பல்வேறு வகைப்பட்ட பிறவிச் சூழல்களில் படிந்து இடையறாது உழன்றுவருவதை உணர்த்தி நின்றது.

மனிதர் தேவர் மிருகம் பறவை முதலிய பலவகை நிலைகளிலும் சுற்றி சுற்றி உழந்து பாசப்பிணிப்போடு சீவன் சுழன்று வருவதால் அச்சுழல் நிலை தெரியவந்தது.

“கொள்ளிவட்டம் கறங்குதிரை சகடக்கால் வெண்
குறுந்தொடியார் தயிர்மத்து நெடுந்தாள் ஊசல்
எள்ளிவிட்ட தொழிற்பிறவித் தண்டல் போக்கி
இறைவாங்கு நமன்குடிகாள்! இன்று நீர்தாம்
தெள்ளியிட்ட வெள்ளைநிலாத் தெளித்தல் போலும்
திருவால வாயிறைவன் திருவெண் ணீற்றை
அள்ளியிட்டால் புள்ளியிட்ட கணக்கு மாற்றி
அமருலகிற் கணக்கன்எழுத் தறிக்கலாமே.”
(மதுரைப் பதிற்றுப்பத்தந்தாதி)

நம் கவி சுட்டிய ஊசலுடன் வேறு சிலவும் பிறவிக்கு இதில் உவமைகளாய் வந்துள்ளன. இப்பாட்டு நிலை விளிருக்கத் தக்கது.

பல் வகைப் பொருள்கள் நிரம்பிய பண்டக சாலைகளைக் கண்டு சங்கீதங்களைக் கேட்டு வந்தார். வரவே அங்கோர் இடத்தில் குதிரைகளின் கதி வேகங்களைக் கண்டார். இக் காலத்துப் பந்தய நிலையினும் அதிசயமாக அக்காலத்தில் பரிகளின் சாரிகள் பாராட்டப்பட்டு நாட்டின் சீர்மையைக் காட்டி வந்தன.

[மண்டலமாக வட்டமிட்டு வையாளி வீதியில் வாளிவருவதை வாளி என்பர்.] குலால் மகன்=குயவன். அவன் பாண்டம் வனையும் சக்கரம் போல் மிக்க வேகமாகச் சுற்றி வந்தமையால் “மட்கலத் திகிரிபோல வாளியின் வருவ” என்றார். அம்பின் கடுமையும் அறிய வந்தது. [கொட்பு=விரைந்து சுழலுதல்.

கொள்ளிவட்டம் போல் இடைவெளி தெரியாமல் ஒரே தொடர்பாய்த் தாவி வந்தன என்பார், மேலோர் நட்பினின் இடையறுவாய், ஞானிகள் உணர்வின் ஒன்றாய்க், கட்புலத்து இணைய என்று தெரிவில'' என்றார். இந்த ஒப்புமைகளின் நுட்பங்கள் உய்த்துணரத் தக்கன.

'கூட்டுற முறுக்கி விட்ட குயமகன் திகிரிபோல
வாட்டிறல் தேவ தத்தன் கலினமா மாலை வெள்வேல்
ஈட்டம் போழ்ந்து யானைநெற்றி யிருங்குழம் பழுத்தி மன்னர்
சூட்டொடு கண்ணி சூளா மணிசிந்தித் திரியுமன்றே.''

(சீவக சிந்தாமணி, 786)

இந்தச் சிந்தாமணியை அடியொற்றி நம் கவி வந்திருப்பதாகத் தோன்றினும் தனியே ஒரு அழகு கனிந்து, அறிவு நலம் சுரந்து, புது மணம் மிகுந்து பொலிவெய்தி யுள்ளது.

'' இருவகைச் சாரியும் எதிர்ந்து வட்டமாய்
வருவழி ஞெகிழி போல் மறுகெலாம்ஒரு
துரகத மேநிலை நின்ற தோற்றம் ஒத்து
ஒருவற நடத்தினர் ஒருக ணத்தினே.''

(திருவிளையாடற்புராணம், நரிபரியாக்கியபடலம். 99)

'' இடையறுவாய், ஒன்றாய் '' என்றமையோடு இது ஒன்றியுள்ளமை காண்க. ஞெகிழி = தீக்கோல், கொள்ளி விறகு.

இங்ஙனம் குதிரைகளின் கதிகளைக் கண்டு, யானைப் போர்க் காட்சியைப் பார்த்து அயலே அகன்று போயினர்.

தெருவிடையே செல்லுங்கால் இருமருங்கினும் உள்ள விழுமிய மாளிகைகளிலிருந்து அழகிய மங்கையர் சன்னல்கள் வழியே சார்ந்து நோக்கினர். பொன்னொளி வீசி மின்னல் கொடிகள் போல் மன்னி நின்ற அப்பெண்மணிகளின் முகங்கள் பூரணசந்திரர்கள் போல் பொலிந்து தோன்றின ஆதலால், '' சாளரம் தோறும் தோன்றும் சந்திர உதயம் கண்டார் '' என்றார். அந்தச் சுந்தரிகளைச் சுட்டியிருக்கும் அழகைப் பார்க்க. வேல், சிலை, நீலச் சுருள், செங்கிடை என்பன முறையே அவருடைய கண், புருவம், கூந்தல், இதழ்களைக் குறித்து நின்றன.

பிரம சிருட்டியில் ஒரே சந்திரன் உளன்; அவன் களங்கமுடையவன்; இரவில் மட்டும் விளங்குவன்; பகலில் ஒளி

மழுங்கி ஒளிவான். நமது கவி சிருட்டியிலோ களங்கமில்லாத பல சந்திரர்கள் பகலில் உதயமாகி எப்பொழுதும் ஒளி செய்து எழில் மிகுந்துள்ளனர். மாதர் குழாத்தை விளக்கி வந்திருக்கும் இந்தப் பிரயோகம் மிகவும் இன்சுவை யுடையது. இராமச்சந்திரனைக் காணப் பகலில் பல சந்திரர்கள் உதயமாயினுர் என்க.

" நிரைநிலை மாடத்து அரமியம் தோறும்
மழைமாய் மதியின் தோன்றுபு மறைய " (மதுரைக்காஞ்சி)

இஃது ஈண்டு எண்ணற் பாலது. அரமியம்=நிலாமுற்றம்.

புதுமணத்தமென் மகளிர் சாளரத்திடைப் பொருந்து
மதியை இன்னுயிர்ப் பாங்கியர் மறைந்தனர் நோக்கும்
கதிர்கொள் வாண்முகம் என்றுதம் காதலர்ப் புல்லும்
பதும மென்கரம் நீக்கிநீள் படைவிழி புதைப்பார்.
(நைடதம், நகரப்படலம், 7)

சாளரத்தின் வழியே தோன்றிய சந்திரனைத் தோழியின் முகம் என்று கருதி ஒரு புதுமணப் பெண் தன்கொழுநனைத் தழுவியிருந்த கைகளை நீக்கிக் கண் புதைத்து நாணி நின்ருள் என்னும் இது நம் கவியை நினைந்து வந்துள்ளதாகத் தோன்றுகின்றது. கலையின் காட்சிகள் பல நிலைகளில் பரவி மிளிர்கின்றன.

மாடங்களின் உள்ளிருந்தே சன்னல்கள் வழியாக மகளிர் வெளியே பார்த்து நின்ருர் ஆதலால் " சாளரம் தோறும் சந்திர உதயம் " என்ருர். தோறும் என்றது காட்சியின் பன்மையும் தன்மையும் தெரியவந்தது.

நில்லாமல் மூவரும் நடந்துபோதலால் பலமுகங்கள் தொடர்ந்து பார்க்க நேர்ந்தன. அவை நிலவொளிவீசி நிலவி நின்றன.

சன்னல் என இக்காலத்தில் வழங்கப்படும் சொல் முன்னம் இல்லை என்று தெரிகின்றது. காற்று வரவும், வெளிச்சம் பெறவும் மாளிகை மதில்களில் அமைக்கப்பட்டுள்ள நுழைகளை முதலில் காலதர், சாலகம் என வழங்கி வந்தனர்.

கால்=காற்று. அதர்=வழி. காற்றோட்டம் தருவதென்பதாம். அகத்தே ஒளி நிறைத்து நிற்பது சாலகம் என்க.

" சாலேகம் வாதா யனஞ்சாலம் நுழையே
சாலகம் காலதர் சாளர வாயில் " (பிங்கலந்தை)

இந்த எழு பெயர்களும் பழையனவாகிப் படிமுறைகளில் உள்ளன. புதிய சன்னல் வந்தேறியாயினும் வழக்கில் எழுந்து முந்துற நின்றது.

இன்ன காட்சிகளை இனிது கடந்து அயல்கலவே மகளிர் பந்தாடல்கள் காண நேர்ந்தன.

இரு கைகளிலும் பல பந்துக்களை எடுத்து மேலெறிந்து பிடித்து மங்கையர் அங்கே அதி விநோதமாக ஆடலாயினர்.

அப் பந்துகள் ஒருபடியாய் இராமல் வெண்மை கருமை செம்மை நிறங்களாய் மாறி மாறி மருவி வாலாயின. அது ஓர் அதிசயமாயது. கூர்ந்து நோக்கினர்; உண்மை விளங்கியது.

இயல்பாக வெண்ணிறமான அவை அண்ணுந்து பார்க்குங் கால் அப்பெண்களின் கரிய கண்ணொளியால் கறுத்தன; செங் காந்தள் இதழ்போன்ற அவருடைய செய்ய கைகளில் புகவே சிவந்து தோன்றின.

"மையரி நெடுங்கண் நோக்கம் படுதலும் கருகி, வந்து
கைபுகில் சிவந்து காட்டும் கந்துகம் பலவும் கண்டார்"

என்னும் இக்காட்சியைக் கண்ணூன்றிக் காணுங்கள். கந்துகம்=பந்து. கருகலும், சிவத்தலும் சார்பினாலாயின.

வேசியர் உள்ளத்தில் நிலையான குணம் ஒன்றும் இன்றி அடுத்தவர் நிலைகளுக்குத் தக்கபடி யெல்லாம் நிறங் கொடுத்து நெடிது மயக்கி நிற்பர் ஆதலின் அவரது உள்ளமும், பளிங்கும் இங்கே உவமைகளாய் வந்தன.

"மெய்வரு போகம் ஒக்க உடன் உண்டு விலையும் கொள் ளும்" என அவரது நிலைமையை விளக்கியிருக்கும் அழகு காண்க. பந்துகள் நிறம் மாறியதற்குத் தந்திருக்கும் உவமை சிந்தனைக்கு உரியது. விலை மகளிரைப் பலவழிகளிலும் பேசி வருகிறார்.

கையினால் அறையுண்டு கதிமாறி யுழலும் பந்துகள்போலவே வேசையர் மையலில் விழுந்தவர் வெய்யராய்த் திரிந்து வெறியரா யுழன்று விளிந்து தொலைவர் என்பதாம். சுத்த வெள்ளை கருகிச் சிவந்ததுபோல் அவரை யடுத்தவர் நல்லவராயினும் உள்ளம் திரிந்து உயர் குணம் ஒழிந்து குலம் அழிந்து குடி கெடுவர் என்க. இக்கெடு நிலையை உணர்ந்து நெறிமுறை ஒழுகி உய்க என்பது குறிப்பு. உய்த்துணர் பொருளனவாய் உவமைகள் வருகின்றன.

விளையாட்டு ஒப்புமையிலும் வியன் ஒழுக்கம் உள்ளே நய மாக விளக்கப்பட்டுள்ளது.

இங்கே குல மகளிரது கண்ணழகையும் கையழகையும் காட்டியது, மிதிலைப் பெண்களுடைய மெய்யழகையெல்லாம் ஐயமின்றி உணர்ந்து மேல் அண்ணலுக்கு வரும் அழகுத் தெய்வத்தின் மகிமையை முன்னுறத் தெளிந்து கொள்ள என்க.

அதன் பின் நறுமணம் கமழ இனிய நீர் நிலைகளில் நீராடுகின்ற மகளிர் நீர்மைகளைக் கண்டு அப்பால் சென்றனர். அங்கே கோளரியனைய குலக் குமரர்கள் வாள் வேல் முதலிய படைக் கலங்களைப் பயின்று நின்றனர்.

"செருவாள் ஆட்டும் சேடகப் பிண்டியும்
சாரியை விலக்கும் வேறிரி வகையும்
இடுக்கட் போதின் ஏமப் பூமியுள்
வகுத்த வாயில் வகைவகை இவையென
ஓட்டும் பாய்த்துளும் கரந்தொருங் கிருக்கையும்
செருக்கொள் யானை மருப்பிடைத் திரிவும்
தாமாச் சிறப்பிற் பாமியிற் பயின்ற
காலாட் கரும விகற்பமும் காட்டிக்
கருவித் தாக்கினும் காலாட் சுற்றினும்
தனியின் ஆயினும் தானையொ டாயினும்
புகவும் போக்கும் பொச்சாப் பின்றிப்
பகைவெல் சித்திரம் பலதிறம் பயிற்றி."

(பெருங்கதை 1-37)

என்றபடி போர்வெற்றிக்குரிய ஆண்மையாடலை அதி சாதுரியங்களுடன் ஆற்றி வந்த அத்தீரர்களுடைய வீரக்காட்சியை வியந்து பார்த்தனர்.

கூரிய வாள் எடுத்துச் சாரி திரிந்து போரியல் கருதி வீரியமுடன் வீசியபொழுது அவ்வாள் சுழன்று வந்த வேக நிலைக்குக் கொடுத்திருக்கும் உவமை நுனித்து நோக்கவுள்ளது.

"இயங்குறு புலன்கள் அங்கும் இங்கும்கொண்டு ஏக ஏகி
மயங்குபு திரிந்துநின்று மறுகுறும் உணர்வு இது என்ன"

என்பது வாள் ஆட்டின் நிலைமையைத் தெளிவுறுத்த வந்தது. பொறிகளின் வயப்பட்ட அறிவு ஒரு நிலையின்றி மறுகிச் சுழலுவதுபோல் அவர் கைவசப்பட்ட வாள் சுழன்று வந்தது என்பதாம். அவ் வீர ஆடலை இவ்வாறு விளக்கி யிருக்கிறார்.

குறித்த பொருளை இனிது விளக்கி எளிதே தெளிவுபடுத்த வந்த உவமானத்தின் பயனும். இங்கே வந்த ஒப்பு அப்படியின்றி நுட்பமாய் நின்றது. குமாரர்கள் சுற்றிய கரவேகத்தை உணர்த்தற்கு வேறொன்றை நேராகச் சொல்லியிருக்கலாம். அங்ஙனமின்றிப் புலன் உணர்வைக் குறித்தார்; உயிர்கள் எவ்வழியேனும் நலன் உணர்ந்து உய்ய வேண்டி என்க.

புலன்வழிப்பட்ட உணர்வு பொல்லாங்கே புரியும் ஆதலால் பொல்லாத வாளுக்கு அது ஒரு நல்ல உவமையாய் வந்தது.

வீரர் கையில் விழுந்த பொழுதுதான் வாள் வெந்தொழில் புரிகின்றது; புலன்களில் அழுந்திய போதுதான் உணர்வு புலையாட நேர்கின்றது; விலகிவிடின் உடனே நலனுடையதாய் அது நன்மை யுறுகின்றது.

"எறும்பிடை நாங்கூழ் எனப்புலனால்அரிப் புண்டு அலந்த
வெறுந்தமி யேனை விடுதிகண் டாய்! வெய்ய கூற்றொடுங்க
உறுங்கடிப் போதவை யேஉணர் வுற்றவர் உம்பர் உம்பர்
பெறும்பத மேயடி யார்பெய ராத பெருமையனே" (திருவாசகம்)

எறும்புகள் இடைப்பட்ட நாகப்பூச்சிபோல் புலன்கள் பற்றிய உணர்வு புலையாய் நிலைகுலைந்து உழலும்; அவற்றை விலகி இறைவன் திருவடிகளை அணுகின் அது பேரின்பம் பெறும் என்பதாம். புலனுணர்வின் நிலையை உணர்த்தி அன்பு நலங் கனிந்து வந்துள்ள இந்த இன்ப வாசகம் ஈண்டு உணரத்தக்கது.

வாள் ஆட்டத்தைப்பற்றிக் கூறும்பொழுது இப்படி ஒரு உறுதியுண்மையை இனிதாக உதவி யிருக்கிறார்.

பின்பு சிறிது தூரம் போகவே புதிதாக மணம் புரிந்துள்ள இளங்குமாரர்கள் குழுவைக் கண்டனர். அவர்களுடைய இளமை எழில்களையும், இயல்புகளையும் நோக்கி உளமிக மகிழ்ந்தார்.

"வெம்சுடர் உருவிற்று அன்ன மேனியர்" இளம் சூரியர்கள் உருவெடுத்து வந்தன போல் துலங்கிநின்றனர் என்றவாறு.

வேண்டிற்று ஈயும் நெஞ்சினர் என்றதனால் இலம் என்னாது ஈயும் குலமக்கள் என்பது புலனாயது. "ஈசன் கண்ணின் நெருப்புறு அனங்கன் அன்னார்" என்றது அங்கங்களின் அழகமைதிகள் அறிய வந்தது. மதனனும் நாணும் மாண்பினர் என்றவாறு.

புது மணம் புணர்ந்த கலியாணக் காளைகள் ஆதலால் இரவில் அனுபவித்த இன்பச் செய்திகள் இனிது தெரிய நின்றார். பெண்ணினம் போலவே ஆண் இனங்களும் பேரழகுடையராய் அங்கே பெருகி யிருந்தனர் என்பதாம்.

இங்ஙனம் பலவகையான காட்சிகளைப் பார்த்துக்கொண்டே இராச வீதியுள் புகுந்தார். புறநகர் கடந்து, கடைவீதிகளைத் தாண்டி, நெடுந்தெரு நீங்கி, அகநகர் அகன்று சனகமன்னன் இருக்கும் இடத்தை அடைந்தார். அடையவே எங்கணும் விழுமிய மாளிகைகள் வானளாவி எழில் மிகுந்து தோன்றின. பூம்பொழில்களும், பொய்கைத் தடங்களும், செய்குன்றுகளும் திருமலிந்து திகழ்ந்தன. இருமருங்கும் நோக்கிப் பெருமகிழ்ச்சியுடன் மூவரும் இனிது நடந்து சென்றார்.

## கன்னிமாடம் கண்டது

அரண்மனை அயலிலேயே சிறந்த மணி மாளிகையைக் கண்டார். அதிசய அழகுடன் விளங்கியது. அருகு நெருங்கினார். தேவ நிலையமாய் நிலவி நின்ற அதனை ஆவலோடு நோக்கினார்.

அதுதான் தனது தோழிகளோடு சீதை அமர்ந்திருக்கும் சோதி மணி மாளிகை. கன்னிப்பருவம் உடையளாய்ச் சிறந்த பாதுகாவலுடன் அரசிளங்குமரி மன்னியுள்ள இடம் ஆகலான் அது கன்னிமாடம் என நின்றது. பசிய பூஞ்சோலை யிடையே இனிய நீர் நிலைகள் புடைசூழப் பல வகையான செல்வ வசதிகளுடன் எழில் சுரந்து நின்ற அவ்விழுமிய மாளிகையில் பாங்கியர் பணிபுரியப் பெருமித நிலையில் சானகி மருவியிருந்தாள்.

இதிலிருந்துதான் தொடர்ந்து தேவி காவியத்தில் இடம் பெறுகின்றாள். யாவும் மங்களமாய் மருவிவரப் பொன் என்னும் மங்கல மொழியால் முன்னுறக் கவி தொடங்கி யிருக்கிறார்.

பொன்னின் சோதி போதினின் நாற்றம் பொலிவேபோல்
தென்னுண் தேனின் தீஞ்சுவை செஞ்சொற் கவியின்பம்
கன்னிம் மாடத் தும்பரின் மாடே களிபேடோடு
அன்னம் ஆடு முன்துறை கண்டாங் கயல் நின்றார்.

(மிதிலைக் காட்சிப் படலம், 23)

சீதையின் உருவ நலனை உணர்த்திய படி யிது.

இது வரை பலவகைக் காட்சிகளைக் கண்டுவந்த மூவரையும் கவி இங்கே கொண்டுவந்து நிறுத்தியுள்ளார். இந்நிலை காவியத்தின் பலநிலைகளுக்குத் தனிநிலைய மாயது. மற்ற இடங்களைப் போலவே ஈண்டும் பொதுநோக்காகப் பார்த்துப் போயினர் என்றால் கதை சுவை குறைந்து போயிருக்கும். கதையைச் சுவை செய்ய வந்துள்ள சீதையைக் கவி இங்கே சுவையாகக்காட்டியிருக்கிறார். யாரால் காவியக் கதை சீவிய அமுதமாய்ச் செழித்துச் சிறந்துள்ளதோ அந்தக் கதாநாயகியினுடைய அழகமைதிகளையும், குணநலங்களையும் உவந்து கூறுதற்குக் கவி ஈண்டு இடம் அமைத்துக்கொண்டிருக்கும் விநயம் வியந்து நோக்கத் தக்கது.

சானகியின் மேனி நிலைக்கு நான்கு உவமானங்கள் வந்துள்ளன. மேலே குறித்துள்ள கவியைக் கூர்ந்து கவனியுங்கள். மொழிகள் தெளிவாய் வெளிப்பட்டு நிற்பினும் பொருள் இனிது விளங்காமல் ஒளிமறைவா யுள்ளது. பொன்னின் சோதி முதலியவற்றை அன்னங்களுக்கு உவமையாக்கி உரையெழுதியும் உளர்.

பொன் பூ தேன் கவி என்னும் இந்நான்கும் உயர்ந்த இனிய பொருள்கள். இவற்றை மட்டும் நேரே கூறுமல் இவற்றின் உயிர்கள்போல் சாரமாயுள்ள சுவைப் பண்புகளை உரைத்திருக்கிறார். அவை புறநலனும் அகநிலையும் புலனறிய வந்தன.

பொன், போது, தேன், கவி, மாடத்தையும்; சோதி, நாற்றம், சுவை, இன்பம் அம்மாடத்துள் இருக்கும் சீதையையும் சுட்டி நின்றன என ஒட்டிக்காணலாம். ஆயினும், சொன்ன உவமைகளெல்லாம் கன்னிக்கேகொண்டு கருதியுணர்தலே தகுதியாகும். போல்என்னும் உவமை உருபைச் சோதிமுதலிய நான்கினேடும் தனித்தனியே கூட்டிக்கொள்ளும்படி இடையே நாட்டி வைத்தார். பொலிவு = செழுமை, தெளிவு, மலர்ச்சி.

தென் உண் தேன் என்றது இனிமை நிறைந்த உயர்ந்த செந்தேன் என்றவாறு. தென் = அழகு, இனிமை. கவிக்கும் தேனுக்கும் அடை கொடுத்தது அவற்றின் இயற்கை நலம் தெரிய.

பிராட்டியின் திருமேனி செந்நிறம் உடையது ஆதலின் பொன்னின் சோதி என முன்னுறக் குறித்தார். அம்மேனியில் இயற்கையாக நறுமணம் நிறைந்து பரிமளம் கமழ்ந்திருந்தமையால் போதின் நாற்றம் என்றார். நாற்றம் = நறுமணம். போது

என்றது இங்கே சண்பகப்பூவை. சிறந்த மகளிருடைய மெய்யில் சண்பகப்பூவின் மணம் இன்புறக் கமழும் என்ப. பூவனைய மெல்லிய திருமேனியில் நல்ல பரிமளம் புல்லியுள்ள தென்க.

தேனின் தீஞ்சுவை இனிமைக்கும் தண்மைக்கும் இனமாய் நின்றது. செஞ்சொற் கவி என்றது செவ்விய இனிய மொழிகள் அமைந்த விழுமிய செய்யுள்களை. புன்சொற்களை யுடைய கவிகளும் உளவாகலான் அவற்றை விலக்குதற்குச் செஞ்சொற்கவி என்றார். செஞ்சொல் ஆவது சீர்மை நீர்மை கூர்மை நேர்மை முதலிய செவ்விய பண்புகளுடைய பதங்கள். ஓதுங்கால் செவிக்கும், உணருங்கால் சிந்தைக்கும் இனியவாய மதுர மொழிகளே செஞ்சொல் என்க.

"அஞ்சிலோதி யார்புனைந்த செஞ்சொல்மாலை சூடினன்"
என்றமையால் அதன்பாடு அறியலாகும். (சிந்தாமணி, 691)

இத்தகைய செவ்விய சொற்களால் அமைந்த திவ்விய கவிகள் உணர்வுக்கு உயர் பேரின்பமாய்ச் சுவைபயந்துள்ளமையான் கவி இன்பம் அவி இன்பத்தினும் சிறந்ததாய் அமரரும் புகழ நின்றது. செயிர்கள் களைந்து உயிர்களை உயர்த்தி உய்தி தருதலின் கவியின் தலைமையும் தெய்வீக நிலைமையும் தெரியலாகும்.

பொன் ஒளி கண்ணுக்கும், பூமணம் மூக்கிற்கும், தேன் சுவை நாக்கிற்கும் இனிமையாதல்போல் கவியின்பம் அறிவிற்கு ஆனந்தமாம். ஆகவே அது ஆன்மபோகமாய் மேன்மை மிகுந்துள்ளமை விளங்கி நின்றது.

இராமபிரானுடைய ஐம்புலன்களுக்கும் ஆறறிவுக்கும் பேரின்ப நிலையமாய்ப் பெருகிச் சீதை என்னும் பெயரோடு ஒரு பெண்ணமுதம் கன்னி மாடத்தில் மன்னியிருந்தது என்பதாம்.

பொன்னின் சோதி முதலியன புறப்புலன்களுக்கு உரியனவாகலான் அவை மூன்றும் முன்னுற வந்தன; கவியின்பம் அகவுணர்வின் சுவையாதலின் அதன் தகவும், தன்மையும் அறிய இறுதியில் தனியே நின்றது.

அவயவங்களின் சமுதாய சோபையும், திருமேனியின் திவ்விய சவுந்தரியமும், இனிய குணநலங்களும் அதிசய நிலையில் அமைந்துள்ளமையைத் துதி செய்து தொழுத படியிது.

சீதையின் பண்புடைமை எண்ணுந்தோறும் இன்பமீதூர்ந்து புண்ணியம் சுரந்து, புனிதம் வளர்ந்து, போதம் விளைந்து வருதலால் கவிச்சுவையோடு அது கருதவந்தது.

“நறைபழுத்த துறைத்தீந் தமிழின் ஒழுகுநறுஞ் சுவையே!” என்று மீனாட்சியம்மையைத் துதித்துப் போற்றி யிருக்கின்றார்.

“ அளிக்கும் செழுந்தமிழ்த் தெள்ளமு தார்ந்துன் அருட்கடலில்
குளிக்கும் படிக்கென்று கூடுங்கொலோ ? உளங் கொண்டுதெள்ளித்
தெளிக்கும் பனுவற் புலவோர் கவிமழை சிந்தக்கண்டு
களிக்கும் கலாப மயிலே சகல கலாவல்லியே.”

(சகலகலாவல்லிமாலை, 3)

கார்முகிலைக் கண்டு கலாபமயில் களித்தல்போல் செஞ்சொற் கவியை நோக்கிச் சரசுவதி தேவி உள்ளங் களித்து உவந்தருளும் என இஃதுணர்த்தி யுள்ளமையான் அதன் உயர் நிலை புலனும்.

கவி யின்பம் இன்னதுதான் என்று எல்லார்க்கும் தெளிவாக எவரும் காட்ட முடியாது. அவரவருடைய உணர்வு நலனுக்குத் தக்கபடி உள்ளே புலனாய் அது உவகை விளைத்து மிளிரும். கல்வி நலனோடு உள்ளப் பண்பும் வாய்ந்த நல்ல மதிமான்களே கவியின் சுவையை இனிது நுகர்ந்து களிமீக்கூர்வர்.

கவி என்பது பலவகை இரசங்களை யுடையது. அன்பு அருள் காதல் வீரம் சோகம் வினோதம் முதலிய பண்புகள் பல படிந்து இன்ப நலங்கள் சுரந்து கவிகள் தனியே இனிமை கனிந்து நிற்கும்.

“ ஆதிமுச் சங்கத்து அருந்தமிழ்க் கவிஞர்
ஓதிய செய்யுள் உலவாப் பெரும்பொருள்
வாளாக் கேட்கும் தோளாச் செவிக்கும்
கேட்டும் தெரியா ஓட்டை நெஞ்சினுக்கும்
நுழையா ; ஆதலின், நுழைபுலன் தன்னொடும்
விழைவார்க்கு உரைக்க வேண்டுவர் தெரிந்தே.”

என்றதனால் கவிநுகர்ச்சிக்கு நுழைவும் விழைவும் வேண்டும் என்பது பெறும். அந்நுகர்வு பேரானந்தமாய்ப் பெருகி வருதலின் யாண்டும் பெயர்வரிய இயல்பினதாய் உயர்பரமாயது.

“ பாட்டு உவந்து பரிசளிக்கும் பாலன் ” என முருகப்பிரானும், “ பாட்டுக்கு உருகும் பரமன் ” எனச் சிவபெருமானும்

பாராட்டப்பட்டுள்ளனர். ஆகவே செய்யுள் இன்பம் தெய்வ போகம் என்பது தெளிவாயது.

மாணிக்கவாசகர் பாடிய கவிகளைப் பரமசிவம் தன் கையாலேயே எழுதிக்கொண்டது என்னும் செய்தியும் உள்ளது.

"நலமலி வாதவூர் நல்லிசைப் புலவ,
மனம்கின் றுருக்கும் மதுர வாசக,
கலங்குறு புலனெறி விலங்குறு வீர,
திங்கள் வார்சடைத் தெய்வ நாயகன்
ஒருகலை எனும் உணரான் ; அஃதான்று,
கைகளோ முறிபடுங் கைகள் ; காணின்
கண்களோ ஒன்று காலையிற் காணும்,
மாலையில் ஒன்று வயங்கித் தோன்றும்,
பழிப்பின் ஒன்று விழிப்பின் எரியும்,
ஆயினும் தன்னை நீபுகழ்ந் துரைத்த
பழுதில் செய்யுள் எழுதினன் அதனால்
புகழ்ச்சி விருப்பன் போலும்
இகழ்ச்சி அறியா என்பணி வானே."
(நால்வர் நான்மணிமாலை, 24)

இது, மாணிக்கவாசகரை முன்னிலைப்படுத்திச் சிவப்பிரகாசர் பாடியது. இந்தக் கவியின் சொல்நயங்களையும், பொருட் சுவைகளையும் ஊன்றித் தெரிந்தால் உள்ளத்தில் தோன்றும் உவகை நிலையை உணர்ந்துகொள்ளலாம். கவி இன்பம் எப்படியிருக்கும்? அதன் சுவைகள் எவ்வழிகளிலெல்லாம் துளித்து எவ்வாறு சுவை சுரந்துவரும்? என்பதனை இப்பாடல் ஓரளவு உணர்த்தியருளும்.

"தமிழ்ச் செஞ் சொற்களால் பல் வேதமும் மொழிந்தான்" என நம்மாழ்வாரைக் குறித்தும், அவருடைய கவிகளைப் பலவாறு புகழ்ந்தும் நம் கவியரசர் பாராட்டியிருத்தலால், கவியின் சுவையும் தகவும் உணர்ந்து அந்த உணர்வின்ப வெள்ளத்தில் உள்ளம் உருகி உள்ளே ஆழ்ந்து இவர் திளைத்துள்ளமை தெளிவாம்.

"உயிர் உருக்கும், புக்குஉணர்வுருக்கும், உடலத்தின் உள்ள
செயிர்உருக் கொண்டநம் தீங்குருக்கும், திருடித்திருடித்
தயிர், உருக்குந் நெய்யொடு உண்டான் அடிச்சட கோபன்சந்தோடு
அயிர் உருக்கும் பொருநற் குருகூர் எந்தை அந்தமிழே"
(சடகோபரந்தாதி)

என்ற அனுபவ மொழிகளால் இவரது கவியினுகர்வும், சுவையுணர் தகவும், தெளிவுற நின்றன. உருக்கும் நெய் என்றது வெண்ணெயை. இனிமேல் உருக்கவுள்ள நெய் என்றவாறு.

புவியின்பங்கள் எவற்றினும் கவியின்பமே தலைசிறந்தது ஆகலான் சிறந்த தலைவிக்கு உயர்ந்த உவமையாக அதனை உவந்து கூறினர். அந்த இன்ப நலனை நம் கம்பருடைய கவிகளிடமே கண்டு கண்டு களிபேராவலோடு உலகம் நுகர்ந்து வருகின்றது.

பொன்னும் பூவும் *பின்னும் வந்துள்ளன.

கன்னி மாடத்தின் முன்னே விரிந்து பரந்துள்ள வெளியிடத்தில் குளிர்ந்த நீர் நிலை ஒன்று அழகாக அமைக்கப்பட்டிருந்தது. பசிய பூஞ்செடிகள் புடைசூழ இடையே இனிது பொலிந்து விளங்கிய அத்தடாகத்தில் அன்னச் சேவல்கள் தம் பேடைகளோடு உல்லாசமாய் நீந்தி ஊடி உலாவி விளையாடிக் கொண்டிருந்தன. அந்த அன்னங்களுடைய நன்னயக் காட்சிகளை நயந்து நோக்கி மூவரும் அங்கே வியந்து நின்றார்.

மாடத்து உம்பரின் மாடே என்றது மேல் மாடத்தின் பக்கத்தே என்றவாறு. மேல்வீடாகிய உபரிகையோடு கூடியிருந்தமையால் அதன் உயர் நிலை தெரிய உரைத்தார். உம்பர் மாடத்தின் மாடே என்று கூட்டி நோக்கலாம். மாடு=பக்கம்.

கழிபேடு=கன்னிமை கழிந்த பெட்டை அன்னம். பெருங் காதலுடைய பேடு எனவுமாம். களி என்று பாடம் கொண்டால் காதல் களிப்புடையது எனப் பொருள் செய்துகொள்க.

தன் பெடையோடு ஆண் அன்னம் களித்து விளையாடுகின்ற முன்துறையை உடையது என்றது, அம்மாடத்தின் இன்பக் காட்சியும் இனிய நிகழ்ச்சியும் தெரிய வந்தது. முன்றிலில் உலாவும் அன்னப்பேடு போல் உள்ளேயிருக்கும் கன்னிப்பெண்ணும் தன் துணையோடு கூடி மகிழும் காலம் வந்து அயலே காலூன்றியுள்ளது என்பதைக் கருத்தூன்றி யுணர்ந்து கொள்ளவும் அது குருத்தூன்றி நின்றது.

துறை=நீர் நிலை. மாடத்தின் பின் பக்கம் உள்ள நீர் நிலைக்குப் பின் துறை என்றுபேர் ஆதலால் முன்புறம் இருந்ததை முன்துறை என்றார். கண்டு என்றது காட்சியின் மாட்சி காண.

* பாலகாண்டம், கோலம் காண் படலம், 28.

இராச வீதியில் நேரே நடந்துவந்தவர் கன்னிமாடம் வரவும் அதன் எழில் நிலைகளை விழி களிப்ப நோக்கி முன்றில் அயலே நின்றார் என்க.

**சானகியின் மேன்மையை மேலும் தொடர்ந்து பேசுகின்றார்.**

செப்புங் காலைச் செங்கம லத்தோன் முதல்யாரும்
எப்பெண் பாலும் கொண்டுவ மிப்போர் உவமிக்கும்
அப்பெண் தானே யாயின போதிங் கயல்வேறோர்
ஒப்பெங் கேகொண் டெவ்வகை நாடி உரைசெய்வேம்? (1)

உமையாள் ஒக்கும் மங்கையர் உச்சிக் கரம்வைக்கும்
கமையாள் மேனி கண்டவர் காட்சிக் கரைகாணார்
இமையா நாட்டம் பெற்றிலம் என்றார் இருகண்ணால்
அமையா தென்றார் அந்தர வானத் தவரெல்லாம். (2)

வென்றம் மானைத் தாரயில் வேலும் கொலைவாளும்
பின்றம் மானப் பேர்கயல் அஞ்சப் பிறழ்கண்ணாள்
குன்றம் ஆடக் கோவின் அளிக்கும் கடலன்றி
அன்றம் மாடத்து உம்பர் அளிக்கும் அமுதன்னாள். (3)

அனையாள் மேனி கண்டபின் அண்டத் தரசாளும்
வினையோர் மேவும் மேனகை யாதி மிளிர்வேற்கண்
இனையோர் உள்ளத் தின்னலி னோர்தம் முகம் என்னும்
பனிதோய் வானின் வெண்மதிக் கென்றும் பகலன்றே. (4)

மலர்மேல் நின்றிம் மங்கையிவ் வையத் திடைவைகப்
பலகா லுந்தம் மெய்ந்நனி வாடும் படிநோற்றார்
அலகோ இல்லா அந்தணரோ? நல் லறமேயோ?
உலகோ? வானோ? உம்பர்கொ லோ?ஈது உணரேமால்.

தன்னேர் இல்லா மங்கையர் செங்கைத் தளிர்மானே
அன்னே தேனே ஆரமிர் தேயென் றடிபோற்றி
முன்னே முன்னே மொய்ம்மலர் தூவி முறைசாரப்
பொன்னே சூழும் பூவின் ஒதுங்கிப் பொலிகின்றாள். (6)

பொன்சேர் மென்காற் கிண்கிணி ஆரம் புனையாரம்
கொன்சேர் அல்குன் மேகலை தாங்கிக் கொடியன்னார்
தன்சேர் கோலத் தின்னெழில் காணச் சதகோடி
மின்சே விக்க மின்னர சென்னும் படிநின்றாள். (7)

கொல்லும் வேலும் கூற்றமும் என்னும் இவையெல்லாம்
வெல்லும் வெல்லும் என்ன மதர்க்கும் விழிகொண்டாள்
சொல்லும் தன்மைத் தன்றது குன்றும் சுவரும்திண்
கல்லும் புல்லும் கண்டுரு கப்பெண் கனிநின்றாள். (8)

**(மிதிலைக் காட்சிப் படலம், 25-32)**

இந்தப் பாடல்களை ஊன்றிப் படித்தால் சீதையைக்குறித்து உரைத்துள்ள அதிசய அமைதிகளை உணர்ந்துகொள்ளலாம்.

கவி கருதிய எண்ணங்கள் மொழிகள் வழியே வெளியாய் உயிர்களுக்கு உவகையை விளைத்து ஒளிசெய்து உலாவுகின்றன. குறித்த பொருளை எப்படியெல்லாம் இனிமை கனிய விளக்க வேண்டுமோ அப்படியே அன்பு ததும்ப அருளி வருகின்றார். உரைகளில் தருக்க முறைகளும், தத்துவ நிலைகளும், பத்திச் சுவையும், இலக்கண நயங்களும், உத்தி அலங்காரங்களும், வித்தக விளைவுகளும் விரவி மிளிர்கின்றன.

1. கவி இன்பம், பொன்சோதி, தேன்சுவை என ஏதேதோ அதிசய வசனங்களைப் பேசித் துதி செய்கின்றீர்! எங்களுக்குத் தெளிவாக விளக்கும்படி பேரழகுடைய யாரையேனும் கேடெடுத்துக் காட்டிச் சீதை இப்படி இருப்பாள் என ஒப்பனையாகச் சொல்லலாகாதா? என்று எதிர்வினவினார்க்குப் பதில் உரைத்தது போல் "செப்பும் காலை" என்னும் கவியைச் செப்பியிருக்கிறார்.

உலகத்தில் சிறந்த அழகுடைய மகளிரைக் குறித்து வியந்து பேசுங்கால் 'அவள் இலட்சுமியைப் போலிருப்பாள்' என்று அனைவரும் புகழ்ந்து சொல்வது வழக்கம்; அந்தத் திருமகளே சீதையாய் உருவமைந்து இங்கே வந்திருக்கிறாள்; ஆனபின் இவளுக்கு வேறு யாரை யான் உவமை எடுத்துச் சொல்லுவேன்? என்று உள்ளம் தடுமாறி உரையாடிய படியாயிது உருக்கொண்டுளது. "ஒப்பு எங்கே கொண்டு எவ்வகை நாடி உரைசெய்வேம்" என்றதனால் சீதைக்கு ஒப்பு எங்கும் கிடையாதென்பது தெளிவாய் நின்றது.

யாண்டும் ஒப்பு இல்லையாயினும் ஈண்டு உற்ற உருவ நிலையை யாவது செவ்வையாக நாங்கள் உணர்ந்துகொள்ளும்படி உரைத்தருளுமே! எனின், அதுவும் முடியாது என்பார் "எவ்வகை நாடி உரை செய்வேம்" என ஏலாமையை வெளிப்படுத்தி இரங்கி நின்றார். ஒருமையில் முடியாது பன்மையில் குறித்தது, தான் மட்டும் அன்று வேறு எவராலும் இயலாது எனத் தம் அனுபவத்திலிருந்து அறிஞினம் தழுவித் துணிவுரை தந்தார்.

ஒப்பற்ற அந்தத் திவ்விய சவுந்தரியத்தின் செவ்விய நிலையை யாராலும் எவ்வகையாலும் அளவிட்டுரைத்தல் அரிதென்பதாம்.

ஆகவே, திருவே! என் தெய்வமே! என்று திசை நோக்கித் தொழுது நிற்பதைத் தவிரப் புலமை வலிகொண்டு நிலைமையைப் புகலப் புகுதல் மிகவும் தவறாம் என்பது கருத்து. இங்ஙனம் எழில் நிலையைக் குறித்துவிட்டுப் பின்பு குணவமைதியை உரைக்கின்றார்.

2. உமாதேவி, சரசுவதி என்னும் பராசத்திகள் சீதையின் அமைதியையும் பொறுமையையும் நினைந்து அதிசயித்து இரு கைகளையும் கூப்பி உரிமையுடன் தொழுது உவந்து துதி செய்துள்ளார் என்பார், "உமையாள் ஒக்கும் மங்கையர் உச்சிக் கரம் வைக்கும் கமையாள்" என்றார். கமை=பொறுமை. கரம் உச்சி வைத்தல் கைகளைத் தலைமேல் தூக்கித் தொழுதல்.

பரமபதமாகிய வைகுண்டத்தில் திவ்விய போகங்களை நுகர்ந்துகொண்டு உல்லாசமாய் உவந்து இராமல், உலகம் உய்யும் பொருட்டுத் தன்னுடைய அவ்வெல்லா இன்ப நலங்களையும் துறந்துவிட்டு இம்மண்ணில் வந்து தோன்றி எண்ணில்லாத பல அல்லல்களை இனி அனுபவிக்கத் துணிந்து அமைதியுற்றிருத்தலால் கமையாள் என உமையாளும் உவந்துபோற்ற நின்றாள் என்க. நிறையினும் பொறையைக் குறித்தது சிறையிருந்து ஆற்றும் நிலைகளையெல்லாம் முன்னுற நினைந்துகொள்ள வந்தது.

"நிலம்போல் பொறுக்கும் நிலைமை தெரிய
அலம்போழ் வழியே அவனியில் எழுந்தாள்"

என அகிலமும் புகழ இவள் அமைதியுற்றுள்ளமை பின்னே அறியலாகும். தாய் எனத் தாங்கும் தயவினள் என்றவாறு.

சானகியின் மேனியழகை முழுவதும் கண்டு மகிழ இமையா நாட்டம் பெற்றிலமே என்று வையத்தவர் வருந்தினர்; இமையாத விழிகளையுடைய வானத்தவர் இருகண்ணால் அமையாதே! என்று ஏங்கி நின்றார். எவ்வளவு விழிகளுக்கும் நிலை காண முடியாதபடி அவ்வெழில் வெள்ளம் பெருகி நிமிர்ந்து நெடிதோங்கியுள்ளதென்பதாம்.

3. மானும் வேலும் வாளும் மீனும் மான விளங்கும் கண்ணழகுடைய இப்பெண்ணமுதத்தைக் கன்னிமாடம் பெற்றுக் காட்சியுற்றிருந்தது. முன்னம் உண்ணமுதம் அளித்த பாற்

கடலும் இன்ன மாடத்தின் ஏற்றம் கண்டு இன்னலுழந்து ஏங்கி நின்றது. தன்னிடம் இருக்க என்ன தவம் செய்ததோ? என்பதாம்.

4. மேனகை திலோத்தமை ஊர்வசி அரம்பை என்னும் பேரழகுடைய வான மங்கையரனைவரும் இச்சானகி தோன்றவே கதிரவன் எதிர்நின்ற மதி என மங்கினர்.

5. இந்தப் பெண்ணரசி இம் மண்ணுலகில் வந்தது யார் செய்த புண்ணியமோ? என எண்ணி வியக்கின்றார். அருந் தவமுடைய முனிவர்களும், தருமமும், வையமும், வானமும், தேவர்கள் யாவரும் உய்யும்படி இச் செய்யவள் இங்கே உதயமாகியுள்ளாள் என்பதாம். அலகு = அளவு. அலகு இல்லா என்றது எண்ணிறந்த அருந்தவர்கள் ஒருங்குகூடி நெடுநாளாகச் செய்த புண்ணியத்தின் பயனே என எண்ண வந்தது. சீதையின் தோற்றத்தால் இவ்வுலகில் தோன்றும் நலங்களை உணர்த்தியபடி யிது.

6. பேரெழிலுடைய மங்கையர் தோழியராய்நின்று ஊழியம் புரியச் சானகி அங்கு உலாவியிருந்த நிலையை இதில் உணர்த்தியிருக்கிறார். நடந்து செல்லும் இடங்களில் எல்லாம் முதலில் நல்ல பட்டாடையை விரித்து அதன்மேல் மெல்லிய பூக்களைச் சிதறிப் பாங்கியர் பாங்கு நின்று சீதையை இனிது உலாவி வரும்படி செய்வர் என்க. "ஒதுங்கிப் பொலிகின்றாள்" என்றது அரசகுமரி அங்கே உல்லாசமாய் உலாவி நின்ற செல்லமும், சிறப்பும், சீர்மையும் தெரிய வந்தது. ஒதுங்கல் = நடத்தல்.

அன்னே! தேனே! ஆரமிர்தே என்று அடிபோற்றி என்றதனால் தோழிகள் ஆர்வமுடன் உபசரித்து ஆதரித்து வந்த மரியாதை மதிப்புகள் அறிய நின்றன.

கரும்பே தேனே அமிர்தே காமர் மணியாழே
அரும்பார் மலர்மேல் அணங்கே மழலை அன்னம்மே
சுரும்பார் சோலை மயிலே குயிலே சுடர்வீசும்
பெரும்பூண் மன்னன் பாவாய் பூவாய் பிணைமானே.
அம்மெல் அனிச்சம் மலரும் அன்னத் தூவியும்
வெம்மை யாமென் றஞ்சி மெல்ல மிதியாத
பொம்மென் இலவப் பூம்போ தனநின் னடிபோற்றி
இம்மென் கலையார் இடுவென் றேத்த ஒதுங்கினாள்.

(சீவக சிந்தாமணி)

இலக்கணை என்னும் அரசிளங் குமரியைத் தோழியர் இங்ஙனம் பேணி வந்தனர் என்றவாறு. இந்தக் கவிகளை நம் கவியோடு இணைத்து நோக்கி இனநிலை தெரிக. சொல்லும் பொருளும் உள்ளுறை நிலையும் ஒருமையுற்றுள்ளமையால் உரிமை தெரிய வந்தன. சந்த நிலை கண்டு வந்தவழி காண்க.

7. "சதகோடி மின்சேவிக்க மின் அரசு என்னும் படி நின்றாள்" என்றது உடனிருந்த தொழிகளுடைய இளமை எழில்களும், தலைவியின் உயர்நிலையும் ஒருங்குணர வந்தது. சதம் = நூறு.

மின்னல் கொடிகள் போல் இன்னொளி வாய்ந்து பேரழகு நிறைந்த தருணமங்கையர் பலர் புடை சூழ்ந்து பணி புரிந்து போற்றி வர அவ்வழகிகளுக் கெல்லாம் தலைமை எழிலோடு சானகி கருணை கூர்ந்து நிலவி யிருந்தாள் என்பதாம்.

சனக மன்னனது சுற்றத்தைச் சார்ந்த சிற்றரசர் சிலருடைய அருமைப்புதல்வியரும் சீதைக்கு உரிமைத் தோழியராய் உழையமர்ந்து உழுவலன்புடன் தொழில் புரிந்திருந்தனர் என்க.

அறிவுக்கலைகளை ஆராய்ந்து தெய்வத் தேசுடன் நிலவியிருந்த அந்த மாதரசியின் மகிமை சொல்லி முடியாது; காணினும் கருதினும் எவரையும் பரவசப்படுத்தும் அழகுத் தெய்வமாய் உலகம் தலையுற அங்கே ஒளி செய்திருந்தது. அவ்வெழில் உருவம் எவ்வுயிர்க்கும் கழிபேருவகையாய்க் கனிந்து நின்றது என்றார்.

"கல்லும் புல்லும் கண்டு உருகப் பெண்கனி நின்றாள்"

இதுவரை சீதையைக் குறித்துப் பேசிவந்தவர் முடிவில் இப்படிச் சொல்லி முடித்திருக்கிறார். இந்த வாசகம் பரவசமாய் உள்ளம் உருகி வந்துள்ளது. உணர்வு நிலை உரை கடந்து நின்றது.

பகுத்தறிவில்லாத கல் முதலிய சடப்பொருள்களே கரைந்து உருகும் என்றது சீதையின் அதிசயற்புத நிலையை உணர்த்தியது. இக் குறிப்புரை கூர்ந்து சிந்தித்து ஓர்ந்துகொள்ள வுரியது.

உலகில் உள்ள பொருள்களெல்லாம் திருவின் ஒளியால் செழித்து விளங்குகின்றன. திருவருள் மருவாது ஒழியின் யாவும் இருள்படிந்து இழிந்து கழியும். எவற்றிற்கும் இங்ஙனம் உயிரொளியாய் உயர்ந்துள்ள திருவே சீதையாய் ஈண்டு உரு

வாகி வந்துள்ளாள் ஆதலால் உலகப் பொருள்களெல்லாம் அவள்பால் உரிமை மீதூர்ந்து அவ்வாறு உருகி நின்றன என்க.

அசேதனங்களும் சேதனங்களாய்த் திகழத் திகழ்ந்துநின்ற திவ்வியமான அதிசய அழகினள் என்பதாம்.

கல்லும் புல்லும் குன்றும் சுவரும் உருகும் என்றதனால் மனித வருக்கம் உருகி நிற்கும் நிலை சொல்லவேண்டாதாயிற்று.

எவரையும் தன் வசப்படுத்தும் தன்மை பெண்மையில் பெருகியுள்ளது; அவ்வுண்மையின் உயர்நிலையை அறிவுறுத்த உயிரில் பொருள்களும் உருகின என மருவிக்கூறினர்.

நித்தில முலையி னார்தம் நெடுங்கணால் நோக்கப்பெற்றும்
கைத்தலம் தீண்டப் பெற்றும் கனிந்தன மலர்ந்த காண்க;
வைத்தலர் கொய்யத் தாழ்ந்த மரம்உயிர் இல்லை என்பார்
பித்தல ராயின் பேய்கள் என்றலால் பேச லாமோ.

(சீவக சிந்தாமணி, 1907)

பெண்கள் கண்களால் நோக்கவே கனியாத மரங்கள் கனிந்தன; மலராதன மலர்ந்தன; ஆதலின் மரங்களுக்கு உயிர் இல்லை என்பாரைப் பித்தர் அல்லது பேயர் என எள்ளித் தள்ளிவிட வேண்டும் என இஃது உணர்த்தி நிற்றல் காண்க.

இனிய பெண்களின் கனிவு நிலை இதனால் காணலாகும்.

இத்தகைய பெண்களுக்கெல்லாம் தனிநாயகமாய்த் தழைத்து வந்துள்ள சீதை பெண்கனி என மண் களிகொள்ள மருவி நின்றாள். பருவம் நிரம்பிப் பண்பு பழுத்து இனிமை சுரந்து இன்ப நிலையமா யுள்ளமையால் கனி என்றார்.

இவ்வண்ணம் திவ்விய நிலையில் செவ்வி வாய்ந்துள்ள பெண்ணரசை எங்கள் கண்ணரசு காணின் என்ன நேருமோ? என மேலே கவி எண்ணி அயர்கின்றார்.

வெங்களி விழிக்கொரு விழவு மாயவர்
கண்களிற் காணவே களிப்பு நல்கலால்
மங்கையர்க்கு இனியதோர் மருந்து மாயவள்
எங்கள்நா யகற்கினி யாவது ஆங்கொலோ ?

(மிதிலைக்காட்சி, 33)

காண்கின்ற கண்களுக்கு ஒரு திருவிழாவைப்போல் பெருமகிழ்ச்சிக்கு இடமான கட்டழகிகளும் சீதையைக்காண்பாராயின்

உள்ளம் களித்து உயிர் உருகி நிற்பர் ; ஆகவே அழகிய மங்கையர்க்கு ஓர் இனிய அமுதமாய் அவள் தனியமைந்துள்ளாள்; ஒத்த பெண்களுக்கே இவ்வாறாயின், எங்கள் நாயகனை இராமபிரான் கண்டால் இனி யாது நிகழுமோ? எனக் கவி இதில் இரங்கியிருக்கிறார். அவன் காதல் மீக்கொண்டு மேல் நோதலுழந்து தவித்தலை ஈண்டு நுணுக்கமாக உணர்த்தி யருளினர்.

மருந்து = அமுதம். களிவிழி = காதல் களிப்புடைய கண்கள். விழவு = உற்சவம், விழாக்கொண்டாட்டம். நல்ல காட்சியின்பங்கள் கலித்துள்ளமைக்கு ஓர் எடுத்துக்காட்டாக வந்தது.

பிறருடைய உள்ளங்களைக் கொள்ளைகொள்ள வல்ல பேரழகிகளும் சீதையைக் கண்டு உள்ளம் பறிபோய் உயிருருகி நின்றார் என்றது அப்பிராட்டியின் அற்புத அழகை ஒருவாறு உணர்ந்து கொள்ள ஓரளவு கூறியபடியாம்.

பெண்ணை ஆணும், ஆணைப் பெண்ணும் அவாவி நிற்பது இயல்பு ; அந்த இயற்கையைக் கடந்துள்ளமையால் அதிசய எழிலாய் அது துதி செய்ய நின்றது. "பெண்டிரும் ஆண்மை வெஃகிப் பேதுறு முலையினள்" எனத் திருத்தக்கதேவர் கூறியுள்ளதற்கும் இதற்கும் உள்ள வேற்றுமையை நுனித்துணர்ந்து கொள்க.

தருண மங்கையரான கட்டழகிகளைச் சுட்டியது இளமை எழில்களுக்கு நிலையமாயுள்ள அவர்தம் தலைமை கருதி.

ஆண் மயக்கிகளும் தம்மைப்போல் ஒரு பெண்ணைக் கண்டு மயங்கி ஆதரமீதூர்ந்து பேதுறலாயினர். கண்டபோதெல்லாம் உள்ளங்களித்து உவகை கூர்தலேயன்றிக் காதல்நோய்கொண்டு நோதலுறுதல் இல்லை ஆதலால், "மங்கையர்க்கு இனியது ஓர் மருந்தும் ஆயவள்" எனத் தனிமையான அந்த இனிய பாகம் தெரிய உரைத்தார். ஓர் என்றது பேர் சொல்ல முடியாமையான்.

தங்கள் இனத்திற்குத் தலைவியாய் நின்று புறத்தே பெரும் புகழ் விளைத்ததோடு அகத்தே இனிய விருந்தாய் ஆனந்தமும் அருளி யுள்ளமையான், 'மருந்தும் ஆயவள்' என இறந்தது தழுவிய எச்சவும்மை இசைந்து வந்தது.

ஆடவர் பெண்மையை அவாவும் தோளினன் என இராமனை * முன்னம் சொன்னது போல், "பெண்டிரும் ஆண்மை வெஃகும்

* இந்நூல் பக்கம் 856 வரி 6 பார்க்க.

பேரழகுடைய நங்கை" என்று சீதையை இங்கே குறியாமல் வேறு வகையாகக் கூறியிருக்கும் சீர்மை கூர்ந்து சிந்திக்கத்தக்கது. தன்னைக் கண்டு அவாவிய ஆண்கள் பின்பு பெண்களாய் அனுபவிக்க இராமன் கண்ணன் முதலிய அவதாரங்களில் வந்து அவர் தம் எண்ணங்களைப் பூர்த்தி செய்தருளினன்; சீதைக்கு அவ்வண்ணம் யாதும் இசையாது ஆகலான் அந்த உத்தமத் திருவின் புனிதமான உயர் நிலையை இங்ஙனம் உய்த்துணர உரைத்தார்.

"எங்கள் நாயகற்கு இனி யாவது ஆம் கொலோ?" என்றது மேல் ஆகப் போவதை விநயமாக அறிவித்தபடியாம்.

அடுத்து நிகழவுள்ளமையான் 'இனி' என்றார்.

பெண்ணமுதமான சீதை இராமனுக்கு உண்ணமுதமாயுள்ள அந்த உறவுரிமையை முன்னுற இங்கே நன்னயமாக உணர்த்தியருளினர். உரிய நாயகன் பிரிய நாயகியைக் காண நேரும் காட்சியை இவ்வண்ணம் காட்டியிருக்கிறார்.

பேரழகுடைய பெண்டிரும் மயங்க நின்ற பெருமாட்டி ஆடவர் திலகனை பெருமானைக் கண்டு மயங்கி ஆசைமீக்கொண்டு இனி அலமரலடைவதும் அறியவந்தது.

இயற்கையான வடிவழகையும் குணநலங்களையும் இவ்வாறு இனிமை கனிய உரைத்து வந்தவர் பின்பு செயற்கையான அணிகலங்களின் அழகு நிலைகளை அழகுற மொழிய நேர்ந்தார்.

இழைகளும் குழைகளும் இன்ன முன்னமே
மழைபொரு கண்ணிணை மடந்தை மாரொடும்
பழகிய எனினுமிப் பாவை தோன்றலால்
அழகெனும் அவையுமோர் அழகு பெற்றவே.

(மிதிலைக் காட்சி, 34)

ஆபரணங்கள் பெண்களுக்கு மிக உரியன. மண்ணைப் பூசிப் பார், பெண்ணைப் பூட்டிப்பார் என்பது இந்நாட்டுப் பழமொழி. "ஆடமைத் தோள் நல்லார்க்கு அணியும் போல்" என்றதில் நூலும் பாயிரமும் மகளிரும் அணியும் போல்வன என நன்னூலார் குறித்திருக்கிறார். "அணியில்லாக் கவிதை பணியில்லா வனிதை" என்பர் அலங்கார நூலார். பாவின் அணி பாவையர் அணி போல்வது என்னும் இன்னவாறான இயல் உரைகளினல் அரிவையர்க்கும் அணிகளுக்கும் உள்ள இயைபு தெரியலாகும்.

பொன்னை உருக்கி மணிகள் அழுத்தி இனிது இழைத்துச் செய்யப்படுதலால் அணிகள் இழைகள் என வந்தன. குழை, காதில் அணிவது. கை, கால், கழுத்து, காது மூக்கு விரல் முதலிய அவயவங்களில் அணியப்பட்டுத் தொன்று தொட்டுப் பெண்களுக்கு ஆபரணங்கள் அழகு செய்துவந்துள்ளன.

அந்த அணிகலங்களைச் சாதிமுறை பற்றிச் சீதைக்கும் அணிந்தனர்; அணியவே அவை புதிய ஒருமாறுதலையடைந்தன. என்னை? இதுவரை மங்கையரை அழகுபடுத்தி மாண்புறுத்தி வந்த அவ் அணிகள் இந்நங்கையைச் சாரவே தாமே பேரழகு பெற்றுச் சீர்மையுடன் சிறந்து திகழ்ந்தன என்க.

"அழகெனும் அவையும் ஓர் அழகு பெற்றவே"

மொழிகள் இவ்வாறு இதில் அழகுபெற்று வந்துள்ளன. அவை என்றது அணிகளை. இழைகளும் குழைகளும் என முன்னம் பல வகைகளையும் குறித்தமையால் பன்மை வந்தது. பூணுதல் அணிதல் ஆகிய காரணங்களால் பூண், அணி என ஆபரணங்கள் பெயர் பெறலாயின.

"பூண் அணி அணிகலம் பூடணம் வள்ளி
ஆயிழை கலமும் ஆபரணம்மே" (பிங்கலந்தை)

என்றதனால் நகை என இன்ஞான்று மிகவும் வழங்கிவரும் பேர் முன்னாளில் இல்லை என்று தெரிகின்றது.

அணிந்தார்க்கு அணிகள் அழகைச் செய்தலால் அவை இங்கே அழகு என வந்தன. எல்லார்க்கும் இங்ஙனம் ஆதி முதல் அழகு புரிந்து வந்த அணிகள் சீதையின் திருமேனியைச் சார்ந்து அவையே பேரழகும் பெருமகிமையும் பெற்றுவிளங்கின என்பதாம். ஆகவே அதன் தெய்வத்தேசு தெளிவாயது.

பெண்ணினங்களுக்கு இதுவரை தந்துவந்ததைப் பெண்கள் நாயகம் ஒருங்கே திரும்பிக் கொடுத்தருளியதுபோலாயது.

தெய்வத் தேசுடன் சொலித்து விளங்குகின்ற அந்தத் திவ்விய தேகத்தில் அணிகள் அமைந்து நிற்பது சாம்பூநதம் என்னும் உயர்ந்த தங்கப் பதுமையில் செப்புத் துண்டுகள் இடையிடையே வம்பாக அப்பி நிற்றல்போல் ஒப்பியிருந்தனவேயன்றி உயர் நலம் ஒன்றும் உதவவில்லை என்றவாறு.

செயற்கை அணிகள் அந்த இயற்கை வடிவழகை மறைத்து மாசுபடுத்தி நின்றன; அந்நிலையில் அம்மேனியை ஒட்டியமர்ந்து அவையே உயர் மகிமை யுடையனவாய் ஒளி பெற்றிருந்தன என்றதனால் அத் திவ்விய தேகத்தின் சீர்மையும் நீர்மையும் தெரிய நின்றன.

திருவின் உருவை ஒருவின் அருளற்றிழிவுறுகின்றன; மருவின் ஒளிபெற்றுயர்வுறுகின்றன என்க. "பூணுக்கு அழகளிக்கும் பொற்றொடி" எனத் தமயந்தியைப் புகழேந்திப் புலவர் புகழ்ந்துள்ளதும் ஈண்டு உணர்ந்து கொள்ளவேண்டும்.

அழகு தருகின்ற அணிகளும் அழகுபெறும்படி அற்புத அழகுடன் பிராட்டி அமைந்திருந்தாள் என்பதை விற்பன நலங் கனிய இங்ஙனம் விளக்கியிருக்கிறார்.

"அணிபறித்து அழகு செய்யும் அணங்கு"

(அங்கதன் தூதுப் படலம், 18)

எனப் பின்னும் கூறியுள்ளமை ஈண்டு எண்ணத்தக்கது.

இழைகளையும் குழைகளையு கழற்றிவிட்டால் களங்கம் அற்ற சந்திரன்போல் சீதை விளங்கி மிளிர்வள் என்பதாம். மதியைச் சார்ந்து மறு மாண்புற்றிருத்தல்போல் சீதையைச் சேர்ந்து அணிகள் சீர்பெற்று நின்றன என்க.

## இராமனும் சீதையும் நேரே கண்டது

தன்னை அடுத்தவற்றை யெல்லாம் இவ்வண்ணம் அழகு படுத்தி அளவிடலரிய பெருமகிமையுடன் நிலவி நின்ற சீதை மாலையில் மேல்மாடத்தில் உல்லாசமாய் உலாவிவந்தாள். வந்தவள் தெய்வாதீனமாய் வீதியை எட்டிப் பார்த்தாள். அதே சமயம் அயல் நின்ற இராமனும் இயல்பாக மேலே பார்த்தான். ஒருவரை ஒருவர் கண்டார். அவ்வளவுதான் இருவரும் ஒருசேர உயர்காதல் கொண்டார். உள்ளம் கரைந்து உணர்வு குலைந்து உயிருருகி நின்றார். அந்நிலை ஓதல் அரிது; ஆயினும் புனிதமான காதல் நலங்களைக் காட்சிப்படுத்தியிருக்கும் கவிப் படங்களை இங்கே காணவருகின்றோம். கண்ணூன்றிக் காணுங்கள்.

எண்ணரு நலத்தினாள் இனையள் நின்றுழிக்
கண்ணொடு கண்ணிணை கவ்வி ஒன்றைஒன்று
உண்ணவும் நிலைபெறாது உணர்வும் ஒன்றிட
அண்ணலும் நோக்கினான் அவளும் நோக்கினாள். (1)

நோக்கிய நோக்கெனும் நுதிகொள் வேலிணை
ஆக்கிய மதுகையான் தோளின் ஆழ்ந்தன
வீக்கிய கனைகழல் வீரன் செங்கணும்
தாக்கணங் கனையவள் தனத்தில் தைத்தவே. (2)

பருகிய நோக்கெனும் பாசத்தால் பிணித்து
ஒருவரை ஒருவர்தம் உள்ளம் ஈர்த்தலால்
வரிசிலை அண்ணலும் வாட்கண் நங்கையும்
இருவரும் மாறிப்புக் கிதயம் எய்தினர். (3)

மருங்கிலா நங்கையும் வசையில் ஐயனும்
ஒருங்கிய இரண்டுடற்கு உயிர்ஒன் றாயினர்;
கருங்கடற் பள்ளியிற் கலவி நீங்கிப்போய்ப்
பிரிந்தவர் கூடினால் பேசல் வேண்டுமோ ? (4)

அந்தமில் அழகனை அணைகி லாமையால்
பைந்தொடி ஓவியப் பாவை போன்றனள்;
சிந்தையு நிறையுமெய்ந் நலனும் பின்செல
மைந்தனும் முனியொடு மறையப் போயினன். (5)

(மிதிலைக் காட்சிப் படலம், 35-39)

இந்த ஐந்து பாசுரங்களையும் ஊன்றிப் பார்த்தால் காதலருடைய உள்ளுணர்ச்சிகளைத் தெளிவாகத் தெரிந்து கொள்ளலாம்.

பெருந்தன்மை நிறைந்த உயர்ந்த காதலர் இருவர் எதிர்ப்பட்டு ஒருவரை ஒருவர் புதிதாய்க் கண்டு உள்ளம் உருகி உயிர் கலந்துகொண்ட அரிய இனிய ஆர்வ நிலைகளை ஈண்டு நாம் நேரே பார்த்து நெஞ்சம் களிக்கின்றோம்.

வடிவழகும் குணசவுந்தரியங்களும் அருமை பெருமைகளும் அளவிடலரியனவாய் நிறைவெய்தியுள்ள பெண்ணருங்கலம் என்பார் "எண் அரும் நலத்தினள்" என்றார். இது காறும் சானகியின் அழகமைதிகளைப்பற்றிக் கூறிவந்தவர் முடிவில் இப்படிச் சொல்லி நிறுத்தியிருக்கிறார். என்னால் இயன்ற அளவு, சொற்கள் இடம் தந்த மட்டும் சொன்னேன்; முழுவதும் சொல்ல முடியாதென்பதாம்.

சீர்மை நீர்மைகளுக்கு எல்லைகாண இயலாதுஎன இசைத்து உள்ள முடிவை இவ்வாறு உணர்த்தியிருக்கிறார்.

தம் காவிய நாதனுக்கு ஆவியும் அமிர்தமுமாய் வரவுள்ள தேவி இன்ன நிலையினள் என முன்னுற நாம் எண்ணி மகிழ இவ் வண்ணம் இனிமை கனிய இசைத்தருளினர்.

உருவம் பருவம் குணம் குலம் அறிவு திரு அன்பு அருள் முதலிய பெருநலங்களெல்லாம் நிறையொத்துள்ள தலைவியும் தலைவனும் நேரே தலைப்பட்டு இனிது நோக்கி இன்பமீதூர்ந்த அரிய காதல் நிலையை இதிலிருந்து உரிமையோடு காண நேர்ந் துள்ளோம். முதலில் காட்சி நிகழ்கின்றது.

"கண்ஒடு கண்இணை கவ்வி ஒன்றை ஒன்று உண்ண"

இங்கே அக்கண்கள் பட்டுள்ள பாட்டைக் கொஞ்சம் கண் ணூன்றிப் பாருங்கள். காதல் உள்ளே நெஞ்சைக் கவ்வ, விழிகள் இங்ஙனம் வெளியே கொஞ்சிக் கவ்வி யிருக்கின்றன.

கவ்வி என்றதில் உள்ள சுவைகளை ஒவ்வொருவரும் உள் ளத்துள்ளே உணர்ந்து கொள்ளலாமேயன்றி உரைக்க முடியாது. கவ்வுதல் = பற்றுதல், கடித்தல். பற்கள் பதியாமல் பாகமாய்க் கடித்துக்கொள்ளுதலைக் கவ்வுதல் என்பர். கெண்டை மீன்கள் ஒன்றை ஒன்று கவ்விக்கொண்டு உல்லாசமாய்ச் சண்டை போடு தல் போல் அக்கண்கள் கலந்து அன்று போராடின என்க. கள்ள விழிகள் கலந்து களித்தமை உள்ள நிலைகளை உணர்த்தி நின்றது.

கண் ஒடு கண் இணை என்றது இராமன் கண்களோடு சீதை கண்கள் என்றவாறு. இணை = இரண்டு. ஒரு கண் பார்வை யாய்ச் சாய்த்து நோக்காமல் நேரேயே இருவிழிகளாலும் பருக நோக்கினர் ஆகலான் அப்பார்வை நிலை தெரிய வந்தது.

கண்கள் காணவே அகத்தே காதல் மண்டி எழுந்தது; எழவே, "சீ என்ன இது! நான் கன்னிமை காத்துவரும் அழகு?" என்று சீதை தன் நெஞ்சை அடக்கிப் பார்த்தாள்; நெறி வழு வாத இராமனும் அறிவால் ஆசையை அதட்டி அடக்கினன். யாதும் முடியவில்லை; இருவர் உள்ளங்களும் கடுங் காதலோடு கட்டுக் கடங்காமல் கைகடந்துபோய் ஒன்றை ஒன்று பருகி ஓர் உருவாய் மருவி நின்றன என்க.

"நிலை பெறாது உணர்வும் ஒன்றிட" என்றதனால் தங்கள் மனம் நிலைபெறும்படி அவர் மூண்டு முயன்றுள்ளமை புலனும். ஈண்டு உணர்வு என்றது உழுவலன்பு நிறைந்த உயிர்க் காதலை.

அண்ணலும் நோக்கினன் அவளும் நோக்கினள் என்னவே முதலில் பார்த்தவர் இன்னார் என்பது தெளிவாய் நின்றது.

இராமனும் சீதையும் என்னுமல் அண்ணலும் அவளும் என இவ்வண்ணம் வரைந்து குறித்து, அவர்தம் உண்மை யுரிமைகளையும், உயிர்நிலைகளையும் ஓர்ந்து உணர்ந்துகொள்ள.

எண்ணரிய நலங்களுடன் உயர்ந்த நிலைமையில் தலை சிறந்துள்ளமையான் அண்ணல் என்றார். என்ன நிலையில், என்ன வகையில், என்னவாறு அவன் உயர்ந்துள்ளானோ அன்னநிலையில், அன்ன வகையில், அன்னவாறே நேர் ஒத்த நிறைபெருஞ் சிறப்பினள் என்பார் அவள் என்று சுட்டிவிட்டார். இருவருடைய அளவுகளையும் உளவறிய உரைத்தபடியிது.

" தானே அவளே தமியர் காணக்
காமப் புணர்ச்சி இருவயின் ஒத்தல் "
(இறையனார் அகப்பொருள்)

என வரும் இதில் தலைவனையும், தலைவியையும் குறித்திருத்தல் அறிக. இச்சூத்திரக் கருத்து நம்பாத்திரங்களில் படிந்து பண்பமைந்து வந்துள்ளது. பொருவரும் நிலையினராய இருவரும் எதிநிகர் சமமாய் அன்பு ஒத்து இன்ப நலம் துய்க்கும் இயல்பினர் என்பதை இங்ஙனம் விளக்கி யிருக்கிறார்.

அவன் என்பது உலகறி சுட்டாய்க் கடவுளைக் குறித்து நிற்றலால் அவள் என வந்துள்ள இதன் உயர்வுணர்ந்துகொள்ளலாம்.

விண்ணிடை அமரர் விழைந்து வேண்ட
மண்ணிடை வந்த மறைமுதல் அவனே ;
பெண்ணிடை யெழுந்த பெருந்திரு இவளே ; அதனால்,
அண்ணலும் அவளும்என அமைந்திவ்
வண்ணம் வரைய வந்தனர் என்க.

மனிதருடைய எண்ணங்கள் உரைகளாலேயே உணர்ந்து கொள்ளவரும். இங்கே வாய் திறந்து ஒன்றும் பேசாமலே ஒருவர் கருத்தை ஒருவர் அறிந்துகொண்டு இராமனும் சீதையும் உள்ளங்கலந்து உயிர்க்காதல் மண்டியுள்ளார். கண்ணோக்காலேயே எண்ணோக்கங்களைக் காதலர் நன்கு உணர்ந்துகொள்வர் ஆகலான் அவர்களுக்கு வாய்ச்சொற்கள் தேவையில்லை என்பது தெரிய வந்தது. நயனபாஷை என இதனை வியனொடு புகல்வர்.

" கண்ணொடு கண்ணிணை நோக்குஒக்கின் வாய்ச்சொற்கள்
என்ன பயனும் இல." (குறள், 1100)

என்னும் இந்த அருமைத் திருக்குறளை இனிது மருவிக் கவி இதில் அழகுற அமைத்திருக்கிறார். கண்ணொடு கண்ணிணை என்பதை மாத்திரம் பேர்த்தெடுத்துக் கொண்டு போய்ப் பொன்னேபோல் போற்றி வைத்துத் தம் பாவை இன்பம் கனிய இன்பாகமாக்கி அன்பு நலம் பெருக அருளியுள்ளார்.

கண்நோக்கைக் குறித்து நாயனார் உணர்த்தியுள்ள இவ் வுணர்வுக் காட்சியைக் காவியக் கவிகளெல்லாரும் உவந்து பேணி யிருக்கிறார்.

வாயால் பேசாமல் கண்களாலேயே காதலர் பேசிக்கொள் வர் என்றதனால் அவரது அதிசயநிலை அறியலாகும்.

" உள்ளத் துள்ளே மகிழ்ப ;
சொல்லும் ஆடுப கண்ணினனே." (தொல்-விளக்கம்)

" மனம் காவல் கொண்டதெல்லாம் கண்களே சொல்லும் வாய் திறந்தே " (தஞ்சைவாணன் கோவை)

காதலர் உள்ள நிலையைக் கண்பார்வையாலேயே இருவரும் ஒருங்கே கண்டு கொள்வர் ; ஆகவே அது பேசவல்லது என்றார்.

" Her eye discourses ; I will answer it. " (Romeo And Juliet, II. 2). " அவள் கண் பேசுகின்றது ; அதற்கு நான் பதில் சொல்கின்றேன் " எனத் தன் காதலியைக் கண்டு ஒரு காதலன் கூறியுள்ள இது ஈண்டுக் காணத்தக்கது.

இக் கண் நோக்கில் பெண்கள் மிக வல்லவர். தம் காதலை உள்ளடக்கிக்கொண்டு காதலர் உள்ளங்களைக் கவர்ந்து கொள்ளு வதில் அதிசாதுரியம் அவர்பால் வியனுக அமைந்துள்ளது.

" காதன்மை கண்ணுளே அடக்கிக், கண்ணெனும்
தூதினால் துணிபொருள் உணர்த்தித், தான்தமர்க்கு
ஏதின்மை படக்கரந் திட்ட வாட்கண் நோக்கு
ஓதநீர் அமுதமும் உலகும் விற்குமே. " (சிந்தாமணி, 1485)

கேமசரி என்னும் மங்கையைக் கண்டு மயங்கிய சீவகன் கூறியபடி யிது. இருவரும் ஒரு முகமாய்க் காதலித்தனராயினும்

அவளது நோக்குநிலையை இங்ஙனம் அவன் வியந்து கூறியிருக்கிறான். பார்வையில் பாவையர் தீர்வை தெரியவந்தது.

இந்தக் கண்காட்சிதான் அகப்பொருள் துறையில் குறிப்பறிதல் என வந்துள்ளது. இந்நோக்கின் நிலைகளை அனுபவித்துள்ள காதலருடைய வாக்கியங்கள் சிலவற்றை ஈண்டு அறிந்து கொள்ளவேண்டும்.

இருநோக்கு இவள்உண்கண் உள்ளது ஒருநோக்கு
நோய்நோக்குஒன் றுஅந்நோய் மருந்து. (குறள், 1091)

யான்நோக்கும் காலை நிலனோக்கும் நோக்காக்கால்
தான்நோக்கி மெல்ல நகும். (குறள், 1094)

அணியும் அமிழ்தும்என் ஆவியும் ஆயவன் தில்லைச்சிந்தா
மணியும்ப ரார றியாமறை யோனடி வாழ்த்தலரின்
பிணியும் அதற்கு மருந்தும் பிறழப் பிறழுமின்னும்
பணியும் புரைமருங்குற் பெருந்தோளி படைக்கண்களே.
(திருக்கோவையார்)

பாயு மலர்த்தண் பொழில்சூழும் வெங்கைப் பழமலைசீர்
ஆயுமுனிவரர் தாமே முனிவருள் ஆக்குதல்போல்
நோயும்அந் நோய்க்கு மருந்தும் தராநிற்கும் நூற்பகவின்
தேயு மருங்குற் பெருமுலை மாதர் திருக்கண்களே.
(திருவெங்கைக்கோவை)

பண்ணில் சிறந்த புகழ்த்தஞ்சை வாணன் மலயவெற்பில்
பெண்ணிற் சிறந்தஇப் பேதைதன் பார்வை பெருவினையேன்
[illegible]ணிற் சிறந்த இருந்துயர் நோய்தனக் கின்மருந்தாய்க்
[illegible]ணிற் சிறந்த உறுப்பில்லை யாவதும் காட்டியதே.
(தஞ்சைவாணன் கோவை)

பொங்கோத ஞாலத் தறிவொன் றிலாத புரவலர்தம்
வெங்கோன் மையுமந்த வெங்கோன்மையாவும் விலக்கியென்றும்
செங்கோன் உறந்தைக் குலோத்துங்க சோழன் நடாத்தும் ஒரு
செங்கோன் மையும்ஒத்த வாலிரு நோக்குமிச் சேயிழைக்கே.
(குலோத்துங்கசோழன் கோவை)

[illegible]வார் மொழிபங்கர் கோடீச்சுர வெற்பின் பாலுறுநாம்
[illegible]வாரி ஞாலந்த மால்சோர்ந்து முன்பின் மகிழ்வுபெற
[illegible]வாறி தன்னுள் விடத்தோ டமிர்தம் விளைந்த தொக்கும்
[illegible]வாய் இடையினள் வேல்விழித் தோன்றிய நோக்கங்களே.
(கோடீச்சுரக்கோவை)

காதலிகளைக் கண்டு மால்கொண்ட காதலர் அவருடைய கண் பார்வைகளால் உடன்பாடு தெரிந்து உள்ளங்களித்து உரையாடிய படியிவை. இவ்வாறு காதல் நிலைகள் பலவற்றையும் தொடர்பாக விரித்து விளக்கிப் போவதால் இவை கோவை என வந்தன. ஒரு கருத்தையே குறித்து வந்திருப்பினும் கவிகளுடைய உரைத்திறங்களும் உணர்வு நலங்களும் பலபிரிவுகளாய்ப் பரவியுள்ளன. கவித்துறைகள் கலைத்துறைகளுடையன.

உலகில் என்றும் இயல்பாக நிகழ்கின்ற உயிரியல்புகளை இவ்வண்ணம் துறையமைத்துச் சுவைசெய்து வைத்திருக்கின்றனர்.

மனிதருடைய தனிமையான அகநிலை அனுபவங்கள் பின்பு புலநெறி வழக்கங்களாய்க் கிளைத்துக் கலைநலம் கனிந்து இலகொளி பரப்பி இனிமை சுரந்து உலகில் வெளியாய் உவகை விளைத்து வருகின்றன. புறத்தே புலனுகின்ற காரண நிகழ்ச்சிகளால் அகத்தை அறியவே அறிவுலகம் ஆனந்தம் அடைகின்றது.

கண் கவ்வி உண்ண, உணர்வு ஒன்ற என்றதனால் அவ்வுயிர் இரட்டைகள் ஒரு முகமாய் அன்று உவகையில் திளைத்துள்ளமை உணரலாகும். அன்பு சுரந்தமையால் இன்பக் காட்சியாயது.

பாக்கியம் கனிந்த அந்நோக்கங்களையெல்லாம் நாம் மேலும் நோக்கி மகிழும்படி கவி ஊக்கியருளுகின்றார்.

அண்ணலும் நோக்கினான்; அவளும் நோக்கினாள் என முன்னம் பொதுவாகக் குறித்தார்; பின்னர், அந்நோக்குகள் குறிக்கொண்டு பாய்ந்த குறியீடுகளைத் தெளிவாக உரைக்கின்றார்.

2. சீதையின் கண்களை வேல்இணை என்றது அவை இங்கே வெற்றிபெற்றுள்ள விறல்நிலை கருதி. தம் கூரிய பார்வையில் காரிய சித்தி கைவந்துள்ளமையால் வீரியசத்திகள் என அவ்விழிகளை வியந்து கூறினார்.

வேலாயுதத்திற்கு மேலாயுதம் இல்லை என யாண்டும் வியன்பேர் பெற்றுள்ள வேற்படையை விழிகள் எனக் குறித்தது ஈண்டு வெல்லப்பட்டுள்ள ஆண்டகையின் அருமை பெருமைகளையும், அற்புத வெற்றியையும் உணர்ந்துகொள்ளவேண்டி என்க.

நோக்கினாள் நிறையும் நாணும் மாமையும் கவினும் நொய்தில்
போக்கினாள் வளையும்போர்த்தாள்பொன்னிறப்பசலைமூழ்கிற்று
ஆக்கினாள் அநங்கன் அப்புத் தூணியை ; அமருள் ஆறோடு
ஒக்கிய முருகன் வைவேல் ஓரிரண் டனைய கண்ணாள்.
(சீவக சிந்தாமணி, 1291)

அறுமுக ஒருவன்ஓர் பெறுமுறை இன்றியும்
இறுமுறை காணும் இயல்பினின் அன்றே
அஞ்சுடர் நெடுவேல் ஒன்றுநின் முகத்துச்
செங்கடை மழைக்கண் இரண்டா ஈந்தது. (சிலப்பதிகாரம், 2)

பதுமை, கண்ணகி என்னும் மங்கையர் இருவருடைய கண்களைக் குறித்து வந்திருக்கும் இவை ஈண்டு எண்ணத்தக்கன. முருகன் ஒரு வேல் இருவிழிகளாய் மருவி நின்றது என்றது அவற்றின் பெருமித நிலை தெரிய வந்தது.

ஆக்கிய மதுகையான் என்றது தேகவலி, மனவலி, புத்திவலி முதலியவற்றில்சிறந்தவன் என்றவாறு. மதுகை = வன்மை, அறிவு.

“ வான்உயர் மதுகை வாட்டும் வார்சிலைக் காமன் ஆகும் ”
(சிந்தாமணி)

இதில், மதுகை உணர்த்தி நிற்கும் பொருளை அறிக.

படைக்கலப் பயிற்சியால் உடலையும், கலைப் பயிற்சியால் அறிவையும் விருத்திசெய்து வியனிலையில் வைத்திருக்கும் நயன் அறிய “ ஆக்கிய ” என்றார்.

பிறரால் ஆகாத காரியங்களையும் ஆக்கியருள வல்லவன் என்பதையும் நோக்க வந்தது.

இத்தகைய பெருவீரனும் உலைமெழுகுபோல் சீதை விழி எதிரே உளமுருகி நின்றான் என்பதாம். ஆகவே அவளது அழகமைதி அதிசய நிலையினது என்பது தெளிவாயது.

தன் நோக்கால் மயக்கி இராமனை நிலைகுலைத்திருக்கின்றாள் ஆதலால் சீதை இங்கே தாக்கணங்கு என நின்றாள். அழகு உருவு கொண்ட மோகினித் தெய்வத்திற்குத் தாக்கணங்கு என்று பேர்.

நோக்கினாள் நோக்கெதிர் நோக்குதல் தாக்கணங்கு
தானைக்கொண் டன்ன துடைத்து. (குறள், 1082)

நோக்கிய நோக்கு என முன்வந்துள்ள நம் கவி இந்த அருமைத் திருக்குறளை நோக்கி வந்துள்ளது. உண்மையை நுனித்து நோக்கிக் கொள்க.

## காதல் நோக்கின் திறம்

முதலில் இருவரும் புதிதாய் எதிர்நோக்கியது பொது நோக்கு; அப்பார்வையில் உள்ளன்பும் உரிமையும் உணரவே மேலே காதல் மீக்கொண்டு ஒருவரை ஒருவர் கனிந்து நோக்கினர்; இது ஆசை மீதூர்ந்த குறிப்பு நோக்கு ஆதலால் அதன் குறிநிலை தெரியவந்தது.

வேல் இணை தோளின் ஆழ்ந்தன; செங்கண் தனத்தில் தைத்தவே; என்றதனால் இருவருடைய பார்வைகளும், பார்த்த இடங்களும், ஆர்த்திநிலைகளும் அறியலாகும். தேக நிலையில் ஏக போகமாய் இன்பம் சுரந்து போகம் விளைந்துள்ளமையால் காதல் நோக்கிற்கு மூலதலைபிடமாயது. தனமும் தோளும் இருபாலார்க்கும் முறையே பெருமால் தரும் என்பது பெற்றும்.

சீதை காதலித்து நோக்கியுள்ள அந்த ஆதரத்தின் ஆழம் தெரிய "ஆழ்ந்தன" என்றார். அண்ணலும் நோக்கினான் என்றதனால் முன்னம் பொது நோக்கில் இராமன் முந்தினன்; குறிப்பு நோக்கில் இங்கே சீதை முந்தியுள்ளாள் எனக. அவள் நோக்கம் தோளில் வீழவே, இவன் பார்வை தனத்தில் பாய்ந்தது. காதலர் கண்கள் விரைந்தோடித் தங்களுக்கு ஆதரவான இடங்களைப் பிடித்துக்கொண்டு ஆனந்தம் அடைந்துள்ளன.

கண் பார்வையால் உள்ளக் காதலையும் உடன்பாட்டையும் உணர்ந்துகொள்ளவே இருவரும் ஒரு மனமாய்ப் பிரிய மீதூர்ந்து இங்ஙனம் பிணையலாடினர். ஆட்டம் அன்பின் கூட்டம் எனக.

காதல் நோட்டம் கண்ணோட்டத்தால் தெரிந்து கலந்து கொண்டமையால் அந்நாட்டங்களின் கூட்டுறவை நயந்து பாராட்டினர்.

"நாட்டம் இரண்டும் அறிவுடம் படுத்தற்குக்
கூட்டி யுரைக்கும் குறிப்புரை யாகும்." (தொல்காப்பியம்)

என்னும் இலக்கண விதியும் ஈண்டு எண்ணத் தக்கது.

வீக்கிய கனைகழல் வீரன் என இராமனையும்,

தாக்கணங்கனையவள் எனச் சீதையையும் விதந்து குறித்து இருவரும் பெருமித நிலையினர் என்பது தெரிவுற வந்தது.

கழல் வீரன் உள்ளம் கழன்று உருகி நின்றான்; தாக்கி வருத்தும் அணங்கும் தாங்கா வேட்கையளாய்த் தணந்து நின்றாள். வீரனை வெல்ல வல்ல பேரழகும், அணங்கினை அடக்கவல்ல அருள் கனிவும் இருவர் மருங்கும் முறையே பெருகியிருந்தன; பருவம் வரவும் பயனுக்கு வந்து உயர் நயன்கள் விளைந்தன என்க.

இருவரும் புலன்வசமாய் எளிதில் இறங்குபவரல்லர்; மிகவும் அரிய நிலையினர்; நிலஞ்செய் தவத்தாலும், பழந்தொடர்பாலும் உளம் கலந்து இவ்வழி உவந்தருளினார்.

காதல்நலங் கனிந்து இங்ஙனம் விழைந்து பார்த்தவர் மேலே அடைந்த நிலைகளை இனித் தொடர்ந்து பார்க்க வருகின்றோம்.

3. "பருகிய நோக்கு எனும் பாசத்தால் பிணித்து
ஒருவரை ஒருவர்தம் உள்ளம் ஈர்த்தலால்"

என்ற இதில் அவர் பார்த்த பார்வையின் நிலையும், ஆர்த்தி மீதூர்ந்து அவசமாயுள்ள வகையும் அறிய வந்தன.

ஒருவரை ஒருவர் உள்ளே அள்ளி விழுங்குபவர்போல் ஆர்வமீறி இருவரும் பரவசராய்ப் பார்த்துள்ளமையான் பருகியநோக்கு என அதன் உருவம் தெரிய வுரைத்தார். "நோக்கினுள் நெடுங்கண் என்னும் குடங்கையால் கொண்டுகொண்டு, வாக்கமை உருவின் மிக்கான் வனப்பினைப் பருக" என்றார் சிந்தாமணியாரும்.

கடுந்தாகம் உடையவன் தண்ணீரைக் கண்டவுடன் மொண்டு குடிப்பதுபோல் பெருங் காதல் மண்டிப் பிராட்டியும் பிரானும் கண்டு களித்துள்ளனர். அக்காட்சியைப் "பருகிய" என்னும் ஒரு சொல்லால் தெளிவுறக் காட்டியருளினார்.

மன்னமர் காதலானும் தையலும் மணந்த போழ்தில்
பொன்னனாள் அமிர்த மாகப் புகழ்வெய் யோன் பருகியிட்டான்;
பின்னவிர் பூணினானை வேற்கணாள் கியற்றப் பட்ட
மன்னிய மதுவின் வாங்கி மாதரும் பருகியிட்டாள். (சிந்தாமணி)

என்றபடி இருவரும் மருவுமுன்னமே உள்ளத்தால் இங்ஙனம் பருகி நின்றனர் என்க.

அப்பார்வையின் பலனை அயலே தெளிய விளக்கினார். பாசம் = கயிறு, அன்பு. நோக்கு என்னும் பாசம் ஊக்கி இழுக்கவே இராமன் சீதை நெஞ்சுள்ளும், சீதை இராமன் உள்ளத்தி

லும் புகுந்து கொண்டார். இங்கே இருவரும் கொள்ளைபோயுள்ள காட்சியை உள்ளம் ஊன்றிப் பார்க்க. வீதியில் நின்ற வீரன் உயிர் கன்னிமாடத்திலிருந்த காதலி உயிரில் கலந்தது அக்குமரிஆவி இக்குமரன் ஆவியுள் மேவியது என்க. அன்புடை உயிர்கள் இரண்டு ஆர்வக்காதலில் ஆழ்ந்து அவசமாய்த் திளைத்து ஒன்றாய் ஒன்றி இங்ஙனம் இன்பம் நுகர்ந்துள்ளன.

வரிசிலை அண்ணலும், வாட்கண் நங்கையும்

எனத் தலைவனையும் தலைவியையும் இவ்வாறு குறித்துக் காட்டியது அவருடைய குல நிலை தெரிய. உத்தமச் சத்திரிய குலத்திலே உயர்ந்த வீரக்குடியில் பிறந்த சிறந்த காதலர் புரிமுகம் புகுந்து ஒருமுகப்பட்டுப் பொருமுகம் காணலால் அவர் தம் நிலைமைக்கேற்பச் சிலையும் வாளும் சிறப்பாய் வந்தன.

இராமன் வில் எடுத்து வந்தான்; சீதை வாள் எடுத்து நின்றாள். வென்றது யார்? எனின், இங்கே வெற்றியும் தோல்வியும் இல்லாமல் இருவரிடமும் ஒரு நிலையே கொற்றம் குலாவி நின்றது என்க. ஒருவரை ஒருவர் சரணமடைந்து இருவரும் அரணமாயினார். ஆகவே சரியான சமசோடி என்பது தெளிவாகி நின்றது.

மருங்கு இலா நங்கையும், வசையில் ஐயனும்,
ஒருங்கிய இரண்டு உடற்கு உயிர் ஒன்று ஆயினார்

கண்ணோக்கிய காதலர் இருவர் உண்ணோக்கில் ஒன்றுபட்டு உயிர் கலந்துள்ளமையை இவ்வண்ணம் உணர்த்தியிருக்கிறார்.

அழகுடையவள், குணம் உடையவள், திருவுடையவள் என ஏதேனும் ஒரு நல்ல உடைமையைப் பூட்டியே புது மணப் பெண்ணை வெளியே செல்லமாகக் காட்டுவர். உலக ஒழுக்கிலும், புலமை வழக்கிலும் அதுதான் மரபாயுள்ளது. இங்கே அவ்வாறின்றி இன்மையிலேற்றி விசேடித்து வைத்திருக்கிறார்.

மருங்கு இலா என்றது இடை சுருங்கிய என்றவாறு.

இன்மை நுண்மை மேல் நின்றது. இடை சுருங்கியிருப்பது மகளிர்க்கு உத்தம இலக்கணம் ஆதலின் அத்தத்துவ நுண்மையை உய்த்துணர வுரைத்தார். மருங்கின் சுருக்கம் அழகின் பெருக்கத்திற்கு ஓர் இனிய அளவு கருவியாய் வந்தது.

இல்லாமை ஒன்றை இனிமையாகப்புனைந்து மணப்பெண்ணை இங்ஙனம் அலங்கரித்து நிறுத்திப் பின்பு மணமகனை அலங்கரிக்க வந்தார். அதே முறையில் வருணிக்க விரும்பினார். இன்மையினாலேயே விசேடித்து அவனது உயர்ந்த உண்மைத் தன்மையை உரைக்கத்துணிந்தார்.

அவனுக்கு எதனை இல்லை என்று சொல்வது? இல்லாமை தேடுவதில் இப்படி ஒரு தொல்லை வந்து நேர்ந்தது. சிலருக்குக் கல்வியிருக்கும், செல்வம் இராது; அந்த இரண்டும் அமையினும் அழகு இல்லாதுபோம்; ஒருவாறு அது அமைந்தாலும் வீரம் இராது; வீரம் வாய்ப்பினும், அருளும் பெருந்தன்மையும் அமையாது ஒழியும்; இங்ஙனம் ஏதேனும் ஒரு குறை யுடையாரையே உலகில் உயர்ந்த குலமக்களுள்ளும் காணலாமேயன்றி குணநலங்கள் நிறைந்துள்ளாரைக் காண்டல் யாண்டும் அரிதாம்.

இராமனுக்குச் செல்வம் இல்லை என்று சொல்லலாமோ? எனின், அவன் பெரிய சக்கரவர்த்தித்திருமகன்; கல்வியிலோ மகா கலைஞானி; அழகிலோ, நிகரில்லாத பேரெழில் உடையவன்; வீரத்திலோ, அசகாய சூரன்; அருள் அடக்கம் அமைதி வண்மை முதலிய தன்மைகள் யாவும் நிறைந்தவன்; அகில மங்கள குண கண பரிபூரணன். இவ்வாறு எல்லாமுடைய இவனுக்கு ஒரு இல்லாமை கூற எண்ணிப் பல்வேறு வழிகளை நாடிப்பார்த்தார்; ஒன்றும் தோன்றவில்லை. ஆகவே, " மருங்கிலா நங்கை " என்று முன்னம் சொன்னதை மாற்றி யாதாவது ஓர் உடைமையால் தலைவியைக் கூறிவிடின், அவ்வண்ணமே தலைவனையும் எளிதாகச் சொல்லிவிடலாம் என்று திரும்பினார்: திரும்பினவர், முதலில் குறித்ததை மாற்றுதல் முறையன்று என்று மறுபடியும் மறுகினார்; மீண்டும் இன்மையிலேயே ஒரு தன்மையைக் கண்டு கொள்ள மூண்டு முனைந்தார்; முடிவில் ஒன்று கண்டார்; காணவே " பழி யாதும் இல்லாத விழுமிய நிலையினன் " என்று களி பேருவகை கொண்டார்: வசை இல் ஐயனும் என அதனை இசையாக இசைத்தார்.

மருங்கு இன்மையால் உடலழகும், வசை இன்மையால் உயிரழகும் உணர வந்தன. புறமும் அகமும் கண்டு அவற்றின்

உரிமையும் ஒருமையும் ஒருங்கே தெரிய இங்ஙனம் உரைத்தருளி ஞர். வசையில்லாதவன் எனவே புகழெல்லாம் நிறைந்த புண் ணியசீலன் என்பது புலனயது.

இத்தகைய அழகனும் அழகியும் விழைவு மீதூர்ந்து தான் அவள் என்னும் வேறுபாடின்றிப் புனலொடு புனல் கலந்தாற் போல் இருவருடைய மனம் உயிர்களும் இனம் அறியாதபடி ஒன்ருக உவந்து கொண்டனர் என்பதாம்.

சீதை இராமன் என வெளியே இரண்டு வடிவங்களாய் நின் ருலும் உள்ளே ஈருயிரும் ஓருயிராய் ஒன்றி நின்றன என்பார் "இரண்டு உடற்கு உயிர் ஒன்று ஆயினர்" என்ருர். ஒருமை யின் உரிமை தெரிக. ஒருங்கிய = ஒன்றுபட்டு வந்த. ஒருங்கு தல் = ஒன்றுதல், உடன்படுதல். அவ்வுடம்பு இரண்டும் இங்கே வெளியாய் ஒளி செய்து வந்துள்ள உளவறிய வந்தது.

இராமன் பிரமச்சரிய விரதத்தைக் கைக்கொண்டு குருகுல வாசம் செய்துவருகின்ருன். சீதை கன்னித்தன்மையைக்காத்துக் காவல் மாடத்தில் இருக்கின்ருள். இன்னர் இனியார் என்று ஒருவருக்கு ஒருவர் யாதொரு இனமும் தெரியாது ; கொடுப் பாரும் இல்லை ; அடுப்பாரும் இல்லை. இங்ஙனம் இருக்கத் தெருவழியே கண்டவனிடம் அவள் அவசமாய் ஆசைமீக்கொண் டாள் ; அவள்பால் இவன் உள்ளங்குலைந்து உயிர் உருகிநின்ருன். கண்ட இடத்தில் இப்படிக் கடுங்காதல் கொள்ளலாமா ? கள்ளத் தனமான காமம் எள்ளத் தக்கதல்லவா? இருவருடைய குல நிலை மைக்கும் தலைமைக்கும் பெரும் பழியாய் இது பிழைமிகச் செய் யுமே ? என இன்னவாறு பல பல பேசி உலகம் இங்கே அலர் தூற்ற நேரும் என்று கருதி அதற்கு இறுதியில் உறுதியான பதில் கூறியிருக்கிருர்.

"கருங்கடல் பள்ளியில் கலவி நீங்கிப்போய்ப்
பிரிந்தவர் கூடினல் பேசல் வேண்டுமோ ?"

இந்த வாசகம் வனப்பு மிகவுடையது. பல யோசனைகளை யுள்ளடக்கி ஒளிமிகுந்து அளிகூர்ந்து வந்தது.

இருவரும் உயிர் ஒன்று ஆயினமைக்குக் காரணவுரிமை காட்டியுள்ள இதில் அவரது பூரண நிலைமை புலனயுள்ளது. கருங்

கடல் என்றது பாற்கடலை. கருமை ஈண்டு பெருமை மேல் நின்றது.

" திரைகெழு பயோததி துயிலும் தெய்வவான், மரகதமலை"

என * முன்னம் குறித்துள்ளமையை இங்கே எண்ணிக் கொள்க.

அந்தப் பாற்கடல் பள்ளியைவிட்டுத் திருமால் அயோத்தியை அடைந்தான்; திருமகள் மிதிலையில் புகுந்தாள். அரசகுமரன், அரசிளங்குமரி என முறையே மருவியிருந்தனர். உரிய காலங்கள் எதிர்பார்த்து நின்றன. பருவம் வந்தது. இருவரும் எதிர்ந்தார். ஒருவரை ஒருவர் நோக்கிப் பரவசராயினர் என்க. எனவே இவர் புதுமாப்பிள்ளையும், புதுப்பெண்ணும் அல்லர் பழங்காதலர் என்பது உளங்காண வந்தது.

ஊழிகாலமா யாதும் பிரியாமல் ஒன்றாய் மருவியிருந்தவர் இடையே பிரியநேர்ந்து மறுபடியும் நேரே கண்டுகொண்டால் அக் காதலர் கொண்டாடும் அன்புநிலையும் ஆர்வநலனும் அளவிடலரியனவாதலால் இது யாராலும் பேசமுடியாத பெரும்பாசமுடையது என்பது பெற்றாம்.

கலவி நீங்கிப் போய் என்றதனால் பிரியும் காலத்திலும் அவர் மருவியிருந்தமை அறிய வந்தது. இத்தகைய பேராக் காதலர் பேர்ந்து நின்று மீண்டு வந்து சேர்ந்தபோது நேர்ந்த காதல் காட்சிகளை நாம் இடையே உரையாடி நிறைபோடுதல் பிழையாம் என்பதாம். பேசல் வேண்டுமோ? என்றது பேச்சுக்கு இடம் இல்லை என்றபடி.

பிரிந்தவர் கூடினால் பேசல் வேண்டுமோ?

என்ற இந்த இனிய வாசகம் பொதுசன உரிமையாய் எல்லார்க்கும் பாடமாகிப் பேச்சிலும் எழுத்திலும் பெருவழக்காய்ப் பயின்று வருகின்றது.

" முருந்துறழ் எயிற்றினாள் முலைத்தடங்களில்
பொருந்துற மூழ்கியே புணர்ந்து வைகலும்
இருந்திடு கின்றவன் இடர்ப்பட்டு இன்னணம்
பிரிந்திடின் வருந்துதல் பேசல் வேண்டுமோ? "

(கந்தபுராணம், குமாரபுரிப்படலம், 29)

---

* இந்நூல் பக்கம் 803 வரி 13 பார்க்க.

தன் நாயகியைப் பிரிந்திருந்த இந்திரன் அவளது அணிகளைக் கண்டபோது அவன் கொண்ட காதலைக் குறித்தபடி யிது. இதன் தொடையும் நடையும் இங்கு ஒத்திருத்தலை உய்த்தறிக.

காதல் மீதூர்ந்து இராமன் இங்ஙனம் களித்து நிற்கவே கோசிகர் அந்த இடத்தை விட்டு அகன்றார். அம்மாதவர் பின்னே இக்காதலனும் போனான். தம்பியும் தொடர்ந்து சென்றான். இங்கே ஒன்று சிந்திக்கவேண்டும்.

முன்னே நின்ற குருவுக்கும், பின்னே நின்ற தம்பிக்கும் தெரியாமலே இந்த அண்ணன் கண்ணோடிக் களித்திருக்கின்றான். இது என்ன சாகசம்! அந்த இருவரும் முன்றில் அயலே அன்னங்களைக் கண்டு நிற்க, மன்னன் மாத்திரம் மேன் மாடத்தில் உலாவி நின்ற கன்னியைக் கண்டு காதல்மீக்கொண்டான்.

5. பெரியவர் நீங்கவே இவனும் நீங்க முடியாமல் நீங்கிச் சென்றான். அங்ஙனம் இவன் செல்லுங்கால் சீதை உள்ளம் பறிபோய் உணர்வு குலைந்தாள். இன்னது செய்வது என்று தெரியாமல் தன்னை மறந்து தனிமால் கொண்டு தயங்கிநின்றாள்.

" அந்தமில் அழகனை அணைகி லாமையால்
பைந்தொடி ஓவியப் பாவை போன்றனள் "

என்றதனால் இராம மோகத்தால் சானகிபட்டுள்ள காமத் துயரம் காணலாகும். இமையாமல் பார்த்து விழித்த கண் விழித்தபடியே அசையாது நின்றாள் ஆதலின் ஓவியப் பாவை என்றார். இந்த விசித்திர சித்திரத்தை விழைந்து பார்க்க.

அதிசய அழகுடைய சீதையும் மதிமயங்கி மால்கொள்ளும் படி மேல் கொண்டுள்ளமையால் அந்தம் இல் அழகன் என இராமனை இங்கே வந்தித்து நின்றார். அந்தம்=முடிவு, எல்லை. எல்லை யில்லாத பேரெழிலாளன்; முடிவறியாத முதலழகன் என்றவாறு. அந்தமில்லாத அந்த ஆதிமூல சுந்தரன் எனவும் இது சிந்தனை செய்ய வந்தது.

இந்தக் கட்டழகனை உடனே கட்டியணையப் பெறாமையால் அக்கட்டழகி பட்டதுயர்கள் பல. அவற்றைப் பின்னே காணலாம்.

அணைகிலாமை என்றதனால் அவ்வழகனை அணைவதில் அவள் அவாவியுள்ள அவசரமும் ஆவல்நிலையும் வெளியாயின.

முனிவரைப் பின் தொடர்ந்து இராமன் போகவே அவனைப் பார்த்த கண் வாங்காமல் நோக்கி நோக்கி ஏக்க மீதூர்ந்து சீதை ஏங்கி நின்றாள். மாடத்தில் அவள் உடல்மட்டும் நின்றதே யன்றி உள்ளம் உணர்வெல்லாம் அவ்வள்ளலை விடாமல் மருவிப் போயின.

"சிந்தையும் நிறையும் மெய்ந்நலனும் பின்செல
மைந்தனும் முனியொடு மறையப் போயினன்."

இங்கே கொள்ளைபோயுள்ள குலப்பொருள்களைக் காண்கின்றோம். சிந்திக்கத் தக்க அந்தக் காரண ஆற்றலுக்குச் சிந்தை என்று பெயர். அது முந்துறப் போயது. மனம் பரவசமாய்த் தன்வயம் இழந்து பின்னே போகவே என்றும் நிலைகுலையாது நிலைத்து நின்ற நெஞ்சுறுதியாகிய நிறை சிறையழிந்த நீர்போல் சிதறி ஓடியது. உள்ளம் இப்படிக் கலங்கி உருக்குலையவே உடல் ஒளிமழுங்கி எழில் குறைந்து பொலிவிழந்து நின்றது ஆகலான் மெய்ந் நலனும் போனது என்றார்.

இந்த மூன்றும் பின்வர இராமன் முனிவர் பின் போயினன். மிதிலை நகருள் புகுந்து கன்னிமாடம் வரும் வரையும் மூவராயிருந்தனர்; அதன் பின் அறுவராய்ச் சென்றார். மூன்று உருவங்களுள் இடையே சென்றதை யடுத்து மூன்று அருவங்கள் ஒருவருக்கும் தெரியாமல் உருகி உவந்து மவுனமாய்ப் போயினவாங்க.

சீதையைப் போலவே காதல் கைம்மிகுந்திருந்தும் நல்ல மனவுறுதியுடன் இராமன் அடக்கமாய்ப் போயிருக்கிறான். அந்த மனத்திட்பம் தெரிய மைந்தன் என்றார். மைந்து = வலி. மறைந்துபோயினன் என்னுமல் மறைய என்றது, அவனும் தன் உணர்விழந்து தளர்ந்து சென்றுள்ளமை உணர வந்தது.

அறிவு ஆற்றல் ஆண்மை கொடைமை முதலிய மேன்மைகளிலும், உறுதி ஊக்கம் முதலிய உள்ளப்பான்மைகளிலும் இவ்வள்ளல் தலைசிறந்துள்ளமை ஈண்டு நிலைதெரிய நின்றது.

"பெருமையும் உரனும் ஆடூஉ மேன" (தொல்காப்பியம்)

என நூலோர் உயர்ந்த தலைவனுக்கு வரைந்து விதித்துள்ள இலக்கணம் இராமன்பால் மிகவும் துலங்கி நிற்கின்றது.

உலக நிலையைத் துறந்த சிறந்த தத்துவஞானி உடன் வந்துள்ளமையானும், நில்லாமல் நடந்து செல்லவேண்டியிருந்தமையானும், அவன் நிலைமையை மறைத்தற்குக் கொஞ்சம் வசதி வாய்த்தது. அந்த வாய்ப்புச் சீதைக்கு இல்லை.

## சானகியின் மையல் நிலை

காதல் வெள்ளம் பொங்கி எழுந்தது; உள்ளமும் உணர்வும் அவ் வெள்ளத்தில் மூழ்கின. ஆனவரையும் நீந்திப் பார்த்தாள்; நிலைகொள்ளமுடியவில்லை; முடிவில் நிறை முதலியன குலைந்து அறைபோய நெஞ்சோடு பொறையுயிர்த்து நின்றாள்.

*பிறைஎனும் நுதலவள் பெண்மை என்படும்?*
*நறைகமழ் அலங்கலான் நயன கோசரம்*
*மறைதலும் மனமெனும் மத்த யானையின்*
*நிறையெனும் அங்குசம் நிமிர்ந்து போயதே!*

(மிதிலைக் காட்சிப் படலம், 40)

புனிதமான தனது இனிய மனம் நிலைகுலைய நேர்ந்தபோது அதனைப் பாதுகாக்கும் பொருட்டுக் காதலை எதிர்த்துச் சீதை போராடியிருக்கும் திறத்தை இதில் கருத்தூன்றிப் பார்க்க. காமவேட்கை நெஞ்சு புகுந்த பொழுது முதலில் நெற்றி நிறம் மாறும் ஆதலால் பிறை எனும் நுதலவள் என அந்நிலை தெரிய உரைத்தார். அலங்கல் = பூமாலை. நுதல் = நெற்றி.

"*பீரலர் அணிகொண்ட பிறைநுதல்*" (கலி, 124)

"*பேரழகு சோர்கின்ற தென்னப் பிறைநுதல்மேல்*
*நீரரும்பத் தன்பேதை நின்றாளை*" (நளவெண்பா, 55)

என்பன ஈண்டு எண்ணற்கு உரியன. பீர்அலர் = பீர்க்கம்பூ.

தன் கண்ணுக்கு எட்டும் அளவும் மேல்மாடத்தில் ஒதுங்கி அயலறியாமல் இராமனைச் சீதை ஆசைமீதூர்ந்து நோக்கி நின்றாள். அவன் வீதி திரும்பி மறைந்து போனான்; மறையவே இவள் மனம் நிலைகொள்ளவில்லை; அவனையே நினைந்து மயங்கிப் பின்னே விரைந்து சென்றது; செல்லுங்கால் உள்ளுற நாணி, "இது என்ன மனசு? என்னைப் பரிசு குலைக்கின்றதே! அயல் அறிந்தால் என்ன சொல்லும்?" என இன்னவாறு இன்னலுழந்து அடக்கிப்பார்த்தாள்; அது அடங்கவில்லை; வெறிமீறிய மதயானைபோல் கட்டெல்லாம் கடந்து கதித்துப்போயது என்க.

பெண்மையின் பெருமித நிலைமையில் தலை சிறந்தவள் ஆதலால் காமவேகத்தைத் தனியே எதிர்த்து அடக்கி நெடும்பொழுது மன்ருடியிருக்கிருள் ; அந்தப்போராட்டத்தை எல்லாரும் நேரே காணக் கவி ஒரு போர்க் காட்சியை இதில் புலப்படுத்தியிருக்கிருர். மத்தயானை என்றது சித்தநிலையை உய்த்துணர.

காமவெறி மீறியுள்ளமையான் மனத்தை இங்கே மதயானை என்றுர். நிறை என்பது நெறி திறம்பாமல் நிலைத்து நிற்கும் நீர்மை. அது பெண்மைக்கு உயிர் நிலையாய் அரண் செய்து நிற்பது ; நாணினும் உயர்ந்தது. அதனை ஈண்டு அங்குசம் என்றது நெஞ்சை அடக்கியாளும் அமைதியும் அதன் நிலைமையும் கருதி. கன்னிமையின் இன்னுயிர் என அது மன்னியுள்ளது என்க.

" நிறையெனப் படுவது மறைபிறர் அறியாமை." (கலி,133) என்றதனல் அதன் இயல்பும் செயலும் இனிது அறியலாகும்.

அங்குசம் யானையை அடக்கும் கருவி. தோட்டி என்றும் பேர். அறிவாகிய பாகன் நிறையாகிய அங்குசத்தைக்கொண்டு மனமாகிய யானையை அடக்கினன் ; அது அடங்காமல் போயது என உருவகங்களை விரித்துப் பொருள் நிலைகளை நுனித்து நோக்கிக்கொள்க. எண்ணியலில் உள்ள நுண்ணிய பொருள்களைக் கண்ணியலில் உணர இவ்வண்ணம் காட்டினர்.

நயன கோசரம் என்றது கண் பார்வையின் எல்லையை. கோசரித்தல்—எட்டி வளைத்தல். தன் நயனம் கோசரிக்கும் வரையும் ஆசையோடு பார்த்து நின்ருள் என்று தெரிகின்றது.

யானை மதம் கொண்டு ஓடுங்கால் அதனை அடக்கி நிறுத்தற்கு அங்குசத்தை அதன் காதில் மாட்டி இழுப்பார் ; அது போல் உள்ளே காதல் மண்டிச் செல்லுகின்ற மனத்தை நிறையால் அடக்கி நெடிது முயன்று நிறுத்திஞள் ; அது நில்லாமல் ஓடியே போய்விட்டது என்பதாம்.

நிறைஎனும் அங்குசம் நிமிர்த்துப் போயதே

என்னுமல் நிமிர்ந்து என்றதனல் அந்த மனம் கடுவேகத்துடன் சென்றுள்ளமை காணலாகும். தன்னைத் தடுத்த தடையை எதிர்த்து மன்ருடி அரிதாகப் பெயர்த்துச் சென்றிருந்தால் நிமிர்த்துப்போயதென மனத்தின் தொழிலாகவே குறித்திருப்

பார். அது சென்ற வேகத்தில் நிறை தானாகவே தளர்ந்து வாய் பிளந்து அகன்று நின்றது ஆதலால் அந்நிலை தெரிய நிமிர்ந்து என்றார். போயது என்றது நீண்டு நின்ற அந்நிமிர்ச்சியைக் குறித்தது.

" துடக்குவரை நில்லாது தோட்டி நிமிர்ந்து
மதக்களிறு இரண்டுடன் மண்டி யாஅங்கு "

(பெருங்கதை, 1-32)

என்பதும் ஈண்டு எண்ணத்தக்கது. காமவேகத்தைக்குறித்து வந்துள்ள இதன் சொல்லும் பொருளும் நம் கவியோடு இணை யொத்துள்ளமையால் இனமுறை தெரியவந்தது.

ஒடிந்து போயது என்றால் நிறைக்கு ஒரு ஊனம் ஆகும்; அது நேராதபடி நிமிர்ந்து என்றார்.

எதன் நிமித்தம் இப்படி நிமிர நேர்ந்ததோ, அந்தப் பொருளை அடைய நேர்ந்தபொழுது அது மீண்டும் எளிதாக வளைந்து கொள்ளும் என்க. இந்தப் பெருங் கலக்கத்திலும் நிறைக்கும் நிலைக்கும் பங்கம் நிகழாதபடி இங்கிதமாய் இசைத்தருளினார். நிறை போயதே! என்றதில் இரக்கம் தொனித்து நிற்கின்றது.

அறிவும் நிறையும் மனமும் இவ்வாறாயின் அபலையான பெண் தன்னீர்மை குன்றித் தளராமல் வேறு என்ன செய்ய முடியும்? என இரங்கி நின்றார் ஆதலால் பெண்மை என் படும்? என்று தண்ணளியோடு கூறினார்.

அந்த ஆணழகனைக் காண நேர்ந்தால் எந்தப் பெண்ணழகியும் திண்மை குன்றித் தெருமாலடையுமே! அவனுக்கு என்றே அமைந்து வந்துள்ள இந்தப் பெண்ணரசி கண்டவுடன் உள்ளம் உருகி உயிர் உவந்து படுதல் உரையிடலாமோ? என்பதாம்.

வெள்ளம் அதிகமாகப் பெருகிவிடின் சிறையாகிய அணையை மீறிப்போம்; அதுபோல் உள்ளத்தே காமம் கதித்து எழின் நிறை நிலைத்து நில்லாதென்க. சானகியின் இந்நிறையழிவு இராம மோகத்தின் அளவறிய நின்றது.

" காமக் கணிச்சி யுடைக்கும் நிறைஎன்னும்
நாணுத்தாழ் வீழ்த்த கதவு." (குறள், 1251)

" விருப்பொன்று பட்டவர் உளநிறை யுடைத்தென
வரைச்சிறை யுடைத்ததை வையை." (பரிபாடல், 6)

" சிறையும் உண்டோ செழும்புனல் மிக்குழீஇ
நிறையும் உண்டோ காமம் காழ்கொளின்."
(மணிமேகலை, 5)

" நிறையழி காமநோய் நீந்தி அறையுற்ற
உப்பியல் பாவை உறையுற் றதுபோல
உக்கு விடும்என் உயிர்." (நெய்தற்கலி, 21)

" வேலியங் குறுஞ்சூல் விளைகாய்ப் பஞ்சினம்
பெருவெள் ளிடையிற் சிறுகால் பட்டென
நிறைநாண் வேலி நீங்கித் தமியே
ஒருழி நில்லா தலமரல் கொள்ளும் என்
அருந்துணை நெஞ்சம்." (கல்லாடம், 89)

" சிறையென்ப தில்லைச் செவ்வே செம்புனல் பெருகுமாயின்
நிறையென்ப தில்லைக் காமம் நேர்நின்று சிறக்குமாயின்
இறைநின்ற துளதென்பார்சென் றரும்பெறல் இவளதுள்ளம்
நறைநின்று கமழும் குஞ்சி நம்பிபால் பட்டதன்றே."
(சூளாமணி, கல்யாண, 155)

" குட்டநீர்க் குவளையெல்லாம் கூடிமுன் னிற்க லாற்றுக்
கட்டழ கமைந்த கண்ணாள் நிறையெனும் சிறையைக் கைபோய்
இட்டநாண் வேலியுந்திக் கடலென எழுந்த வேட்கை
விட்டெரி கொளுவ நின்றாள் எரியுறு மெழுகின் நின்றாள்."
(சீவக சிந்தாமணி, 710)

காம வேட்கையால் நிறையழிந்து மகளிர் மறுகி அயர்வர் என்பதை நூல்கள் இங்ஙனம்ஒருமுகமாய் உணர்த்திநிற்கின்றன. நிறையைக் கதவு என்றார் தேவர். இவர் அதனை அங்குசம் என்றார்.

நாண் அங்கே தாழ் என நின்றது. இங்கே கைப்பிடியாயது. கதவை உடைத்துக் காமம் உள்ளே கொள்ளையடித்த நிலையை அது குறித்தது; இது காப்பைக் கடந்து உள்ளிருந்து கொள்ளை போனதை உணர்த்தியது.

இராமன் மீதுகொண்ட காதல்மிகுதியால் சீதை நோத லுழந்து தவித்த விரகதாப நிலைகளை மேலும் விரித்து விளக்கி யிருக்கிறார். காமப் பாலாகிய அகப்பொருளின் துறைகள் நம் தமிழ் மொழியில் மிகப்பெருகி வந்துள்ளன. சங்கத்துச் சான் றோர் எல்லாரும் இப்பகுதியை மிகுதியாகப் பாராட்டிப் பாடி

யிருக்கின்றனர். அம்மேலோர் முறையைத் தழுவி இந்நூல் முறை வந்துள்ளது. காதலால் ஒரு உயிரடையும் நோதல்கள் நுவல நேர்ந்தன.

சீதை மாலுற்றது

மாலுற வருதலும் மனமும் மெய்யும்தன்
நூலுறு மருங்குல்போல் நுடங்கு வாள்நெடும்
காலுறு கண்வழி புகுந்த காதல்நோய்
பாலுறு பிரைஎனப் பரந்த தெங்குமே. (1)

மறுகி நின்றது

நோமுறும் நோய்நிலை நுவல கிற்றிலள் ;
ஊமரின் மனத்திடை உன்னி விம்முவாள்
காமனும் ஒருசரம் கருத்தின் எய்தனன்
வேம்எரி யதனிடை விறகிட் டென்னவே. (2)

மயங்கி விழுந்தது

நீழலிடு குண்டல மதனில் நெய்யிடா
அழலிடா மிளிர்ந்திடும் அயில்கொள் கண்ணினுள்
சுழலிடு கூந்தலும் துகிலும் சோர்தரத்
தழலிடு வல்லியே போலச் சாம்பினுள். (3)

உடல் மெலிந்தது

தழங்கிய கலைகளும் நிறையும் சங்கமும்
மழுங்கிய வுள்ளமும் அறிவும் மாமையும்
இழந்தவள் இமையவர் கடைய யாவையும்
வழங்கிய கடலென வறியள் ஆயினுள். (4)

உள்ளம் சோர்ந்தது

கலங்குழைந் துகநெடு நாளும் கண்ணற
நலங்குழை தரநகில் முகத்தின் ஏவுண்டு
மலங்குழை எனவுயிர் வருந்திச் சோர்தரப்
பொலங்குழை மயிலைக்கொண்டு அரிதிற் போயினர். (5)

பாங்கியர் தாங்கியது

காதொடுங் குழைபொரு கயற்கண் நங்கைதன்
பாதமும் கரங்களும் அனைய பல்லவத்
தாதொடும் குழையொடும் அடுத்த தண்பனிச்
சீதநுண் துளிமலர் அமளி சேர்த்தினர். (6)

அமளியில் கிடந்தது

நாளறு நறுமலர் அமளி நண்ணினள்
பூளைவீ புரைபனி புயற்குத் தேம்பிய
தாளதா மரைமலர் தகைந்த பொய்கையும்
வாளரா நுங்கிய மதியும் போலவே. (7)

விழிநீர் சொரிந்தது

மலைமிசைத் தடத்துகு மழைக்கண் ஆலிபோல்
முலைமுகட் டுதிர்ந்தன நெடுங்கண் முத்தினம்
சிலைநுதற் கடையுறை செரிந்த வேர்வுதன்
உலைமுகப் புகைநிமிர் உயிர்ப்பின் மாய்ந்ததே. (8)

வெம்பி விழுந்தது

கம்பமில் கொடுமனக் காம வேடன்கை
அம்பொடு சோர்வதோர் மயிலும் அன்னவள்
வெம்புறு மனத்தனல் வெதுப்ப மென்மலர்க்
கொம்பென அமளியிற் குழைந்து சாய்ந்தனள். (9)

வெதும்பி நொந்தது

சொரிந்தன நறுமலர் சுறுக்கொண் டேறின
பொரிந்தன கலவைகள் பொறியிற் சிந்தின
எரிந்தவெங் கனல்சுட இழையிற் கோத்தநூல்
பரிந்தன கரிந்தன பல்லவங்களே. (10)

(மிதிலைக்காட்சி, 41-50)

காதல்மிகுந்து நோதல் உழந்து கன்னிமாடத்தில் சீதை அடைந்துள்ள காமதாபங்கள் இன்னவாறு வெளியறிய வந்தன.

அரிய இனிய ஒரு குலமங்கை உரிய காதலனைக் கண்டு உழுவலன்பு மண்டி உயர்மையல் கொண்டு உயிர் மறுகியுள்ள செயல் இயல்களை உணர்வுக்காட்சியால் நோக்கி இங்கே நாம் உளம் இரங்கி நிற்கின்றோம்.

ஈண்டு வெளிப்பட்டுள்ள மெய்ப்பாடுகளால் அந்த உயிர் உள்ளே உளைந்திருக்கும் துன்பக் கூறுகள் இத்துணையனவென உய்த்துணர நின்றன. மத்து எறி தயிர் எனச் சித்தம் சிதறியுள்ளது.

1. காமவேட்கை அதிகரித்தவுடனே உள்ளம் தடுமாறி மயலுழந்து செயல் இழந்து அயலொன்றும் அறியாமல் உடல் குழைந்து துவண்டு கிடக்கநேர்ந்தாள் ஆதலால் “நால் உறு

மருங்குல்போல் நுடங்குவாள்" என அக்கிடைநிலையை இடையோடு இணைத்து இங்ஙனம் உணர்த்தினர். நுடங்கல்=துவளல். நெடும் கால் உறுகண்=நெடிய இடம் உடையகண். கால்=இடம். கண் வழி புகுந்த காதல் நோய் சீதையின் உள்ளம் உயிர் உடல் எங்கும் பரவியது. அந்நிலையை நாம் தெளிவாக உணர்ந்து கொள்ள ஓர் உவமானம் வந்துள்ளது.

"காதல் நோய், பால் உறு பிரை எனப் பரந்தது எங்குமே" என்னும் இது உன்னி உணர வுரியது. பிரை=மோர்த்துளி.

கறந்தபடியே தூய்மையாயுள்ள பாலில் சிறிது மோர்படின் அது முழுதும் நிலைமாறி வேறும்; அதுபோல் பிறந்த மேனியாய்க் கன்னிமை காத்துப் புனித நிலையில் மன்னியிருந்த சீதை இன்று ஒரு காதல் உறவே உளம் உயிரெல்லாம் நிலை திரிந்தாள் என்பதாம். திரிவு உரிமைமீது உறைந்துள்ளது என்க.

பால் சீதைக்கும், பிரை காதலுக்கும் ஒப்பாம். ஆகவே அந்த இரண்டிற்கும் உள்ள இயற்கையுரிமையும் இனமும் தெளிவாயின. பாலிலிருந்து பிறந்த பிரை மீண்டும் அப்பாலையே பதப்படுத்த நேர்ந்ததுபோல் தன்னிடம் தோன்றிய இம்மாலும் சீதையை மேலும் மாண்புறுத்த வாய்ந்தது. பிரை இட்ட பால், தயிர், வெண்ணெய், நெய், மோர் என நிலவி நின்று உலகையூட்டி உதவியருளும்; அதுபோல் இங்கே காதலுற்ற சீதை இராமனுக்கு இனி ஐம்புல இன்ப நிலையமாயமர்ந்து அகிலமும் நலமுற அருள் புரியும் என்பதாம்.

உரிய காதலால் உள்ளம் திரிந்து பரிவு கூர்ந்து பான்மை வழியே படிந்து பாரும் வானும் பயனுறும்படி மேன்மையுற்றுள்ளமையை இங்ஙனம் மேன்மையாக விளக்கியருளினர். பால் பலனுக்கு வந்ததுபோல் பாவையும் நலனுக்கு வந்தாள் என்க.

காம வேட்கையால் விளைந்த விரகதாபங்களை முறையே இனி உரை செய்கின்றார்.

2. வாய் திறந்து யாதொரு வார்த்தையும் பேசாமல்காதல் மிகுதியால் நோதலுழந்தாள். விறகு பெற்ற தீப்போல் விரக தாபம் கொழுந்துவிட்டு எரிந்தது; உரிமைத் தோழிகளான யாரிடமும் ஓர் உரையும் கூறாமையால் ஊமைபோல் உள்ளங் கலங்கி உளைந்திருந்தாள். நோம்=நொந்துவருந்துவாள்.

"ஊமரின் மனத்திடை உன்னி விம்முவாள்"

என்றதனால் பிராட்டியின் மனவேதனையும் மவுனக்காட்சியும் வெளிப்பட்டு நின்றன.

3. காமதாபத்தால் மனநிலை குலையவே உடல் மெலிந்தது; நிறம் பசந்தது; கூந்தல் கலைந்தது; துகில் சோர்ந்தது; நெருப்பில் இட்ட பூங்கொடி போல் நிலை திரிந்து கிடந்தாள்.

4. உடல் நலமும் உயிர் நலமும் ஒருங்கே யிழந்தாள். தேவர்கள் கடைந்தபொழுது அமிர்தம் சுரபி சிந்தாமணி முதலிய பொருள்களை யெல்லாம் உதவிவிட்டு வறுமையாயிருந்த பாற்கடல்போல் உரியனவெல்லாம் நீங்கி வெறுமையாய்வெதும்பியிருந்தாள்.

மனநிலை குலைந்து சானகி இங்ஙனம் மறுகி அலமந்தாள். சுற்றியிருந்த தோழியர் உற்றது ஒன்றும் தெரியாமல் உளைந்து வருந்தினர். தக்க பரிகாரங்கள் செய்து பார்த்தார். இனிய மலரணையில் படுக்கவைத்து இதம் பல புரிந்தார். ஆற்றிப் போற்றி ஆர்வமீதூர்ந்து அவர் செய்த உபசாரங்களெல்லாம் எரியும் நெருப்பில் நெய்பெய்ததுபோல் சீதையின்விரகதாபத்தை அதிகப்படுத்தின. படுத்தவே,பஞ்சணையில் பதைத்துக்கிடந்தாள்.

"பரிந்தன கரிந்தன பல்லவங்களே"

இது காம வெப்பத்தின் கொடுமையை உணர்த்தி நின்றது. பல்லவங்கள் என்றது படுக்கையில் பரப்பியிருந்த மெல்லிய தளிர்களை. சீதை படுத்திருந்த அமளியில் நறுமலர்களும் இனிய தூவிகளும் குளிர் தளிர்களும் மிருதுவாக மருவியிருந்தன ஆதலால் அவை காம தாபத்தால் கரிந்துபோயின என்க. எனவே அத்தாபத்தின் வெம்மையும் வேகமும் விளங்கி நின்றன.

இவ்வாறு விரக வெப்பத்தால் வெய்துயிர்த்துத் தன் உணர் விழந்து தளர்ந்து கிடக்கவே அயலிருந்த செவிலித் தாயர் அனை வரும் அவலமிகவுடையராய்க் கவலையடைந்தார். நேர்ந்தது இன்னதென்று உணராமையால் நெஞ்சம் பதைத்தார்.

ஏதேனும் திருட்டி தோடம் ஏற்பட்டிருக்குமோ என்று திகைத்து அதற்கான பிராயச்சித்தங்களை விரைந்து செய்யத் தொடங்கினர். அவரதுபதைப்பும் கடுப்பும் பரிவமைந்திருந்தன.

தாதியர் செவிலியர் தாயர் தவ்வையர்
மாதுயர் உழந்துழந்து அழுங்கி மாழ்கினர்;
யாது கொல் இது? என எண்ணல் தேற்றலர்
போதுடன் அயினிநீர் சுழற்றிப் போக்கினர்.

சீதையினது இந்த விரகதாபத்தில் சனக மன்னனுடைய அந்தப்புரமே அலமந்திருக்கின்றது என்பது இதில் வந்திருக்கும் தாயர் முதலியவரால் தெரிய வருகின்றது.

தாதியர், ஏவல் செய்யும் தோழியர். செவிலியர், நன்கு சீராட்டிப் பாதுகாத்துவரும் அரிவையர். அறிவுக் கலைகளையும் உல்லாசக் கதைகளையும் உரையாடி உவகை விளைப்பதில் இவர் வல்லவர். தாயர் என்றது சனகனுடைய மனைவியரை. சீதையைப் பெற்ற தாய் ஒருத்தி இல்லை ஆதலால் உற்ற தாயரை இங்ஙனம் உரிமையுடன் உரைத்தார். தவ்வையர் என்றது தமக்கை முறையில் உள்ளவர்களை.

வகை பிரித்துக்காட்டியது எல்லாரும்தொகையாய்த்திரண்டு ஒரு முகமாய் நின்று உள்ளம் துடித்து உபசரித்துப்போற்றியிருக்கும் உரிமைக் கூட்டத்தின் பெருமை நிலை தெரிய.

"மாதுயர் உழந்து உழந்து அழுங்கி மாழ்கினர்"

என்றமையால் சீதைபால் அவர் கொண்டுள்ள ஆர்வநிலையும் அருமைப் பாடும் அறியலாகும். அழுங்கல் = உள்ளங்குழைந்து இரங்கல். "அழுங்கல் நெஞ்சத்து அயா அந்நோய்"(பெருங்கதை) என்புழி அழுங்கல் நிலை காண்க.

பரிகாரங்கள் பல செய்து பார்த்தும் பயன் ஒன்றும் காணாமையால் பதைத்துத் துடித்துப் பரிந்து வருந்தினர். அந்த அவலத்துடிப்புகளின் பன்மை நிலையும், மிகுதியும் தெரிய அடுக்கு வந்தது. மாழ்குதல் = மனம் அழிந்து சாம்புதல்.

"ஐயோ தெய்வமே! என்ன இது? எங்கள்பெண்ணரசிக்கு இவ்வண்ணம் வருவானேன்! மன்னர்பிரான் கேள்வியுற்றால் என்ன பாடு படுவார்? நிகழ்ந்தது ஒன்றும் தெரியவில்லையே! மாலைப் பொழுது வரையும் உல்லாசமாய் ஓடியாடிச் சுகமாயிருந்தாளே! கொஞ்ச நேரத்திற்கு முன்னதாகத்தானே இந்தக் கோளாறு தோன்றியிருக்கிறது! எந்தத் தெய்வம் செய்தவஞ்சகமோ?

யாதொரு உண்மையும் தெரிந்திலதே!'' என்று இவ்வாறு பல பல பன்னி வருந்தி முடிவில் ஒன்று சூழ்ந்தார்.

சாந்தி செய்தது

மஞ்சள் நீரில் கொஞ்சம் சுண்ணாம்பு கலந்து அதில் சில மலர்களைத் தூவி, பருக்கை, பருத்திவிதை முதலியனவும்சேர்த்து, சீதையின் தலையை வலமாக மூன்று முறை சுற்றி அச்செந்நீர்ப் பொட்டை நெற்றியில் தொட்டு இட்டுக் காலடியில் சிறிது வார்த்துவிட்டு மீதமுள்ள நீரை வள்ளத்தோடு கொண்டுபோய் நாற்சந்தியில் கொட்டிவிட்டுத் திரும்பிப் பாராமல் வரும்படி ஒருத்தியிடம் கொடுத்துவிடுத்தார் ஆதலால்,

''போது ஒடு அயினிநீர் சுழற்றிப் போக்கினார்''

என்றார். இதனை ஆலத்தி நீர் எனவும் கூறுவர். இதனால் கண் எறு முதலிய தோடங்கள் நீங்கிவிடும் என்பது நம்பிக்கை.

பாவம்! நோய் மூலம் தெரியாமல் தாய்மார் இப்படி அலமந்து அல்லல் பாடு பட்டிருக்கின்றனர். இந்தப் பாட்டுக் கெல்லாம் சீதையும் உடன்பட்டு இசைந்துதான் இருந்திருக்கிறாள். ''எதுக்கு ஈதெல்லாம் வீணே செய்கிறீர்கள்!'' என்று உரிமைத் தோழிகளிடமும் காதுக்குத் தெரியும்படி கூடச் சொல்லவில்லை. சொல்லாமைக்குத் தக்க காரணங்கள் இருந்தன. என்னை? ''இந்தப் பரிகாரங்கள் செய்ய வேண்டா; இவற்றால் ஒன்றும் தீரப்போவதில்லை'' என்று வெளியே சொன்னால், அப்படியாயின் உங்கள் உடம்புக்கு வேறு என்ன செய்கிறது? ஏன் இப்படி உள நிலை குலைந்து உடல்துவண்டு கிடக்கிறீர்கள்? நடந்த காரியம் என்ன? சொல்லுங்கள் என்று தொடர்ந்து கேட்பர். அதற்குப் பதில் சொல்லியாகவேண்டும். ஒன்றுமே பேசாது இருந்துவிட்டால் அவர்களுக்குத் தோன்றியவற்றைச் செய்துபார்த்துவிட்டுத் திகைத்துப் போவர் என்பதுகருத்து. அதுவும் தவிர, விரகதாபத்தால் தன் உணர்ச்சிகுன்றி மெய்ம்மறந்து கிடந்தமையால் செய்த பிராயச்சித்தங்களைத் தடுக்கவில்லை என்க.

கழுவாயாகக் கெழுதகைமையுடன் அவர் செய்த வழிபாடுகளெல்லாம் பிழைபாடுகளாகவே பெருகி வரலாயின. விறகுறு தீயென விரகம் மிகுந்தது. உணர்வு மயங்க உயிர் தியங்கியது.

காம சுரத்தின் கொடுமையையும் அதனால் அடைந்த தாப நிலையையும் அயலே வருவதால் நன்கு அறியலாகும்.

அருகில்நின்று அசைக்கின்ற ஆல வட்டக்கால்
எரியினை மிகுத்திட இறையும் மாலையும்
கரிகுவ தீகுவ கனல்வ காட்டலால்
உருகுபொற் பாவையை ஒத்துத் தோன்றினள்.

(மிதிலைக்காட்சி, 52)

தீயிடையே மருவி நிற்கும் தங்கப்பதுமை போல் விரக தாபத்தால் சீதை உருகி நின்றாள் என்றதனால் அவள் உள்ளம் புகுந்த காமவேகத்தின் கடுமையும் கொடுமையும் புலனாம்.

ஆலவட்டம்=பெரிய விசிறி. பட்டும் மயில் தோகையும் அமைத்து வட்ட வடிவமாகச் செய்யப்பட்டது. [புழுக்கம் தீரவும், நல்ல காற்று வரவும், இருமருங்கும் அருகே நின்று பாங்கியர் பாங்கோடு வீசினர் ஆதலால் "அசைக்கின்ற ஆலவட்டக்கால்" என அதன் வேலை நிலை தெரியவந்தது.] கால்=காற்று.

உலைத்துருத்தியால் ஊதப்பட்ட எரிபோல் விசிறிக் காற்றால் விரகம் மிகுதியாய தென்பதாம். சாந்தியாகச் செய்தனவெல்லாம் வேந்துயராய் விரிந்து குமரிக்கு மேலும் கொடுமைவிளைத்து வந்தன. உட்புகுந்த வேட்கை உயிரை விழுங்கி நின்றது.

அன்னையர் முதலிய அனைவரும் இனி என்ன செய்வது? என்று திகைத்து அயலே இன்னலுழந்து நின்றனர். சீதை தன்னை மறந்து கிடந்தாள். அங்ஙனம் கிடந்தவள் பின்பு வாய் புலம்பத் தொடங்கினாள். அந்தப் புலம்பல்களிலிருந்து தான் நோயின் காரணம் சிறிது புலப்பட நேர்ந்தது.

## சானகி புலம்பியது

கன்னி என்ன சொல்லிப் புலம்பினாள்? என்பதைக் கவி தெளிவாக எடுத்துக்காட்டியிருக்கிறார். காட்சியிலுள்ள கருத்தொளிகள் கருதியுணர வுரியன. சொல்லிய நிலைகளைத் தொடர்ந்து கண்டு முடிவில் அவற்றின் வடிவும் வண்ணமும் வகுத்துக் காண்போம்.

அல்லினை வகுத்ததோர் அலங்கற் காடு எனும்;
வல்லெழு வல்லதோர் மரகதப்பெருங்
கல் எனும் இருபுயம்; கமலம் கண் எனும்;
வில்லொடும் இழிந்ததோர் மேகம் என்னுமால்.

நெருக்கியுட் புகுந்தரு நிறையும் பெண்மையும்
உருக்கியென் உயிரொடும் உண்டு போனவன்
பொருப்புறழ் தோள்புணர் புண்ணியத்தது
கருப்புவில் அன்றவன் காமன் அல்லனே. (2)

பெண்வழி நலனொடும் பிறந்த நாணொடும்
எண்வழி யுணர்வுநான் எங்கும் காண்கிலன்
மண்வழி நடந்தடி வருந்தப் போனவன்
கண்வழி நுழையுமோர் கள்வ னேகொலாம்? (3)

இந்திர நீலமொத் திருண்ட குஞ்சியும்
சந்திர வதனமும் தாழ்ந்த கைகளும்
சுந்தர மணிவரைத் தோளு மேயல
முந்தியென் உயிரை அம் முறுவல் உண்டதே. (4)

படர்ந்தொளி பரந்துயிர் பருகும் ஆகமும்
தடந்தரு தாமரைத் தாளு மேயல
கடந்தரு மாமதக் களிநல் யானைபோல்
நடந்தது கிடந்ததுஎன் உள்ளம் நண்ணியே. (5)

உரைசெயில் தேவர்தம் உலகு ளானலன்;
விரைசெறி தாமரை இமைக்கு மெய்ம்மையான்
வரிசிலைத் தடக்கையன் மார்பின் நூலினன்
அரசிளங் குமரனே யாகல் வேண்டுமால். (6)

பிறந்துடை நலநிறை பிணித்த எந்திரம்
கறங்குபு திரியுமென் கன்னி மாமதில்
எறிந்தவக் குமரனை இன்னும் கண்ணிற்கண்டு
அறிந்துயிர் இழக்கவும் ஆகு மேகொலாம்? (7)

என்றிவை இனையன விளம்பும்; வந்தெதிர்
நின்றனன் அவன்எனும்; நீங்கி னான்எனும்;
கன்றிய மனத்துறு காம வேட்கையால்
ஒன்றல பலநினைந் துருகும் காலையே. (8)

(மிதிலைக் காட்சி, 52-60)

புலப்பங்கள் எப்படி யிருக்கின்றன? பார்த்தீர்களா? வார்த்தைகளில் வழிந்துள்ள சுவைகளை நோக்கின் ஆர்த்தி நிலை புலனும். சீதையின் காதலைத் தானே உட்கொண்டு கவி இங்கே புலம்பியிருக்கின்றார். புலம்பல்களில் இராம சவுந்தரியங்கள் ததும்பி நிற்கின்றன. உள்ளம் கவர்ந்தன சுவைகளில் மிளிர்ந்தன.

பொருளொடு பொருந்தாமல் மருளுடன் மருவிவரும் பிதற்றல்களையே புலப்பம் என்பர். புலனுணர் விழந்தபொழுது அது வெளியே புலப்படும். சுரம் முற்றிச் சன்னி கண்டபொழுது மனிதன் தன்னறிவிழந்து கிடப்பான்; அந்நிலையில் வாய் பிதற்றல்களே புலம்பல்களாம். இங்கே காமதாபத்தால் கருத்தழிந்து கிடந்த சீதை தன்னையறியாமலே இன்னவாறு புலம்பியிருக்கிறாள்.

ஒருவனுக்குப் புலப்பம் தோன்றின் உயிர்க்கு அபாயம் என அவனது உறவினர் அஞ்ச நேர்வர். ஆகவே இந்நிலை எவ்வளவு பயங்கரமானது என்பது இனிது புலனும். காம வேட்கையின் உச்சநிலையை இவ்வாறு உணர்த்தி யிருக்கிறார்.

வேட்கை ஒருதலை உள்ளுதல் மெலிதல்
ஆக்கம் செப்பல் நாணுவரை இறத்தல்
நோக்குவ வெல்லாம் அவையே போறல்
மறத்தல் மயக்கம் சாக்காடு என்றுஅச்
சிறப்புடை மரபினவை களவென மொழிப.
(தொல்காப்பியம், களவியல், 9)

களவு நிலையில் முதலில் கண்டு காதல்மீக்கொண்ட காதலர் இருவருக்கும் உளமலி துயரம் இவ்வளவில் விளையும் என ஆசிரியர் தொல்காப்பியனார் இங்ஙனம் வரையறுத்து உரைத்திருக்கின்றார். இன்ப விழைவில் விளைந்த துன்பக்கூறுகளே காதல்நோதல் என ஓத நேர்ந்தன. ஆசை மீதூர்ந்து ஆவி சோர்ந்தது.

மையல் அடியாய் வரும் மனத்துயரங்கள் ஆதலின் இவற்றை மன்மத அவத்தைகள் என்பர். இந்தக் காமத்துன்பங்களுக்கெல்லாம் மூலமுதல் காதலர் நேரெதிர்ந்துகண்ட காட்சியேயாம்.

"காட்சி முதலாச் சாக்காடு ஈருக்
காட்டிய பத்தும் கைவரும் எனினே
மெய்யுறு புணர்ச்சி எய்துதற் குரித்தே."
(அகப்பொருள், 35)

தாமே எதிர்ப்பட்டுக் கண்டு காதலித்த தலைவனும் தலைவியும் மெய் தொட்டுக்கலந்து மகிழ்தற்கு முன் இடையே ஆதரம்பெருகி நோதலுழந்து படுந்திறங்கள் பத்தாம் என்பதை மேல் வந்துள்ள சூத்திரத்தாலும், இதனுள்ளும் இனிதறியலாகும்.

காணும் வரையும் யாதொரு வேறுபாடுமின்றி இனிதமர்ந்து நின்ற உயிரிரட்டைகள் கண்டவுடனே காமம் தலைக்கொண்டது. அது மையல் நோய்க்குச் செய்யில் வித்து விதைத்த படியாம் ஆக லின் வேட்கை என முதலில் நின்றது.

1. வேட்கை = கருதிய காதலரைப் பெறவேண்டும் என்னும் பெருவிருப்பம்.
2. ஒருதலை = ஒருவரை ஒருவர் கருதி உழலுதல்.
3. உள்ளுதல் = இடைவிடாது எண்ணி ஏங்குதல்.
4. மெலிதல் = அவ்வேக்கம் காரணமாக உடம்பு வாடுதல்.
5. ஆக்கம் செப்பல் = காதலர் எப்படியும் கிடைத்துவிடுவார் என்று தனக்குள்ளேயே சொல்லி ஆற்றுதல்.
6. நாணுவரை இறத்தல் = நாணத்தின் எல்லை கடந்து தவித்தல்.
7. நோக்குவ எல்லாம் அவையே போறல் = காண்பனவெல்லாம் காதலருடைய வடிவங்களாகவும் வண்ணங்களாகவும் தோன்றுதல்.
8. மறத்தல் = எல்லாவற்றையும் மறந்து செயலிழத்தல்.
9. மயக்கம் = மதிமயங்கிக் கண்டபடி புலம்பல்.
10. சாக்காடு = காதலரைப் பெறுவழி உயிர்வாழேன் என உலகறிய உறுதிகூறல்.

இந்தக் காமவேதனைகளையெல்லாம் சீதையும் இராமனும் அடைந்து வருந்தி ஆவலித்துழந்துள்ள நிலைகளை முன்னும் பின்னும் காவியத்தில் தொடர்ந்து காணலாம்.

காட்சி நிகழ்ந்த பின்பு தலைவனுடைய காதல் தவிப்புகளை முதலில் விதந்து கூறுவதே பெரும்பாலும் நூல் மரபாயுள்ளது. இங்கே நம் கவி தலைவியை முந்துறக்கூறியிருக்கிறார். பேராண்மை நிறைந்த அப்பேரழகனுடைய சீர்மை நீர்மைகளை ஓர்மையாக யாண்டும் உவந்து போற்றிவருகின்றார். அவ்வாவில் இதுவும் தொகை செய்தபடியாம். அன்றியும் இராசவீதியில் நில்லாமல் நடந்து சென்ற அண்ணலைப்பற்றிப் பின்னே பெருகப் பேசவேண்டியிருத்தலால் முன்னே மையலில் வீழ்ந்த அச்செய்யவள் நிலையை இன்னவண்ணம் வையமறிய வரைந்து காட்டினார் என்க.

தம் காவியநாதனது எழில்நலங்களை இடம் வாய்த்தபொழு தெல்லாம் விழைவு மீதூர்ந்து உளமுருகிப் பாராட்டி வருதலை நாமும் உடனுடன் பார்த்து உவந்து வருகின்றோம். சீதை சொல்லிப் புலம்பியதாகச் சொல்லியிருக்கும் மொழிகள்தோறும் உள்ளன்பு துளித் தொழுகுதலை உணர்வுக்காட்சி யுடையார் எவரும் நேரே காணலாகும்.

1. அல்லினை வகுத்தது ஓர் அலங்கற் காடு

என்றது இராமனது மயிர்முடியை. அல்=இருள். திருமை யாய் அடர்ந்து விரிந்து செறிந்து நெறித்துள்ளதைச் சோகவாரி முடித்துப் பூமாலையும் புனையப்பட்டிருந்தமையால், "ஓர் அலங்கல் காடு அல்லினை வகுத்தது" எனச் சொல்லி வியந்தாள்.

முருகிற் சிவந்த கழுநீரும் முதிரா இளைஞர் ஆருயிரும்
திருகிச் சொருகும் குழல்மடவீர்! செம்பொற் கபாடம் திறமினோ
(கலிங்கத்துப்பரணி)

என்றபடி மங்கையர் குழலிலே ஆடவர் மயங்கி மறுகுவர் என்பது மரபு. இங்கே குமரன் குஞ்சி முடியில் குமரி நெஞ்சு குடிபோயுள்ளது எனப்படி யுணர உரைத்திருக்கிறார்.

மேல்மாடத்திலிருந்து பார்த்தாள் ஆதலின் கீழே நின்ற அண்ணல் குஞ்சியில் முன்னதாகக் கண் விழுந்துள்ளது. அவ் வுண்மை உரையால் வெளியறிய வந்தது. இராமனுடைய மயிர் முடியில் சீதை இப்படி உயிர் பறி போயிருக்கிறாள்.

அதன்பின் தோள்களைக் குறித்தாள். உருண்டு திரண்டு நீண்டு நல்ல தசைப்பற்றுடன் பளபளப்பாய் ஒளி தவழ்ந்திருந் தன ஆதலின், "இருபுயம் வல் எழு அல்ல; ஓர் மரகதப் பெருங் கல்" என்றாள். மரகத மலை என்றது பசுமை சோதி வீசியுள்ளமை கருதி. எழு=இரும்புத்தூண்.

கண்கள் செந்தாமரை மலர்கள்போல் இதழ்விரிந்து அழகு சுரந்து திருமலிந்து குளிர்மையாய் அருளொழுகி நின்றன என் பான், "கண் கமலம்" என்றாள்.

பின்பு அவன் வடிவம் முழுவதையும் வரைந்து பகர்ந்தாள்: மாரிக்காலத்துக் கார்மேகம் ஒன்று நீர்மை நிறைந்து எங்கும் எழிலொளி தவழ இந்திரவில் ஏந்தி இந்த வுலகத்தில் அதிசயமாக

வந்து இறங்கியதுபோல் அந்தச் சுந்தரன் துலங்கி யிருந்தான் என்பாள், "வில்லொடும் இழிந்தது ஓர் மேகம்" என்று மோக மீதூர்ந்து முடிவில் மொழிந்தாள்.

2. வண்ண வடிவங்களை இன்ன வண்ணம் புகழ்ந்தவள் அவ் வண்ணலால் தன் பெண்மை சிதைந்துள்ளமையைப் பின்பு பேசி யுளைந்தாள்.

"நெருக்கி உட்புகுந்து அருநிறையும் பெண்மையும்
உருக்கி என் உயிரொடும் உண்டு போனவன்"

என்றமையால் இது பொழுது சீதை உள்ள நிலைமை தெளி வாயது. பெண்மை என்றது நாணம் மடம் அச்சம் பயிர்ப்பு முதலிய நல்ல தன்மைகளை. எல்லாம் இழந்து அயலாய் அலமந்துள்ளாள் என்பதாம்.

"நிறைத்தாழ் பறித்தென் நெஞ்சகம் புகுந்து
கள்வன் கொண்ட உள்ளம் இன்னும்
பெறுவன் கொல்லென மறுவந்து மயங்கி"
(பெருங்கதை, 1-33)

வாசவதத்தை உதயணனைக் குறித்துப் புலம்பியபடி யிது. இதன் சொல்லும் பொருளும் உள்ளுறை காதலும் ஈண்டு ஒத் துள்ளமையான் உடனுணர வந்தது.

இந்த உலகத்தில் இது வரையும் யாண்டும் கேட்டறியாத அதிசய அழகனை இன்று நான் கண்ணாரக் கண்டு களித்தேன்; இவ்வளவு பேரெழிலாளர் யாராய் இருக்கலாம்? ஒரு வேளை அழ கில் சிறந்தவன் மன்மதன் என்பார்களே! அவனாயிருப்பானோ? அவன் கருப்பு வில் உடையவன் என்று கேள்வி; நான் கண்டதோ மூங்கில் வில்லே; ஆதலால் காமனே அல்லன்; எவனோ ஒருவன் எனக்காகப் பிறந்து என்னை இப்படி நாடு சிரிக்கும்படி சீரழிக்க வந்திருக்கிறான் என உள்ளே ஆர்வம் கூர்ந்து ஆவலடைந்தாள்.

பச்சைமலைபோல் உச்சமான ஒளி வீசி இளமையும் எழி லும் ததும்பியுள்ள அந்த விழுமிய தோளைத் தழுவிக் கிடக்க அந்த மூங்கில் வில் என்ன புண்ணியம் செய்துள்ளதோ? என இன்னலுழந்து ஏங்கி யிருக்கிறாள்.

"பொருப்பு உறழ் தோள் புணர் புண்ணியத்தது"

என்றமையால் அதன் சேர்க்கையிலுள்ள விருப்பும் வேட்கையும் வெளிப்பட்டு நின்றன. தோள் உறு என்றது புணர் என்றது உணர்வுருகி வந்துள்ளது. ஆசை வயத்தளாய் மொழி கின்றமையால் காமக் கலவிக்குரிய வாசகங்களைக் கூசாமல் கூறினள். இராமனைத் தழுவ விழைந்துள்ள தாகம் தெரிந்தது.

அந்தக் காட்டு மரம் செய்துள்ள புண்ணியம் கூட நான் செய்யவில்லையே! பாவி! என ஆவி சோர்ந்து அயர்ந்தபடி யிது.

3. நாணம் முதலிய குணநலங்களையும் மன நிலையையும் கொள்ளைகொண்டு போயிருத்தலான் கைதேர்ந்த ஒரு பெரிய திருடனை என்பாள் "கண் வழி நுழையும் ஓர் கள்வனே" என்றாள். ஓர் என்றது கன்னவாசல் முதலிய புழைகளில் நுழையும் கள்ளரினும் இவன் ஒரு தனி நிலையினன் என்றவாறு.

எல்லாவற்றையும் பார்த்து மிக்க எச்சரிக்கையுடன் பாது காக்க வல்லன கண்கள். காப்பில் கைதேர்ந்துள்ள அக்கண்ணின் வழியே புகுந்து எனது பெண்மையைக் கவர்ந்து போயுள்ளானே! அம்மா! இது என்ன அதிசயத் திருடு! என்று விம்மித மெய்தி வியந்திருக்கிறாள்.

"மண்வழி நடந்து அடி வருந்தப் போனவன்"

என்றதில் இராமன் கால்கள் பூமியில் தோய்ந்து நடந்து போனது சீதைக்குச் சகிக்கவில்லை என்று தெரிகின்றது. சிவிகை யூர்ந்துசெல்லவுரிய சுகுமாரன் புவியில் பொடி சுட நடக்கலாமா? என அந்த அடிகளில் தனக்குள்ள ஆர்வ நிலையை வெளிப்படுத்தி யிருக்கிறாள். நடந்து செல்லுங்கால் தொடர்ந்து பார்த்து நின்றாள் ஆதலின் அப்பாதங்களின் அழகமைதிகளில் விழைவு கூர்ந் துள்ளாள். உரைகள் உளமுருகி ஒழுகியுள்ளன.

கள்வன் என்றது உள்ளம் களித்து வந்த உரிமை வாசகம்.

"என் உள்ளம் கவர் கள்வன்"

எனச் சிவபெருமானைத் திருஞான சம்பந்தரும்,

"கள்வன் கொல்? யான் அறியேன்; கரியான் ஒரு காளை"

எனத் திருமாலைத் திருமங்கையாழ்வாரும் பத்திப் பரவச ராய்ப் பாடியிருத்தல் அறிக. எனது நலனும் நாணும் உணர்வும் எங்கும் காணேமே! கொள்ளைகொண்டு போனானே! பொல் லாத கள்ளன்! என உள்ளம் கரைந்து உரையாடியுள்ளாள்.

பெண்வழி நலனெல்லாம் கண்வழி நுழைந்து கவர்ந்து சென்றானை கள்வன் என வெளியே இகழ்ந்து நின்றதுபோல் தோன்றினும் உள்ளே உவந்துகொண்ட உரிமை நிலையை உரையொளி தெளிவாக உணர்த்தி யுள்ளது.

"பெண்பா லவர்கட்கு அணியாய்ப் பிரியாத நாணும்
திண்பால் நிறையும் திருமாமையும் சேர்ந்த சாயல்
கண்பாற் கவினும் வளையும் கவர்ந்திட்ட கள்வன்
மண்பால் இழிந்த மலரைங்கணை மைந்தன் என்றாள்."
(சிந்தாமணி)

சீவகனைக் கண்டு காதல்மீக் கொண்டு கருத்துருகி நின்ற விமலை என்னும் குமரி கூறிய படியிது. இதன் சொல்லும் பொருளும் நிலையும் நம் கவியுள் தோய்ந்துள்ளமை காண்க.

தன் நெஞ்சம் நிலைகுலைந்ததற்குக் காரணம் தனது வேட்கையே யாயினும் அது விளைந்த மூலமூலையைச் சுட்டி இங்ஙனம் திட்டினாள். தன்னைக் கொள்ளை செய்துள்ளமையால் கள்ளன் என்றாள். கோல் என்றது உள்ள நிலை உணரவந்தது.

தலை, முகம், கைகள், தோள்கள், புன்னகை முதலிய வற்றைத் தனித்தனியே விரும்பி எண்ணிப் புலம்பி யிருக்கிறாள்.

"இந்திர நீலம் ஒத்து இருண்ட குஞ்சியும்"

என இராமனது கொண்டைக்கு உவமை கண்டு கூறியிருக்கும் அழகு காண்க. இந்திர நீலம் என்பது நீலமணி வகையுள் உயர்ந்த சாதி இரத்தினம். அடர்ந்த கருமையோடு ஒளிவனப்பு நிறைந்தது. மங்கலம் உடையது. அது கைவசம் இருந்தால் சிறந்த அரச திரு அமையும் என்ப. அரிய மகிமை வாய்ந்த அத்தகைய நீலத்தைச் சனகன் அரண்மனையில் அடிக்கடி பார்த்திருத்தலால் இவ்வாறு வார்த்தையாட வந்தது. அவன் மயிருக்கு இந்திர நீலமே ஒப்பு என்றால், வேறு அங்கங்களுக்கு எந்த உவமையை எடுத்துச் சொல்லுவது? அங்க சவுந்தரியங்களைத் தனித் தனியே எண்ணி எண்ணித் தேவி ஆவி உருகியுள்ளாள்.

பதினாறு கலைகளும் நிறைந்த பூரண சந்திரன் போன்ற திருமுக மண்டலம் என்பாள், "சந்திர வதனமும்" என்றாள். தாழ்ந்த கைகள் என்றது முழந்தாள் அளவும் நீண்டு தொங்கிய

காலைக் கரங்கள் என்றவாறு. அழகு குடிகொண்ட விழுமிய புயங்கள் என்பாள், "சுந்தர மணிவரைத் தோள்" என்றாள்.

முந்தி என் உயிரை அம் முறுவல் உண்டதே!

என்பதுதான் இங்கே மிகவும் சிந்தனை செய்யற்பாலது. இந்தவாசகத்தில்உள்ள உயிர்க்களையைஊன்றிப்பார்க்கவேண்டும்.

குஞ்சி, வதனம், கைகள், தோள்கள் என்பன மனத்துக்கு மிகவும் உவப்பை விளைத்துள்ளன ஆயினும் அவ்வெல்லாவற்றையும்விட உதடுகள் செய்துள்ள ஒரு சிறு வேலைதான் சீதையின், உயிர் முழுவதையும் கொள்ளைகொண்டு போயிருக்கிறது என்று அவளது சொந்த வாக்கு மூலத்தால் தெரியவருகின்றது.

வேறு யாருக்கும் தெரியாமல் அதி இரகசியமாய் நிகழ்ந்துள்ள ஒரு காதல் சிரிப்பு இங்கே பகிரங்கமாய் உலகறிய வெளிப்பட நேர்ந்தது.

இராமனுடைய அவயவங்களில் ஈடுபட்டுச் சானகி ஆர்வம் கூர்ந்து பார்த்து நின்றாள்; அந்நிலையில் இவனும் அவளை எதிர் நோக்கினான். நோக்கினவன் தன் உள்ளக் காதலை வெளிப்படுத்தி மெல்ல நகைத்தான்; அந்நகை அவளுக்கு உவகை நிலையமாயது; உயிர்க்கு உறுதி தந்தது. தன்பால் அன்புகொண்டுள்ளமையை அந்த இன்பச் சிரிப்பால் கண்டு கொண்ட பின்பு தான் கழிபேருவகையளாய் அவள் உயிர் உருகலானாள். உள்ளம் முதல் எல்லாம் அவன்பால் உரிமை மண்டி ஓடின. அம் முறுவல் உறவில்லையாயின், சீதை உள்ளம் இவ்வளவு பரவசமாய் விரைவில் உருகியிராது; ஒருதலைக் காமமாய் உளைந்தே யிருப்பள்; உடன்பாடு தெரிந்தமையினாலேதான் பசை யிருக்கிறது என்று நகை மிக வளர்ந்தது என்க. அந்த ஆசை மயமே ஆனமையால் ஆவியுள்ளமை தெரியவில்லை. "அம்முறுவல் என் உயிரை உண்டதே" என்றமையால் அதில் பரவசமாயுள்ள நிலைமை யறியலாம். சுட்டு அதன் தட்டுகளையெல்லாம் ஒட்டி யுணர ஒளிசெய்து நின்றது.

முனிவருக்கும் தம்பிக்கும் தெரியாமல் சீதையைப் பார்த்து இராமன் ஒரு திருட்டுச் சிரிப்புச் சிரித்திருக்கிறான்; அது இப்படி நளினமாக வெளிப்பட்டு எல்லாரும் தெரிந்து கொள்ளவந்தது.

முறுவல் = உதடுமலர்ந்த மென்னகை. கண்கள் போலவே உதடுகளாலும் காதலர் பேசிக்கொள்வர் என்பது பெறப்பட்டது.

5. மார்பு, தாள்கள், நடை என்னும் இவற்றின் அழகுகளில் உளம் அழுந்தி உருகி உளைந்திருக்கிறாள்.

படர்ந்து ஒளி பரந்து உயிர் பருகும் ஆகமும் என்றமையால் மார்பழகில் மால்கொண்டுள்ளமை தெளிவாயது. ஆகம் = மார்பு. தோள், மார்பு முதலிய அவயவங்கள் சிறிது நேரமே பார்க்கக் கிடைத்தன; நடைதான் வெகு தூரம் வரையும் தொடர்ந்து காண நேர்ந்தது ஆதலின், "களி நல் யானைபோல் நடந்தது கிடந்தது என் உள்ளம் நண்ணியே" என்று தன் கண்ணில் படிந்துள்ள உண்மையைக் கழறி நின்றாள். மதயானை போல் கம்பீரமாய் இராமன் நடந்து போயிருக்கின்றான்; அப்போக்கில் தன் உள்ளம் போக்கி இங்ஙனம் உளைந்து நின்றாள்.

அன்ன நடையும் இன்னலடைய இனிய நடையுடைய கன்னி மன்னன் நடையில் மயங்கித் தன்னடை தளர்ந்தாள் என்க.

6. இந்த அற்புத அழகன் எந்த வகையினனோ என மீளவும் ஆலோசிக்கலானாள். தேவ குமாரனோ? என்று சிந்தித்தாள்; சிந்தித்தவள் தான் கண்டபொழுது கண் முதலியன இமைத்தமையை நினைந்து இமையா நாட்டத்தவராகிய தேவர் சாதியாயிரான் என்று தீர்மானித்தாள்.

கையில் வில், நிவந்த மார்பு, திரண்ட தோள், கம்பீரத் தோற்றம், பெருமித நடை இவற்றையெல்லாம் எண்ணி நோக்கி "இவன் ஒரு சக்கரவர்த்தித் திருமகனாகவே யிருப்பான்" என்று ஒருமுகமாய் முடிவு செய்துகொண்டாள்.

"அரசிளங் குமரனே ஆகல் வேண்டுமால்"

என ஊகம் செய்து உறுதி பூண்டது தனக்கு ஓர் உபசாந்தியாயிருந்தது. தான் அரசகுமரி ஆதலால் அந்த வரிசைக்குத் தகுதியாகவே வந்து வாய்த்துள்ளதென உள்ளூர மனக்களிப் பூர்ந்தாள். இன வுரிமையை எண்ணி மனம் இன்பமீதூர்ந்தது.

7. எனது நிறைக் காவலை யுடைத்து நெஞ்சம் புகுந்து உணர்வு நலங்களையெல்லாம் ஒருங்கே கொள்ளைகொண்டு போயுள்ள அவ்வள்ளலை மறுபடி இன்னும் ஒருமுறை என் கண்ணாரக்

கண்டு நான் சாக நேர்ந்தாலும் அது எனக்கு ஒரு யோகமாம் என உள்ளழிந்து உருகியிருக்கிறாள்.

எதிரிகள் எவரையும் கிட்ட நெருங்க ஒட்டாமல் வெட்டி எறியும் விசித்திரமான மாயப்பொறிகளுடைய உயர்ந்த அரணமைந்த கோட்டையைத் தகர்த்து உள்ளே புகுந்து உரிய அரசைக் கவர்ந்து வெற்றிக் கொடி நாட்டிக் கொற்றம் கொண்டு குலவி நின்ற ஒரு சுத்த வீரனாக இராமனை இங்கே சுட்டியுள்ளாள்.

“பிறந்துடை நலம் நிறை பிணித்த எந்திரம்
கறங்குபு திரியும் என் கன்னி மாமதில்”

என்னும் இதில் தன்னுடைய மனவுறுதியையும் மதிநலனையும் நிறை நிலையையும் சீதை என்னவாறு எண்ணியிருந்துள்ளாள் என்பது இனிது புலனும். என் என்றது தன் ஏற்றம் தோன்ற வந்தது.

கறங்குபு திரியும் என்றது திவ்விய சக்கராயுதம்போல் எவ்வழியும் சுழன்று யாதொரு சோரமும் சேராதபடி செவ்விதாகப் பாதுகாத்து வந்தது என்றவாறு. அத்தகைய காப்பு வாய்ந்த திண்மையான பெண்மையும் வெண்ணெய்க்குன்று எரியுற்றது போல் இன்று எண்மையாய் இழிந்து தொலைந்ததே! என்பதாம்.

“என் கன்னி மாமதில் எறிந்த அக்குமரனை” என்றது யாண்டும் நிலை குலையாமல் நிலைத்து நின்ற எனது நிறைக்காவலை யுடைத்து உணர்வுயிர்களையெல்லாம் நேரே வாரிக்கொண்டு போன அவ்வள்ளலை என்றவாறு. குமரன் எனக் குறித்தது பருவமும் பக்குவமும் கருதி. தான் குமரி ஆதலின் குமரன் எனத் தமருரிமையோடு அமர மொழிந்தாள்.

அக்கட்டழகனைக் கணவனாகப் பெற்று மணப்புரிந்து தழுவி மகிழும் பாக்கியம் எனக்கு இந்தப் பிறவியில் இல்லாது போயினும், அந்தச் சுந்தரனை இன்னும் ஒரு முறை என் கண்ணாரக் கண்டு அதன் பின் நான் இறக்கும்படியாக வாவது திருவருள் கூட்டி வைக்குமா? என்று உளம் உருகி மறுகியுள்ளாள்.

“இன்னும் கண்ணில் கண்டு உயிர் இருக்கவும் ஆகுமேகொலாம்?”

என்னும் இதில் சீதையின் பரிவும் பரிதாபமும் நெடிதோங்கி நின்றன. கண்ணைச் சுட்டிக் கூறியது முன்னம் கண்டு களித்த

அதன் புண்ணிய நிலையை எண்ணி. படத்தில் கண்டாலும் மனத்தில் எண்ணினாலும் போதாது; நேரே கண் குளிரக் காண வேண்டும் என்றபடி. இராமனைக் காண்பதிலுள்ள தாகமும் மோகமும் யூகமாக ஈண்டு உணர்ந்துகொள்ள வந்தன.

"நலத்தை மத்தாக நாட்டி நல்வலி இளமை வார்ஆக்
குலப்பிறப் பென்னும் கையால் கோலப் பாசங் கொளுத்திக்
கலக்கியின் காமம் பொங்கக் கடைந்திடு கின்ற காளை
இலைப்பொலி அலங்கல் மார்பம் இயைவதென் றுரும்கொல்லோ?

"யாவனே யானு மாக அருநிறைக் கதவம் நீக்கிக்
காவல்என் நெஞ்சம் என்னும் கன்னிமாடம் புகுந்து
நோவவென் உள்ளம் யாத்தாய் நின்னையும் மாலையாலே
தேவரிற் செறிய யாப்பன் சிறிதிடைப் படுக என்றாள்." (2)

(சீவகசிந்தாமணி)

காந்தருவதத்தை என்னும் மங்கை சீவகனைக் குறித்துச் சொல்லியன. மத்தால் தயிரைக் கலக்கியதுபோல் அழகால் உள்ளத்தைக் கலக்கி என் கன்னித் தன்மையை அழித்துப்போன அவனை மாலையால் வளைத்து உலகம் அறியக் கட்டி வைப்பேன் என அக் குமரி இப்படிச் சுட்டி உரைத்துள்ளாள். காமவேட்கை மீதூர்ந்த பொழுது காதலிகள் காதலரைக் குறித்து உவகை புனையாடுந் திறங்கள் இவ்வாறு பல வுள்ளன.

என் கன்னி மாமதில் ஏறிக்குதித்த அக்குமரனை மீண்டும் காண முடியுமா? என்று பிராட்டி தவித்தாள்; கன்னிமாடம் புகுந்து என் உள்ளம் கவர்ந்த கள்வனைக் கண்டால் பூமாலையால் பிணித்து விடுவேன் என்றாள் தத்தை. இருவர் இயல்புகளையும் இணைத்து நோக்கின் நெஞ்சப் பண்புகளின் நிலை நேரே தெரியலாகும்.

சீதை உரையில் உள்ளக்குழைவும் உழுவலன்பும் உயிர் உருக்கமும் பெருகியுள்ளன. "அறிந்து உயிர் இழக்கவும் ஆகுமே கொலாம்?" என்றமையால் அவ்வமயம் தேவி ஆவி குலைந்து அலமந்துள்ளமை அறிய நின்றது.

காதல் நோய் செய்யும் வேதனைகளை நோக்கின் தனக்கு இனிச் சாதல் நேர்ந்துவிடும்; அவ்வாறு நேருமுன் மீளவும் ஒரு முறை அவ்வீர மூர்த்தியைக் காணும்படிக்காவது தெய்வம் கூட்டி வையாதா? அங்ஙனம் கண்டு மகிழ்ந்து நான் செத்தாலும்

எனக்குக் கதிமோட்சம் உண்டாம் என்று கன்னி கருதித் தவித்திருத்தலால் அந்த உள்ளப் பாசமும் உயிர்வேட்கையும் எவ்வளவு உயர்நிலையில் ஓங்கியுள்ளன என்பதை உணர்ந்துகொள்ளலாம்.

இந்த வண்ணம் தவித்துக் கிடந்தவள் "அந்த மரகத வண்ணன் இதோ வந்துவிட்டான்" என்று எழுந்தாள்; உடனே "அந்தோ! போய்விட்டானே!" என்று விழுந்தாள். "வந்து எதிர் நின்றனன் அவன் எனும்; நீங்கினன் எனும்" என்றது இராமனை உருவெளித் தோற்றத்தில் கண்டு என்க. [அவனையே நினைந்துகொண்டிருந்தமையால் அந்நினைவு முதிர்ந்து கண்டவிடமெல்லாம் அவன் உருவமாகவே காண நேர்ந்தது.

சானகியின் மனம் முதலிய அந்தக்கரணங்கள் யாவும் இராமமயமாகவே ஆகியிருந்தன என்பது இதனால் அறிய வந்தது.

இன்னவாறு பலபல புலம்பிப் பரிந்து கிடந்தாள். பொழுதும் அடைந்தது. சூரியன் மறைந்தான். அந்த அத்தமனம் இங்கே ஒத்த மனத்துடன் உதயமாகின்றது. கதிர் மதிகளுடைய உதய மறைவுகளை நம் கவி உரைத்து வருவது ஒரு தனிக் கலையாய்க் கிளைத்து வருகின்றது. பெரும்பாலும் கதை நிகழ்ச்சிகளோடே பிணைத்து அவை பேசப்படுகின்றன. இங்கே அன்றைய ஆதவன் மறைவைச் சொல்லவேண்டும்; என்னவாறு சொல்லலாம்? முன்னதாக நீங்கள் எண்ணி நோக்கினல் கவி சொல்லியுள்ள நன்னய நிலையை நன்கு காணலாம். அவர் சொன்னபடி என்ன?

அன்னமென் னடையவட்கு அமைந்த காமத்தீ
தன்னையும் சுடுவது தரிக்கி லானென
நன்னெடுங் கரங்களை நடுக்கி ஓடிப்போய்
முன்னைவெங் கதிரவன் கடலில் மூழ்கினன்.

சானகியைச் சுட்டு வதைக்கின்ற காமத்தீ தன்னையும் சுடும் என்று பயந்து கைகால்கள் நடுங்கி ஓடிப்போய்க் கடலுள் மூழ்கிக் கதிரவன் மறைந்தான் என்பதாம்.]

கரங்கள் என்றது கிரணங்களை. சூரியன் அடையும்பொழுது சிவந்த கிரணங்கள் முதிர்ந்த செஞ்சோதி வீசிச் சிலுசிலு என்று விதிர்த்து விளங்கும்; அந்த அலங்கல் காட்சி இங்கே துலங்கி நின்றது. உள்ளே அச்சம் மிகுந்தால் புறத்தே உடல் நடுங்கும்

ஆதலால் மெய்ப்பாடாகிய அச்சமும் சிலேடையாக இணைக் கப்பட்டது.

மெய்யெல்லாம் வெய்ய வெப்பமுடைய வெய்யோனும் காம வெப்பத்தை ஐயோ! என அஞ்சினான் என்றது, அதன் தீய வெம்மை தெளிய வந்தது. நெருப்பை அணைக்கவல்லது தண் ணீர் ஆதலை எண்ணிக் கடலுள் மூழ்கினான் என்றார். இயல்பாக நிகழ்ந்த ஏற்பாடு கவியின் பாட்டில் இப்பாடு பட்டுள்ளது.

காமதாபத்தால் சீதை அடைந்துள்ள ஏமவேதனையை இவ் வாறு பலவகை நிலைகளிலும் வலியுறுத்தி உளம் உருக உரைத்து வருகிறார். பின்பு தோன்றிய மாலைப்பொழுதைக் காலன் என்றார்.

விரிமலர்த் தென்றலாம் வீசு பாசமும்
எரிநிறச் செக்கரும் இருளும் காட்டலால்
அரியவட்கு அனல்தரும் அந்தி மாலையாம்
கருநிறச் செம்மயிர்க் காலன் தோன்றினான். (1)

மீதறை பறவையாம் பறையும், கீழ்விளி
ஓதம்என் சிலம்பொடும் உதிரச் செக்கரும்
பாதக இருள்செய்கஞ் சுகமும் பற்றலால்
சாதகம் என்னவும் தழைத்த மாலையே. (2)
(மிதிலைக்காட்சி, 62, 63)

இந்த இரண்டு பாடல்களும் அந்திக்கால வருணனையாய் வந்தன. விளி ஓதம் என்றது ஒலிக்கின்ற கடல் என்றவாறு.

காதலரை நினைந்து வருந்தும் காதலிகளுக்கு மாலைப்பொ ழுது காமவேட்கையை அதிகம் விளைக்கும் ஆதலால் அது காலன் என வந்தது. செக்கர் = செவ்வானம். கையில் பாசமும், செம் பட்ட மயிரும், கரிய உருவும் உடையன் ஆதலின் காலன் இங்கே மாலையோடு மருவி நின்றான். அரியவள் என்றது அருமை கருதி.

மாலையில் தென்றல்காற்று மெல்லிதாக வீசும். எல்லார்க் கும் அது இன்பம் நல்கும் ஆயினும் துணைபிரிந்துள்ள காத லர்க்குக் காமதாபத்தை எழுப்பித் துன்பம் மிகச் செய்யும்; ஆகவே ஈண்டு அது எம பாசம் என நின்றது.

"பந்திஅம் போது பசுந்தேன் உன் மேலிறைக்க
அந்தியம் போதுவிளை யாடுவாய்—சந்தனத்தின்
மட்டுலாம் சோலைதனில் மாலையெனும் மேகவன்னப்
பட்டுமேற் கட்டி பலதூங்கக்—கட்டவிழும்

அம்பரு வாவி அலர்த்தூளெல் லாமடங்கக்
கொம்பிருல் சிந்திக் குளிர்விக்கப்—பம்பு
மயிலினங்கள் கைகட்டி வாய்பொத்தி நிற்கக்
குயிலினங்கள் கட்டியங்கள் கூறப்—பயிலும்
பழுதிலளி சங்கீதம் பாட இள வேனிற்
பொழுது மெல்லநடந்து போவாய்—தொழுதகைய
வாள்மேவும் கண்ணார் வனமுலைமேல் ஆடவர்தம்
தோள்மேல் தவழ்ந்து சுகம்செய்வாய்—கோள்மேவும்
அம்புலியைத் தன்குட்டி யாய்வளர்க்கும் காமமெனும்
வெம்புலியை வாலுருவி விட்டிடுவாய்—வெம்பாப்
பழம்நழுவிப் பாலில் விழுந்ததுபோல் மாதர்
கொழுநரைப் போய்வலியக் கூடி—முழுதும்
அவராத் திரியாகாது அன்றைப் பொழுது
சிவராத் திரியாகச் செய்வாய்—யுவராசப்
பட்டம் உனக்குப் பரந்தாமன் கட்டினது
சட்டமறிந் தன்றோ தனிமுதலே—இட்டமுடன்
ஆகமே இன்புறநீ ஆலிங் கனஞ்செய்தால்
தேகமே மோசமென்று செப்பாரோ ?''

(தென்றல்விடுதூது)

தென்றலின் நிலைமைகள் இங்ஙனம் பல வகையாகக் குறிக்கப்பட்டுள்ளன. அது அந்திப்பொழுதில் உல்லாசமாய் விளையாடும், சேர்ந்த காதலர்க்கு இன்பம் பயக்கும், பிரிந்துள்ளவர்பால் காமமாகிய வெம்புலியை வாலுருவி விட்டு வெந்துயர் விளைக்கும் என இதில் விளக்கியிருத்தல் காண்க.

அந்தியைக் காலன் என்றதோடு அமையாது பேய் எனவும் குறித்தார். சாதகம்=பூதம், பேய். பறவை ஒலியும், கடல் முழக்கமும், இருளாகிய கருஞ்சட்டையும் தரித்துவந்ததென அந்நேரத்தின் நிலைகளைக் கோரமாக விளக்கியருளினர்.

அந்திமாலை,இருள், அன்றில் முதலியவற்றை நோக்கிச் சீதை சிந்தை நொந்து கூறியபடிகளை இனி இங்கே காண நேர்கின்றேம்.

கடலோ மழையோ முழுநீலக் கல்லோ காயா நறும்போதோ
படர்பூங் குவளை நாண்மலரோ நீலோற் பலமோ பானலோ
இடர்சேர் மடவார் உயிருண்பது யாதோ ? என்று தளர்வாள்முன்
மடல்சேர் தாரான் நிறம்போலும் அந்தி மாலை வந்ததுவே. (1)

அந்தியை வெறுத்தது.

மைவான் நிறத்து மீன்எயிற்று வாடை யுயிர்ப்பின்வளர்செக்கர்ப்
பைவாய் அந்திப் படஅரவே ! என்னை வளைத்துப் பகைத்தியால்
எய்வான் ஒருவன் கைஓயான் உயிரும் ஒன்றே இனியில்லை
உய்வான் உறவிப் பழிபூண உன்னோ டெனக்குப் பகையுண்டோ ! (2)

இருளை இகழ்ந்தது.

ஆலம் உலகிற் பரந்ததுவோ ஆழி கிளர்ந்ததோ அவர்தம்
நீல நிறத்தை எல்லோரும் நினைக்க அதுவாய் நிரம்பியதோ
காலன் நிறத்தை அஞ்சனத்தில் கலந்து குழைத்துக் காயத்தின்
மேலும் நிலத்தும் மெழுகியதோ விளைக்கும் இருளாய் விளைந்ததுவே.(3)

அன்றிலை வைதது.

வெளிநின் றவரோ போய்மறைந்தார்; விலக்க ஒருவர் தமைக்காணேன்;
எளியள் பெண்என் றிரங்காதே எல்லி யாமத் திருளூடே
ஒளியம் பெய்யும் மன்மதனார் உனக்கிம் மாயம் உரைத்தாரோ?
அளியென் செய்த தீவினையே அன்றி லாகி வந்தாயே. (4)

(மிதிலைக்காட்சி, 65-68)

கடல், காளமேகம், நீலமலை, காயாம்பூ, கருங் குவளை, நீலோற்பலம், கருநெய்தல் என்னும் இந்த ஏழும் இராமனது திருமேனிபோல் நிறம் அமைந்துள்ளன ; ஆதலால் இவற்றுள் எதைக் கண்டாலும் உள்ளம் கரைந்து உயிர் உருகித் தளர்கின்ற சீதை எதிரே அந்திமாலையும் வந்து அழிதுயர் செய்தது என்க.

அந்திக் காலத்தைப் பாம்பாக உருவகித்தது அடுதுயர் செய்யும் அதன் கொடுமையை நினைந்து. அந்தி கழியவே இருள் கவிந்தது ; அதனை நொந்து புலம்பினாள். ஆலகால விடம் உலகில் பரவியதா ? கருங்கடல் வளைந்துகொண்டதா ? அல்லது என் உயிரைக் கொள்ளை கொண்டு போன அவரது நிறத்தை எல்லா உயிர்களும் நினைத்தமையால் இவ்வாறு நிரம்பி நின்றதா? இல்லையேல், காலன் நிறத்தை அஞ்சனத்தில் கலந்து குழைத்து ஆகாயம் பூமி எங்கணும் மெழுகி யுள்ளதா ? எனக்கு உயிர்க்கேடு விளைக்க இக்கொடிய இருள் நெடிதோங்கி நின்றதே ! அந்தோ ! என்று நெஞ்சம் கலங்கி நிலைகுலைந்து புலம்பினாள்.

இருளை ஆலம் முதலாகக் குறித்தது தனக்குஅல்லல்விளைத்தலை நோக்கி. அதன்பின் அன்றிலை விளித்துக் கன்றி வருந்தி

ளுள். அன்றில் என்பது ஒருவகைப் பறவை. பெட்டையும் சேவலும் எப்பொழுதும் இணைபிரியாமல் துணையமைந்திருக்கும். இரவில் இரை கருதிப் பிரியநேரின் பேடை பெரும் பரிதாபமாய்க் கூவி வருந்தும். அவ் ஒலி பிரிவுத் துயரால் வருந்துங் காதலர்க்கு மேலும் காமவேட்கையைப் பெருக்கிப் பெருந்துயர் விளைக்கும் ஆதலால் அதனை அவர் பரிந்து பழிக்க நேர்வர். அந்த நிலையில் இங்கே அது வந்துள்ளது.

"வெளி நின்றவரோ போய் மறைந்தார்" என்றது சிறிது நேரத்துக்கு முன் என் கண் எதிரே தோன்றிநின்ற அக்கட்டழகரோ விரைந்து போய் மறைந்துகொண்டார்; அவரைப் போகாதபடி தடுத்து நிறுத்தி எனக்கு உயிர்ப் பிச்சை தருவார் இங்கே ஒருவரும் இல்லை; நானோ அனாதை; எளியள்; நாதியற்று நைந்து கிடக்கின்றேன்; இந்த நிலையில் கொஞ்சம்கூட இரங்காமல் நீயும் தொல்லைசெய்ய வந்தாயே! ஒளி மறைவாய் நின்று அழிவுற எய்யும் அந்தப் பழிகார மன்மதன் உன்னை ஏவி விட்டானோ? ஐயோ! அன்றிலே! என் தீவினைபோல் வந்து தீங்கு செய்கின்றாயே! என்று ஏங்கி வருந்தினாள்.

இவ்வாறு நொந்து தவிக்கவே கன்னிமாடத்து அயலே சந்திர காந்தக் கற்களினால் அமைந்த இனிய மணி மாளிகையில் சீதையைக் கொண்டுபோய்த் தோழியர் அமளியில் படுக்க வைத்தார். நெய் விளக்குகள் எரிந்தால் வெப்பம் உண்டாம் என்று கருதிச் சிறந்த ஒளிகளுடைய இரத்தின தீபங்களை ஏற்றினார்.

"நீண்டசோதி நெய்விளக்கம் வெய்யஎன்று அங்கு அவைநீக்கித்
தூண்டல் செய்யா மணிவிளக்கின் சுடரால் இரவைப் பகல்செய்தார்"

என்றமையால் அன்றிரவு ஆண்டுநிலவியுள்ள நிலைமை இனிது தெளிவாம். இரவு ஐந்து நாழிகை கழியவே சந்திரன் உதயமாயினான். அவ்வுதய வருணனைகளைக்குறித்து வந்துள்ள கவிகளைப் பார்த்துவிட்டு மேலே போவோம்.

சந்திரன் உதித்தது.

பெருந்திண் நெடுமால் வரைநிறுவிப் பிணித்த பாம்பின் மணித்தாம்பின்
விரிந்த திவலை உதிர்ந்த மணி விசும்பின் மீனின் மேல்விளங்க
அருந்த அமரர் கலக்கிய நாள் அமுதம் நிறைந்த பொற்கலசம்
இருந்த திடைவந் தெழுந்ததென எழுந்தது ஆழி வெண் திங்கள். (1)

## உருவக்காட்சி.

வண்டாய் அயன்நான் மறைபாட மலர்ந்தது ஒருதாமரைப் போது
பண்டாலிலையின் மிசைக்கிடந்து பாரும் நீரும் பசித்தான்போல்
உண்டான் உந்திக் கடல்பூத்தது ஓதக் கடலும் தான்வேறோர்
வெண்டா மரையின் மலர்பூத்தது ஒத்த தாழி வெண்டிங்கள். (2)

## நிலவின் தோற்றம்.

புள்ளிக் குறியிட் டெனஒண்மீன் பூத்த வானம் பொலிகங்குல்
நள்ளிற் சிறந்த இருட்பிழம்பை நக்கி நிமிரும் நிலாக்கற்றை
கிள்ளைக் கிளவிக்கு என்னைங்கொல்? கீழ்பால் திசையின் மிசைவைத்த
வெள்ளிக் கும்பத் திளங்கமுகின் பாளை போன்று விரிந்துளதால். (3)

## நிலா விரிந்து நின்ற நிலை.

வண்ண மாலை கைபரப்பி உலகை வளைந்த இருளெல்லாம்
உண்ண எண்ணித் தண்மதியத் துதயத் தெழுந்த நிலாக்கற்றை
விண்ணும் மண்ணும் திசையனைத்தும் விழுங்கிக் கொண்ட விரிநன்னீர்ப்
பண்ணை வெண்ணெய்ச் சடையன்றன் புகழ்போல் எங்கும்பரந்துளதால்

நீத்த மதனில் முளைத்தெழுந்த நெடுவெண் திங்கள் எனும்தச்சன்
மீத்தன் கரங்க ளவைபரப்பி மிகுவெண் ணிலவாம் வெண்சுதையால்
காத்த கண்ணன் மணியுந்திக் கமல நாளத் திடைப்பண்டு
பூத்த அண்டம் பழையதென்று புதுக்குவானும் போன்றுளதால். (5)

## தாமரை குவிய ஆம்பல் மலர்ந்தது.

விரைசெய் கமலப் பெரும்போது விரும்பிப் புகுந்த திருவினொடும்
குரைசெய் வண்டின் குழாமிரியக் கூம்பிச் சாம்பிக் குவிந்துளதால்
உரைசெய் திகிரி தனையுருட்டி ஒருகோல் ஓச்சி உலகாண்ட
அரசன் ஒதுங்கத் தலையெடுத்த குறும்பு போன்ற தாக்காம்பல். (6)

(மிதிலைக் காட்சி 70-75)

சந்திர உதயம் இந்தவாறு இங்கே வருணிக்கப்பட்டுள்ளது.

இரவில் இயல்பாய் நிகழும் இயற்கைத் தோற்றங்கள் கவிகளுடைய வாக்கில் கற்பனைகளாய்க் கவித்து இப்படிஒலித்து வருகின்றன. உரை யுணர்வுகள் உயர் நிலையில் உலாவி ஒளிர்கின்றன.

ஒரு சந்திரக்காட்சியை உலகம் அறியச் சொல்லுதற்குக் கலையறிவு எங்கெல்லாம் சஞ்சரித்துச் செல்லுகின்றது! கவியின் மானச நோக்கோடு நாமும் ஆனவரையும் ஒட்டி நோக்கினாலன்றிச் சுட்டி நிற்கும் உரைப்பொருள்கள் நமக்கு நன்கு புலப்படா.

1. தேவர்கள் பாற்கடல் கடைந்தபொழுது அமுத கலசம் எழுந்ததுபோல் கருங்கடலில் இருந்து வெண் திங்கள் எழுந்தது.

2. பண்டு திருமால் உந்தியிலிருந்து ஒரு செந்தாமரை மலர் பூத்தது ; அதை நோக்கி இன்று கடல் வெண்டாமரையைப் பூத்ததுபோல் வெள்ளிய சந்திரனை வெளிப்படுத்தியது.

3. அந்தச் சந்திரனிடமிருந்து கிளர்ந்த நிலா உயர்ந்த வெள்ளிக் கும்பத்தில் நின்று விரிந்த இளம்கமுகம்பாளை போன்று வளம் பொலிந்து விளங்கி நின்றது.

4. கரிய இருளை நீக்கி உலகம் முழுவதும் ஒளி பரப்பி எழுந்த நிலா வெண்ணெய்நல்லூர் சடையப்ப வள்ளலுடைய புகழைப்போல் எங்கும் பொங்கிப் பரந்தது.

5. அயன் படைத்த அண்டம் பழைமையாய் நிறம் மாறி விட்டது என்று கருதி மயன் என்னும் தச்சன் நல்ல சிப்பிச் சுண்ணம்பைக் கொண்டு வெள்ளையடித்துப் புதுக்கியதுபோல் நிலா உலகம் எங்கும் உலாவி ஒளிசெய்து நின்றது.

6. சந்திரன் உதிக்கவே தாமரை குவிந்தது ; ஆம்பல் மலர்ந்தது; ஆழியுருட்டி உலகமுழுவதும் ஆண்ட நீதிபதியான ஒரு சக்கரவர்த்தி மறைந்தபொழுது, சின்ன ஒரு குறுநில மன்னன் தலையெடுத்து வந்ததுபோல் அதன் நிலை நிலவி நின்றது.

இன்னவாறு பல நிலைகளையும் இணைத்துச் சந்திரன் உதித்த நிலையை ஈண்டு விளக்கியிருக்கிறார். கவிகளில் கனிந்துள்ள பொருள் நுணுக்கங்களையும் நயங்களையும் குறிப்புக்களையும் கூர்ந்து நோக்கிக்கொள்ளுங்கள். உரிய நிலைகளை முழுதும் எழுதப் புகின் பெரிதும் விரியும் ஆதலின் விடுத்து மேலே போகின்றேன்.

இத்தகைய வருணனைகள் கதைத் தொடர்புக்குச் சிறிது தடையாயிருப்பினும் பலவகை உணர்வு நலங்களும் கலைவளங்களும் கனிந்து வருதலால் பொறுமையோடு கருதியுணர வுரியன வாம். உணர்ச்சி நிலை தெரியின் உவகை நிலை உயர்ந்து பெருகும்.

இன்னவாறான உலகக் காட்சிகளைத் தெளிவாகவும் இனிமையாகவும் உரைப்பதிலேதான் கவியினது புலமைக் காட்சி தலைமையாக மதிக்கப் படுகின்றது. கலையும் கவினுறு கின்றது.

இவ்வண்ணம் உதித்த சந்திரனைச் சானகி இனி நிந்திக்க நேர்கின்றாள். கலைமதி காமநலம் கனிவிக்கும் நிலையினது ஆகலான் தனித்த காதலர்க்கு அது இனித்த நிலையின்றி இன்னாதாய்த் தோன்றுகின்றது. தனிமையில் இனிமை தவறுபட நேர்ந்தது.

இந்த இனிய நிலவில் அன்புடைக் காதலர் அருகிருந்தால் எவ்வளவு இன்பநலங்களை அனுபவிக்கலாம் என்று எண்ணச் செய்யும்; செய்யவே துணை பிரிந்துள்ளவர்க்கு அது வெய்ய துயராய் விரிந்து நிற்கும்; அந்நிலையில் அதனை அவர் வெறுப்பவராகின்றார். ஆகவே அதன் உவப்பும் உரிமையும் உணரலாகும்.

காம வேதனையால் கலங்கியுள்ள சீதை சோமனை இங்கே தூற்றியிருத்தலைக் கொஞ்சம் பார்த்துப் போவோம்.

நீங்கா மாயை அவர்தமக்கு நிறமே தோற்றுப் புறமே போய்
ஏங்காக் கிடக்கும் எறிகடற்கும் எனக்கும் கொடியை ஆனுயே!
ஓங்கா நின்ற இருளாய்வந் துலகை விழுங்கி மேன்மேலும்
வீங்கா நின்ற கருநெருப்பின் இடையே எழுந்த வெண்நெருப்பே!

சந்திரனைச் சுட்டித் திட்டியிருக்கும் இதில் சுந்தரக் கலைச் சுவை சொட்டியிருக்கின்றது. இந்த வகையில் வருவன அகப் பொருள் துறையில் அமைவன. கலைமதியைக் குறித்துத் தலைவியர் பழித்துரைக்கும் நிலைகள் கலைமதியாளர்க்குத் தனியே இனிய சுவை நிலைகளாய் உவகை விளைத்து ஒளிமிகுந்து வருகின்றன.

கரிய இருள் இரவில் வெள்ளிய சந்திரன் தோன்றியுள்ளமையால் "கருநெருப்பின் இடையே எழுந்த வெண் நெருப்பே!" என்றாள். உருவை நோக்கி உருத்து உரைத்த படியிது.

உலக சிருட்டியில் செந்நெருப்பு ஒன்றுதான் உள்ளது. நம் கவி சிருட்டியில் கருநெருப்பும் வெண் நெருப்பும் கலந்து விளங்குள்ளன. கறுப்புத்தீ ஒரு வெளுப்புத் தீயைப் பெற்றது; அது உறுப்பு உயிர் திய உருக்கி எரிக்கின்றது என்பதாம்.

குளிர்ந்த சந்திரனைக் கொடிய நெருப்பு என்றது தனக்குத் தாபத்தை விளைக்கும் ஆபத்தை நோக்கி.

"ஊரைச் சுடுமோ உலகம் தனைச்சுடுமோ
ஆரைச் சுடுமோ அறியேனே—நேரே
பொருப்புவட்ட மானமுலைப் பூவையரே! இந்த
நெருப்புவட்ட மான நிலா." (தனிப்பாடல்)

இதில் நிலாவைக் குறித்திருக்கும் நிலையைத் தெரிக.

அலைவாய் விடத்தின் உடன்தோன்றி ஆவிகவரும் வெண்ணெருப்பே
உலையாப் புவனம் அனைத்தும் அழல்ஒருங்கு கொளுத்தும்நுதற்கண்ணன்
தலைமேல் உனது கலையொன்றே தரித்தான் என்றால் மிகவும் உயிர்க்
கொலைசூழ் குநரின் நின்போலும் கொடியார் உளரோ கூறென்றாள்.
(நைடதம்)

அங்க மதில்கஞ் சிருத்திஞேன் அங்கம் அல்லா அவிர்சடைமேல்
தங்க நினைவைத் திட்டதுநின் கொடுமை கருதித் தானன்றே ?
பொங்கும் அமுத கலையென்ன நின்னைப் புகறல் வெண்திங்காள் ?
இங்கு மனிதர் காராட்டை வெள்ளாடு என்பது ஒக்குமால். (1)

உருப்ப மிகுவன் தழல் சிவப்புற்று உலகர் காண ஒளிதரவும்
நெருப்பு வெண்மை என்பதுநல் நியாயர் நின்னைக் குறித்தன்றே ?
பொருப்பு நறுஞ்சந் தனச்சேறு புலர்ந்து பொரியப் பூவணையும்
விருப்ப மலரும் கொளுந்தஅழல் வீசியெழுந்த வெண்டிங்காள் ! (2)
(பிரபுலிங்கலீலை)

காமதாபத்தால் தவித்த தமயந்தியும், மாயையும் சந்திரனை வெறுத்துக் கூறியபடியிவை. வெண்நெருப்பு என்று நம் கவி குறித்ததை இவை கருதி வந்துள்ளன.

குளிர்ந்த மதி விரகிகளுக்குக் கொழுங்கனலாய் உளங்கவலச் செய்யும் என்றமையால் அதன் இனிமை இயல்பும் தனிமை நிலையும் நுணுகி யுணர வந்தன.

தன்னோடு கடலையும் துணை சேர்த்துக்கொண்டு சீதை இங்கே புலம்பி இருக்கிறாள். இராமனுக்குக் கடல்வண்ணன் என்று ஒரு பெயர் உண்டு. அப்பெருமானது உடல் அழகை நோக்கி "இந்தச் சுந்தரத் திருமேனிக்கு நம் கருநிறம் ஈடாகாது" என்று கடல் நாணி வருந்தித் தனியே ஒதுங்கி அழுது கிடக்கின்றது என்பாள், "நிறமே தோற்றுப் புறமே போய் ஏங்காக் கிடக்கும் எறிகடல்" என்றாள். புறம் என்றது உலகிற்கு அயலே என்றபடி. ஒரு பொருளின் எதிரே தோல்வியடைந்தவர் மனிதர் முன் நிற்க நாணித் தனி ஒதுங்கி உளையும் தன்மை தெரியவந்தது.

அலைகளைக் கொழித்து ஆரவாரத்துடன் நெடிது முழங்கி இயல்பாகவே உலகை வளைந்து கிடக்கும் கடலை இவ்வாறுதொலைவுடையதாய்த் தொலைவில் போயுள்ளதெனச் சீதை நிலைசெய்து கூறினாள். தனது நிலைமையை அலைகடலினும் அமைத்துக் கொண்டாள்.

சந்திரன் உதயமானால் அந்நிலவு நிலையில் அலைகளை வாரி வீசிக் கடல் அதிகமாகக் கொந்தளிக்கும் ஆதலால் அந்த இயற்கை நிலையைத் திங்களால் கலக்கமுற்றதாகக் கருதி யுரைத்தாள்.

இராமனது திருமேனி அழகைக் கண்டு மோகங் கொண்டு தலைவிரி கோலமாய் நிலைகுலைந்து தான் ஏங்கிக் கிடப்பதுபோல் அலைகடலும் கிடக்கின்றது எனத் துலைசெய்து தூக்கி இனம் தழுவி மனம் புழுங்கிச் சானகி சந்திரனை நிந்திக்கின்றாள் ஆதலின், "கடற்கும் எனக்கும் கொடியை ஆனாயே!" என்றாள்.

நீங்கா மாயை அவர் என இராமனை இங்கே சுட்டியது நிலை குலையாமல் கன்னிமை காத்து நிலைத்திருந்த தன்னை நிலைகுலைத்துப் போயுள்ள அந்நிலை தெரியவந்தது. அளவிடலரிய அதிசய ஆற்றலுடையதை மாயை என்பர். இந்த மாயா வல்லவர் செய்து போன மாயம் என்னால் ஆய முடியவில்லையே என்று ஓயாது உளைந்து கூறியபடியிது.

புறத்தே அவர் நீங்கிப்போனதுபோல் வெளியே போக்குக் காட்டி என் அகத்தே புகுந்து நீங்காமல் நின்று படாதபாடு படுத்திப் பாங்கெல்லாம் நகைக்கும்படி என்னைப் பரிசு குலைக்கின்றாரே என்பதாம். இவ்வாறு ஏங்கி விரக வேதனையுற்றிருந்தமையால் இனிய நிலவும் துனி மிகுந்து நின்றது.

விண்மதியை வெண்நெருப்பு என்று வெறுத்து வைதவள் அதன்பின் அடுத்து ஒன்று மொழிந்தாள். அம்மொழி அன்புரிமையான செம்மொழியாய்வந்தது. அயல் வருதல் காண்க.

கொடியை அல்லைநீ யாரையும் கொல்கிலாய்!
மடுவில் இன்னமு தத்தொடும் வந்தனை
பிடியின் மென்னடைப் பெண்ணொடு என்றால், எனைச்
சுடுதி யோகடல் தோன்றிய திங்களே!

(மிதிலைக்காட்சி, 77)

தீயைப் போல் எனக்கு மிகவும் "கொடியை ஆனாயே!" என முன்னம் கொதித்து இகழ்ந்தாள்; இங்கே அதனை மறுத்துப் பிறப்பு முதலிய நலங்களைக் குறித்துக் காட்டி இரக்கம் தோன்ற உரைக்கின்றாள். மடு=நீர் நிலை. இங்கே பாற்கடலைக் குறித்தது.

சந்திரனே! நீ நல்ல பாற்கடலில் பிறந்திருக்கிறாய்; கருணை நிறைந்த திருமகளும், இனிய அமுதமும் உனக்கு உடன்பிறந்த

வர்களாய் உள்ளனர். இங்ஙனம் பிறப்பாலும் வளர்ப்பாலும் சேர்க்கையாலும் சிறந்து இனியனுயுள்ள நீ எனக்கு மட்டும் கொடியனாய் மாறிச் சுடுகின்றாயே! இது நியாயமா? இந்த அநியாயத்தை விடுத்து ஆதரவுடையனாய் அமர்ந்தருள் என்று நயந்து வேண்டிய படி யிது.

பிடி=பெண்யானை. எவ்வழியும் யாண்டும் அமைதியோடு அமைந்து நடக்கும் இயல்பினது ஆகலான் சிறந்த மகளிர்க்கு நடையழகில் அது உவமையாய் வந்தது. இங்கே "மென்னடைப் பெண்" என்றது இலக்குமியை. கடல்கடைந்த பொழுது அமுதும் திருவும் மதியும் உடன் எழுந்தன. அவ்வுரிமையை உடன் பிறப்பு முறையில் வைத்து உளம் உணர்ந்து திருந்தும்படி கலை மதிக்கு நிலைமதி வர நலம் உரைத்திருக்கிறாள்.

நல்ல பெண்ணோடு பிறந்திருந்தும் பெண்பாலாகிய என்பால் கண்ணோடாது காய்கின்றாயே! என்று கருணை தோன்றக் குறித்தாள். அருள் புரிய உரிமை யுடையை என்பதாம்.

இரக்கமின்றிக் கொடுமை செய்பவனைப் பார்த்து "நீ ஆணோடு பெண்ணோடு பிறந்தது இல்லையா?" என்று வருந்திக் கூறும் உலகவழக்கமும் இங்கே உணர்ந்துகொள்ள வந்தது.

கடல் தோன்றிய திங்களே! என்றது பிறப்பிடம் முதலியவற்றின் பெருமையை உணர்ந்து உள்ளம் திருந்தி உரிமை செய்ய வேண்டும் என்றவாறு. தான் பிறந்த இடம் ஆதலால் கடலைத் தாயாகவும், இலக்குமியை உடன் பிறந்தவளாகவும் சந்திரனுக்குக் கிளைகூட்டி யுரைப்பர். அங்ஙனம் உற்றதாய்க்கும், உரிய துணைவிக்குமே இவன் கொடியனாய்க் குற்றமிகச் செய்வன் என்று விரகிகள் வெறுத்துப் பழிப்பர்.

"தாய்வாய் அடைந்து மிகுந்தலையை மோதி மோதிச் சலித்தலறக்
காய்வாய் நிலவே! உடன்பிறந்தாள் இருந்துவாழும் கடிமனையை
நீவான் எழுந்து வந்தழிப்பாய்? என்றால் அந்தோ நிலையின்றித்
தேய்வாய் நின்னோடு இயைபில்லா என்னை என்ன செய்யாயே!"
(பிரபுலிங்கலீலை, பிரபுதேவர்கதி, 57)

அல்லமதேவரைக் கண்டு காதல் நோய்கொண்ட மாயை திங்களை நோக்கி நொந்து கூறிய படியிது. உடன் பிறந்தாள் மனையை அழிப்பாய் என்றது திருவின் இல்லமாகிய தாமரை

மலர் நிலவில் நிலை குலைந்து கூம்பிக் கிடப்பதை நினைந்து. காம வேட்கையாளர் சோமனைப் பழிப்பதில் இப்படிப் பலவகைக் கலைச் சுவைகள் கிளைத்து நலம் தழைத்து வந்துள்ளன.

மங்கையர் சொல்லாடுந் திறங்களையும் இங்கிதங்களையும் கவிகள் இங்ஙனம் கரந்து நின்று புவிமகிழப் புகன்று வருகின்றனர்.

காதல் நோயால் நொந்திருப்பினும் சீதை மிகவும் ஆதரவோடு பேசியிருப்பது அவளது மேதகவை வெளிப்படுத்தியுள்ளது. தனக்குச் சாதகமாகப் போதனை செய்துள்ளாள்.

நல்ல குலத்தில் நல்லவர்களோடு பிறந்துவந்த நீ இப்பொல்லாக் கொடுமை புரியலாகாதென்று மதிக்கு மதி கூறிய வாறிது.

"சுடர்கான் றெழுந்த வெண்திங்காள் ! என்னே சுடுதி ஆரமுதத்
துடனீ பிறந்த பாற்கடலின் தன்மை உணராய் ஆனாலும்
மடலார் கமலப் பொகுட் டுறையும் புத்தேள் காணா மறைக்கொழுந்தின்
படர்வார் சடையில் வீற்றிருக்கும் பான்மை யேனும் அறிந்திலையே.

தருவும் மணியும் இருநிதியும் தண்ணங் கமல மலர்த்தவிசின்
திருவும் உயிர்த்த பாற்கடலில் தெள்ளார்அமுதத் துடன்பிறந்தாய்
பெருவெண் மதியே ! நீயுறைதல் பெம்மான் மௌலி கதிர்அமிழ்தின்
உருவம் ; அநங்கன் உறவொன்றும் விடுத்தி யேல்மற் றுனைநிகரார் ?"

(நைடதம்)

நளனை நினைந்து வேட்கை மிகுந்திருந்த தமயந்தி திங்களை நோக்கிப் புலம்பிய படியிவை. விரகிகளுடைய மனநிலைகளும் மதி முதலியவற்றை வெறுத்து அவர் சலித்து மொழியும் சலுகைகளும் இவ்வண்ணம் பலவகையாகக் கலையுலகில் கலித்து விளைந்துள்ளன. அவற்றின் சுவைகள் உவகை சுரந்து திகழ்கின்றன.

காமத்தைக் கனியச் செய்கின்ற அந்தி முதலிய பொருள்கள் எவற்றினும் சந்திரன் தலைசிறந்தவன் ஆதலின் பிரிவிலுள்ள விரகிகள் எல்லாரும் அவனை நிந்திக்கப் பெரிதும் மூந்துகின்றனர்.

அந்த நிந்தனைப் பகுதியைச் சந்திரோபாலம்பனம் என்பர் வடமொழியாளர். உபாலம்பனம்=பழித்தல். இந்த நிலை நம் காவியத்தில் பல படிகளாய்க் கலைநலம் கனிந்து வந்துள்ளது.

உலகமெல்லாம் மகிழும் நிலா ஒளியை விரகமுடையார் இகழ்தற்குக் காரணம் அவர்தம் உளமலி துயரம் வளமுறும்படி

அது நிலவி யுள்ளமையே யாம். ஆகவே அவ்விகழ்ச்சியின் போக்கும் நோக்கும் புலன் தெரிய நின்றன.

நிலவின் பொலிவோடு தலைவியின் நிலைமையை நிறைசெய்து நேரே முடிவுபெற இனி உரை செய்கின்றார்.

> மீது மொய்த்தெழு வெண்ணில வின்கதிர்
> மோது மத்திகை மென்முலை மேற்பட
> ஓதி மப்பெடை வெங்கனல் உற்றெனப்
> போது மொய்த்தம ளிப்புரண் டாளரோ. (1)
>
> நீக்க மின்றி நிமிர்ந்த நிலாக்கதிர்
> தாக்க வெந்து தளர்ந்து சரிந்தனள் ;
> சேக்கை யாகி மலர்ந்த செந்தாமரைப்
> பூக்கள் பட்டதப் பூவையும் பட்டனள். (2)
>
> வாச மென்கல வைக்களி வாரிமேல்
> பூசப் பூசப் புலர்ந்து புழுங்கினள்
> வீச வீச வெதும்பினள் மென்முலை
> ஆசை நோய்க்கு மருந்தும்உண் டாங்கொலோ (3)
>
> தாய ரிற்பரி சேடியர் தாதுகு
> வீய ரித்தளிர் மெல்லணை மேனியில்
> காயெரிக்கரி யக்கரி யக்கொணர்ந்து
> ஆயிரத்தின் இரட்டி அடுக்கினார். (4)
>
> கன்னி நன்னக ரிற்கமழ் சேக்கையுள்
> அன்னம் இன்னணம் ஆயினள் ; ஆயவள்
> மின்னின் மின்னிய மேனிகண் டானெனச்
> சொன்ன அண்ணலுக்கு உற்றது சொல்லுவாம். (5)
> (மிதிலைக் காட்சி, 78-82)

மையல் நோயால் மறுகி மயங்கிய பரிபவ நிலைகளின் ஒரு பகுதியை இவ்வண்ணம் முறையே அறைசெய்து முடித்திருக்கிறார்.

1. இனிய நிலவு கொடிய துயரமாயிருந்தமையால் அதன் கதிர்கள் இரும்புத் தண்டம் என வந்தன. மத்திகை=சம்மட்டி.

அன்னப்பேடை அனலில் விழுந்து துடித்ததுபோல் இக் கன்னிப் பெண் மலரமளியில் மறுகிப் புரண்டு உருகிக்கிடந்தாள்.

விரகிகளுக்குச் சந்திரன் வெந்துயரா யிருத்தலால் இந்த வண்ணம் நிலவின் கொடுமையைப் பலபட விரிக்க நேர்ந்தது.

குறுமுயலும் சிலகலையும் இழந்தொருமான் உயிரைக்
கொள்ளைகொள்ள எழுந்தமதிக் கூற்றே! ஆற்றாச்
சிறுதுயிலும் பெருமூச்சும் கண்டும் இரங்கலையால்
தெறுமறலி நீயே; இத் தெண்ணிலாவும்
எறியுநெடும் பாசமே; உடலுமறக் கூனி
இருள்நிறமும் முதிர்நரையால் இழந்தாய்போலும்
நறுநுதலார் என்கொல்உனை மதுரேசர் மிலைச்சும்
நாகிளவெண் திங்கள்என நவில்கின்றாரே?''
(மதுரைக்கலம்பகம், 89)

நிலவால் தன் தலைவி துயர் உறுவதைக் கண்டு பிறையை நோக்கி ஒரு தோழி பழித்த படியிது. இளம்பிறையை முதிய எமனாக வருணித்திருக்கும் இதன் பொருள் நயங்களை உளம் கூர்ந்து உணர்ந்துகொள்ளவேண்டும். பிறையில் களங்கம் தோன்றாது ஆதலால் முயலும் கலையும் இழந்து என்றார். ஒரு மான் என்றது தலைவியை. அருமையான மங்கையை அநியாயமாய்க் கொல்லுகின்ற கொடிய கொலைபாதகனாகிய உன்னைக் கருணைநிதியாகிய சிவபெருமான் தலைமீது சூடியிருக்கிறார் என்று சொல்லுகின்றார்களே! இது என்ன தொல்லை? என அவள் இகழ்ந்திருக்கும் நிலையைக் காண்க.

'' கருகு கங்குற் கரும்பக டூர்ந்து வெண்
கலைமதிக் கொலைக் கூற்றம் கவர்ந்துயிர்
பருகுதற்குக் கரத்தால் விரிநிலாப்
பாசம் வீசி வளைத்ததிங்கு என்செய்வேன்?
முருகு நாறு குழற்பொலங் கொம்பனீர்
முத்தர் வாழவி முத்தமும் நெக்குடைந்து
உருகு பத்தர்தம் சித்தமும் கோயிலா
உடைய நாதற்கு உரைத்திடு வீர்களே!''
(காசிக்கலம்பகம், 77)

கலைமதியாகிய எமன் இருளாகிய எருமைக் கடாவை ஊர்ந்து நிலவு என்னும் பாசத்தை வீசி என் உயிரைக் கவர்கின்றானே! என்று ஒரு தலைவி தவித்த படியிது. அவிமுத்தம்=காசி.

விரகிகள் சந்திரனைப் பழித்துக்கூறும் நிலைகள் இன்னவாறு பல வுள்ளன. காதல்துறையில் படிந்துவந்துள்ள பாடல்கள் பல வகைச் சுவைகள் நிறைந்து உவகை அனுபவங்கள் பொலிந்து கலைநலங்கள் கனிந்து தமிழில் தலை சிறந்து மிளிர்கின்றன.

2. நில வொளியால் உளநிலை சிதைந்து உயிர் மறுகிக் கிடந்தாள். அந்தப் பரிதாப நிலைமையைத் தெளிவாக விளக்க ஓர் வழி நாடியுள்ளார். அவ்வழியில் பழைமையின் கிழமை பரவி வந்துள்ளது. நுணுகி நோக்கி உணர்வுற வுரியது.

"சேக்கை யாகி மலர்ந்த செந்தாமரைப்
பூக்கள் பட்டது அப் பூவையும் பட்டனள்.

சீதை பட்டுள்ள பாட்டை இப்படி ஒரு ஒப்புக் காட்டி விளக்கியிருக்கிறார். இதில் என்ன விளங்கியுள்ளது? விளக்கம் உரையில் துலக்கம் ஆயினும் கருத்தில் கலக்கமாய் நின்றது.

படுக்கையில் பரப்பியிருந்த மலர்கள் உடல் வெப்பத்தால் கரிந்து பொரிந்தன; அதுபோல் காமக் கொதிப்பால் சீதை வருந்தி மயங்கினள் என எளிதே ஒரு பொருள் வெளியே தோன்றினும் தாமரை என்னும் குறிப்பாலும், பட்டது என்ற ஒருமையாலும் அது பொருந்தாது என்க.

திருமகளுக்கு இருப்பிடமான செந்தாமரை மலர்கள் சந்திரனைக் கண்டால் எப்படி மலர்ச்சியின்றி இதழ்குவிந்து கூம்பிச் சாம்பி ஒளி சிதைந்து உள்ளொடுங்கிக் கிடக்குமோ அப்படியே அத்திருவின் அவதாரமான சீதை அந்நிலவில் நிலைகுலைந்து கண் அயர்ந்து கருத்தழிந்து வெம்பி வெதும்பி வெந்துயர் கூர்ந்து கிடந்தாள் என்பதாம். சேக்கை = இருப்பிடம்.

நிலாக் காலத்தில் தாமரைப் பூக்கள் பட்டுக் கிடக்கும் பாட்டை அத்தாமரைச் செல்வி அன்று பட்டு நொந்தாள் என்பார், பூக்கள் பட்டது அப் பூவையும் பட்டனள் என்றார்.

நிலவால் வாடி வதங்கிய தாமரை சூரியன் தோன்றவும் மலர்ந்து விளங்குதல்போல் இரவிகுல திலகனை இராமனைக் காணின் ஏதமெல்லாம் நீங்கி இன்ப மீதூர்ந்து சீதை சிறந்து விளங்குவாள் என்பது குறிப்பு.

3. மையல் நோயால் மறுகிக் கிடந்த சானகிக்குத் தோழியர் செய்வன எல்லாம் செய்து பார்த்தார்; உய்தி ஒன்றும் காணாமையால் உள்ளம் கலங்கினர். "பூசப் பூசப் புழுங்கினள்; வீச வீச வெதும்பினள்" என்றமையால் நேசப் பாங்கியர் பாசத்தோடு பரிந்து புரிந்த மருத்துவங்கள் யாவும் நெய்பெய் நெருப்பாய் நிலைமையை விருத்தி செய்து நின்றன என்பது புலனயது.

தலைவியின் நிலையினை நோக்கி யாவரும் தவித்தனர். முன்னம் வாய்விட்டுப் புலம்பிய அப்புலப்பங்களைக் கூர்ந்து நினைந்து சிலர் தனியே ஒதுங்கிப் புலன் தெரிய நேர்ந்தனர் : " இந்திர நீலம் ; இருண்ட குஞ்சி ; சந்திர வதனம் ; தாழ்ந்தகைகள் ; சுந்தர மணித்தோள் " என இந்த வண்ணம் புலம்பி யுள்ளமையால், " யாரோ ஒரு சுகுமார சுந்தரன் இந்த நகருக்குள் புதிதாய் வந்திருக்கிறான் ; அந்த அந்தமில் அழகனை எந்தவாறோ நம் தலைவி நேரே கண்டிருக்கிறாள் ; அந்தக் காட்சியினாலேதான் இந்தவாறு மையல் மீதூர்ந்து மயங்கி யுள்ளாள் ; இதில் ஐயம் இல்லை ; உண்மை விரைவில் வெளியாம்" என்று உறுதிசெய்து பொறுதியோடு ஊரில் வந்துள்ள புதுமையை விநயமாக உசாவி வந்தனர்.

புறத்தே புரியும் ஆறுதல்கள் அகத்தே எரியும் மனவேதனையை யாதும் ஆற்றவில்லையாயினும் தோழியர் சிறிதும் சலியாமல் ஊழியம் செய்து நின்றனர். உள்ளக் காதலால் உயிர் உருகியுள்ளமையால் வெளியில் செய்யும் பரிகாரங்களெல்லாம் ஒரு பலனுமின்றி வறிதே ஒழிந்தன.

ஆசை நோய்க்கு மருந்தும் உண்டாம் கொலோ ?

என்றது மையல் நோயைச் செய்துபோனவரைஎய்தினால் அன்றி வையமதில் வேறு உய்தியில்லை என்பதாம்.

காமவேட்கை உள்ளத்தை உருக்கி உயிரை வாட்டுதலால் அது நோய் என நின்றது. நொய்யச் செய்வது நோய் என்க.

உலகில் பலவகையான நோய்கள் உள்ளன. அவற்றையெல்லாம் நீக்குதற்கு மருந்துகளும் இருக்கின்றன. ஆனால் காமநோயோ கருதிய காதலர் கைவந்தால் ஒழிய வேறு எந்த வகையாலும் தீராது ஆதலின் அதற்கு அயலான ஒரு மருந்து இல்லை என்றார். உண்டோ ? என்றது இல்லை என்னும் குறிப்பில் வந்தது. காம நோயின் கொடுமையைக் காட்டிய படியிது.

" காதலார் இறத்துக் காதல் ஆக்கிய காதலாரை
ஏதிலார் போல நோக்கின் இருமடங் காக எய்தும்
போதுலாம் சிலையினன் தன் பொருகணைக்கு இலக்கம் செய்யும்
ஆதலால் காம நோய்க்கோர் அருமருந்து இல்லை யன்றே. (1)

தேமிடை காவல் வேலிச் செழுமணற் குவாலும் குன்றும்
பூமிடை தடமும் காவும் புக்கவர்க்கு அரணம் ஆகா
தாமுடை மனமும் கண்ணும் நிறையும்தம் பால வாகா
காமுடை மனத்தி னோர்கட்கு யாருளர் களைகண் ஆவார்?'' (2)
(சூளாமணி, கலியாணச் சருக்கம், 165, 166)

சயம்பிரபை என்னும் அரச கன்னி தன் காதலனை முதலில் கண்டு நீங்கிய பொழுது தனியே கவன்று மொழிந்த படி யிவை. மணமாக வந்த காதலரை மருவினாலன்றிக் காமம் குணமாகாது. உரிமையாளரைத் தவிர அதற்கு வேறு புகலிடம் இல்லை என்பதாம்.

4. இத்தகைய காமப் பிணியால் சீதை கருகி உருகி மறுகி யிருந்தாள். பஞ்சணையில் பரப்பி யிருந்த மலர்கள் எல்லாம் உடல் வெப்பத்தால் கரிந்து பொரிந்து போயின. அவற்றை அடிக்கடி நீக்கிப் புதிது புதிதாகப் பரப்பிப் பாங்கியர் பரிந்து பேணி வந்தார். தேங்கிய தலைவி தியங்கி அயர்ந்தாள்.

கன்னி மாடத்தில் சானகி இன்னவாறு இருக்க முன்னம் முனிவர் பின் நடந்துபோன இராமன் நிலைமையை இனித் தொடர்ந்து பார்ப்போம்.

## கோசிகர் சனக மன்னனைக் கண்டது.

அரசிளங் குமரர்களோடு அமைந்து சென்ற விசுவாமித்திரர் சனகனது அரண்மனையை அடைந்தார். அடையவே மன்னன் விரைந்து எதிர்வந்து வணங்கி உபசரித்தான். அதன்பின் அரண்மனை அருகே உயர்ந்த மணி மாளிகையில் அமர்ந்திருக்கச் செய்தான். மூவரும் அங்கே உவந்திருந்தனர்.

## சதானந்தர் சார்ந்தது.

சிறந்த விருந்து நடந்தது. அரசனுடைய தலைமைப் புரோகிதரான சதானந்த முனிவர் வந்து கோசிகரை வணங்கி உடனிருந்து இனிய உபசாரங்கள் புரிந்தார். அவர் அரிய தவ ஒழுக்க முடையவர். கௌதமருடைய புதல்வர். பல கலைகளிலும் வல்லவர். புனிதமான அம்முனிவர் புதியராய் வந்துள்ள அரச குமாரரை நோக்கி ஆர்வமீதூர்ந்தார். அக்குறிப்பு அறிந்து அவருக்கு இராமனைக் கவுசிகர் அறிமுகப் படுத்தினார். அவர் உரைத்த திறம் உவப்பு மிக வுடையது. அடுத்து வருவது காண்க.

வடித்த மாதவ ! கேட்டி இவ் வள்ளல்தான்
இடித்த வெங்குரல் தாடகை யாக்கையும்,
அடுத்தென் வேள்வியும், நின் அன்னை சாபமும்,
முடித்துளன் நெஞ்சத்து இடர்முடித் தானென்றான்.

முனிவர் இப்படிச் சொல்லி முடித்திருக்கிறார். முடித்தல் என்னும் ஒரு வினைச் சொல் பலவகை வினைகளில் படிந்து இதில் முடிந்துள்ளது. யாக்கையை அழித்து, வேள்வியைநிறைவேற்றி, சாபத்தை ஒழித்து, இடரை நீக்கி இதம்புரிந்துள்ள திடவீரன் என்பதாம்.

அழித்தல், காத்தல், ஒழித்தல், நீக்கல் என்னும் பல வினைகளையும் முடித்தல் என ஒரு வினையால் முடித்தது, யாரும் முடிக்க முடியாத அரிய காரியங்களையெல்லாம் ஒருங்கே உல்லாச விநோதமாய் இவன் தனியே முடித்தருளினான் என்ற முடிபுணர வந்தது.

நின் அன்னை என்றது அகலிகையை. கல்லாய் இழிந்து கிடந்த உன் தாயைப் பழையபடி தூயவளாக எழுப்பி உனது தந்தையிடம் சேர்த்து வந்துள்ளான் என்னும் இந்த வார்த்தையைக் கேட்ட பொழுது சதானந்தர் சிந்தை எப்படி இருந்திருக்கும்? காரிய முடிவுகளைச் சீரிய முறையில் செப்பி யிருக்கிறார்.

தசரதச் சக்கரவர்த்தியினுடைய அருமைத் திருமகன் என ஓர் சொல்லில் பெருமையாக அறிமுகம் செய்யாமல் இவ்வாறு செயல் வகைகளைச் சுட்டிக் கூறியது அவனது இயல்பான உயர் நிலையை உய்த்து உணர்ந்து உவந்து கொள்ள என்க.

அரச திருவில் சிறந்திருந்தாலும் சில குமாரர்கள் ஒரு நலனும் ஆற்றாமல் உருப்படி யளவில் ஒருப்பட்டிருப்பர் ஆதலால், அக்கொலுப் பொம்மைகளுள் ஒன்றாக இக்கொற்றக் குரிசிலைக் கருதிவிடலாகாது என்று உறுதி சூழ்ந்து உரைத்திருக்கிறார்.

தாடகையை முடித்தது என்றது ஆடவர் எவரும் வியந்து போற்றும் அரிய பெரிய வீரச் செயல் தெரியவந்தது. வேள்வி காத்தது, தரும பரிபாலனன் என்பதை விளக்கி நின்றது. சாபம் ஒழித்தது, தெய்வத்தன்மையைத் தெளிவித்தது. மாதவர் இடர் நீக்கியது, சாது சனங்களுக்கெல்லாம் தாயகம் என்பதைப் புலனாக்கியது. ஆகவே இவனது அற்புத நலங்கள் தெளிவாயின.

உலகம் நலமுற உதவிபுரிந்து இங்ஙனம் பேருபகாரியாய் உள்ளமையால், இவ்வள்ளல் என உள்ளம் உருகி உரைத்தார்.

பாபமும் கோபமும் சாபமும் நீக்கவே இவனால் இனிமேல் இவ்வுலகுக்கெல்லாம் நல்ல யோகமுண்டாம் என்று கருதி முனிவர் தாபம் நீங்கினர் ஆதலால் "என் நெஞ்சத்து இடர் முடித்தான்" என்றார். முடிவினுள்ள முடிவு நெடிது சிந்திக்கத்தக்கது.

தவசி உரை உணர்வு சுரந்து உயர் நலங் கனிந்துள்ளது.

மாணவன் எனத் தம்மை மருவியிருப்பினும் அந்த ஆணழகனுடைய அற்புத நிலைகளை நன்கு தெரிந்து எங்கும் பெருந்தகவோடு அருந்தவர் பேணி வருகின்றார்.

இவ்வாறு அவ்வீர மகனுடைய திவ்விய மகிமைகளைக் கூறவே சதானந்தர் பேரானந்தமடைந்து ஆர்வமீதூர்ந்துபோற்றி அருள் சுரந்து நின்றார். தன் தாயை உய்வித்துத் தந்தையை மகிழ்வித்த பரமதந்தையே! என்று சிந்தை உவந்தார்.

உளம் மிக உருகி அக்குல மகனது திருமுகத்தை நோக்கிக் கோசிகரது நிலைமையைச் சொல்லத் தொடங்கினர். அவர் சொல்லிய வரலாற்று நிலைகளை யெல்லாம் முழுதும் வரையின் மிகவும் விரியும் ஆதலால் இங்கே சுருக்கி எழுதுகின்றேன்.

## சதானந்தர் விசுவாமித்திரரது சரிதம் கூறியது.

"இராமநாதா! இந்த அருந்தவக் குரிசிலது வாழ்க்கை வரலாறு மிகவும் அதிசயமுடையது. அளவிடலரியது. எனக்குத் தெரிந்தவரை சிறிது சொல்லுகின்றேன்: காதி என்னும் நீதி மன்னனுக்கு இவர் புதல்வராய்த் தோன்றினர். பல கலைகளையும் பயின்று தெளிந்தார். பருவம் வரவும் மணி முடி புனைந்து அரசு புரிந்தார். ஒருமுறை தமது படை பரிவாரங்களுடன் வேட்டைமேல் சென்றார். அங்கே வசிட்ட முனிவரது ஆச்சிரமத்தைக் கண்டார். அம்மாதவர் இவரை ஆதரவுடன் உபசரித்து அரிய விருந்து ஒன்று செய்தார். அதில் சுரபி என்னும் தெய்வப் பசு வந்து அமிர்த மயமான இனிய பொருள்கள் பலவும் உதவி நின்றது. விருந்து முடிந்தபின் அந்த ஆவின்மீது இவர் ஆசை கொண்டார். "நூறுயிரம் பசுக்களுக்கு உரிய விலைப் பொருளைத் தருகின்றேன்; இச்சுரபியைத் தந்தருளுக" என்று

2. சந்திர மண்டலம் போன்ற திருமுகமும், இந்திர நீலம் ஒத்த மயிர் முடியும், சுந்தரமான நீண்ட வில்லும் பொருந்திய காளமேகம் ஒன்று நெருநல் மாலை வந்து தாமரை மலரனைய அனைது இரண்டு கண்களால் எனது உயிரை மொண்டுகொண்டு உண்டது; அது என் நெஞ்சில் இன்றும் உண்டு; என்றும் உண்டு என உற்றுள்ள உண்மையை உவந்து அறிய உரைத்தாள்.

“கொண்டல் ஒன்று இரண்டு கண்ணின் மொண்டுகொண்டு என் ஆவியை உண்டது” என்றதனால் இராமனது கள்ளப் பார்வையில் சீதையை அள்ளி விழுங்கியுள்ளமை அறிய வந்தது.

3. பஞ்சை எரிக்கின்ற தீ போல் படுபாவியான காமன் என் நெஞ்சை எரிக்கின்றான். யாதொரு துணையுமின்றி அல்லலுழந்து நான் அலமருகின்றேன். பஞ்சையான என்னைப் பஞ்சபாணன் கொஞ்சமும் இடைவிடாது கொடுந்துயர் செய்கின்றான். ஒரு பெண் பேதை கண் கலங்கி இங்ஙனம் கலுழ்ந்துழல்வதைக் கண்டிருந்தும் கருணைசெய்து வந்து “அஞ்சாதே!” என்று ஆறுதல் சொல்லவில்லையானால் வில்லும் கையுமாயுள்ள அந்த வீரம் என்ன வீரம்? நானும் ஒரு ஆண் பிள்ளை என்று சும்மா ஒரு வில்லை ஏந்தி வெளி வந்தால் போதுமா? வழி வகை தெரியாமல் அழுது அயரும் எளிய பெண் பிள்ளையை அளி செய்து ஆதரித்தலே ஆண்மையாகும் என ஆணை விதித்தாள்.

“சஞ்சலம் கலந்தபோது தையலாரை உய்யவந்து
அஞ்சல்! அஞ்சல்! என்கிலாத ஆண்மை என்ன ஆண்மையே?”

உண்மையான ஆண்மை இன்னதாம் எனப் பேசியிருக்கும் இதில் பெண்மை மணம் பெரிதும் வீசுகின்றது. ஆணுக்கு அழகு பெண்ணுக்கு இரங்குதல் என அறிவு கொளுத்தினாள்.

பெரிய அபாயத்தில் அகப்பட்டு உபாயம் ஒன்றும் தெரியாமல் ஓயாது அபயமிட்டுக் கிடக்கின்றேன்; இந்த ஆபத்தில் வந்து ஆதரிக்கவில்லையானால் வீரமான அந்த ஆண் பிறப்பால் யாது பயன்? என்பாள், ஆண்மை என்ன ஆண்மையே? என்றாள். சிந்தை புலந்து நொந்து கூறிய படியிது. அஞ்சல்! அஞ்சல்! என்று அடுக்கியதால் நெஞ்சின் கவலையும் நிலைமையும் தெரிந்தன. இராமன் திருவாய் திறந்து தன்னை நோக்கி ஒரு வார்த்தை

இத்தகைய அரிய பெரிய மாதவராது அன்புரிமையை நீங்கள் பூரணமாகப் பெற்றிருக்கிறீர்கள். உங்களால் ஆகாத காரியம் இனி உலகில் ஒன்றும் இல்லை. எல்லா நலங்களும் ஒருங்கே வாய்ந்த பரம பாக்கியவான்களாய் யாண்டும் உயர்ந்து விளங்குவீர்கள்'' என்று சதானந்த முனிவர் கோசிகர் சரிதையை இவ்வாறு கூறி முடித்தார்.

### சரித்திர நிலை.

இந்த விசுவாமித்திராது சரித்திரம் வால்மீகத்தில் பதினைந்து சருக்கங்களால் கூறப் பட்டுள்ளது. அதனைச் சாரமாகச் சுருக்கி நாற்பத்தெட்டுப் பாடல்களில் கம்பர் விளக்கியிருக்கிறார். இவ்வரலாற்றில் ஆத்தும தத்துவங்களோடு அற்புத நிலைகள் பல அடங்கியுள்ளன. முனிவர் நிலையைத் தனியே காணுங்கால் அவை யாவும் காணலாகும்.

இங்ஙனம் பேசி முடித்த சதானந்தர் மறுநாள் காலையில் வந்து காண்பதாக வணங்கி விடை பெற்றுச்சென்றார்.

### படுக்கச் சென்றது.

அவர் போகவே மூவரும் படுக்கைக்குப் போயினர். தவசியும் இலக்குவனும் தனித்தனியே அயர்ந்து உறங்கினர். இராமன் மட்டும் உறங்காமல் அமளியில் அமர்ந்து கிடந்தான். தூக்கம் வரவே யில்லை. எண்ணுதனவெல்லாம் எண்ணி ஏங்கியுளைந்தான்.

### இராமன் மையல் கொண்டு மயங்கி யிருந்தது.

கன்னி மாடத்தில் கண்ணோக்கி வந்த பெண்ணின் வண்ணமே எண்ணம் முழுவதும் பெருகி நின்றது. திண்ணியனாயினும் வெண்ணெயென நெகிழ்ந்து நிறைவுழந்து நின்றான். அந்த இரவில் அவ்வண்ணல் இருந்தநிலையும், வருந்தியவகையும் தெரிந்து கொள்ள வருகின்றோம்.

முனியும் தம்பியும் மொய்ம்முறை யால்தமக்கு
இனிய பள்ளிகள் எய்திய பின் இருட்
கனியும் போல்பவன் கங்குலும் திங்களும்
தனியும் தானும்அத் தையலும் ஆயினன். (மிதிலைக்காட்சி,139)

விடுதியாக விடுத்திருந்த சனகன் மாளிகையில் புதியராய் வந்துள்ள மூவருள் இருவர் உறங்க, ஒருவன் உறங்காமல் தனியே இரங்கியிருந்த படியை இங்ஙனம் வரைந்து காட்டியிருக்கிறார்.

முறையால் தமக்கு என்றது தவசி நிலைக்குத் தகுதியாகவும், அரசகுமாருக்கு அமைதியாகவும் படுக்கைகள் அமைத்திருந்த வகைமை தெரிய வந்தது. பள்ளி = துயிலும் இடம்.

இராமனை இங்கே இருட் கனி என்று குறித்திருக்கிறார். இப் பேரின் சீர் ஓரும் தகையது. கரியகோலத் திருமேனியனுய் எழில் சுரந்து எவரும் விழைந்து மகிழ இனிது விளங்கியுள்ள மையை இது விளக்கி நின்றது. அருள்பழுத்த பழச்சுவையே என்பது போல் இருள்பழுத்த இன்சுவையாய் யாண்டும் இனிமை கனிந்து புதுமை பொலிந்து புனிதம் மிகுந்துள்ளான் என்க.

எங்கும் இனியனை இவன் அன்று அங்கே தனியனுய்த் துயிலிழந்து மயலுழந்து மறுகியிருந்தான். தனி = தனிமை.

தனிமையிலேயும் சில துணைமைகள் கலந்துள்ளன என நிலைமையை நினைந்து தெளிய விநயமாக உரைத்திருக்கிறார்.

"கங்குலும் திங்களும் தனியும் தானும் அத்தையலும்ஆயினன்"

என இந்த ஐயன் இருந்த தன்மையை இப்படி வையம் அறிய வைத்தார். துணையாயிருந்த முனியும் தம்பியும் துயிலச் சென்றார்; செல்லவே இச்செல்ல மகன் தனியே இருந்தான். அந்த இரண்டு துணைகள் பிரிந்து போகவே உடனே நான்கு துணைகள் வந்து சேர்ந்தன என நயம்பட மொழிந்துள்ளார்.

கங்குல் முதலியன முன்னமே முனைந்திருந்தாலும் முனியும் தம்பியும் நீங்கிய பின்புதான் நினைவில் அவை நிலையோங்கி நின்றன. அவர் அருகே இருக்கும் வரையும் உரை முதலியவற்றால் ஆறியிருந்தான்; அயல் அகலவே செயல் அகன்று மயல் மிகுந்தது; அம்மையல் நிலையில் ஐயன் அலமந்தான் என்க.

அமளியில் அமர்ந்து துயில் கொள்ளப் புகுந்தான்; உறக்கம் வரவில்லை; கண்ணை மூடிப் பார்த்தான்; மாலையில் பார்த்த பெண்ணின் எண்ணமே நெஞ்சில் பெருகி நின்றது. உருகி எழுந்து உட்கார்ந்துகொண்டான்; அருகே ஒருவரும் இல்லாமையால் தனியே மறுகி நினைந்து மையலில் உழந்தான். இரவும் நிலவும் எதிரே எரிந்தன. அவை காமம் கனிவிக்கும் நிலையின ஆதலின் வேதனை மிகுந்தது. பள்ளியில் அமர்ந்தபடியே உள்ளம் மயங்கி உணர்வு தியங்கி உறுதி குலைந்து உயிர் உயங்கியிருந்தான்.

இங்ஙனம் மாலுழந்து மயங்குதற்கு இரவு மூல சாதனம் ஆதலின் அதனை முன்பு வைத்தார். இரவில் நிலவு தாபத்தை விளைத்தலால் கங்குலின் பின் திங்களை நிறுத்தினர். மதியும் இரவும் மருவி வரினும் அருகே நல்ல துணைகள் இருந்தால் ஆறுதல் புரியும்; அதுவும் இல்லை என்பது தெரியத் தனிமை கூறினர்.

அயலே நிலவுகின்ற கங்குலும் திங்களும் முன்புறம் நின்றன. அதன் பின் அகநிலை யாகிய தனிமை நின்றது. மூன்றையும் முன்னே ஒதுக்கி உரிமையான ஒன்ருேடு உரியவனை ஒரு முகப்படுத்தி இறுதியில் தனியே இனிமை கனிய வைத்தார்.

தானும் தையலும் என இராமனையும் சானகியையும் தகைமையோடு புணர்ந்து வைத்திருக்கும் நயம் உவந்து நோக்கத் தக்கது. மையல் நோயால் மறுகியுள்ளவன் தையலோடு தழுவி நின்ருன். ஆயினன் என்றது தன் உளநிலை திரிந்து தையல் மயமாகவே ஆகி யுள்ளமை கருதி. எண்ணம் எல்லாம் கண்ணுரக்கண்ட பெண்ணுகவே ஏறி நின்றது என்பதாம்.

காதல் மீதூர்ந்து கன்னிமாடத்தில் சீதை இன்னலுழந்துள்ள நிலைகளை முன்னம் அறிந்தோம்; இனி இராமனது காம வேட்கையைக் காண நேர்கின்ருேம்.

காதலி நிலையை உரைத்து முடித்த கவி உடனே காதலன் திறத்தை உரைக்காமல் இடையே ஒரு மாதவர் சரித்திரத்தைப் பரப்பி வைத்துச் சிறிது ஆறுதல் செய்து அதன்பின் கூறியிருப்பது கூர்ந்து சிந்திக்கத் தக்கது.

கதை வாய்ப்பு எப்படி அமைந்திருப்பினும் எதையும் சுவையாக ஆக்கி உலகம் உயர்வுறக் கவி உவகை யூக்கி வருகின்ருர்.

விரகிகளுடைய எண்ணங்களும் உரைகளும் மிகவும் நுண்மை யுடையனவாயினும் கண்ணெதிரே காண்பதுபோல் எவரும் எண்மையாகத் தெரியும்படி இனிது காட்டியருள்கின்ருர்.

இரவில் உறக்கம் இன்றிப் படுக்கையில் தனியே இருந்து கொண்டு காமதாபத்தால் உளநிலை திரிந்து பல பல எண்ணித் தனக்கு உள்ளேயே இராமன் மெள்ள அன்று உரையாடி யுள்ளதை உலகமெல்லாம் நன்கு அறிய நயமாக உரைத்திருக்கிருர்.

இராமன் எண்ணி உளைந்தது.

விண்ணின் நீங்கிய மின்னுரு இம்முறை
பெண்ணின் நன்னலம் பெற்றதுண் டேகொலோ ?
எண்ணின் ஈதல தொன்றறி யேன்இரு
கண்ணின் உள்ளும் கருத்துள்ளும் காண்பெனல்.

சீதையைக் கண்டதிலிருந்து பொன்மயமான அத்திருமேனியையே இராமன் கருதியிருந்தான்; அது இதுபொழுது உரு வெளித் தோற்றமாய் ஒளிசெய்து நின்றது; அந்நிலையினை நோக்கி இங்ஙனம் நெஞ்சொடு புலம்பினன்.

விண்ணில் நின்று நீங்கிய ஒரு மின்னல்கொடி பேரழகுடைய பெண்ணுருவமைந்து மண்ணிடை வந்து என் கண் எதிரே இவ்வண்ணம் நின்றது என எண்ணி ஏங்கினன். "மின் பெண் நலம் பெற்றது" என்றமையால் அந்தத் தேக காந்தியும், அதில் இக் கோமகன் மோகமீதூர்ந்துள்ளமையும் தெரிய வந்தன.

சதகோடி மின்சேவிக்க மின்அரசு என்னும் படி நின்றாள் என்று சீதையைக் குறித்து * முன்னம் சொன்னது ஈண்டு எண்ணத்தக்கது. அங்கே கவி உரைத்ததை இங்கே காவிய நாயகன் வாய் மூலம் சுவையாக வலியுறுத்தினர். —

" மின்தெளித்து எழுதியன்ன விளங்குநுண் நுசுப்பினல்லார் "
(சிந்தாமணி)

வாய்ந்த மின்னை மடந்தையர் ஆக்கிவிண்
போந்நி டாமலன் றோமலர்ப் புங்கவன்
சாந்தணிந்த தமனியக் குன்றென
ஏந்து வெம்முலைப் பாரம் இயற்றினன். (நைடதம்)

" மின்னைத் திரட்டி மிகப்பிழிந்து சாம்புநதப்
பொன்னை யுருக்கிப் புடமிட்டுப்—பின்னையொன்றாய்க்
கூட்டிப் பிடித்துக் குழைத்துமதி நுட்பமெலாம்
காட்டித் தனித்திருந்து கைவருந்தப்—பூட்டியமு
தாறு பருவத் தொருபெண் உருவாக்கிக்
கூறும் அழகைக் குடியேற்றி " (திருப்பூவண நாதர் உலா)

இடியுமிழ் வானத்து இரவிருள் போழும்
கொடிமின்னுக் கொள்வேன்என் றன்னள் ; வடிநாவின்
வல்லார்முற் சொல்வல்லேன் என்னைப் பிறர்முன்னர்க்
கல்லாமை காட்டியவள். (கலி, 141)

---

* இந்நூல் பக்கம் 1011, வரி 6 பார்க்க.

மின் உரு பெண் உருவாகி யுள்ளது என இவற்றுள்ளும் வந்துள்ளமை காண்க. விண்ணின் நீங்கிய என்றது கண் எதிரே மண்ணின் ஓங்கியுள்ள அப்பெண் ஒளியின் மகிமையை எண்ணி.

இம்முறை = இப்படி. ஈது அலது ஒன்று அறியேன் என்றது இந்தப்பெண்ணுருவைத் தவிர வேறு ஒன்றையும் நான் அறிந்திலேன் என்றவாறு. விழித்து நோக்கினல் எதிரே தோன்றுகின்றது; கண்ணை மூடினல் உள்ளே தெரிகின்றது; என்னே இது! என எண்ணி மயங்கினன்.

"இரு கண்ணின் உள்ளும் கருத்துள்ளும் காண்பெனல்"

என்றமையால் சீதையின் உருவெளித் தோற்றம் புறத்தும் அகத்தும் ஒருங்கே பொலிந்து நின்றுள்ளமை புலனும்.

இங்ஙனம் எண்ணினவன் பின்பு கண்ணழகை வியந்து உண்ணெகிழ்ந்து வண்ணநிலையை வனைந்து புகழ்ந்துள்ளான்.

வள்ளற் சேக்கைக் கரியவன் வைகுறும்
வெள்ளப் பாற்கடல் போல்மிளிர் கண்ணினுள்
அள்ளற் பூமகள் ஆகுங் கொலோ? எனது
உள்ளத் தாமரை உள்ளுறை கின்றதே.

(மிதிலைக் காட்சி, 141)

சானகியின் கண்ணைக் குறித்து வந்திருக்கும் இவ்வருணனை எண்ணி யுணருந் தோறும் இன்பம் தருகின்றது.

திருமால் பள்ளிகொண்டுள்ள வெள்ளிய பாற்கடல் ஒள்ளிய கண்களுக்கு இங்கே உவமையாய் வந்தது. வள்ளற் சேக்கை என்றது அரவணையை. நீல நிறமுடையவன் ஆதலால் திருமாலைக் கரியவன் என்றார். உரியவன் கூறிய உரையிது.

விரிந்து பரந்த வெண்கடல் வெள்ளை விழிக்கும், அக்கடலிடையே வட்ட வடிவமாய் அமைந்துள்ள பாம்புப் படுக்கை கருவிழிக்கும், அவ்வணை நடுவே எழுந்தருளி யிருக்கும் திருமால் கருவிழியிடை மிளிரும் ஒளி மணிக்கும் உவமையாம்.

இந்தக் காட்சி கருத்தூன்றிக் காணத்தக்கது. வெண்மையும் கருமையும் ஒளியும் மருவி யுள்ளமையான் கண் பாற்கடற் பள்ளியாேடு இவ்வண்ணம் புனைந்து பாராட்டப்பெற்றது.

" தன்உரு உறழும் பாற்கடல் நாப்பண்
மின்னவிர் சுடர்மணி ஆயிரம் விரித்த
கவைநா வருந்தலைக் காண்பின் சேக்கைத்
துளவம் சூடிய அறிதுயி லோனும் " (பரிபாடல், 13)

பாலாழியிடை மால் மருவியுள்ள நிலையை இது குறித்திருத்தல் அறிக. தன் உரு உறழும் என்றது தனது நீல நிறத்தோடு மாறுபட்டுள்ள வெண்கடல் என்றவாறு.

பாற்கடல் நாலெட் டிலக்கமி யோசனை, பாற்கடலுள்
மாற்கவி கோயில் அகலமும் ஈரைந்து வானளவும்
தீற்கமொ ரேழு திகழ்பணி மூன்று சிறந்தகலம்
ஏற்கவின் ஒன்றரை உத்தமர் நீளம் இரண்டரையே.
(திருவரங்கத்துமாலை, 6)

ஆழியான் துயிலும் ஆழிநிலையை இங்ஙனம்அளவுசெய்துள்ளனர்.

கண்ணனது வெண்மைக் கோளமும், அதன்மேல் கருவட்டமும், அதனுள் ஒளிப் பிழம்பும் உடையது. அக் கருவிழியொளி கரியவன் எனவந்தது. இவ்வொளியைக் கிருட்டினன் என உலகவழக்கிலும் வழங்கி வருகின்றனர். " அவன் செய்யும் காரியம் கண்ணுக்குள் இருக்கும் கிருட்டினனுக்கும் தெரியாது " என வினையில் சமர்த்தனை வியந்துகூறுங்கால் இங்ஙனம் புகழ்ந்து பேசுகின்றனர். இது எங்கணும் பெருவழக்கா யுள்ளது.

கண்ணோடு மாலுக்கு இவ்வண்ணம் தொடர்புடைமையாலுய் கண்ணன் என்பதனாலும் இவ்வுண்மை புலனும்.

வெள்ளப்பாற்கடல் போல்மிளிர்கின்ற அக்கண்ணுள் தான் இதுபொழுது நண்ணியுள்ளதை நுண்ணிதாக உணர்ந்துகொள்ளவும் இவ்வண்ணல் மொழி ஈண்டு அமைந்து நின்றது.

விழியின் பெரும்பாகம் வெள்ளையாயும், அதனூடு சிறிது கருமையுற்றிருக்கும் உருவம் நோக்கி இவ்வுவமை கூறினும் உண்மையை ஊன்றி நோக்கி உரிமை தெரியவும் இது உதவி நின்றது.

" பாலில் கிடந்த நீலம் போன்று
குண்டுநீர்க் குவளையிற் குளிர்ந்து நிறம் பயின்று
எம்மனோர்க்கு அடுத்த வெம்மைநோய்க்கு இரங்கி
உலகேழ் புரக்கும் ஒருபால் நாட்டம் "
(திருவிடைமருதூர் மும்மணிக்கோவை, 1)

உமாதேவியார் கண்ணைக்குறித்து உரைத்த படியிது. முன்னம் பாலோடு மால் வந்ததுபோலப் பாலும் நீலமும் இதில் படிந்து வந்துள்ளன. தேவியின் விழிநிலையை விளக்கி யுள்ள இப்பாவின் பொருள்நலனை ஊன்றி உணர்ந்து கொள்ளவேண்டும்.

"ஆலமுண்டு அமுதம் பொழிதரு நெடுங்கண் அம்பிகை" என வில்லியாழ்வார் சொல்லியுள்ளதும் ஈண்டு எண்ணத்தக்கது.

பிராட்டியின் கண்ணழகில் இராமன் எண்ணம் அழுந்தியுள்ளமையை இவ்வண்ணம் உணர்த்தி யருளினர்.

இவ்வாறு கண்ணை வியந்து கூறியவன் பின்பு அப்பெண்ணை விழைந்து பேசுகின்றான். என் நெஞ்சத்தாமரையில் நிலைத்திருத்தலால் இவள் கஞ்சமலர்த் திருவோ? என்று களித்து நின்றான்.

செந்தாமரை சேற்றில் முளைக்கும் இயல்பினது ஆகலான் அது அள்ளற்பூ என வந்தது. அள்ளல் = சேறு. தாமரைமலர் இலட்சுமி தங்கியிருக்கும் இடம் ஆதலால் அவளுக்குப் பூமகள் என்று பெயர். அக் கஞ்சத் திரு இன்று நெஞ்சத்திருவாயினள்.

நான் கண்ட மங்கை "என் உள்ளத் தாமரையுள் உறைகின்றதால்" ஒருவேளை அப்பூமகளாகவே இருப்பாளோ? என்று ஆசைமீதூர்ந்து நேசமுடன் இங்ஙனம் நினைந்து மகிழ்ந்தான்.

கண்ணைத் திருமாலோடும், பெண்ணைத் திருமகளோடும் உறழ்ந்து எண்ணியுள்ளமையால் தனது இயல்பான உயர்வுண்மை உணர வந்தது. நிலைமையும் தலைமையும் உரையில் ஒளிர்கின்றன.

இராமன் நினைவெல்லாம் சனகி மயமாகவே இயங்கியிருந்தன என்பது முன்னே வந்துள்ள வாய்மொழியால் விளங்கி நின்றது. தன்னுள்ளே பின்னும் எண்ணிப் புலம்பியுள்ள படிகளை அடியில் வருவனவற்றால் அறியலாகும்.

### இராமனது தாப மொழிகள்.

அருளி லாள்எனி னும்மனத் தாசையால்
வெருளும் நோய்விடக் கண்ணின் விழுங்கலால்
தெருளி லாவுல கிற்சென்று நின்றுவாழ்
பொருளெ லாமவள் பொன்னுரு வாயவே. (1)

பூணு லாவிய பொற்கல சங்கள்என்
ஏணி லாகத் தெழுதல என்னினும்
வாணி லாமுறு வற்கனி வாய்மதி
காண லாவதோர் காலமுண் டாங்கொலோ? (2)

வண்ண மேகலைத் தேரொன்று வாள்நெடுங்
கண்ணி ரண்டு கதிர்முலை தாமிரண்டு
உண்ணிவந்த நகையுமுண் டாமெனின்
எண்ணும் கூற்றினுக்கு இத்தனை வேண்டுமோ? (3)

கன்ன லின்கருப் புச்சிலை யான்விரை
பொன்னை முன்னிய பூங்கணை மாரியால்
என்னை எய்து தொலைக்குமென் றுலினி
வன்மை யென்னுமி தாரிடை வைகுமே. (4)

கொள்ளை கொள்ளக் கொதித்தெழு பாற்கடற்
பள்ள வெள்ளம் எனப்பட ருந்நிலா
உள்ள வுள்ள உயிரைத் துருவிட
வெள்ளை வண்ண விடமும்உண் டாங்கொலோ? (5)

(மிதிலைக் காட்சி, 142-146)

காமதாபத்தால் இராமன் தனியே புலம்பி யுள்ள படி யிவை.

கண்டு வந்த பொருளில் காதல் கைம்மிகுந்து நோதலுழந் துள்ள நிலைகள் நுணுகி யுணர வந்தன. உள்ளத் துடிப்புகள் உரைகளில் துடிக்கின்றன.

1. அருள் இலாள் என்றது தனக்கு இவ்வாறு மன வேதனையை விளைத்து விட்டாளேயன்றி விரைந்து வந்து இரங்கி அருளவில்லையே என்று ஆற்றாமை மீதூர்ந்து அன்புரிமையால் நொந்து கூறியபடி. காதல் முதிர்ந்து மொழிகின்ற காமச் சலுகை இது.

வன்னெஞ்சளாய் அவள் அங்ஙனம் இருந்தும், யான் என் னெஞ்சிலெழுந்த பேராசையினால் அவளை வாரி விழுங்குதல் போல் கண்களால் ஆரப் பருகினேன்; அதனால் உலகிலுள்ள பொருள்களெல்லாம் அவள் வடிவ மாகவே தோன்றுகின்றன என்று தனது தனியான கண்காட்சியை எவரும் கண்டு இரங்கக் கவலையோடு காட்டி யருளினான். வெருளும் நோய் விட என்றது மையல் நோய் தீர என்றவாறு. என் கண்ணின் விழுங்கலால் என்றதனால் இந்த அண்ணல் அந்தப் பெண்ணரசியைக் கன்னிமாடத்தில் கடுங் காதலோடு கண்டு களித்து உண்டு சுகித்துள்ளமை உணரலாகும். யாருக்கும் தெரியாமல் அங்கே பார்த்து நின்ற ஆர்த்தி நிலை இவ்வார்த்தையால் பாருக்கெல்லாம் தெரியவந்தது.

சென்று வாழ்பொருள் என்றது உலாவித் திரிகின்ற உயிரினங்களை. நின்று வாழ்பொருள் என்றது இடம்பெயராது நிலைத்து நிற்கும் தாவரங்களை. இவை முறையே இயங்கு திணை, நிலைத்திணை எனப்படும். உலகிலுள்ள சராசரங்கள் எல்லாம் என்றபடி.

என் கண் எதிரே தோன்றும் பொருள்கள் யாவும் அப் பெண் உருவமாகவே பெருகியுள்ளன என்று மறுகி நின்றான்.

பொருள் எலாம் அவள் பொன் உரு ஆயவே என்றமையால் அவ் வுருவெளித் தோற்றத்தின் பெருவெளி தெரிந்தது. அவள் என்றது என் கண்கள் விழுங்கிய அக் கட்டழகி என்றவாறு.

அக்கன்னியின் திருமேனி நிறம் பொன்னின் சோதி யாய்ப் பொலிவெய்தியுள்ளமையான் இன்னவாறு குறித்தான். பொருள் பொன் ஆயது என்றது ஒரு நயம். மாடு ஆடு மரம் கல் முதலிய யாவும் பொன்மயமாகவே தோன்றின என்பதாம்.

சீதையைக் கண்டது முதல் அவளையே கருதி யிருந்தான் ஆதலால் தன் கண்ணுள்ளும் எண்ணுள்ளும் அவ்வுருவமே கலந்து நின்றது; ஆகவே உலகில் காணும் பொருள்க ளெல்லாம் அவளாகவே தோன்றலாயின என்க.

எண்ணத் தடிப்பால் கண்ணெதிரே தோன்றும் இவ்வண்ண வடிவை உருவெளித்தோற்றம் என்பர். இங்ஙனம் தோன்றவே அவ் அங்க அவயவங்களை யெல்லாம் வியந்து நோக்கிக் காதலர் மயங்கிப் புலம்புவர்.

பைங்கண் மணிமகர குண்டலமும் பைந்தோடும்
திங்கள் முகத்திலங்கச் செவ்வாய் எயிறிலங்கக்
கொங்குண் குழல்தாழக் கோட்டெருத்தம் செய்தநோக்கு
எங்கெங்கே நோக்கினும் அங்கங்கே தோன்றுமே.
(சிந்தாமணி, 1971)

விமலையைக் கண்டு காதல் கொண்ட சீவகன் கூறியது.

சேணும் திகழ்மதிற் சிற்றம் பலவன்தெண் ணீர்க்கடல்நஞ்சு
ஊணும் திருத்தும் ஒருவன் திருத்தும் உலகின்எல்லாம்
காணும் திசைதொறும் கார்க்கய லும்செங் கனியொடுபைம்
பூணும் புணர்முலை யும்கொண்டு தோன்றுமொர் பூங்கொடியே.
(திருக்கோவையார்)

ஆடுங் கடைமணி ஐவேல் அசதி அணிவரைமேல்
நீடுங் கயற்கண்ணி யாள்தந்த ஆசை நிகழ்த்தரிதால்
கோடும் குளமும் குளத்தரு கேநிற்கும் குன்றுகளும்
காடும் செடியும் அவளாகத் தோன்றும்என் கண்களுக்கே.
(அசதிக்கோவை)

காரும் பிறையும் சிலையும் குமிழும் கமலமுமுந்
நீரும் சுறவும் குமுதமும் கோங்கமும் நேரரசர்
ஆரும் பணியும் குலோத்துங்க சோழன் அளகை மின்னும்
தேரும் கதலியும் தேமாந் தளிரும் திசையெங்குமே.
(குலோத்துங்கசோழன்கோவை)

கூர்க்குங் கனல்மழு வார்வெங்கை வாணர் குளிர்சிலம்பில்
சீர்க்கும் கயலும் கருமேக முந்தொண்டைத் தீங்கனியும்
வார்க்குங் குமமுலை யுங்கொண்டு மாதுஎதிர் வந்துநின்றாள்
பார்க்கும் திசைதொறும் எங்கே இம்மாயை பயின்றதுவே.
(திருவெங்கைக் கோவை)

பொன்னென்று மேனியன் சீகாழி நாதன் புரிந்த சடை
முன்னென்று பாதிப் பிறையும் நிறையும் முழுமதியும்
கொன்னென்று மேகமும் கோபமும் சாபமும் கொண்டுபொலி
மின்ஒன்று பார்க்கும் திசைதொறும் தோன்றும் வியப்பிதுவே.
(சீகாழிக் கோவை)

அதிர முழங்கிய சங்கமும் வேழமும் அம்பும் வில்லும்
பொதிதரு கொம்பும் கொடியுமுன் தோன்றின பூம்பொழில்மேல்
கதிருல வுந்திரு வாரூரில் தேவர கண்டர்வெற்பில்
பதிபடை தோன்றின தோவல வாநம் பதியினுமே.
(திருவாரூர்க்கோவை)

பொன்னுறு மேனியர் கோடீச்சுரேசர் பொருப்பிலொரு
மின்னுறு கின்ற ததிலே பிறையும் வியன்குமிழும்
பன்னுறு வில்லும் கணையும் கமலப் பருமுகையும்
என்னுறு பார்வைமுன் எங்கணும் தோன்றுமி தென்வியப்பே.
(கோடீச்சுரக்கோவை)

**காதலிகளுடைய உருவெளித் தோற்றங்களைக் கண்டு காதலர்கள் ஆதரமீதூர்ந்து புலம்பியுள்ள நிலைகளை இவ்வாறு உணர்த்தியுள்ளன. இவை பெண்மையலில் பெருகி எழுந்த கண் மையல்கள்.**

கூந்தல், நெற்றி, புருவம், முகம், மூக்கு முதலிய உறுப்புக்களைக் கார் பிறை சிலை முதலாக உவமைகூறி உருவகித்து ஆவலோடு அவர் உரையாடியுள்ள காதல் வண்ணங்களை எண்ணும் தோறும் நகையும் உவகையும் நமக்கு நண்ணி வருகின்றன.

" திருவின் செய்யோள் உருவமெய்த் தோன்றத்
தீட்டிரும் பலகையில் திருத்தித் தேவர்
காட்டி வைத்ததோர் கட்டளை போலக்
கலன்பிற அணிந்து காண்போர் தண்டா
நலந்துறை போகிய நனிநாண் ஒடுக்கத்து
மணிமுகிழ்த் தன்ன மாதர் மென்முலைத்
தணிமுத் தொருகாழ் தாழ்ந்த ஆகத்து
இலமலர்ச் செவ்வாய் எயிறு விளக்குறுக்க
அலமரு திருமுகத்து அளகத் தப்பிய
செம்பொற் சுண்ணம் சிதர்ந்த திருநுதல்
பண்பிற் காட்டிப் பருகுவனள் போலச்
சிதர்மலர்த் தாமரைச் செந்தோடு கடுப்ப
மதரரி நெடுங்கண் வேற்கடை கான்ற
புள்ளி வெம்பனி கரந்த கள்விதன்
காரிகை உண்டஎன் பேரிசை ஆண்மை
செறுநர் முன்னர்ச் சிறுமை யின்றிப்
பெறுவேன் கொல்லென மறுவந்து மயங்கி
எவ்வமிக் கவனும் புலம்ப." (பெருங்கதை, 1-33)

வாசவதத்தையை முதலில் கண்டு காதல்கொண்ட உதயண குமரன் தனியே இருந்தபொழுது அவளது உருவெளித் தோற்றத்தை நோக்கி உளைந்து கூறியபடி யிது.

உள்ளத்தே மையல் கூர்ந்த காதலர் தையலரை நினைந்து இவ்வாறு பொய்யுருவங்களைப் பார்த்துத் தவித்திருக்கின்றனர்.

எல்லாம் அவள் பொன்னுருவாயவே என்று இங்ஙனம் மறுகிப் புலம்பிய இராமன் மேலும் மயங்கி மொழிகின்றான்.

2. அந்தத் திருமேனியைத் தழுவிக் கலந்து மகிழும் பேறு எனக்கு இப் பிறவியில் அமையாது போயினும் மீளவும் ஒரு முறை அம் மதிமுகத்தைக் கண்டு கொள்ளவாவது காலம் வாய்க்குமா? அந்தோ! என் உள்ளத்தைக் கவர்ந்து கொண்டு போயுள்ளாளே! என்று புலம்பி அயர்ந்தான்.

வாள் நிலா முறுவல் கனி வாய் மதி காணலாம் கொலோ ?

என்றதனுல் அக்கன்னித் திரு புன்னகையோடு நோக்கி யுள்ளமை புலனய் நின்றது. “என் உயிரை அம்முறுவல் உண்டதே” என முன்னம் அக்குமரி சொன்னதுபோல் இக்குமரனும் இங்கே ஏங்கி இருக்கிருன். இருவர் ஏக்கமும் ஒரு நோக்கில் ஓங்கி உயிரைத் தாக்கியுள்ளது.

3. கண் எதிரே தோன்றி என் உயிரை வாட்டுகின்றதே! காமவாதனை ஏமவேதனை யாயுள்ளமையான் எமனுக்கு இப்படி ஒரு பெண் வடிவமும் உண்டோ? என்று எண்ணி யுளைந்தான்.

எண்ணும் கூற்றினுக்கு இத்தனை வேண்டுமோ?

என்றது கண் முலை நகை முதலிய நிலைகளை. தனக்கு உயிர் வேதனை செய்து நிற்றலால் கூற்று என்று ஆற்ருமை மீதூர்ந்து தூற்றினன்.

கண்ணினல் இன்று கண்டாம் கூற்றினைக் காமர் செவ்வாய்
ஒண்ணுதல் உருவக் கோலத்து ஒருபிடி நுசுப்பிற் றீஞ்சொல்
வண்ணித்தல் ஆவதில்லா வருமுலை மதர்வை நோக்கிற்
பெண்ணுடைப் பேதை நீர்மைப் பெருந்தடங் கண்ணிற்றம்மா
(சிந்தாமணி, 2458)

பண்டறியேன் கூற்றென் பதனை இனியறிந்தேன்
பெண்டகையால் பேரமர்க் கட்டு. (குறள், 1083)

பெண்ணைக் கூற்றம் எனக் காதல் நோக்கில் கூறியுள்ள இவை ஈண்டு எண்ணற் பாலன. கட்டு = கண்ணையுடையது.

ஆசை வயத்தராய் இவ்வண்ணம் பேசும்பொழுது ஓசை வெளியே மாறுபாடாகத் தோன்றினும், உள்ளே மொழிகள் தோறும் பாசமும் நேசமும் பதிந்து மிளிர்கின்றன. அவர் வையும் வகையெல்லாம் கருதிய தையலர் கையகன் றுள்ளமை கருதியே யாம். மையல் நோயால் உய்யும் வகை நாடி உரை தடுமாறி இங்ஙனம் உழலலாயினர்.

அமிர்தமயமான இனிய பெண்ணை எமன் என எண்ணியது தனது காமவேட்கையின் கடுமையைக் காட்டி நின்றது.

4. இங்ஙனம் மறுகி நின்றவன் பின்பு தனது பெருமித நிலையைக் கருதி இரங்கினன். அதில் இவனது இயல்பான குல வீரமும், குணநலமும், தலைமைத் தன்மையும் குடிகொண்டுள்ளன.

புல்லிய மன்மதன் மெல்லிய பாணங்களை என்மீது தொடுத்து என்னை நிலை குலைத்துள்ளான் என்றால் ஆண்மை வீரங்களுக்கு இனி உரியவர் யார்? என்று பரிவுரை யாடினன்.

என்னை என்றமையால் தன்னைக் குறித்து இராமன் எண்ணியிருந்துள்ள உயர்வும் தகவும் உறுதியும் உணர வந்தன.

வேல் வாள் முதலிய கொடிய படைக்கலங்களோடு பல்லாயிரவர் வந்து எதிர்ந்தாலும் எல்லாரையும் ஒருங்கே வெல்ல வல்ல மகாவீரனாகிய தன்னை அங்கம் இல்லாத ஒருவன் இங்ஙனம் பங்கப் படுத்திவிட்டானே! என்று பரிந்து நாணியபடி யிது.

கன்னல்—கரும்பு. கன்னல் என்னும் இனிய கரிய வில் என்க. கரும்பு என்பது கருப்பு என வலித்தல் விகாரம் பெற்று வந்தது என்று கொண்டால், இரு பெயர் ஒட்டாம். முன்னதான கன்னலைச் சருக்கரைப் பாகு எனப் பொருள்செய்து அடைமொழி யாக்கினும் அமையும்.

பூங்கணை என்றது அவனது ஆயுதபலத்தின் எளிமை தோன்றவந்தது. தாமரை, அசோகு, மா, முல்லை, குவளை என்னும் ஐவகை மலர்கள் காமனுக்கு அம்புகளாய் அமைந்துள்ளன. பூவாளி என்பது அவனுக்கு ஒரு பெயர்.

தன் பாண வரிசைகளை யெல்லாம் ஓயாது சொரிந்து என் உயிரை வாட்டுகின்றான் என்பார், "பூங்கணை மாரியால் என்னை எய்து தொலைக்கும்" என்றார். தான் ஒரு வீரன் ஆதலின் மாரன் நிலையை இவ்வாறு கூறலானான். அவனது அருந்திறல் அதிசயமானமையால் துதி செய்ய நேர்ந்தது.

## காமனது ஆற்றல்

புல்லிய கரும்பு, மெல்லிய அரும்பு இவற்றைக் கையில் வைத்துக்கொண்டு என்ன பாடு படுத்துகின்றான்! என மன்மதனது வன்மையைத் தன்னை மறந்து இராமன் இங்ஙனம் வியந்து நின்றான். காதல் துறையில் புகழ்வன கனிவு மிக வுடையன.

"சிலையோ கரும்பு,பொரு கணையோ அரும்பு,சிவ
சிவஆவி ஒன்றும் உளதோ
இலையோ? அறிந்திலம்இம் மதன்ஆண் மைஎன்புகல்வது
இதுவே தவம்; பிறிது எனம்?

முலேயே அணிந்தமுகிழ் நகையீர்! ஓர்பெண்கொடியின்
முலேயோடு முன்கை வளேயால்
மலேயே குழைந்திடுதம் இருதோள் குழைந்துறைநம்
மதுரேசர் தந்த வரமே.'' (மதுரைக் கலம்பகம், 84)

ஒரு தலைவி தன் தலைவனை நினைந்து காமவேதனையால் உருகி உயிர் மறுகியுள்ளமையைக் குறித்துச் செவிலித்தாய் இரங்கிக் கூறியபடியிது. இக்கவியின் பொருள் நயங்களைக் கருத்தூன்றிக் காண்க.

சிவ சிவ என்றது பரிதாபம் தோன்ற வந்தது. புல்லிய கருவிகளைக்கொண்டு இம்மெல்லியல் உயிரை உண்டோ? இல்லையோ? என்று கண்டோர் கலங்கும்படி கொல்லுகின்றனே! இந்த ஆண்மை எங்கிருந்து வந்தது? அவன் செய்த தவத்திற்கு இரங்கிச் சிவன் தந்த வரம்; அதனால் யாண்டும் அதிசயமுடையனாய் அதிசயங்களை விளைத்து வருகின்றான் எனக் கவலையை உள்ளடக்கிக்கொண்டு இவ்வாறு உவலை தெரிய உரைத்தாள்.

முலைநகையீர்! என்றது முல்லை அரும்பு போன்ற முறுவலையுடையீர்! என்றவாறு. அருகில் நின்ற உரிமைத் தோழிகளிடம் உரையாடினமையால் இங்ஙனம் விளித்தாள். ஓர் பெண் கொடி என்றது உமாதேவியை.

மேருமலையை வில்லாக வளைத்துப் பாரமலைகள் யாவும் குழைந்துபடும்படி திண்ணிதாக விளைந்திருக்கும் சிவனுடைய வீரத்தோள்கள் உமை தழுவ வெண்ணெய்த் திரளைபோல் குழைந்துபடும் என்பதாம்.

தனக்கு அருள்புரிந்த சிவனையே இப்படிச் செய்தால், அவன் வேறு எவரை என்னதான் செய்யான்? கருப்புச் சிலையான் பொருப்புச் சிலையானையும் பொருது விடுவான் என்பதாம்.

மேற்கோளாக எடுத்துக்காட்டும் பாடல்களையும் நேயர்கள் கூர்ந்து படித்து அவற்றின் ஆழ்ந்த பொருள்களை ஓர்ந்துகொள்ள வேண்டும் என்னும் அவாவினால் இதற்கு இங்ஙனம் சிறிது எழுத நேர்ந்தது.

சானகிபால் கொண்டமையலால் உள்ளம்உருகி, உயராண்மை தளர்ந்து, உயிர் மறுகியுள்ளமையால் அது காமன் செயலாகக் கருதி அவனது வினையாண்மையை இராமன் இவ்வாறுவியந்தான்.

காமவேட்கையை விளைத்தலால் காமன்; மனத்துள் மதக் களிப்பை மூட்டலால் மன்மதன் என்க. இன்ன வண்ணம் காரணப்பெயர்கள் பல மாரனுக்கு இருக்கின்றன.

உயிர்களுக்கு இயல்பாயுள்ள காம இச்சையை உருவகப் படுத்தி அதற்கு ஒரு அதி தேவதையை அமைத்துக் காம தேவன் எனப் பேரிட்டு வில் அம்புகள் இணைத்துப் படை பரி வாரங்கள் விரித்து வீரப்பாடு தோன்ற வியந்து பாராட்டி வருவது நூல் வழக்கமாய் மிகவும் பெருகியுள்ளது.

காம நிலையமான இனிய பொருள்கள் யாவும் அவனுக்கு உரிமைகள் ஆயின. அவனுடைய தேர், தென்றல்; யானை, இருள்; குதிரை, கிளி; சேனை, இளம்பெண்கள்; வில், கரும்பு; நாண், வண்டு; அம்பு, மலர்; உடைவாள், தாழம்பூ; காளம், குயில்; குடை, சந்திரன்; கொடி, மீன்; முரசம், கடல்; என்க.

குறித்த பொருள்கள் காமம் கனிவிக்கும் இயல்பின ஆக லின் காமனுக்குச் சேமங்களாயின. இந்த மெல்லிய படைகளை யுடைய இவன் உலக முழுவதையும் எளிதே வெல்லுகின்றானே என்பது வியப்பு.

கரும்பும் சுரும்பும் அரும்பும் பொரும்படைக் காமர்வில்வேள்
இரும்பும் கரைந்துரு கச்செய்யு மால்இறும் பூதிதன்றே
விரும்பும் பெரும்புலி யூரெம்பி ரானருள் மேவிலொரு
துரும்பும் படைத்தழிக் கும்மகி லாண்டத் தொகுதியையே.
(சிதம்பரச் செய்யுட் கோவை, 74)

காமனது அதிசய ஆற்றலை விளக்கித் தில்லைப் பாமனைத் துதிசெய்த படியிது. இறும்பூது = வியப்பு. பெரும்புலியூர் = சிதம்பரம். இரும்பும் கரைந்து உருகும் என்றது அவனது அருந்திறல் நிலை அறியவந்தது. எவ்வளவு வைராக்கிய முடைய நெஞ்சமும் காமவேட்கையால் உலைமெழுகுபோல் உருகி நிலை குலையும் என்பதாம். ஆகவே அவனது அடலாண்மையைப் புகழ்ந்து பெருந்தவசிகளும் வியந்து போற்ற நேர்ந்தது.

பைந்தொடியார் ஆசைநோய் கெம்பீர
மனிதரையும் பதுமம் தன்னை
முந்திரவிக் கதிர்போல மிளிர்விக்கும்
கனலிடியும் முனைக்கூர் வாளும்

வெந்தஇருப் புப்பொறியும் எனக்கொடிய
மனவேட்கை மேருவொத்தோர்
சுந்தரஞானியர்தீரர் சூரரையெல்லாம்
இமைப்பில் துரும்பு செய்யும்.
(வாசிட்டம், வைராக்கிய, 69)

இந்தப் பாடல் சிந்தனைக்கு உரியது. சூரியன் எதிரே தாமரை நெகிழ்வதுபோல் மாதர் ஆசையால் மாதவர்களுடைய நெஞ்சங்களும் நெகிழ்ந்து இழிந்துபடும் என்றபடி. அவ் வுள்ளங்கள் தாமாகவே உருகி யோடும் என்பது உவமையால் அறியலாகும். இரும்பை ஒத்தவரையும் துரும்பு செய்யும் என்றதனால் மற்றவர் படும்பாடு சொல்லவேண்டாதாயிற்று. யாண்டும் அஞ்சாத மானவீரரும், என்றும் குன்றாத ஞானதீரரும் காமன் எதிரே கலங்கி இழிவர் என்பதாம்.

என்னை எய்து தொலைத்தானே! என்று இராமனை மலைத்தானே! காமன் பெருமையைப் பின்னர் வேறு பேசுவானேன்?

உருவம் இல்லாத அவ் ஒருவனைத் தவிர உருவமுடையவர் எவராயினும் அவரை யெல்லாம் ஒருங்கே பொருது தொலைப்பேன் என அவ் வுருவிலி ஒருமுறை பெருமிதத்தோடு பேசியிருக்கிறான். அவனுடைய ஆரவாரமான வீரமொழிகள் யாரும் அறிய உரியன. அடியில் வருவன.

### காமன் உரைத்தது

ஒத்தேறும் உருவமில்லாப் பிரமம்ஒன்று
மேஒழிய உருவம் உள்ளார்
எத்தேவ ராயினும்ஓர் பூங்கணையால்
தம்போதம் எல்லாம் நீங்கி
மத்தேறி யுடைதயிர்போல் மனம்சுழன்று
செயல்மறந்து மடவார் ஆசைப்
பித்தேறி இதமுரைத்தப் பேதையர்க்கும்
பேதையராய்ப் பின்செல்வாரால். (1)

தாதவிழ்பூங் குழற்கனிவாய்த் தத்தைமொழி
முத்துநகைத் தையலார்மேல்
காதலுறப் புரிசெயலே என்வடிவாய்
அவரவர்தம் கருத்துள் தோன்றி
ஏதம்விளை விக்கும்என்னால் இரதியால்
எனது சின்னத் தியல்பால் என்றும்
ஆதரவுற் றின்பமென்னும் அவ்வலையில்
எவ்வுலகோர் அகப்படாரே? (2)

அலையேறும் வாரிதிசூழ் அம்புவியில்
என்னைவெல்வார் ஆரே? செந்தீ
உலையேறு மெழுகெனமுத் தேவரும்பூங்
கணைக்காற்ருது துருகி வெள்ளி
மலையேறி ஞன்ஒருவன்; கடலேறி
ஞன்ஒருவன்; மறைந்து விண்ணின்
தலையேறி ஞன்ஒருவன்; ஆயினும்போய்
இன்னம் அங்குந் தவிர்ந்தார் கொல்லோ? (3)

வேதாவும் முகம்வெளுத்து, விண்டுவும்மார்
பகம்சிவந்து, விடைவல் லோனும்
பாதாதி கேசாந்தம் பாதியுடல்
கறுத்தமரர் பதியாம் வேந்தும்
போதாமல் முகத்திருகண் புறத்துமோர்
ஆயிரம்கண் புகுதப் பெற்றது
ஏதால்என் கணைதுரக்கில் ஈடுபடார்
எவரெவரே இலக்கா காரே? (4)

வேதமுத லாகியஎண் ணெண்கலையும்
வெண்கலைமான் வியந்து கேட்க
ஓதியுணர்ந் தும்பிறருக் குரைத்துமுயர்
பெரியோர்க்கும் உளவிவேகம்
காதளவும் அடர்ந்துகுழை கடந்துகுமிழ்
மறிந்துபொருங் கயலைச்சீறும்
பேதையர்கட் கணைபாயும் அவ்வளவே
யல்லாது பின்னும் உண்டோ? (5)

செங்குமுத வாயதரச் சேயிழையார்
நேயம்எவர் திறம்ப லாவார்?
அங்கவர்தம் பார்வையினல் யார்க்குமனம்
கரைந்துருகாது? அதுவுமன்றி
இங்கெனது பேர்ஞாலத் தெவ்வளவுண்
டவ்வளவும் எவரே மாயக்
கங்குல்விடிந் திருள்கழித்துக் கண்ணும்விழித்
துணர்வீதென்று காண வல்லார்? (6)
(மெய்ஞ்ஞானவிளக்கம், காமனதியர் வீரலாபச் சருக்கம், 3-8)

உலக நிலைக்குத் தலைவனை மோகன் என்னும் அரசன்முன் நின்று காமன் கூறியபடி யிது. இன்னும் பல பேசியுள்ளான். இங்கே கூறியவற்றுள் அவனது வீரிய நிலையை விளக்கியிருக்குந் திறனும், சாதுரியமும், ஓதுந்தோறும் உவகை விளைத்து வருகின்

றன. கவிகளில் குறித்துள்ள உருவகங்களைக் கருத்தூன்றி உணர்ந்தபொழுதுதான் பொருள் இனிது புலனாய்ப் பெருமகிழ்வு தரும். மாரனது வீரப் பிரதாபம் வியப்புற வந்தது.

பிரமன் திருமால் சிவன் என்னும் மும்மூர்த்திகளும் பெண் மையல்கொண்டு யாண்டும் பிரியாமல் பெருமோகிகளாயுள்ளனர். அங்ஙனம் அவரைக் கடுங்காமிகளாய் இருக்கும்படி தான் புரிந்திருப்பதாகத் தனது அருந்திறல் நிலையை அவன் வியந்து பேசியிருக்கிறான்.

வெண்ணிறமுடைய சரசுவதியை வேதன் முகத்திலும், செய்யவளான திருமகளை மால் மார்பிலும், பச்சை வடிவமான பார்வதியைச் சிவன் உடலிலும் ஆராக் காதலுடன் அணைத்துக் கொண்டுள்ளனர் என்பான் வெளுத்து,சிவந்து, கறுத்து என்றான். உரைகளின் பொருள் நயங்கள் யாவும் நுணுகி உணர வுரியன.

ஈண்டு அவன் குறித்திருக்கும் கருத்துக்களை யெல்லாம் கூர்ந்து நோக்கி நேர்ந்துள்ள நிலைகளை ஓர்ந்துகொள்ளவேண்டும்.

“தையலார்மேல் காதல் உறப் புரிசெயலே என் வடிவாம்” எனத் தனது உண்மையான உருவநிலையையும் செயல் இயல்களையும் அவன் இவ்வாறு உணர்த்தியிருக்கிறான்.

பெண் அவாவோடு பெருகி இயங்குகின்ற இந்த உலக இயக்கத்திற்குக் காமனே உரிமையாளன் என்பதாம்.

“யானை இரதம் பரியாள் இவையில்லை
தானும் அநங்கன் தனுக்கரும்பு—தேனார்
மலரைந்தால் வென்று வடுப்படுத்தான் மாரன்
உலகங்கள் மூன்றும் ஒருங்கு.” (தண்டியலங்காரம், 77)

ஒரு நிலையும் இல்லாத காமனுக்கு எல்லா உலகங்களும் எளிதாய் வசப்பட்டுள்ளன என இஃது உணர்த்தி நிற்றலறிக.

இத்தகைய பேராற்றலுடையவன் பாங்கு நின்று பூங்கணை எய்தமையால் இராமன் தூங்காமல் ஏங்கி யிருந்தான் என்க.

4. மதனனை இவ்வண்ணம் வியந்தவன் பின்பு நிலவை இகழ்ந்தான். வெளியே ஒளிசெய்து நின்ற சந்திரிகை காம தாபத்தை மிகுவித்து உள்ளத்தை வருத்தினமையால், “வெள்ளை வண்ணவிடம்” என்று வெறுத்து உரைத்தான். தூக்கம் வரா

மையால் வெளியே வந்து உலாவினன்; நிலாவை நோக்கினன் நெஞ்சம் உருகினன். அந்நிலையில் பேசினன் என்க.

## இராமனது சிந்தனை

பால்போன்ற இனிய நிலா மேலெங்கும் பரவி மிளிர மாளிகையுள்ளே இராமன் மாலுழந்து மறுகியிருந்தான்.

இங்ஙனம் இருந்தவன் இறுதியில் தனது மனநிலையைக் குறித்து தனியே இனிய ஒரு ஆலோசனை செய்யலானன். அந்த எண்ணங்களை எழுதிய வண்ண ஓவியம் அடியில் வருவது.

ஏகும் நல்வழி அல்வழி என்மனம்
ஆகு மோஅதற் காகிய காரணம்
பாகு போன்மொழிப் பைந்தொடி கன்னியே
ஆகும் வேறிதற்கு ஐயுற வில்லையே.
(மிதிலைக்காட்சி, 147)

உத்தமமான உயர்ந்த மனேதைத்துவம் இதில் உணர்த்தப் பட்டுள்ளது. ஆன்ம நேயமும் அகத்தூய்மையும் மேன்மக்கள் நிலைமையும் இங்கே விளங்கிநிற்கின்றன.

"என்னுடைய உள்ளம் எப்பொழுதும் நல்ல வழிகளிலேயே செல்லும்; தீயவழிகளில் யாதும் திரும்பாது; இது வரை வழுவாமல் தருமநெறியிலேயே ஒழுகிவந்த அது இன்று மாலை முதல் மால் மிகுந்து மறுகி யுழல்கின்றது; எவ்வளவு தேற்றியும் தேருமல் சுழல்கின்றது; கன்னிமாடத்தில் கண்ட அப் பெண்ணினிடமே பேராசை கொண்டு ஓயாமல் ஓடுகிறது. இங்ஙனம் ஓடுவதால் அம்மங்கை எவனொருவனுக்கும் உரியவளா யிருக்கமுடியாது; அவ்வாறு இருந்தால் என் நெஞ்சம் இவ்வாறு செல்லாது; ஆகவே அவள் கலியாணம் ஆகாத கன்னிகையாகவே மன்னியுள்ளாள்; இது உண்மை" என்று தனக்குள்ளேயே இராமன் எண்ணி முடிவு செய்தான். இவ்வுள்ளப் பான்மை உணர்வு சுரந்து தரும நிலையமாய்த் தழைத்து வந்துள்ளது. மனித வுலகம் புனிதம் அடைய இஃது ஓர் இனிய ஒளியாய் எழில் செய்து மிளிர்கின்றது.

"கன்னியே ஆகும்; இதற்கு ஐயுறவு இல்லையே" என்றதனல் தன் உள்ளம் துணிந்ததைத் தெள்ளத் தெளிந்த உண்மையாக இவ்வள்ளல் உறுதி செய்துகொண்டமை உணர வந்தது.

ஏகாரங்கள் துணிவும் தெளிவும் தோன்ற நின்றன.

வேறு என்றது தான் கருதியதற்கு மாறாக என்றவாறு. ஐயுறவு=சந்தேகம். இல்லையே என்ற தொனியில் உள்ளக் களிப்பும் உறுதியுண்மையும் துள்ளியுள்ளன.

பிறன் ஒருவனுக்கு மனைவி யாயிருந்தால் என்மனம் சிறிதும் விரும்பி யிராது என்று இராமன் உறுதி செய்துள்ளமையால் அந்தப் புனித மனத்தின் தனி மகிமை இனிது புலனும்.

தன்னைப்பற்றியும், தனது மனநிலையைக் குறித்தும் இப் புண்ணிய மூர்த்தி ஈண்டு எண்ணியிருக்கும் உண்மையை ஒவ் வொரு மனிதனும் செவ்வையாக எண்ணி வந்தால் இவ்வுலகம் எவ்வளவு புண்ணிய முடையதாய்ப் பொலிந்து விளங்கும்!

தான் அரசகுமாரன் ஆகலின் அவளை ஒரு அரச குமரியா கவே கருதினன். பாகு போல் மொழிப் பைந்தொடி என்பன கன்னிக்கு விசேடணங்களாய் வந்தன. தொடி=வளையல். வாயினிமையும் கையழகும் கருத நேர்ந்தது.

தூரநின்று பார்த்ததே யன்றிச் சீதையோடு யாதும் பேச வில்லை; அங்ஙனம் இருக்க வெல்லப் பாகுபோன்ற இனிய மொழியினள் என அக்கன்னியைக் குறித்துச் சொல்லலாமோ? இராமன் சொன்னதாகக் கவி கட்டியிருப்பது சுவை கெட்ட தாம் என இப்படி நவமான ஒரு நவை ஆராய்ச்சி மிகையாகத் தோன்றும்; தோன்றின் ஆன்ற அமைதியுடன் நிலைமைகளை ஓர்ந்து உணர்ந்து கொள்ளவேண்டும்.

முன்றில் அயல் நின்று கன்னிமாடத்தைக் கண்டபொழுது தோழிகளோடு சீதை பேசிய மொழிகள் சில இராமன் காதில் சிறிது விழுந்தன; அவ்வொலியினிமை உள்ளம் பதிந்திருந்த மையால் வெல்லப்பாகு என அதனை விழைந்து சொல்லலாயினன்.

"How silver-sweet sound lovers' tongues by night,
Like softest music to attending ears!"
(Romeo And Juliet II. 2)

"செவ்விய காதுகளுக்குத் திவ்விய கீதம் போல் காதலர் மொழிகள் இரவில் எவ்வளவு இனிமையா யுள்ளன!" என்று ரோமியோ என்டவன் தன் காதலிமொழியை உவந்து கூறியுள்ள தும் ஈண்டு உணரத் தக்கது. அன்பினல் இன்பம் அதிகமாயது.

மேலோர் யாண்டும் அல்வழி செல்லார்; நல்வழியே செல்வர்; அவர் உள்ளமே தெள்ளிய நீதிச் சட்டமாய்ச் சிறந்துள்ளது என்பதை இங்கே தெரிந்துகொண்டோம்.

என் மனம் என்றதிலுள்ள பெருமித நிலையை எண்ணியறியலாமே யன்றி யாரும் எளிதில் எழுதிவிட முடியாது.

தமது காவிய நாயகனது மன நலத்தையும் புனித நிலையையும் அதிவிநயமாகக் கவி இதில் வெளியிட்டிருக்கிறார்.

இராம வாசகமாய் இங்கு வந்துள்ளதுபோல் சாகுந்தலம் என்னும் வடமொழி நாடகத்தின் கதாநாயகன் வாக்கிலும் வந்திருக்கின்றது.

'' அஸம்ஸயம் க்ஷத்ர பரிக்ரஹ க்ஷமா
யதார்ய மஸ்யாம் அபிலாஷி மே மன:
ஸதாம்ஹி ஸந்தேஹ பதேஷு வஸ்துஷு
ப்ரமாணம் அந்த: கரணப்ரவ்ருத்தய: ''(சாகுந்தலம், 1-19)

'' என் மனம் இவளை இச்சிக்கின்றது; ஆதலால் ஐயமின்றி அரசரால் இவள் மணக்கத் தக்கவளே. ஒன்றில் ஐயம் தோன்றின் தங்கள் உள்ளமே சாட்சியாய் நின்று நல்லோர்க்கு உண்மையைத் தெளிவிக்கின்றது '' எனச் சகுந்தலையைக் கண்டு காதல் கொண்ட துஷியந்த மன்னன் தனக்குள்ளேயே இவ்வாறு உரையாடியிருக்கிறான்.

வடமொழியில் அதிமேதையாகிய காளிதாச மகாகவி குறித்துள்ள இதற்கும், நம் கவிக்கும் உள்ள ஒற்றுமை வேற்றுகள் உய்த்துணரத்தக்கன.

என் உள்ளம் இவளை விரும்புகின்றமையால் அரசனாகிய நான் மணந்துகொள்ளத் தக்கவளே என அம்மன்னன் கருதினான்.

நல்வழியே செல்லுகின்ற என் மனம் இன்று இவள்பால் சென்றமையால் எவரும் வரையாத புனிதமான கன்னியே என்று இக்கோமகன் எண்ணினான்.

குலத்தகுதியை வெளிப்போக்கில் அது குறித்து நின்றது; புண்ணியம் கனிந்த பரிசுத்த நிலையை உள்ளூற இது ஓர்ந்து கொண்டது. அது புறத்தின் வழியது; இது அகத்தின் ஒளியது. மணம் புரிதலை வெளிப்படையாக அது விரைந்து விளம்பியது.

அதைக் குறித்து யாதும் கூறுமல் அடக்கமாய் இது அமைந்து நின்றது. இதன் நயத்தகு தன்மையும், நாகரீகமும், அறப் பெருந் தகவும் வியத்தகு நிலையின.

அறமனை புகுமுன்னமே பிறர்மனை நோக்காத பேராண்மையாளன் என்பதைத் தன் தூய வாயால் அதிவிநயமாக உறுதி செய்துள்ள இராமனது சீலமும் செம்மையும் ஞாலம் அறிய வந்தன.

## இராமன் பள்ளிகொண்டது

இவ்வண்ணம் இப்புண்ணிய சீலன் இரவு இருபத்தைந்து நாழிகை வரையும் கண்ணுறங்காமல் பெண் மையலோடு பெருகி யிருந்தான். அதன்பின் அயர்ந்து உறங்கினான்.

சந்திரனும் மறைந்தான். திசைகள் முழுவதும் பரவி யிருந்த நிலவும் தேய்ந்தது. உதய காலம் தொடங்கியது.

கோசிகரும் இலக்குவனும் வழக்கப்படி அதிகாலையில் எழுந்தனர். இராமன் மாத்திரம் படுக்கையைவிட்டு இன்னும் எழுந்திருக்கவில்லை. தம்பி வந்து அருகே நின்று பார்த்தான். அண்ணன் அயர்ந்து உறங்குவதை நோக்கி அதிசயித்தான். சூரியன் உதயமாதற்கு ஐந்து நாழிகைக்கு முன்னமே என்றும் விழித்தெழுகின்றவன் அன்று அவ்வாறு படுத்திருந்தது அவனுக்கு வியப்பாயது. நாளும் விழிப்பு வருநேரமே இரவு விழி துயின்றுள்ளமையால் முறைப்படி எழுவது இயலாது போயது. வழி நடந்த களைப்பால் நேர்ந்த அயர்வு என்று கருதி இளையவன் அயலொதுங்கினான். மண்மணியான இவ்வண்ணல் பெண்மயலோடு இங்ஙனம் கண்ணயர்ந்து துயில விண் மணியான கதிரவன் கீழ்பால் கண் மலர்ந்தெழுந்தான். அந்த உதயகால வருணனைகள் அடியில் வருவன.

தையுமலர்த் தாரண்ணல் இவ்வண்ணம் மயலுழந்து தளருமெல்லை
சிதையுமனத் திடருடைய செங்கமல முகமலரச் செய்யவெய்யோன்
புதையிருளின் எழுகின்ற புகர்முகயானையினுரிவைப்போர்வைபோர்த்த
உதையகிரிளனுங்கடவுள் நுதல்கிழித்த விழியேபோல் உதயம்செய்தான்.
(மிதிலைக்காட்சி, 150)

கதிரவன் உதித்ததைக் குறித்துக் கவி இவ்வாறு உகித்து வந்திருக்கின்றது. பொருளை ஊன்றிப் பாராமலே பாட்டை

வாய்விட்டு இசையோடு படித்தாலும் உள்ளத்தில் ஓர் உவகையும் உற்சாகமும் ஒருங்கே தோன்றும். அழகிய சிறகுகளை விரித்து அன்னங்கள் மேலெழுந்து பறப்பதுபோல் மொழிகள் இன்னோசை தழுவி இனிதெழுந்து செல்கின்றன.

வெய்யோன் உதயம் செய்தான் என்பது செய்யுள் முடிபு. செய்ய என்றது அவனது உருவ நிலையும் ஒளியும் தெரியவந்தது.

சிவபெருமானுடைய நெற்றிக்கண்ணிலிருந்து புறப்பட்ட நெருப்புத் திரளைபோல் உதயகிரியின் உச்சியினின்று சூரியன் ஒளிசெய்து தோன்றினான் என்பதாம்.

நுதல்கிழித்த விழியை நுதலியது இங்கு நுணுகி நோக்க வுரியது. நெற்றியைக் கிழித்து வந்த அந்த விழி மன்மதனை அன்று அழித்தது; அவ் விழிபோல் உதித்த ஒளியும் இன்று இராமனது காமவேதனையை ஒழிக்க வந்தது என்பது குறிப்பு.

மதன விதனத்தால் மறுகி, மதிஒளியால் மதி ஒளிந்து மயங்கிக் கிடந்த இராமன் பகல்வரின் முனிவர் முதலானவர்களுடன் அளவளாவி ஆறுதலடைந்திருப்பன் ஆதலால் அவனது காமத்துயரம் நீங்கக் கதிரவன் தோன்றினான் என்பார் மனத்து இடர்உடைய, கமலமுகம் மலர வெய்யோன் உதயம் செய்தான் என்றார். அவ்வுதய தினம் இதயம் மகிழ உயர் மணமாய் இசைந்துள்ளமையை இங்ஙனம் உய்த்துணர வைத்தார்.

சிதையும் மனம் என்றது காமவேட்கையால் நைந்து நிலை குலைந்துள்ள நெஞ்சம் என்றவாறு. அகமும் முகமும் மலர அலரவன் மலர்ந்தான் என்றது அவன் வரவால் விளையும் பயனறிய வந்தது.

பெண் மயலோடு கண்முகிழ்த்திருந்த இராமனது தாமரை மலர் போன்ற திருமுகம் மலர உதித்தான்; உதிக்கவே உலகிலுள்ள தாமரைகள் எல்லாம் உவந்து மலர்ந்தன; அம்மலர்ச்சி நிலையை மகிழ்ச்சி ததும்ப உரைத்துள்ளார்.

பண்டுவரும் குறிபகர்ந்து பாசறையிற் பொருள்வயினிற் பிரிந்துபோன
வண்டுதொடர் நறுந்தெரியல் உயிரனைய கொழுநர்வர மணித்தேரோடும்
கண்டுமனம் களிசிறப்ப ஒளிசிறந்து மெலிவகலும் கற்பினார்போல்
புண்டரிக முகமலர அகமலர்ந்து பொலிந்தனபூம் பொய்கை எல்லாம்.
(மிதிலைக்காட்சி, 152)

பொருள் தேடும் பொருட்டுப் பிரிந்துபோன கணவர் திரும்பி வந்த பொழுது அவரைக் கண்டு மகிழ்கின்ற மனைவியர் முகங்கள் போல் நீர் நிலைகளிலுள்ள தாமரை மலர்களெல்லாம் கதிரவனை நோக்கி மலர்ந்து நின்றன என்பதாம்.

சூரியன் தோன்றவே தாமரை மலர்வது இயல்பு; அந்த இயற்கை உரிமையால் தாமரைநாயகன் என அவனுக்கு ஒரு நாமமும் எய்தியது. நளினமான அந்த நாயகி நாயக நேயங்களை நளினமுடன் தழுவி விழுமிய பதிவிரதைகளுடைய அன்பு நிலையை இன்ப நலம் கனிய இவ்வனம் விளக்கியருளினர்.

புண்டரிகம்=தாமரை. பாசறை=போர் மேல் சென்ற வீரர்கள் தங்கியிருக்கும் இடம். இதனைப் பாடிவீடு என்பர்.

உயிர் அனைய கொழுநர் என்றது பிராணநாயகர் என்றபடி. உழுவலன்பின் உரிமை யுணர வந்தது. காதல் நலம் கனிந்து ஆதரவுடன் மனை வாழ்க்கை நடத்துங்கால் தொழில்முறைகளால் கொழுநன் அயல் அகல நேரும். அரச காரியமாய்ப் பகைவர் மீது போர்மேல் செல்லல்; தமக்குப் பொருள் தேடப் புகுதல், கல்வி யீட்டம் கருதிப் போதல் முதலியனவாம். அங்ஙனம் செல்லுங்கால் இவ்வளவு காலத்துள் வந்து விடுவேன் என்று காதலிகளிடம் காதலர் உறுதிகூறிச் செல்வது வழக்கம் ஆகலின் “வரும் குறி பகர்ந்து போன கொழுநர்” என்றார்.

பண்டு என்றது முன்னம் பிரியும் பொழுது என்றவாறு.

போர்மேல் பிரிவது, வீரப்பாடுடையது; ஆண்மைத் திறத்தை நிலை நிறுத்துவது; தன்னலம் பாராமல் பிறர் நலம் பேணுவது; அரசுக்கும், குடிகளுக்கும், நாட்டிற்கும், தனக்கும் நல்ல கீர்த்தியை நாட்டுவது; ஆதலின் தலைமகன் பிரிவுள் அதன் தலைமை தோன்ற முதலில் வைத்தார். வீரத்தை யாண்டும் முதன்மையாகப் பாராட்டி வருவது நம் கவியின் இயல்பு; அதனை இடங்கள் தோறும் பலவழிகளிலும் பார்த்து வருகின்றோம்.

பகைமேல் சென்று பாசறையில் தங்கியிருந்த வீரர் வசந்த காலம் வரவும் தம் துணைவிகளை நினைந்து ஊரை நோக்கி விரைந்து வருவர்; அவ்வுரிமையால் பாசறைப் பரிவு தீர்க்கும் பங்குனிப் பருவம் என அதற்கு இங்கிதமான ஒரு பெயரும் வந்தது.

காசறு துறவின்மிக்க கடவுளர் சிந்தை போல
மாசறு விசும்பின் வெய்யோன் வடதிசை அயணமுன்னி
ஆசற நடக்கு நாளுள் ஐங்கணைக் கிழவன் வைகிப்
பாசறைப் பரிவு தீர்க்கும் பங்குனிப் பருவம் செய்தான்.
(சீவகசிந்தாமணி, 851)

குறிபகர்ந்து பண்டு பிரிந்துபோன காதலர் குறித்தபடியே குறித்த காலத்தில் வந்து காதலிகளைக்கண்டு ஆதரம் புரிவர் என்பது இதனால் அறியலாகும். பரிவு=பிரிவுத் துயரம். கடவுளர் என்றது முனிவர்களை. மாதவர் மனம்போல் ஆகாயம் களங்கமின்றி விளங்கி யிருந்தது என்பதாம்.

குறித்த நாளில் கொழுநர் வரவில்லை யாயின் மனைவியர் மறுகி அயர்வர். மாலை முதலிய காலங்களைக் கண்டு சாலவும் வருந்திப் புலம்புவர். அந்திப்பொழுதின் காட்சியும், அதனை அவர் நிந்தித்து நிற்கும் நிலையும் கலை யுலகில் பல சிந்தனைகளை விளைத்து வந்துள்ளன. ஒன்று அடியில் வருவது.

கோடிய கோலினன் செருமுகம் போலக்
கனைகதிர் திருகிக் கல்சேர்ந்து முறைபுகப்
பதினெண் கிளவி ஊர்துஞ்சியபோல்
புட்குலம் பொய்கை வாய்தாட் கொள்ள,
வேள்சரத் துடைகுநர் கோலம் நோக்கி
இருள்மகள் கொண்ட குறுநகை போல
முல்லையும் மௌவலும் முருகுயிர்த் தவிழத்,
தணந்தோர் உளத்தில் காமத் தீப்புக,
மணந்தோர் நெஞ்சத்து அமுத நீர்விட,
அன்றில்புற் சேக்கைபுக்கு அலகுபெடை அணைய,
அந்தணர் அருமறை அருங்கிடை அடங்க,
முதிர்கனி மூலம் முனிக்கணம் மறுப்பக்,
கலவையும் பூவும் தோள்முடி கமழ
விரிவலை நுளையர் நெய்தல் ஏந்தித்
துத்தம் கைக்கிளை அளவையின் விளைப்ப,
நீர்அர மகளிர் செவ்வாய் காட்டிப்
பசுந்தாள் சேக்கொள் ஆம்பல் மலரத்,
தோளும் இசையும் கூறிடும் கலையும்
அருள்திரு எழுத்தும் பொருள்திரு மறையும்
விரும்பிய குணமும் அருந்திரு உருவும்

முதல்எண் கிளவியும் விதமுடன் நிரையே
எட்டும ஏழும் சொற்றன ஆறும்
ஐந்தும் நான்கும் அணிதரு மூன்றும்
துஞ்சலில் இரண்டும் சொல்லரும் ஒன்றும்
ஆருயிர் வாழ அருள்வர நிறுத்திய
பேரருட் கூடல் பெரும்பதி நிறைந்த
முக்கட் கடவுள் முதல்வனை வணங்கார்
தொக்கதீப் பெருவினை சூழ்ந்தன போலவும்,
துறவால் அறனுல் பெறலில் மாந்தர்
விள்ளா அறிவின் உள்ளமும் என்னவும்,
செக்கர்த் தீயொடு புக்கநன் மாலை!
என்உயிர் வளைந்த தோற்றம் போல
நாற்படை வேந்தன் பாசறை
யோர்க்கும் உளையோ? மனத்திறன் ஓதுகவே. (கல்லாடம், 39)

இந்தப் பாடலில் அடங்கியுள்ள பொருள் நயங்களை உரிமையோடு ஊன்றி நோக்கின் அரிய பல நலங்களை அறிந்து கொள்ளலாம். நமது தமிழ் மொழியுள் தழைத்து வந்துள்ள இலக்கியப் பண்புகளின் சீவநாடிகளை ஆவலுடன் நாம் உணர்ந்து கொள்ளவேண்டும். யாண்டும் நீதி நலங்களை நிறைத்துள்ளன.

பிரிவாற்றுமல் வருந்தியுள்ள ஒரு தலைமகள் அந்திப் பொழுதை நோக்கி, ''ஏ மாலையே! அபலை ஆகிய என்னை வளைந்து கொல்லுகின்றாயே! சொன்னபடி வந்தருளாமல்யோசனையின்றிப் பாசறையில் இருக்கும் அவ்வீரரை வளைத்து உன் தீரத்தைக் காட்டி அறிவூட்டி இங்கே அழைத்து வாராமல், வீணே எரிமூட்டிப் பெண் கொலை புரிகின்றாயே! இது பெரும் பாவம் அல்லவா?'' என்று உள்ளம் கனன்று சொல்லாடிய படி யிது. அகப்பொருளின் இயல்முறையில் இது பொழுதோடு புலம்பல் என்னும் துறையாம்.

சிறிய இத்துறையைக் கருவியாக வைத்துக்கொண்டு எவ்வளவு உறுதிநலங்களைக் கல்லாடர் இதில் உணர்த்தி யிருக்கிறார்! பலமுறையும் படித்துக் கவியை மனனஞ் செய்துகொண்டு கருத்துக்களைக் கருத்தூன்றித் துருவிப் பார்த்தால், அறிவின் சுவை அருவியாய்ப் பெருகி எழுவதை அனுபவித்து மகிழலாம்.

தோள், எட்டு; இசை, ஏழு; சாத்திரங்கள், ஆறு; மந்திர எழுத்து, ஐந்து; மறை, நான்கு; குணம், மூன்று; உருவம், இரண்டு; பிரணவம், ஒன்று; என எண் அலங்காரம்பட இசைத்தருளினர். இவற்றை ஆருயிர்கள் வாழ அருளுடன் நிறுத்திய பேரருளாளன் நுதல் கிழித்த விழி யுடைய முதல்வன் என்பதாம்.

அவனை வணங்காதார் தீவினைபோல மாலை வந்து சூழ்ந்தது; அதனால் மறுகிப் புலம்பினள் என்க. பிறவும் ஓர்ந்து கொள்க.

உழுவலன்புடன் இவ்வாறு பிரிவில் உருகியுள்ள மகளிர் கொழுநர் வரவே பெருமகிழ்ச்சி அடைவர் ஆதலால் கதிர் கண்டு மலர்ந்த கமலங்களுக்கு அவர் இங்கு உவமையாய் வந்தனர்.

அக்கதிரவன் உதிக்கும்பொழுது உலகில் நிகழ்ந்த காட்சிகளை இனிக் காண வருகின்றோம்.

எண்ணரிய மறையினொடு கின்னரர்கள் இசைபாட, உலகம் ஏத்த,
விண்ணவரும் முனிவர்களும் வேதியரும் கரம்குவிப்ப, வேலைஎன்னும்
மண்ணுமணி முழவதிர, வானரங்கின் நடம்புரிவாள் இரவி யான
கண்ணுதல் வானவன்கனகச்சடைவிரிந்தால்என விரிந்தகதிர்கள்எல்லாம்
(மிதிலைக் காட்சி, 153)

உதய காலத்தில் சூரியனிடமிருந்து சிவந்த கிரணங்கள் பரந்து விரிந்த நிலையை உரைத்தபடியிது. இதில் குறித்துள்ள செயல் இயல்கள் கூர்ந்து கவனிக்கத் தக்கன.

சிவபெருமான் ஆனந்தத் தாண்டவம் புரிகின்ற ஓர் அற்புதக் காட்சியைக் கவி இதில் அதிசயமாகச் சித்திரித்திருக்கின்றார். நாட்டியத்திற்குப் பக்கவாத்தியங்கள் தக்க வகையாக அமைக்கப்பட்டுள்ளன. சுதி கூட்டிச் சதி காட்டியுள்ளார்.

சுருதியோடு தாளம் தழுவிக் கின்னரர்கள் இசைபாட, ஆழி முழக்கம் மத்தளம் போல் ஒத்து முழங்க, உலகு உயிர்கள் யாவும் உவந்து நோக்கி வணங்கி நிற்ப, அமரர் முதல் அனைவரும் அதிசய பரவசராய்த் துதிசெய்து தொழுது போற்ற, ஆகாயமாகிய அரங்கிலே நடனம் புரிகின்ற சிவபெருமானைச் சூரியனை இங்கே உருவகம் செய்திருக்கிறார். வாள் இரவி ஆன கண்ணுதல் என்றது சோதிச் சுடர்ப் பிழம்பாய் ஒளிரும் அந்த ஆதிமூலப்பொருளின் அற்புத நிலை கருதி. இரவி இறைவன் என விளங்கினன்.

இசைபாடல், உலகம் ஏத்தல் முதலியன கதிரவன் உதயத்தில் இயல்பாக நிகழ்வன; அவை, ஆடலுக்கு இசைவாய் ஈண்டு இயைந்து நின்றன. கனக் சபையில் நடனத் திருக்கோலத்தோடு அருள்செய்து நிற்கும் நடராச மூர்த்தியை நினைவில் வைத்துக் கொண்டு இது வரையப்பட்டது.

அகில வுலகங்களும் தனக்குத் திருமேனியாக வுடைய பிரமாண்ட நாயகன் தில்லையில் சிறிய அம்பலத்தில் நடித்துள்ளது அரிய செயல்; அவனது ஆடலுக்கு எங்கும் எல்லையில்லை என்பதை இங்கே நன்கு சொல்லியிருக்கிறார்.

வேதண்ட மேபுயங்கள் விண்ணே திருமேனி
மூதண்ட கூடமே மோலியாம்—கோதண்டம்
ஒற்றைமா மேரு உமாபதியார் நின்றாடப்
பற்றுமோ சிற்றம் பலம். (சிதம்பர மும்மணிக்கோவை, 9)

இறைவனது உருவ நிலையைக் குறித்துக்காட்டி இதில் வினவியிருக்கும் அழகைப் பார்க்க. வேதண்டம்=மலைகள்.

உலகமெல்லாம் இனிது இயங்கத் தனி நடிக்கும் பரமன் என்க. நடிக்கும்பொழுது சிவந்த சடை அயலெங்கும் பரந்து நிற்கும் ஆதலால் திசைகள்தோறும் பரவியுள்ள செவ்வியகிரணங்களுக்கு அது உவமையாயது.

சூரியனைச் சிவபெருமானாகவும், அவனிடமிருந்து விரிந்து பரந்துள்ள செங்கதிர்களை அப்பரமனுடைய செஞ்சடையாகவும் உருவகம் செய்து உதய நிலையை இவ்விதம் உணர்த்தியருளினார்

விரிகின்ற ஞாயிறு போன்றது மேனி, அஞ்ஞாயிறு சூழ்ந்து
எரிகின்ற வெங்கதிர் ஒத்தது செஞ்சடை, அச்சடைக்கீழ்ச்
சரிகின்ற காரிருள் போன்றது கண்டம், அக்காரிருட்கீழ்ப்
புரிகின்ற வெண்முகில் போன்றுளதால் எந்தை ஒண்பொடியே.
(பொன்வண்ணத்தந்தாதி, 26)

கண்ணுதற் கடவுளது மேனி, சடை, கண்டம், நீறுகளைக் குறித்துக் கூறிய படியிது. சேரமான்பெருமாள் நாயனார் என்னும் பெரியார் பாடிய பாசுரம். இதன் சொல்லும் பொருளும் அணியமைதியும் நம் கவியுள் வந்து சுவை சுரந்துள்ளன.

மாயிரு ஞாலத் துயிர்காண வானரங்கில்
பாயிருள் என்னும் படாம்வாங்கிச்—சேய்நின்று
அறைந்தா ரணம்பாட ஆடிப்போய் வெய்யோன்
மறைந்தான் குடபால் வரை. (நளவெண்பா, சுயம்வர 98)

உலகம் ஏத்த, மறையினெறி இசைபாட வானரங்கில் நடம் புரி இரவி எனக் குணபால் உதித்து வந்த நிலையை நம் கவி குறித்தது; அங்ஙனம் ஆடி நின்ற வெய்யோன் குடபால் மறைந்தான் என அதனையே தொடுத்து வரைந்து கொண்டு இது முடித்திருக்கிறது. கருத்தும் பொருளும் குறிப்பும் தொடர்பும் கூர்ந்து நோக்கத் தக்கன. குடபால்=மேற்குத் திசை.

முன்னே குறித்த நாயனார் கம்பருக்கும், புகழேந்திக்கும் முந்தியவர். ஆகவே மேனி, ஞாயிறு; சடை, கதிர்; கண்டம், காரிருள் என்று காட்டியருளிய அக் காட்சியே இவ் இருவருக்கும் இவ்வாறு உருவகிக்க உதவி செய்துள்ளது என்பது உணரலாகும். ஒத்த வகையிலுள்ள நிலைகளை உய்த்துணர்ந்து கொள்க.

நுதல் கிழித்த விழி, கண்ணுதல் வானவன் என இறைவனது நெற்றிக்கண்ணை இருமுறை சுட்டியது, இரவும் இராமனது காம தாபமும் ஒருமுகமாய் நீங்க நேர்ந்துள்ளமையை ஓர்ந்து மகிழ என்க. நுதல்=நெற்றி. அதில் ஓர் அதிசயமான கண்ணை உடையவன் ஆகலான் கண்ணுதல் வானவன் என்றார்.

காமர் உயிர்செகுக்கும் கண்ஒன்றே; காமருசீர்
மாதர் நலன்அழிக்கும் கண்ஒன்றே; மாதருக்கு
இன்னா இரவுஒழிக்கும் கண் ஒன்றே; இந்நிலத்தில்
தன்னேர் இலாதான் தனக்கு. (சிதம்பரச்செய்யுட் கோவை, 17)

பரமனது மூன்று கண்களின் நிலைகளைக் குறித்து வந்துள்ள இதன் அழகை ஊன்றிப் பாருங்கள். செகுத்தல்=அழித்தல்.

மன்மதனை உயிர் அழிக்கும் கண் என்றது நுதல் விழியை. காமர் எனப் பன்மையில் உரைத்தது இகழ்ச்சிக் குறிப்பு. பிரிவில் மறுகியுள்ள மகளிரை இரவில் சந்திரன் வருத்துவான்; அந்தத் துயரமான இரவைச் சூரியன் வந்து நீக்கி அருளுவான்; இந்த இருவரும் இறைவனுக்கு இரண்டு கண்களாயுள்ளனர் என்க.

காதலில் கண்ணூன்றிக் காமவேட்கையால் கலங்கியுள்ள மக்களுக்கு முக்கண்களும் ஒக்க நின்று உதவிபுரிந்தருளும் என உணர்த்தி அப்பெருமானது பரம கருணையை விளக்கிய படியிது.

காம தகனனாய் யாண்டும் இங்ஙனம் ஏமம் செய்துள்ளமையால் ஈண்டு இன்னா இரவு நீங்க எழுந்துள்ள இனிய இரவியாகக் கண்ணுதலை எண்ணி இவ்வண்ணம் நமக்குக் காட்டியருளினார்.

கதிர் பரந்து வெளியே விரிந்த நிலையைக் கண்டோம்; இனி இராமன் துயில் எழுவதைக் காண்போம்.

கொல்லாழி நீத்தங்கோர் குனிவயிரச் சிலைதடக்கை
   கொண்ட கொண்டல்
எல்லாழித் தேரிரவி இளங்கரத்தால் அடிவருடி
   அனந்தல் தீர்ப்ப
அல்லாழிக் கரைகண்டான் ஆயிரம்வாய் மணிவிளக்கம்
   அழலும் சேக்கைத்
தொல்லாழி துயிலாதே துயராழி நெடுங்கடலுள்
   துயில்கின் றானே. (மிதிலைக்காட்சி, 154)

இராமன் பள்ளிகொண்டுள்ள நிலையைக் குறித்து வந்துள்ள இப்பாடல் உள்ளம் கொண்டு எவரும் உவகையுற எழுந்தது. சொல்லோடு பொருள் தொடர்ந்தோடி, நல்ல கலை நயங்கள் நன்கு சுரந்து மெல்லோசையோடு மேவி மிளிரும் இப்பாவின் சுவை தேவின் சுவையில் செழித்து வந்துள்ளது.

திருமால் தனது திவ்விய சக்காயுதத்தை நீக்கிவிட்டு ஒரு வில்லைக் கையில் ஏந்தி இராமன் எனச் செல்லப் பேர் தாங்கி ஈங்கு எழுந்தருளி யுள்ளான் என்பார் ஆழிநீத்து ஓர் சிலை கொண்ட கொண்டல் என்றார்.

கொண்டல் = மேகம். நீரைக் கொண்டிருப்பது என்பதாம். உள்ள நீர்மையும் உருவ நிலைமையும் உதவி நலனும் உணர வந்தது. கொண்ட கொண்டல் என்றது கண்ட கண் என்பதுபோல் சிலையோடு அதற்குள்ள உரிமை தெரிய நின்றது. இது அன்பு கனிந்த அருமை வாசகம்.

கொடிய அசுரர் முதலிய தீயோரைப் படுநாசம் செய்துள்ளமையால் கோல் ஆழி என்றார். கொலை நிலையைக் குறித்தது அலகில் ஆற்றலுடையதாய் அகிலமும் ஆளும் அதன் தலைமை தெரிய. அல்லன களைந்து நல்லன காத்துள்ள நலம் குறித்தபடியிது.

அத்தகைய வெல்லாழியான் இப்பொழுது ஓர் வில்லாளியாயினன் என்றது பொல்லாதாரெல்லாரையும் போக்கி ஒழித்து நல்லோரை நன்குபேண இங்கு வந்துள்ளமை புலனாய் நின்றது.

எல்லாம் வல்ல வில்லாளனை அவ்வல்லாளன் இங்கே ஒரு நல்லாளைக் கண்டு பட்டுள்ள பாட்டை இனிச் சொல்ல வருகிறார்.

இரவி இளம் கரத்தால் அடி வருடி அனந்தல் தீர்ப்ப

என்றது உளங்கூர்ந்து நோக்கி உவந்துகொள்ள உரியது.

எப்பொழுதும் இரவி எழுமுன் எழுகின்ற இராமன் அன்று விடிந்து மூன்று நாழிகையாகியும் விழிதிறவாமல் கிடந்து உறங்கினன் என்பதை இங்கே தெளிவாக நாம் உணர்ந்துகொள்ளுகின்றோம். காலநிலை கருமநிலையால் காண வந்தது.

உதய காலத்தில் சூரியனிடமிருந்து தோன்றிய கிரணங்கள் சாளர வழியாகப் பாய்ந்து மாளிகையுள்ளே படுத்திருக்கிற இராமன்மீது தோய்ந்தன; தெற்கே தலை வைத்துப் படுத்திருந்தமையால் கீழ்புறம் சன்னல் வழி புகுந்த கதிர்கள் அவன் கால்களில் படிந்தன; அக்காட்சி இங்கே வருணிக்கப்பட்டுள்ளது.

சிவந்த கிரணங்கள் பசிய மேனியனான இராமனது அடிகளில் பரவின; அங்ஙனம் பரவியது தனது இனிய கைகளால் மிருதுவாகத் தடவி விழிப்பை உண்டாக்கி இரவி அவனை எழுப்பியதுபோல் இருந்தது என்பதாம்.

அரசர் முதலிய பெரியோர்கள் துயிலுங்கால் அவசியமாக எழுப்ப நேர்ந்தால் மிகவும் உரிமையானவர்கள் அருகு வந்து மிருதுவாகப் பாதங்களைத் தொடுவது வழக்கம் ஆகலின் அந்த மரியாதை முறைமை இங்கே இனிதாகத் தெரியவந்தது.

தன் குலத்தில் பிறந்த கோமகன் காலம் கடந்து கண்ணுறங்குவதைக் கண்டு கதிரவன் கண்ணோடி எழுப்பினன் என்பதாம். வருடுதல் = மிருதுவாகத் தடவுதல். காலையில் மிகவும் குளிர்மையாய் ஒளிமிகுந்து இனிமை சுரந்துள்ளமையால் இளங்கரங்கள் எனக் கதிர்கள் வழங்க வந்தன.

கைகளை நீட்டி மக்கள் காரியம் புரிவதுபோல் சூரியனுக்குக் கதிர்கள் அமைந்துள்ளன என்க. இரவியும் அடி வருடினன் என்றமையால் இராமனது பராபத நிலைமை கருத வந்தது.

"நெருநல் கண்ட திருமகள் இன்று உனக்கு உரிய மனைவியாம்; வில்லும் கையுமாய் வந்த காரியத்தை விழைந்து பார்;

அயர்ந்து உறங்காதே; விரைந்து எழுந்தருள்'' என்று உரிமை கூர்ந்து பகர்ந்து பாதம் பிடித்ததுபோல் இருந்தது என்பார், ''அடி வருடி அனந்தல் தீர்ப்ப'' என்றார். அனந்தல்=உறக்கம்.

மேலே வெயிலடிக்கும் வரையும் தூங்கிக்கிடந்தான் என்பதை இப்படிச் சுவையாகச் சொல்லியிருக்கிறார்.

அல் ஆழிக் கரைகண்டான் என்றது இரவாகிய கடலை நீந்தி ஒருவாறு முடிவு கண்டான் என்றவாறு. காமதாபத்தால் கலங்கியுள்ளவர்க்கு இரவு நெடிதாகத் தோன்றும் ஆதலால் அது கடல் என நின்றது. அந்நெடிய இரவு கழிந்து, விடிந்து இரவி எழுந்தும், இவன் எழவில்லை என்றபடி. பண்டு துயின்ற பாயலை இங்கே கொண்டு கூறியது இவனது பழையநிலையை நன்கு கண்டுகொள்ள.

திருமாலுக்குப் படுக்கையாய் அமைந்துள்ள அரவம் ஆயிரம் தலைகளை யுடையது; அத்தலைகள் தோறும் உயர்ந்த மணிகள் ஒளிவீசி யுள்ளமையால் ''ஆயிரம் வாய் மணி விளக்கம் அழலும் சேக்கை'' என்றார். அழலல்=சுடர் விட்டு ஒளிர்தல், சொலித்தல்.

பேரறிவுடைய ஆதிசேடனே ஆதிமூலப் பொருளுக்கு ஆதரமீதூர்ந்து ஆதரவா யமைந்துள்ளான்; அப் பணி அம்மணி வண்ணனுக்குப் பலவகை நிலைகளிலும் பணி புரிந்து வருகின்றது.

> ''சென்றால் குடையாம்; இருந்தால் சிங்காசனமாம்;
> நின்றால் மரவடியாம்; நீள்கடலுள்—என்றும்
> புணையாம் மணிவிளக்காம் பூம்பட்டாம் புல்கும்
> அணையாம் திருமாற்கு அரவு.'' (முதல் திருவந்தாதி, 53)

எனப் பொய்கை ஆழ்வார் கூறியுள்ளதும் ஈண்டு அறியத் தக்கது. இதில் ஒளிர்கின்ற மணிவிளக்கம் நம் கவியுள் மிளிர்கின்றது. பழமையின் கிழமை உணரநின்றது.

பாற்கடலில் பாம்பணைமேல் ஆதியில் பள்ளிகொண்டிருந்த பெருமாள் அதைவிட்டு ஈண்டு வந்து ஒரு மாதை உள்ளிப் பெருமால்கொண்டு மீண்டும் வேறொரு கடலில் உறங்குகின்றானே என்பார், ''தொல் ஆழி துயிலாதே துயர் ஆழி நெடுங் கடலுள் துயில்கின்றானே'' என்றார். இந்த இறுதியடியில் உரைகள் உல்லாசமாய் வந்துள்ளன. கவியின் இருதயமும் கெழுதகைமையும் மொழிகள் எங்கணும் பரவி உழுவலன்பினை உணர்த்தி நிற்கின்றன. சொல்லில் உள்ளம் ஒளிவிட்டுள்ளது.

துயர் ஆழி என்றதனால் அளவிடமுடியாத விரகவேதனையால் அக்குலமகன் அவ்விரவு உளம் மறுகியுள்ளமை புலனாயது.

தொல்லாழியிலேயே துயின்றிருந்தால் இந்தத் துயராழியில் துயில நேர்ந்திராதே என்பதாம். துயில்கின்றானே! என்பதில் ஏகாரம் அவ்வுறக்கத்தை நினைந்து இரக்க மீதூர்ந்து வந்தது.

காலை வெயில் காலை வருடியும் ஆள் எழவில்லை என்று தெரிந்தோம்; அதன்பின் எழுந்த நிலைமையும், நிகழ்ந்த முறைகளும், நடந்த வகைகளும் தொடர்ந்து பார்ப்போம்.

ஊழிபெயர்ந் தெனக் கங்குல் ஒருவண்ணம் புடைபெயர உறக்கம் நீத்த
சூழியா னையினெழுந்து தொன்னியமத் துறைமுடித்துச் சுருதி யன்ன
வாழிமா தவற்பணிந்து மனக்கினிய தம்பியொடும் வம்பின் மாலை
தாழுமா மணிமௌலித் தார்ச்சனகன் பெருவேள்விச் சாலை சார்ந்தான்.

முடிச்சனகர் பெருமானும் முறையாலே மறைவேள்வி முற்றிச் சுற்றும்
இடிக்குரலின் முரசியம்ப இந்திரன்போல் சந்திரன்தோய்கோயில்எய்தி
எடுத்தமணிமண்டபத்துள்எண்தவத்துமுனிவரொடும்இருந்தான்பைந்தார்
வடித்தகுனிவரிசிலைக்கை மைந்தனும் தம்பியும்மருங்கின் இருப்பமாதோ.

இருந்தகுலக் குமரர்தமை இருகண்ணின் முகத்தழகு பருக நோக்கி
அருந்தவனை அடிவணங்கி யாரைஇவர்? உரைத்திடுமின்அடிகள்!என்ன
விருந்தினர்கள் நின்னுடைய வேள்விகாணியவந்தார் வில்லும் காண்பார்
பெருந்தகைமைத்தசரதன்றன் புதல்வர்என அவர்தகைமைபேசலுற்றான்.
(மிதிலைக்காட்சி, 155-157)

வெயில் எழும் வரையும் துயில் எழாது இருந்த இராமன் பின்பு விரைந்து எழுந்து நீர் ஆடி நியமம் முடித்து விசுவாமித்திரரை அணுகிப் பணிவுடன் இருந்தான். அன்புடைத் தம்பியும் அருகு அமர்ந்தான். அதன்பின் அரசன் வந்து வரிசையுடன் வேண்ட அனைவரும் யாகசாலையை அடைந்தனர்.

ஒரு மாத காலமாகச் சனக மன்னன் செய்துவந்த அரிய ஒரு வேள்வி அன்று பூர்த்தி யாயது. அதனை இனிது முடித்துப் பெரு மகிழ்வுடன் எழுந்து சிறந்தமணிமாளிகையை அடைந்தான்.

இந்திரன் போல் சந்திரன் தோய் கோயில் எய்தி என்றதனால் சனகனது மாட்சியும், அந்த அரச மாளிகையின் காட்சியும் அறியலாகும். உரிமைச் சுற்றமும் சிற்றரசரும் உவந்து போற்ற அக் கோமகன் அங்கே கொலு வீற்றிருந்தான். அயலே கோசிகர்

உயர்ந்த ஆதனத்தில் அமர்ந்தார். இராமனும் தம்பியும் உரிமை மீதூர்ந்து, அருகே மருவி யிருந்தனர்.

அதிசய நிலையில் அமைந்துள்ள அவ்விழுமிய மணிமண்டபம் எழில்மிகுந்து அன்று புதியமகிமையோடு பொலிந்துவிளங்கியது.

## சனகன் இராமனை அறிய விழைந்தது

இராச சபையில் தலைமையாக நிலவியிருந்த சனக மன்னன் அயலிருந்த இராமனை அடிக்கடி உவந்து நோக்கினன். இக்குல மகனது அமைதி, இராச கம்பீரம், இளமை, எழில், வீரப்பொலிவு முதலியன அவனது உள்ளத்தைக் கவர்ந்தன. விசித்திரமான உலகக் காட்சிகள் எதையும் விழைந்து பாராத உயர்ந்த ஞான நலங்களையுடைய அவன் இக் குழகன்பால் உழுவலன்பு மண்டி உளமிக உருகினன். அவ்வாறே இளையவன் மீதும் விழைவு மீதூர்ந்தது. மாறி மாறி ஆர்வமுடன் கண்டு ஆராமை கொண்டான். காணும்தோறும் களிபேருவகை பெருகி எழுந்தது.

"இருந்த குலக் குமரர்தமை இருகண்ணின் முகத்து அழகு பருக நோக்கி" என்றதனால் சனகன் இவரைப் பார்த்துள்ள பார்வையும் ஆர்த்தி நிலையும் அறியநின்றன. இனம் அறியாமலே இவ்வாறு மனம்மிக உருகி மகிழ்ச்சி மீதூர்ந்தான்.

முதல்நாள் மாலையில் முதல்வனிடம் தன் மகள் கொண்ட காதலை இன்று இருவரிடமும் தந்தை ஒருசேரக் கொண்டான்.

பருக என்றது நீர் வேட்கை யுடையவர் கைகளால் ஆவலோடு நீரை வாரிப் பருகுதல்போல் அவன் கண்களால் அழகை மாந்தியுள்ளமை அறிய வந்தது. குலக்குமரர் என்றது அவரது தலைமை நிலைமை தகைமை முதலிய உயர்நலங்களெல்லாம் கருதி.

அகத்து அழகை அறியு முன்னமே புறத்தை நோக்கி இவ்வாறு பரவச மாயினன் என்பார் முகத்து அழகு என்றார். இரு கண்ணின் என்றது வைத்த பார்வை மாறாமல் கண் குளிரக் களிக்க நோக்கினன் என்பது தெரிய நின்றது.

இவ்வாறு ஆர்வம் மீதூர்ந்து பார்த்த மன்னன் இவரை இனம் தெரிந்துகொள்ள விரைந்தான்; முனிவரை வினவினன்.

யாரை இவர்? உரைத்திடுமின் அடிகள்!

என மாதவரிடம் மன்னவன் இவ்வாறு ஆதரவுடன் கேட்டான்.

துறவு நிலையில் உள்ள பெரியோர்களை அடிகள் என்பது மரபு. முனிவர் முதலிய ஞானசீலர்களோடு பெரிதும் பழகினவன் ஆதலால் அம்மரபின் முறை தழுவி உரைகள் வந்தன.

உரைத்திடுக என்றது பின் முன் வைத்துப் பன்மையில் கூறியது முனிவரது மதிப்பையும் மாட்சியையும் உணர்த்தியதோடு அரசனது பணிவையும் மரியாதையையும் வெளிப்படுத்தி நின்றது.

"பின்னூறு பலர்பால் வினையொடு முடிமே"

என்னும் இயல்விதியையும் ஈண்டு எண்ணிக்கொள்க.

உரைத்தருள்க என விநயமாக வினவ வேண்டியவன் இடு மொழியை இடையிட்டது அவசரத்தால் நேர்ந்தது.

இவர் யார்? என்பதே முறை; அங்ஙனமின்றி யாரை என்றது அப் பேராளரது பெருமகிமைகளை ஓர வந்தது. யாருடைய தெய்வக் குழந்தைகளோ? எவருடைய அரச செல்வங்களோ? எந்தப் புண்ணிய வான்களுக்குரிய கண்ணியப் பொருள்களோ? என எண்ணி வியந்துள்ள நுண்ணிய விழைவுகள் இவ்வண்ணம் வெளியாய் இதயநிலை உணர நின்றது.

யார் என்னும் வினவுள் மருவியுள்ள ஐ பல பொருள்களைத் துருவி நோக்க எழுந்தது. ஐ = அழகு, தெய்வம், அரசு, செல்வம். இவ்வாறு ஆவலோடு கேட்ட மன்னனுக்கு முனிவர் என்ன பதில் சொன்னார்?

"விருந்தினர்கள்; நின்னுடைய வேள்வி காணிய வந்தார்; வில்லும் காண்பார்; பெருந்தகைமைத் தசரதன்றன் புதல்வர் என" அருந்தவர் இங்ஙனம் பெருந்தகவுடன் சொல்லியருளினார்.

பேசுவதில் கோசிகர் அதி சதுரர். கூரிய அறிவும் சீரிய சுவையும் காரிய நோக்கும் வீரிய விளைவும் அவருடைய சொற்கள் எங்கணும் சுரந்து நிற்கின்றன.

இராம இலக்குவரைச் சனகனுக்கு அறிமுகப்படுத்தியிருக்கும் இதில் அவர் கருதி வந்திருக்கும் குறிக்கோள் எவருடைய உள்ளத்தில் அறியாவகை நுணுகி புணர நின்றது.

அரசனுடைய உள்ளம் களிக்க, உவகை பெருக, உரிமை வளர, அருமைதெரிய விநயமாக முனிவர் உரையாடியிருக்கின்றார்.

வந்துள்ளவர் அரிய நிலையினர்; பெரிய திருவினர் என் போன்ற அதிதிகளாகக் கருதிவிடாதே; உன் போன்ற பேரரசர் ஆர்வமுடன் உவந்து எதிர்கொண்டு பணிந்து போற்றி உயர்ந்த விருந்து செய்யத்தக்க சிறந்த மேன்மையாளர் என்பார், விருந்தினர்கள் என்றார். அரச விருந்துக்குத் தகுதியானவர் என்றது ஒத்த இனத்தவர் என்பதை உணர்த்த வந்தது.

இன்று புதியராய் வந்திருக்கின்ற இவர் அருமருந்தனையவர்; எங்கும் எளிது செல்பவர் அல்லர்; நீயும் உன் முன்னோரும் பன்னாளும் செய்துள்ள புண்ணியப் பயனால் இங்கே ஒரு விருந்தினராய் இந்நாள் நண்ணி யுள்ளனர்; இதனை எண்ணி யுணர்க என்பதாம்.

அத்தகைய பெருமகிமையாளர் உன்பால் வலிய வந்தது அன்பாலேயாம்; விருந்தை விரும்பி வந்தவர் அல்லர்; உனது பெருந்தகைமையை உணர்ந்து, தருமநெறி தழைய நீ புரியும் அரிய யாகத்தை நேரே கண்டுபோகவேண்டும் என்று கருதியே ஈண்டு உரிமையுடன் வந்திருக்கின்றனர் என்பார், "நின்னுடைய வேள்வி காணிய வந்தார்" என்றார். காணிய = காணும்பொருட்டு.

இந்த அளவில் நிறுத்தி யிருக்கலாம். மேலே, "வில்லும் காண்பார்" என்றதுதான் சொல்லுகின்றவருடைய உள்ளம் காண வந்தது. மூன்றாவது குறித்தது ஊன்றி யுணர நேர்ந்தது.

அவசியமானவைகளை யன்றித் தவசி அதிகமாகப் பேசார். சனகன் கேள்விக்கு வேள்விக் காட்சியோடு முடித்திருக்க வேண்டும்; அதன் பின் பேசியது எதற்காக? அறிஞர் ஆராயத்தக்கது.

எதனைச் சிந்தனை செய்துகொண்டு இராமனை ஈண்டுத் தந்திரமாக அழைத்து வந்திருக்கிறாரோ அந்தக் குறிக்கோளை நிறைவேற்ற இங்ஙனம் குறிப்பாகக் குறித்தார்.

இங்கே வில் என்றது சீதைக்குக் கன்னியா சுல்கமாக மன்னியுள்ள சிவதனுசை. உம்மை அதன் உயர்வையும் மகிமையையும் உணர்த்தி நின்றது.

வேள்வியைக் காண வந்துள்ளவர் வில்லையும் காண்பார் என இறந்தது தழுவிய எச்சவும்மையாகவும், எண்ணும்மையாகவும் எண்ண நேரினும் உயர்வு சிறப்பிலேயே அது உறைந்துள்ளது.

யாரும் அசைக்க முடியாதபடி தெய்வ பலமுடையதாய், எல்லாராலும் அறியப்பட்டு உலகப் பிரசித்தமாயுள்ளமையால் வில் என்று தெளிவு தோன்றச் சொல்லினர். நின்னுடைய என்பதை வில்லுக்கும் கூட்டலாம்.

இந்த வில்லைப்பற்றி முதலிலேயே சொன்னால் அவ்வளவு நாகரீகமாயிராது ஆதலின் விருந்து வேள்விகளை முதலில்கூறி மன்னன் மனத்தைப் பக்குவப் படுத்திப் பின்னே நன்னயமாக நவின்றார். வில் முடிவு காண முனிவர் சொல் முடிவு காட்டினர்.

முன்னுற முடிந்தது உன்னளவில் புண்ணிய வேள்வி; பின்னது முடியின் உலகமெல்லாம் நலம்பெறத்தக்க கண்ணிய வேள்வியாம் என்பதை எண்ணியுணரவைத்தார்.

சிறந்த காட்சிப் பொருள்களைக் காண்பதுபோல் அவ்வில்லை உல்லாசமாகக் காண வந்தவர் அல்லர்; இன்று இவர் நின் வேள்வி காணவும் அது எப்படி இனிது முடிந்ததோ, அப்படியே வில்லைக் காணவே அதன் எல்லையை நீ கண்டு மகிழ்வாய்! ஆகவே இவர் வரவால் உனக்கு எல்லையில்லாத பெருவரவும் பெரு மகிமையும் மருவியுள்ளன; உரிமையை உணர்க என்பது குறிப்பு.

இவ்வுரை சனகனுக்கு வியப்பையும் விம்மிதத்தையும் ஒருங்கே விளைத்தது; விளைப்பினும், உள்ளம் உள்ளே உளைய நேர்ந்தது. வில் என்ற சொல் தனது அருமைத் திருமகளின் மணவுரிமையை மருவியுள்ளமையால் வந்தவரது குடிப் பிறப்பையும் குல நிலையையும் தெளிவாகத் தெரியவிழைந்தான்; அவ் விழைவையும் விரைவையும் நுழைபுலனோடு நுணுகியுணர்ந்த முனிவர், “அரசே! இவர் தசரதன் புதல்வர்” என உவகையுற மொழிந்தார். இறுதியுரை கருதியதை உறுதி செய்யவந்தது.

பெருந்தகைமை என்றது அவனது அருமையும் பெருமையும் அறிய. அருள், கொடை, நீதி, வீரம், அமைதி முதலிய உயர்நலங்கள் யாவும் ஒருங்கே நிறைந்த பெருங்குணக் குரிசில் என்பதாம். மைந்தர் தகைமை தெரியத் தந்தை வந்தார்.

அரசர்களெல்லாரும் அடிதொழத் தக்க பெரிய சக்கரவர்த்தியினுடைய அருமைத் திருமக்கள் இவர் என்றபடியிது.

முனிநாதா ! “இவர் யார் ?” என்று சனகன் கேட்டதற்கு கோசிகர் இவ்வாறு விடைகூறினார். இவ்வளவோடு அமையாமல் மேலும் தொடர்ந்து பேசத் தொடங்கினார்.

மிதிலைமா நகருள் புகுந்து இராமன் கண்ட காட்சிகளையும் கொண்ட கோலங்களையும் குறித்துக் கூறியுள்ளமையால் இப்பகுதிக்கு மிதிலைக் காட்சிப் படலம் என்று பெயர் வந்தது. அது இவ்வளவில் முடிகின்றது.

அடுத்து இராமனது குலமரபையும், தலைமுறை நிலைமையையும் சனகனிடம் முனிவர் நலமுறக் கூறுகின்றார் ஆகலின் அது குலமுறை கிளத்துபடலம் என எழுந்தது.

யார் என்ற கேள்விக்குப் பேர் ஊர் பெற்றோர்களை மட்டும் சொல்லி நிறுத்தியிருக்கவேண்டும் ; அங்ஙனம் நில்லாமல் பின்னும் பேசியது மன்னன் மனம் உவந்து மணவினைக்கு இணங்க என்க. முனிவரது வாக்குமூலங்களை இனி நோக்கி மகிழ்வோம்.

ஆதித்தன் குலமுதல்வன் மனுவினையார் அறியாதார் ?
பேதித்த உயிரனைத்தும் பெரும்பசியால் வருந்தாமல்
சோதித்தன் வரிசிலையால் நிலமடந்தை முலைசுரப்பச்
சாதித்த பெருந்தகையும் இவர்குலத் தராபதி காண். (1)

பிணியரங்க வினையகலப் பெருங்காலம் தவம்பேணி
மணியரங்க நெடுமுடியாய் மலரயனை வழிபட்டுப்
பணியரங்கப் பெரும்பாயற் பரஞ்சுடரை யாம்காண
அணியரங்கம் தந்தானை அறியாதார் அறியாதார். (2)

தான்தனக்கு வெலற்கரிய தானவரைத் தலைதுமித்து
வான்தரக்கிற் றிகொலென்று குறையிரப்ப வரங்கொடுத்தாங்கு
ஏன்றெடுத்த சிலையினானும் இகல்புரிந்த இவர்குலத்தோர்
தோன்றலைப்பண் டிந்திரன்காண் விடையேறாய்ச் சுமந்தானும்.

அரசனவன் பின்னோரை என்னாலும் அளப்பரிதால்
உரைகுறுக நிமிர்கீர்த்தி இவர்குலத்தோன் ஒருவன்காண்
நரைதிரைமூப் பிவையின்றி இந்திரனும் நந்தாமல்
கு[illegible]டலை நெடுவரையால் கடைந்தமுது கொடுத்தானும். (4)

கருதலரும் பெருங்குணத்தோர் இவர்முதலோர் கணக்கிறந்தோர்
திரிபுவன முழுதாண்டு சுடர்நேமி செலநின்றோர்
பொருதுறைசேர் வேலினாய் புலிப்போத்தும் புல்வாயும்
ஒருதுறையில் நீருண்ண உலகாண்டோன் உளன் ஒருவன்.

(குலமுறைகிளத்து படலம், 1-5)

இன்னவாறே பின்னும் பேசிப் போகின்றார். முன்னதாக வந்துள்ள ஐந்து கவிகளிலும் இராமனது முன்னோரைக் குறித்து முனிவர் என்னவாறு விளக்கியிருக்கிறார்! என்பதை இனிது அறிந்துகொண்டால், அவரது கலைஞானமும் சரித்திரக் காட்சிகளும், உலக அனுபவமும், அரசியல் முறைகளும், உரையாடுந் திறங்களும், உபகார நிலைமையும் உணர்ந்துகொள்ளலாம்.

குலத்துக்கு ஆதிமூலமான சூரியனைத் தொடங்கி அதன் பின் வைவசுவத மனுவையும், பிருது சக்கரவர்த்தியையும் முதல் பாட்டில் குறித்துள்ளார். ஆதித்தன் = சூரியன்.

பிருது என்பவன் திருமால் அருளால் பிறந்தவன். அரிய பலநலங்கள் வாய்ந்தவன். பெரிய போர்வீரன். அவன் அரசு கோல் கொண்ட முதல் வருடத்தில் உலகில் கொடிய பஞ்சம் தோன்றியது. நிலங்கள் விளையாமையால் உயிர்கள் எங்கணும் கலங்கி நின்றன. புண்ணிய சீலனான இவன் பூமி தேவியை எண்ணி வேண்டினான். அவள் பசுவடிவமாய் நேரே தோன்றி. "அரசே! சீவர்களிடம் பாவங்கள் பெருகி யுள்ளமையால் எனது பலனை வழங்க முடியவில்லை; நீ உளம் கவலாதே; ஈராண்டு பொறு; உன் ஆட்சியில் அறம் வளர்ந்தபின் நான் காட்சி தருவேன்" என்றாள். "இன்றே அருள் புரிக; இல்லையாயின் என் வில்லால் உன்னைத்தொலைத்து விண்ணிலுள்ள வளங்களை இம் மண்ணில் கொணர்வேன்" என இம் மன்னன் உரைத்தான். அதனைக்கேட்ட அவனிமாது இவனது மனத்துணிவையும் சீவர்களைக் காப்பதிலுள்ள ஆவலையும் வியந்து, "காவல! நீ புரிந்துள்ள தருமமே ஒரு கன்றாக வந்து என் அருகே நின்றால், நான் அருள் புரிகின்றேன்" என்றாள். "என்னிடம் புண்ணியம் இருப்பின், நீ எண்ணிய படியே ஆக" என இம்மன்னன் சொன்னான். உடனே அழகிய பசுங்கன்று ஒன்று துள்ளிப் பாய்ந்து அவள் அடியில் புகுந்து மடியில் வாய் வைத்தது. பூதேவி பெரு மகிழ்ச்சியடைந்தாள். எங்கும் வளங்கள் பொங்கி யெழுந்தன. உயிர்கள் யாவும் உவந்து வாழ்ந்தன. இவனது நீதி நெறிகளைப் புகழ்ந்து வானும் வையமும் வாழ்த்தி நின்றன.

"தன் வரி சிலையில் நிலமடந்தை முலைசுரப்பச் சாதித்த பெருந்தகை" என ஆதியில் நிகழ்ந்த அந்தச் சரித்திரநிலைமையை

இங்ஙனம் குறித்துரைத்தார். இம் மன்னன் பேரால் பூமிக்குப் பிருதிவி என்ற ஒரு பேரும் வந்தது. மண்ணுலகம் மாண்புற விண்ணுலகம் வியப்ப இவ்வண்ணல் புண்ணிய வினைகள் புரிந்து புகழ் மன்னியுள்ளமையால் முன்னுற எண்ணி மொழிந்தார்.

அத்தகைய தரும சீலனது மரபில் வந்தவர் இவர் என்றவாறு. குமாரது முன்னோர் அமரரும் புகழ அதிசய நிலையில் உயர்ந்திருந்தனர் என முறையே உரைத்து வருகின்றார்.

அடுத்த நான்கு கவிகளிலும் இக்குவாகு, ககுத்தன், பிரபாதன், மாந்தாதா என்னும் வேந்தர்களை முறையே குறித்திருக்கிறார்.

## இக்குவாகு

பிரணவ வடிவமா அமைக்கப்பட்ட திவ்விய மணிமண்டபத்தில் திருமாலை எழுந்தருளச்செய்து பிரமா ஒரு முறை பூசித்து நின்றான். அந்த ஆராதனைமூர்த்தி அற்புத நிலையில் அமைந்திருந்தது. இக்குவாகு மன்னன் அயனை நோக்கி அருந்தவம் செய்து அத்தெய்வத் திருவுருவைப் பெற்று வந்து அயோத்தியில் வைத்துப் பேரன்போடு நாளும் வழிபட்டு வந்தான். அம்மரபில் பின்னர்த் தோன்றிய மன்னவரெல்லாருக்கும் பரம்பரையாகவே குலதெய்வமாய் அது குடிகொண்டிருந்தது. இராமன் இலங்கையை வென்று மீண்டு வந்து மணிமுடி சூடிய பொழுது உரியவரெல்லார்க்கும் அரிய பொருள்களை உதவியருளினன். வீடணன் எதையும் விரும்பாமல் அவ்வழிபடு மூர்த்தியையே தன் பூசனைக்காக வேண்டினன். இராமன் மறுக்க முடியாமல் கொடுத்தருளினன். அதனைப் பெற்றுக்கொண்டு இலங்கையை நோக்கி அவன் ஆகாய மார்க்கமாய் வந்தான். வருங்கால், சோழ நாட்டிலே காவிரிக்கரையில் இறங்கினன். கையில் கொண்டு வந்த தெய்வத் திருவை நதியருகே செவ்விய இடத்தில் வைத்து விட்டு நீராடி நியமத்துடன் வந்து பூசித்தான். பூசை முடிந்த பின் அதனை எடுத்தான்; அது அசையவில்லை. "இங்கு இருந்து கொண்டே உனக்குக் காட்சி தந்தருள்கின்றோம்; நீ சென்றருள்" என்று வானில் ஒரு ஒலி எழுந்தது. திருவருளை வியந்து உருகி வணங்கி அவ்வரக்கர்கோன் இலங்கைக்குப் போயினன்.

அந்த மூர்த்தி யிருந்த இடமே திருவரங்கம் என்னும் திருப்பதி யாய் இப்பொழுது சிறந்து விளங்குகின்றது. இவ்வரலாற்றை யெல்லாம் உள்ளே அடக்கிக்கொண்டு கவி வெளிவந்துள்ளது.

"மலர் அயனை வழிபடப் பரஞ்சுடரை யாம் காண, அணி அரங்கம் தந்தான்" என இக்குவாகுவை இங்ஙனம் இனிமையாகக் காட்டியிருக்கிறார். பணி அரங்கப் பாயல்=பாம்பு மெத்தை.

இம்மன்னர் பெருமான் கீர்த்தி உலகமெங்கும் பரவியுள் ளது. எல்லாரும் இவனை நன்கு தெரிவர். பகுத்தறிவுடைய மனிதராய்ப் பிறந்தவர் எவரும் இப்பெரியவனை எவ்வழியும் அறிந்தே யிருப்பர்; அங்ஙனம் யாரேனும் அறியாது இருப்பின் அவர் அறிவற்ற சடங்களே என்பார், அறியாதார், அறியாதார்; என்றார்.

இந்தத் தொடரில் அறிவு மணம் பெரிதும் கமழ்கின்றது. இக்குவாகுவை அறிவதே பக்குவமான அறிவுக்குப் பயன்; இவனைத் தெரியாதவர் உலகம் தெரியாதவர்; நூல் அறிவில்லா தவர்; அவர் மானிடப் பிறவியல்லர் என்பதாம்.

எங்கும் ஒளிவீசியுள்ள சூரியனைக் காணாதவரைக் குருடர் என்பதுபோல் இக்குவாகுவை அறியாதவரை மூடர் என்றார்.

வைகுண்டநாதனை இங்கே கொண்டுவந்து வைத்து வையம் உய்யச் செய்த ஐயனை அறிந்துகொள்ளவில்லையாயின் அது என்ன பிறவி? என இகழ்ந்து வைத படியிது.

திருமாலை அரங்கநாதனைக் காவிரி அயலே தந்தது வீடணன் ஆயினும், முதலில் அயோத்திக்குக் கொண்டுவந்தது இக்குவாகு வே ஆதலால் அம்மூல நிலை கருதி அரங்கம் தந்தான் என்றார்.

"வடியாத பவக்கடலும் வடிந்து மூல
மாயைகடந் தப்பால்போய் வைகுந்தம் சேர்ந்து
அடியார்கள் குழாங்கூடி யுனதடிக் கீழ்
அடிமைசெயும் அக்காலம் எக்காலம் தான்?
கொடியாடு மணிமாட அயோத்தி மூதூர்
குடிதுறந்து திருவரங்கக் கோயில் கொண்ட
நெடியோனே! அடியேன்நான் முயற்சி யின்றி
நின்னருளே பார்த்திருப்பன் நீசனேனே."
(திருவரங்கக்கலம்பகம், 93)

குடதிசை முடியை வைத்துக் குணதிசை பாதம் நீட்டி
வடதிசை பின்பு காட்டித் தென்திசை இலங்கைநோக்கிக்
கடல்நிறக் கடவுள் எந்தை அரவணைத் துயிலு மாகண்டு
உடலெனக் குருகு மாலோ என்செய்கேன் உலகத்தீரே!
(திருமாலை, 19)

வைகுண்டநாதன் திருவயோத்தியைவிட்டு, திருவரங்கத்தில் வந்து எழுந்தருளி அரங்கநாதனாய் அமர்ந்து இலங்கையை நோக்கி வீடணனுக்குக் காட்சி தந்து நாடறிந்து நலமுற நன்கு பள்ளி கொண்டிருக்கின்றான் என இவை குறித்துள்ளன காண்க.

## ககுத்தன்

இவன் இக்குவாகுவின் நான்காவது வழிமுறையில் வந்தவன். அவனுடைய மகனாகிய சசாதனுக்குப் பேரன். புரஞ்சயன் என்னும் அரசனுடைய அருமைத் திருமகன். அருந்திற லாண்மையும் பெருந் தகைமையும் நிறைந்தவன். சிறந்த போர் வீரன். இவன் அயோத்தியிலிருந்து அரசுபுரிந்து வருங்கால் ஒரு முறை வானவருக்கும் தானவருக்கும் பெரும்போர் மூண்டது. அதில் அமரரை அசுரர் வென்று தொலைத்தார். அமரர் கோனாகிய இந்திரன் யாதும் செய்ய முடியாமல் மனம் மிகவுடைந்து மறுகி நின்றான். அரசினை இழந்து பரிதபித்திருந்த அவன் முடிவில் இவனிடம் வந்து குறையிரந்து வேண்டினான். இவ்வீர மகன் உடனே வில் எடுத்து விரைந்து சென்று அமராவதியில் குடி புகுந்துள்ள அசுரரெல்லாரையும் அடங்க வென்றான். இவனது வீரநிலையைக் கண்டு இந்திரன் வியந்து புகழ்ந்து தன் தோளில் சுமந்து துதித்துப் போற்றினான். சிவனைத் தாங்கும் இடபம் போல இவனைத் தாங்கித் தனது நன்றி பாராட்டுதலை அவன் அங்ஙனம் வெளிப்படுத்தினான். அவனுக்குப் பொன்னுலகை உதவி இன்னருள் புரிந்துவிட்டு இவன் தன்னிடம் வந்து சேர்ந்தான்.

"என்று எடுத்த சிலையினனாய் இகல்புரிந்த இவர் குலத்தோர்
தோன்றலைப் பண்டு இந்திரன்காண் விடைஏறாய்ச் சுமந்தான்."

என அந்த வீரப்பாட்டையும் வெற்றித் திறத்தையும் இங்ஙனம் குறித்துக் கூறினார். பெரும்புகழ்க் குரிசிலான அம்மன்னன் மகிமை தெரிய இராமனும் காகுத்தன் என நின்றான். ககுத்தன் மரபில் வந்தவன் என்பது அப்பெயர்க்குப் பொருளாம்.

## பிரபாதன்

சூரிய குலத் தோன்றலாகிய இவன் அரிய கலைகள் பலவும் பயின்று அமரரும் புகழ அரசு புரிந்திருந்தான். அருள் வீரம் கொடை நீதி முதலிய உயர்நிலைகளுக்கெல்லாம் உயிர் நிலையமாய் இவன் ஒளி செய்து நின்றான். இம்மானவன் சீர்த்தி வானகமும் வையகமும் வளர்ந்து நின்றது.

உரைகுறுக நிமிர் சீர்த்தி இவர் குலத்தோன் ஒருவன் என இவனது பெருமையைக் குறித்து வந்துள்ள இந்த அருமை வாசகத்தில் அறிவின் சுவை எவ்வாறு பெருகி யுள்ளது! முனிவரது உரையாடலில் பலவகை இரசனைகளைக் கவி இதமாக உதவி வருகின்றார். கலை அறிவால் எவ்வளவு விழைந்து சொன்னாலும் அவ்வளவும் கடந்து அக்கீர்த்தி தலைநிமிர்ந்துள்ளது; தம்மால் இயன்ற அளவு உரைத்து ஒதுங்கலாமே யன்றி யாரும் முழுவதும் கூற முடியாது; அப்புகழைச் சொல்லி முடிக்கச் சொற்கள் கிடையா என்பதாம். உரை குறுகலையும், கீர்த்தி நிமிர் தலையும், கண் பார்வையில் நேரே பார்த்து வியக்கும்படி காட்சிதந்து சொல்லாட்சி இங்கே சொலித்து நிற்கின்றது. கீர்த்தி குமாருக்கும் குலத்துக்கும் அமைய அமைத்திருக்கும் கவியின் அமைதி கருதி அறிக.

இந்தக் கீர்த்திமான் அமரர் பாற்கடல் கடைந்த பொழுது உடனிருந்து உதவி புரிந்தான். அசுரர் எதிர் தேவர் கை ஒய்ந்து இளைத்தார்; அது சமயம் இவன் இடையே புகுந்து திடமாக நின்று கடைந்தான்; உடனே அமுதம் எழுந்தது. அதனை இந்திரனுக்கு அருளினன். அவ் அமரர்கோன் இவனைத் தமராகத் தழுவி வாழ்த்தினன்.

"நரை திரை மூப்பு இவையின்றி இந்திரனும் நந்தாமல்
குரைகடலை நெடுவரையால் கடைந்து அமுது கொடுத்தான்"

என இவனது அமுதக்கொடையை அரசு மகிழ அறிவுறுத்தி மரபின்மாட்சியை முனிவர் இவ்வாறு இனிது விளக்கி யருளினர்.

## மாந்தாதா

இவன் பெரிய நீதிமான். மன்னுயிர்களைத் தன் உயிரென ஓம்பி இன்னருள் புரிந்தவன். கொடியவர்களும் இவனது சன்னிதி அடைந்த பொழுது இனிய நீராய்த் திருந்தி இசை மிகுக்

துள்ளனர். இவனுடைய ஆட்சிக்காலத்தில் யாண்டும் புண்ணிய நலங்கள் பொங்கி யிருந்தன. மழை வளஞ்சுரந்து உலக முழுவதும் செழுமை நிறைந்து திருமலிந்திருந்தது. பொல்லா மிருகங்களும் நல்லனவாகி நண்ணி நின்றன. பகையும், பிணியும், பசியும், பயமும். இன்றி உயிரினங்கள் உவகையில் ஓங்கி வந்தன.

"புலிப்போத்தும் புல்வாயும் ஒரு துறையில் நீர் உண்ண உலகு ஆண்டோன்" என்றமையால் இப்புண்ணிய சீலனது ஆட்சி நிலையும் அருளின் மாட்சியும் அறிய நின்றன. மெலியாரை வலியார் நலியா வண்ணம் அளியோடு பாதுகாத்து வந்தான் என்பதைத் தெளிவு படுத்தப் புலியும் புல்வாயும் ஒரு துறையில் நீர் உண்ட அரிய தொரு நிகழ்ச்சியை உரிமையுடன் காட்டினார்.

நெறி முறை வழுவாத இத்தகைய நீதி மன்னர் குலமரபில் வந்த கோமக்கள் எனக் குமரர் நிலைமையை மாதவர் இங்ஙனம் ஆதரமீதூர்ந்து கூறியருளினர்.

இவ்வண்ணமே முசுகுந்தன், சிபி, சகரன், குவலயாசுவன், திலீபன், பகீரதன், ரகு முதலிய முடி மன்னர் பலரையும் தொகுத்துச் சொல்லி, முடிவில் தசரதனுடைய பெருமையை வகுத்துக் காட்டி, அந்த அரசர் பெருமானுடைய அருமைப் புதல்வர் என இருவரையும் ஒருசேர வுரைத்துப் பின்பு இராமனை மட்டும் தனியே முனிவர் தகவுடன் பேசினர்.

## கோசிகர் இராமனைக் குறித்துக் கூறியது

அரசே! இந்தக் குலமகனது கலைநலங்கள் அளவிட லரியன. அதிசய வசனமாக யாதும் இங்கே நான் புகழ்ந்து கூறவில்லை. நேரில் கண்ட நிலைகளையே சில சொல்லுகின்றேன் என்று தாடகையை வென்ற வீரிய நிலையை முதலில் விளக்கிக் கூறினர். அவரது உரையில் புலமைச் சுவை பொங்கி மிளிர்கின்றது.

அலை யுருவக் கடலுருவத்து ஆண்டகைதன் நீண்டுயர்ந்த
நிலை யுருவப் புயவலியை நீயுருவ நோக்கு ஐயா!
உலையுருவக் கனலுமிழ்கட் டாடகைதன் உரம் உருவி,
மலைஉருவி, மரம்உருவி, மண் உருவிற்று ஒருவாளி.

(குலமுறை கிளத்து படலம், 26)

சனகனை நோக்கி மன்னர் பெரும! இந்தச் சுந்தரத்தோளைக் கொஞ்சம் கண் ஊன்றிப் பார்; அது செய்துள்ள அதிசயத்திறலை நான் அருகு நின்று கண்டேன். எனது வேள்வியைக் காத்தருளும்படி இக்கோமகனை விரும்பி அழைத்து வந்தேன்; இடையே கொடிய அரக்கியாகிய தாடகை வந்து எதிர்த்தாள். பொல்லாத அவள் எங்களைக் கொல்ல மூண்டு கல்லையும் மரங்களையும் வாரி வீசிப் பல தொல்லைகள் புரிந்தாள். அவ் எல்லாவற்றையும் விலக்கிவிட்டு இவ்வல்லவன் ஓர் அம்பு எய்தான்; அது அவளது வயிரக்குன்றக் கல்லை ஒத்த நெஞ்சில் பாய்ந்து ஊடுருவி ஓடி, அயலே நின்ற மலைகளை உருவி, அப்பால் இருந்த மரங்களைத் துளைத்து, அதன் பின் வேகம் தாழ்ந்து பூமியில் பாய்ந்தது; பாயவே மண்ணையும் ஊடுருவிப் போயது; என்னே! இவ்வண்ணலின் வில்லாற்றல்! அவ்வீரக் காட்சி என் உள்ளங் கவர்ந்துள்ளது; எண்ணும் தோறும் வியப்பும் விம்மிதமும் விளைத்து வருகின்றது என இங்ஙனம் விழைந்து கூறினர்.

ஆண்டகை தன் நீண்டு உயர்ந்த புயவலியை நீ உருவ நோக்கு ஐயா! என்று சனகனை முதலிலேயே ஊக்கிக்கொண்டது, பின்னே பேசப் போகின்ற பெருமித நிலையை ஒருமையுடன் உணர்ந்து மகிழ. குமரன்பால் அரசன் பரவச மாகும்படி முனிவர் மொழிகள் உளமுருகி வருகின்றன.

" தாடகைதன் உரம் உருவி, மலை உருவி, மரம் உருவி, மண் உருவிற்று ஒரு வாளி" என்றது அறிவாளியான உனக்கு இப்பெருமானது பெருவீரம் ஒருவாறு இதனால் தெளிவாகும் என்றபடி. உருவிய நிலையைத் துருவி நோக்குக என்பதாம்.

போர் முகத்தில் யாதும் பழகாமல் அதிபாலியத்தில் புதிதாக முதல் முதல் தொடுத்த பகழி இதுவாயின், இவனது வில்லின் கலைநிலையை இனி எவர் நிலை அளந்து சொல்ல வல்லார்?

எனது சொல் வலியால் இவனது வில்வலியை விளக்க இயலாது; உனது உணர்வின் வலியால் உண்மையை உய்த்து உணர்ந்து கொள்க என உறுதிபெற உணர்த்தினர்.

இராமபாணத்தின் அற்புத ஆற்றலை இங்கே நாம் அறிந்து மகிழ்கின்றோம். பழையது ஆயினும் அறியுந் தோறும் புதிய சுவை பொலிந்து அதிசய நலங்களை அருளி வருகின்றது.

"கல்லாப் புல்லர்க்கு நல்லோர் சொன்ன பொருள் எனப் போயிற்று" என்று * முன்னம் சொன்னார். அப்போக்கை முனிவர் வாக்கில் ஈண்டு நோக்க வைத்தார். கடிய வேகச் சுடு சரம் ஆதலால் அந்நெடிய வேகத்தின் நிலை தெரியவந்தது.]

அம்பைக் குறித்து இங்ஙனம் அவர் விதந்து கூறியது நம்பியின் வில்லாற்றலை வியந்துமகிழ்ந்து வேந்தன்நயந்துகொள்ள. கண்ணார நேரே கண்டு நின்றவர் ஆதலால் கணையின் கடுமையை இவ்வண்ணம் காட்டியருளினார்.

இந்நாட்டில் முன்னம் இருந்த ஒரு குறுநில மன்னனுடைய அரிய வில் ஆண்மையும் ஈண்டு நாம் உரிமையுடன் காண வேண்டும். அக்காட்சி நமக்கு ஓர் மாட்சியா யுள்ளது.

## ஓரியின் வில்வலி

கொல்லி மலைக்குத் தலைவனாய்ச் செல்வ நிலையில் சிறந்து ஓரி என்னும் வீரன் சீரிய நெறியில் விளங்கியிருந்தான். இவன் பெருங் கொடை வள்ளல். பேருபகாரி. யார்வரினும் இல்லை என்னமல் ஈந்து வந்தமையால் இவனது இசை திசைகள்தோறும் பரவி நின்றது. "மாரியும் ஓரியும் மாறின் உலகு இல்லை" என்று பார் உவந்து கூற இவன் சீர் அமைந்து நின்றான். வில் வலியில் இவன் மிகவும் சிறந்தவன். "கொல்லி ஆண்ட வல்வில் ஓரி" (புறம், 158) என இவனது வில்லாற்றலைக் குறித்துப் பெருஞ்சித்திரனார் வியந்து கூறியுள்ளார். "வந்தான் இவன் ஆகும் அவ் வல்வில் இராமன்" (மாரீசன் வதை, 149) என்றதும் இங்கே சிந்தனைக்குரியது.

இவ்வாறு வில்வீரனாய் விளங்கிநின்ற ஓரி ஒரு நாள் வேட்டைக்குச் சென்றான். அங்கே ஓர் மதயானையைக் கண்டான். மலைச்சாரலில் அடர்ந்த காட்டில் களித்துநின்ற அக்களிற்றை நோக்கி வில்லை ஈர்த்து இவன் விரைந்து அம்பு தொடுத்தான். விடுத்த அம்பு கடுத்துப் பாய்ந்து யானையை ஊடுருவிப் போயது. அது அலறி விழுந்தது. விரைந்து போன பகழி அயலே மறைந்து நின்ற ஒரு புலியைத் துளைத்து, அதற்கு அப்பால் கலைமான் ஒன்றைக் கொன்று, பின்பு ஒரு பன்றியை வீழ்த்தி, அடுத்திருந்த

* இந் நூல் பக்கம் 888 வரி 30 பார்க்க.

புற்றில் படுத்திருந்த ஓர் உடும்பைக் கடிந்து உள்ளே குடைந்து புகுந்தது. இந்த அதிசய ஆற்றலைக் கண்டு நின்ற வன்பரணர் என்னும் புலவர் இவ்வீர மகனை வியந்து புகழ்ந்தார். அன்று அவர் பாடிய பாடல் ஒன்றின் பகுதி அடியில் வருவது.

"வேழம் வீழ்த்த விழுத்தொடைப் பகழி
பேழ்வாய் உழுவையைப் பெரும்பிறி துறீஇப்,
புழற்றலைப் புகர்க்கலை உருட்டி, உரற்றலைக்
கேழற்பன்றி வீழ, அயல
தாழற் புற்றத்து உடும்பிற் செற்றும்,
வல்வில் வேட்டம் வலம்படுத் திருந்தோன்
புகழ்சால் சிறப்பின் அம்புமிகத் திளைக்கும்
கொலைவன் யார்கொலோ? கொலைவன் மற்றிவன்
விலைவன் போலான்; வெறுக்கை நன்கு உடையன்;
ஆரம் தாழ்ந்த அம்பகட்டு மார்பிற்
சாரல் அருவிப் பயமலைக் கிழவன்
ஓரி கொல்லோ? அல்லன் கொல்லோ?
பாடுவல் விறலி" (புறநானூறு, 152)

யானை, புலி, மான், பன்றி, உடும்பு என்னும் இந்த ஐந்தையும் ஊடுருவி உருட்டி ஓரியின் கணை வீரியம் விளைத்துள்ள சீரிய கூரிய வில்லின் திறத்தை இது விளக்கியுள்ளமை காண்க.

வேழம்=யானை. உழுவை=புலி. புழல்=துளை. உள்ளே துளையமைந்த கொம்புள்ள தலையும், புள்ளிகளும் உடையது என்பார் புழல்தலைப் புகர்க்கலை என்றார். புகர்=புள்ளி. புள்ளி மான் என்றபடி. விலைவன் போலான் என்றது இங்ஙனம் வில் வேட்டம் செய்தவன் விலைக்கு ஊன் வேட்டு வந்த வேடுவன் அல்லன் என்பதாம். விலையுயர்ந்த மணி ஆரங்களை அணிந்திருந்தலால் யாரோ ஒரு அரசகுமாரன் என்று புலவர் ஊகம் செய்து உவந்து பாடினர். சங்க காலத்துச் செய்யுள் ஆதலின் சொல்லும் பொருளும் அக்கால நிலையைக் காட்டி யுள்ளன. ஓரி காலம் இற்றைக்கு ஆயிரத் தெண்ணூறு ஆண்டுகட்கு முன்னராம்.

இக்கவியை நினைவில் வைத்துக்கொண்டுதான் "உரம் உருவி, மலை உருவி, மரம் உருவி, மண் உருவிற்று" என்று கம்பர் பாடியிருக்கிறார் எனக் கலையுலகம் நாடி யறிய இது நீடியுள்ளது.

ஓரி வாளி ஐந்தை உருவிப் போயது; இராம வாளிக்கு இங்கே நான்கு தான் அமைந்தன. பின்னே மராமரப் படலத்தில் * ஏழுகாட்டி ஏற்றம் செய்துள்ளார்.

பண்டைக் காலத்தில் இத்தமிழ் மண்டலத்தில் தழைத்திருந்த நம் முன்னோருடைய போர்வீரமும் வில்லாற்றலும் எல்லாரும் போற்ற ஏற்றமுற்றிருந்தன. அதற்குச் சான்றுகள் பல உள்ளன. அவற்றுள் மேலேகாட்டிய ஓரி செயலும் ஒன்றும்.

இத்தகைய வீரர்களையும் வள்ளல்களையும் வியத்தகு நிலையில் பெற்றிருந்த இந்நாடு இப்பொழுது எப்படிப் பாடழிந்துள்ளது? ஐயோ தமிழ் நாடே! யானை வேட்டம் ஆடும் அருந்திறலாண்மை போயதே! ஈன நாட்டம் புகுந்ததே! ஞான நாட்டம் ஒழிந்ததே! மான வீரரையும், மாண்கொடையாளரையும், ஞான தீரரையும் பண்டுபோல் இனி ஈண்டு என்று காண்பது?

உள்ளாரை உள்ளினே உள்ளமெல்லாம் இல்லையென உருகி அந்தோ
தள்ளாடித் தளர்கின்றேன் தாய்நாட்டின் நிலைக்கிரங்கித்தவிக்கின்றேனே

என்ற கவிக்கு இன்று ஆறுதல் கூறுவார் யாரும் இலர்.

இந்நாட்டு வீரம் கம்பன் பாட்டுள் புகுந்து எங்கும் நமக்கு இன்பம் ஊட்டி வருகின்றது. நம் கவி வீரனது உள்ளத்தைக் காணுந்தோறும் உயர் வீரம் தோய்ந்து உயிர் பூரித்து ஒளிர்கின்றது. பழமை வாசனை வளமையாய்க் கிழமை புரிந்தருள்கின்றது.

இங்ஙனம் இரகுவீரனது வில்லாற்றலை விளக்கிய முனிவர் பின்பு அவனுடைய அத்திர வித்தைகளின் வித்தகநிலையை வியந்து பேசினர். அவரது பேச்சு கேட்பவர் எவரும் வேட்ப விளைந்தது.

ஆய்ந்தேற உணர்ஐய! அயற்கேயும் அறிவரிய
காய்ந்தேவில் உலகனைத்தும் கடலோடும் மலையோடும்
தீய்ந்தேறச் சுடுகிற்கும் படைக்கலங்கள் செய்தவத்தால்
ஈந்தேனும் மனம் உட்க இவற்கு ஏவல் செய்குனவால்.
(குலமுறைகிளத்துபடலம், 28)

ஒரு வாளி செய்த பெருவீர நிலையை முன்னே சொன்னர்; அத்தகைய அற்புதப் பகழிகளும் ஆயுதங்களும் இக்குலமகனிடம் பலகோடி யுள்ளன என்று இதில் வலி நிலை யுணர வழியுரைத்தார்.

---

* கிட்கிந்தா காண்டம், மராமரப்படலம், 14.

ஐய, உணர்! என ஈண்டு சனகனை உரிமையுடன் தூண்டி யிருக்கும் அருமை வாசகம், தாம் சொல்லும் பொருள் நிலைகள் மிகவும் அதிசய முடையன; நுணுகி யுணரவேண்டும் என்னும் துணிவு தோன்ற வந்தது.

ஆய்ந்து ஏற என்றது பொருட் குறிப்புக்களை ஓர்ந்து தேற.

இக் குமாரனுடைய அருந்திறலாண்மைகளும், பெருங் குண மகிமைகளும், படைக்கல நிலைமைகளும் பிரமாவினாலும் வரம்பு காணமுடியாது, என்பார், "அயற்கு ஏயும் அறிவு அரிய" என்றார். அயனாலும் அறிய இயலாததை நான் சொல்வது பயனில் செயலேயாம்; ஆயினும் நேரில்கண்ட அனுபவங்கள் சில கூறு கின்றேன்; கூர்ந்து ஓர்ந்தருள் என்றபடி.

அத்திர சத்திரங்களைக் குறித்துக் கூறியது தெய்வத்தன்மை நிறைந்த அவற்றின் தீரச் செயல்களைத் தெளிவாக விளக்கி நின்றது.

அப்படைக்கலங்கள் யாவும் மந்திர முறையோடு கோசிகரே இராமனுக்குத் தந்தருளினார். தம்மிடம் இருக்கும் பொழுது இருந்த நிலைமையினும் இக்கோமகனை அடைந்த பின்பு அவை பெற்றுள்ள அற்புத ஆற்றல்கள் அளவிடலரியன என்று தவசி அதிசயித்துப் பேசி யிருக்கிறார்.

"ஈந்தேனும் மனம் உட்க இவற்கு ஏவல் செய்குன"

என்றதனால் இவ் வீரநாயகன்பால் அப்போர்க் கருவிகள் பூண்டிருக்கும் ஆர்வமும் ஆற்றலும் அறியலாகும். ஈந்தேனும் என்றது அதிதேவதைகளுடன் உபதேசித்துக் கொடுத்த நானும் என்றபடி. உம்மை அவரது உயர்வையும் உரிமையையும் உணர்த்தி நின்றது. வீர நெஞ்சம் வில்லாண்மையை வியந்து வந்தது.

மனம் உட்க = வெட்கி நாண. ஏவல் = ஊழியம்.

தாம் ஏவிய போது செய்ததைக் காட்டிலும் பல்லாயிரம் மடங்கு இவ்வில் வீரனிடம் அவை வேலை செய்கின்ற நிலைகளை நேரே கண்டு கோசிகர் உள்ளம் கூசியுள்ளார் என்று தெரிகின்றது.

அன்புரிமையுடன் ஆவலோடு படைக்கலங்கள் யாவும் பணி யாற்றி வருகின்றமையால் இவற்கு ஏவல் செய்குன என்றார்.

"வீரநாதா! தேவரீர் ஏவிய படியே யாவும் இளையவன் போல உழையமர்ந்து ஊழியம் புரிகின்றோம்" என்று முன்னம் தெய்வ

ஆயுதங்கள் இராமன்பால் ஆர்வமீதூர்ந்து *கூறியவாறே வீரியங்கள் விளைத்து வருதலை இங்ஙனம் விளக்கியருளினர்.

தம்முடைய வில்வித்தையும் படைகளும் இக்கோமகனிடம் கூடி மாமகிமைகளை யடைந்துள்ளன என்று மாதவர் மகிழ்ந்து கூறியிருக்கிறார். இவரது உள்ளத் தூய்மை இங்கே ஒளி வீசியுள்ளது.

வீரத்திறலை இங்ஙனம் விளம்பினர்; பின்பு தெய்வீகமான அதிசய மகிமையை அதிபதியுணர அறிவுறுத்தினர்.

கோதமன்றன் பன்னிக்கு முன்னையுருக் கொடுத்ததிவன்
போதுநின்ற தெனப்பொலிந்த பொலன்கழற்கால் பொடிகண்டாய்
காதலென்றன் உயிர்மேலும் இக்கரியோன் பாலுண்டால்
ஈதிவன்றன் வரலாறும் புயவலியும் எனவுரைத்தான்.
(குலமுறைகிளத்துபடலம், 29)

முன்னே தோள்வலியைத் துலக்கினர்; இதில் தாள் நிலையை விளக்கியுள்ளார். சாபத்தால் கல்லாய்க் கிடந்த அகலிகையை இவனுடைய காலில் ஒட்டியிருந்த ஒரு தூள் எழுப்பி அருளியது; இந்த ஆளின் மகிமையை யார் அளந்து கூறுவது? என்று ஆர்வமீதூர்ந்து கோசிகர் பேசியிருக்கிறார்.

வாசகங்களில் நேசநீர்மைகள் நிறைந்திருக்கின்றன.

தாமரை மலர்போல் பொலிந்து அழகிய வீரக்கழல் அணிந்துள்ளன எனத் தாள்களின் எழில் நலங்களை விழைந்து கூறியது அவை புரிந்துள்ள தொழில் நலங்களை மகிழ்ந்து.

அகலிகை என்று கூருமல், கோதமன்தன் பன்னி என்றது அம்மாதவரது மகிமை யுணர வந்தது. அருந்தவ நிலையில் சிறந்தவன்; பெருந்தகையாளன்; அப்பெரியவன் தன் பத்தினிக்கு இட்டிருந்த படுசாபத்தை இப்பேரெழிலாளன் ஆரருளால் நீக்கிப் புனிதம் ஆக்கி மீளவும் அவனுக்கு இனிய மனைவியா இணைத்து வைத்து ஈண்டு உன்பால் வந்துள்ளான் என்பதாம்.

முன்னை உருக் கொடுத்தது என்றது பன்னியின் பழைய நிலைமைகளை உன்னி யுணர்ந்து உயர்வு தெளிய வந்தது.

கல்லாய்க் கிடந்தது பொல்லாத சாப உருவம்; அதற்கு முந்தியது. இந்திரனோடு கலந்து களித்த பழி உருவம்; இந்த

* இந்நூல் பக்கம் 901, வரி 18 பார்க்க.

இரண்டு இழி நிலைகளுக்கும் முன்னது கௌதமரோடு கூடியிருந்த இனிய காதல் உருவம்; அம் மனைவாழ்க்கைக்கு முன்னதாக மன்னி நின்றது புனிதமான கன்னி உருவம்; அந்தப் பரிசுத்தமான உருவையே இவ்வுத்தமன் கால் பொடி உதவியருளியது என்பதாம். பொடி செய்த படி நெடிதுணர நின்றது.

ஒரு பொடி இவ்வாறு அருளியுள்ளது; அப்பொடி இரண்டு மூன்று சேர்ந்தால் என்னும்? பல கலந்தால் யாதாம்? பொடிகளே இங்ஙனம் ஆயின், அவற்றிற்கு ஆதாரமான அடி படின் ஏதாம்? மனித வடிவில் தால் மிகவும் கீழானது; அதனினும் கை தோள் தலை முதலிய உயர்நிலை உறுப்புகள் உறின் உறுவன யாவையோ? இவ்விழுமிய அவயவங்கள் யாவும் ஒருங்கேநிறைந்த எழில் உருவம் மருவின் என்ன விளையும்? சாபம் நீங்க வேண்டும் என்று இராமன் எண்ணுமலே கால்பொடி இவ்வண்ணம் செய்தது; எண்ணிச் செய்யின் யாதாம்? இவன் கண்ணூன்றிக் கருதிப் புரியின் விளைவன எவை? அவ் விளைவுகளை அளவு கூற வல்லார் யார்?

இவற்றை யெல்லாம் மதிமானுன நீ எண்ணியுணர்ந்து இப் புண்ணிய மூர்த்தியின் கண்ணிய நிலையை நுண்ணிதாக ஓர்ந்து தெளிந்து உறுதி நலனை உரிமையாக் கருதிக் கொள்க என்பதாம்.

கால் பொடி கண்டாய்! என்றதில் முனிவர் முழுப் பொடியை வைத்துள்ளார். விழிப்போடு விழைந்து கண்டுகொள்க.

இவ்வாறு புறநிலைமைகளைப் புகன்று வந்தவர் முடிவில் தமது அனுபவமான அகநிலைமையை வகை செய்து உரைத்தார்.

காதல் என்றன் உயிர்மேலும் இக்கரியோன் பால் உண்டு.

என்ற இவ்வாசகம் கருதியுணர வுரியது. அன்பு, பிரியம் என வேறு ஒன்றும் கூறுமல் காதல் என்றது இராமன்பால் மாதவரது உள்ளம் களித்துள்ள உவகை நிலையை உணர்த்தி நின்றது.

பெண்கள்பால் ஆண்கள் கொண்டிருக்கும் ஆசைப் பெருக்கத்தையே காதல் என்பர். அந்த ஆர்வ மொழியைக் கோசிகர் இங்கே கூசாமல் கூறியிருக்கிறார். நெஞ்சின் வாஞ்சை வஞ்சமின்றி வந்தது. அரிய தவசியாகிய பெரிய துறவி வாயிலிருந்து இவ்வுரை உதித்துள்ளது; பொருளை நுனித்துணர வேண்டும்.

இராச சபையில் மன்னன் எதிரே இன்னவாறு பேசியது ஞானசீலனை அவன் நன்கு உணர்ந்துகொள்வன் என்பது கருதி.

சனகா! முன்பு நான் உன் போல் ஓர் அரசனாயிருந்தவன்; பின்பு முழுவதும் துறந்து இவ்வாறு துறவியாயினேன்; உலகில் ஒன்றும் எனக்கு வேண்டியதில்லை; என் நிலைமையை நீ நன்கு அறிவாய்! [பற்றுக்கள் முற்றும் அற்ற எனக்கு இவன்பால் பெரும் பற்று வளர்ந்துள்ளது. யாதொன்றிலும் ஆசையில்லாத நான் இவனிடம் பேராசையாளனாய்ப் பெருகி நிற்கின்றேன். என்னையே மறந்து பலமுறை இவனை நினைந்துள்ளேன். இந்நிலைமையை உணர்ந்து இவனது தலைமையைத் தெளிந்து கொள்க என்பதாம். தத்துவ நிலையை இங்கே உய்த்துணர வைத்துளார்.

உலகப் பொருள்களில் முழுதும் பற்று அற்றவர் எந்தப் பொருளைப் பற்றி நிற்பர்? அந்தப் பரம்பொருள் இந்த வடிவில் வந்துள்ளது எனத் தம் சிந்தை நிலைமையால் தெரிவித்தருளினார்.]

[கரியோன் என்றது பசிய கோலத் திருமேனியன் எனப் புறத்தே உருவம் நோக்கியதுபோல் தோன்றினும், உள்ளே வேறு ஒரு பொருளும் மருவியுள்ளது. கரி என்னும் சொல்லுக்குச் சாட்சி என்பது பொருள். உலகங்கள் முழுவதையும் நோக்கி எல்லாவற்றிற்கும் பொதுவாய்ச் சாட்சியாய் நிற்பவன் எனக் கடவுளுக்குரிய பொருளையும் கரியோன் என்பது இங்கே கருத வந்தது. ஞாலம் காக்கும் தலைமைக்கு இவன் சாலும் கரி என்பதாம். இக் கோலம் கொண்டுள்ளவனைக் குறிக்கொள்க என்றபடி.

[காதல்கொண்டேன் என்னாது உண்டு என்றது, நான் வலிந்து கொள்ளவில்லை; தானாகவே அது விளைந்து பெருகி வளர்ந்தோங்கியுள்ளது என்பது விளங்க என்க.]

[என் தன் உயிர் மேலும் என்றது உற்ற காதலின் உயர் நிலையை முற்றிய ஒரு பேரெல்லை காட்டி உணர்த்தியபடியிது.

தன் இன்னுயிரினும் இனிய உயிரா இராமனை முனிவர் எண்ணியிருப்பதை இவ்வண்ணம் இயம்பினார்.

என் ஆன்மாவினும் மேன்மையாக ஆர்வம் கூர்ந்துள்ளேன் என்றமையால் பரமான்மாவாகப் பாவித்துள்ளமை புலனாயது. உலகமெல்லாம் காக்கும் பரமனை ஓர் அரசகுமாரனாய் இங்ஙனம் மருவி வந்துள்ளான்; வரவின் அருமையை உணர்க என்பதாம்.

நிலஞ்செய் தவத்தால் தோன்றியுள்ள இக்குலமகன் நிலைமைகளை மேலும் கூறுதல் மிகையாம்; உனது நிலைமையை மகிமைப்படுத்த உரிமையுடன் ஆளை இத்தலம் கொண்டு வந்துள்ளேன்; உண்மையை உணர்ந்து நன்மையை விரைந்து செய்து கொள்க என்னும் கருத்தோடு முனிவர் இப்படி முடித்தருளினர்.

இவ்வளவில் குலமுறை கிளத்து படலம் முடிவுறுகின்றது. அகலிகை சாபம் தீர்த்ததும் கோசிகர் முதலிய மூவரும் சனக மன்னனை நேரே வந்து கண்டதாக வால்மீகத்தில் கூறியுள்ளது.

மிதிலைக் காட்சியும், முனிவர் குலமுறை கிளத்தலும் அங்கே இல்லை; அவற்றை இடையே விரித்துப் பலவகைச் சுவைகளையும் கம்பர் இங்கே நலமாக விளைத்திருக்கிறார்.

கன்னி மாடத்தில் இருந்த சீதையையும் இராமனையும் இடையே சந்திக்க வைத்து, உழுவலன்பு சுரந்த காதலுணர்ச்சிகளை இன்ப நலம் கனிய இனிது வளர்த்து, தமிழ் இலக்கியத்தில் தனித்துக் கிளைத்துள்ள அகப்பொருள் வளங்களை அள்ளிச் சொரிந்திருக்கிறார். வள்ளுவப் பெருமான் உள்ளி உரைத்துள்ள காமப் பாலுக்குச் சானகி ராமரை ஆனவரையும் அமைதிகாட்டி அப் பாலின் சுவையைப் பண்படுத்தித் தம் நூலின் சுவையை மேலின்பமாக விளைத்தருளியுள்ளார்.

தமது கதாநாயகனுடைய பெருமைகளை மாதவர் வாய் மொழியால் ஓதியுணருந்தோறும் உவகை ததும்ப வெளிப்படுத்தியிருக்கிறார். உரைகள் தெய்வ மணம் கமழ்ந்து திகழ்கின்றன.

விசுவாமித்திரர் இராமனைக் குறித்து இதுவரை சனகனிடம் கூறியது, பிள்ளைக்குப் பெண்தேடி வந்துள்ள வாய்ச்சாலகன் ஒருவன் பெண்ணைப்பெற்ற தந்தை சிந்தை மகிழ்ந்து விழைந்து இசையும்படி வண்ணித்துப் பேசியதுபோல் எண்ணப்படுகிறது.

குலச் சிறப்பு, குடிப்பிறப்பு, சக்கரவர்த்தித் திருமகன் என்னும் அற்புதத் தகுதி, இளமை எழில், கல்வி நிலை, அருந் திறலாண்மை, பெரும்போர்வீரம், அத்திர சத்திரங்களின் அதிசய சித்தி, தெய்வப்பெற்றி என்னும் இன்னவாறான அரும்பெறல் நலங்களெல்லாம் இராமனிடம் ஒருங்கே குடிகொண்டுள்ளன என்று மாதவர் சொல்லி வந்ததைக் கேட்டு மன்னவன் உள்ளம் பூரித்து உவகை மீக்கூர்ந்தான். உடனே உரையாட நேர்ந்தான்.

சனகனது மறுமொழி

வில்லும் காண்பார் என்று தொடங்கிக் கோசிகர் சொல்லி வந்தவற்றை யெல்லாம் உள்ளம் களித்து மாந்தி உவந்து விழைந்துள்ள சனகன் முனிவருக்கு இனி மறு மொழி கூறவேண்டும்.

மன்னவன் ஈண்டு என்ன பேசியுள்ளான்? என்று நாம் எதிர்பார்க்கிறோம். பேச வுரியன யாவை? என ஆசையுடன் எண்ணி நோக்குகின்றோம். எதிர்மொழி முதிர் விழைவாயது.

தவசியின் கருத்தை அவருடைய உரைகளால் அரசன் நன்கு உணர்ந்து கொண்டான். "இராமனுக்கு உன் மகளாகிய சீதையை மணம் செய்து தருக" என்னும் அளவில் மொழிகள் குறிப்பாக வெளி வந்துள்ளன. அவர் உரைக்கு யாதும் மறுக்க முடியாது. உடனே இசையவும் இசைவில்லை.

இந்த நிலையில் சனகன் பதில் உரைத்திருக்கிறான். அவனது விநய வார்த்தை நனி நயமுடையது. அதி நாகரீகமாய் உணர்வு நலம் சுரந்துள்ளது. மன்னன் பேசியிருப்பதைப் பாருங்கள்!

மாற்றம்யா துரைப்பது மாய விற்குநான்
தோற்றவா றெனமனம் துளங்கு கின்றதால்
நோற்றனள் நங்கையும் நொய்தின் ஐயன்வில்
ஏற்றுமேல் இடர்க்கடல் ஏற்றும் என்றனன்.
(கார்முகப்படலம், 1)

கோசிகர் முன்னம் பேசியவற்றிற்குச் சனகன் இவ்வாறு பதில் கூறியிருக்கிறான். அந்தப் பேச்சிற்கும் இந்தப் பதிலுக்கும் என்ன சம்பந்தம்? இராமனுடைய குலமுறையையும் குண நலங்களையும் விழைந்துகூறினரே யன்றிக் கலியாணத்தைப்பற்றி வெளிப்படையாக முனிவர் யாதும் பேசவில்லை. இருந்தும் மன்னன் இன்னவாறு திருமண உரிமையை உரை செய்துள்ளான்.

அறிவாளிகளுடைய உரைகளில் சுவையும் மணமும் மிகவும் கமழ்கின்றன. புத்தி நுட்பமான உய்த்துணர்வுகள் உள்ளே பதிந்து உவகை நிலையமாய் மொழிகள் ஒளிசெய்து மிளிர்கின்றன.

தவசி கலைஞானங்களில் தலை சிறந்தவர். அரசன் மெய் யுணர்வுடைய நல்ல ஆசார சீலன். இருவரும் உரைகள் வழங்கி இங்கே பண்ட மாற்றுச் செய்கின்றார். காரியக் குறிப்புக்களைக் கூரிய மதிநலத்துடன் காட்டிச் சீரிய நிலையில் செயலாற்றி யுள்ளனர். இருவர்மொழிகளிலும் அறிவுமணம் பெரிதும் கமழ்கின்றது.

யாரும் வியந்து போற்றும்படி இராமனுடைய அருமை பெருமைகளை முனிவர் புகழ்ந்து கூறினர். அவரது உள்ளக் கிடக்கையைச் சனகன் ஓர்ந்து கொண்டான். பிள்ளைக்குப் பெண் தரவேண்டி அவர் பேச்சுக்கள் பெருகி வந்துள்ளன. வரவு நிலையை உணர்ந்து உளம் மிக உவந்தான். தனக்கு முழுதும் சம்மதமே; ஆயினும் தன் உடன்பாட்டை உடனே விரைந்து வெளியிடாமல் ஆந்துணையும் அமைதியாய் வேந்தன் விநயமொழி பகர்ந்தான்: "தேவரீர் இதுவரை கூறியன யாவும் பெருமகிழ்வு தந்தன. குலம் குணம் கலை வீரங்களில் இக்கோமகன் தலைசிறந்துள்ளமை தெளிந்தேன்; அடிகள் உரைக்கு மாருக வேறு கூறுவன யாவுள?" என்பான் "மாற்றம் யாது உரைப்பது" என்றான். மறுத்துச் சொல்வது ஒன்றும் இல்லை என்பதாம்.

"மாயவிற்கு நான் தோற்றவாறு என மனம் துளங்குகின்றதால்" என்றது எவ்வளவு திவ்விய மகிமைகளை யுடையனுயினும் கன்னிக்கு உரிமையாகப் பணையம் வைத்துள்ள வில்லைவளைத்தால் அன்றிப் பெண்ணைக் கொடுக்க முடியாது என்பதை மன்னன் இவ்வண்ணம் நளினமாக நவின்றுள்ளான் என்க.

தன் எண்ணத்தை முனிவர் எதிரே திண்ணமாகச் சொன்னல் அவர் சினந்து போகவும் கூடும் என நினைந்து இங்ஙனம் புனைந்து வனைந்து புகன்றான்.

வில்லை வளைத்தவனுக்கே கன்னியைக் கொடுப்பது என்று முன்னமே நியமனஞ் செய்துள்ளதே; இனி நான் என் செய்வேன்? அப்பொல்லாத தடையை எண்ணுந்தோறும் நெஞ்சம் துடிக்கின்றதே! என்றதிலேயே நடக்கவேண்டிய காரியத்தை மன்னன் உறுதியாக உரைத்துவிட்டான்.

தன்மீது தவசி வருத்தங் கொள்ளாதபடி வில்லை வெறுத்து வைதான். மாயவில் என்றது அதனல் நேர்ந்துள்ள தடையையும், இடையூறுகளையும் எண்ணி நொந்தவாறும்.

உலகத்தில் ஒருவனிடம் வில் இருந்தால் அது அவனுக்கு உதவியாய் நின்று நல்ல வெற்றியை நல்கும்; என்னிடம் இருப்பது யாதும் இதம் புரியாமல் எனக்கே இடர் விளைத்துள்ளதே! இதன் மாயா வல்லபம் என்னே! என்று மன்னன் மறுகினன்.

சிவன் அருளால் கிடைத்துள்ள தெய்வீக வில்லை இப்படி இகழ்ந்து கூறியது வந்துள்ள சக்கரவர்த்தித் திருமகனைத் தனக்கு மருமகனாக விரைந்து செய்துகொள்ள முடியாமல் இடையே தடையாய் நிமிர்ந்திருக்கும் இயல்பை நோக்கி என்க.

நோதல் எல்லாம் மணமகன்பால் தனக்குள்ள காதல் நிலையைக் காட்டி நின்றன. அரியது எளிதமைந்தமையின் ஆவல் மிகுந்தது.

இராமன் எப்படியும் வில்லை வளைத்தே தீரவேண்டும் என்று முடிவில் சனகன் இதமாகச் சொல்லியருளினான்.]

சொல்லி யிருக்கும் முறை சுவை சுரந்துள்ளது.

"ஐயன் வில் ஏற்றுமேல் நங்கையும் நோற்றனள்" என்றது கலியாணப் பந்தயமா வுள்ள வில்லை இராமன் விரைந்து நாண் ஏற்றினால் சீதை அருந்தவம் செய்த பாக்கியவதியே என்றவாறு. வில்லின் குதையில் நாண் ஏறினால் சீதை கழுத்திலும் உடனே மங்கல நாண் ஏறும் என்பதாம். நங்கையின் நோற்றலைக் குறித்து மொழிந்தது நம்பியின் ஏற்றத்தை நயந்து நோக்கி.

[பருவம் நிரம்பியும் அருமை மகளுக்குத் திருமணம் முடியவில்லையே என்று சனகன் பெருங்கவலை கொண்டிருந்தமை இடர்க் கடல் என்றதனால் அறிய நின்றது.

இடர்க்கடல் ஏற்றும் என்றது துன்பமாகிய கடலினின்று என்னை எடுத்து இன்பக் கரையில் ஏற்றுவன் என்றவாறு.]

வில் ஏற்றத்திலேயே கலியாணம் முதலிய எல்லா இன்ப நலங்களும் ஏறியிருக்கின்றன; அதனை ஒல்லையில் ஆற்றி யருள வேண்டும் என உறுதி தெளிய இனிது சொல்லினான்.

[நோற்றலுக்கு நங்கையைத் தெளிவாகக் குறித்திருத்தல் போல் இடர்க்கடல் ஏற்றலுக்குத் தன்னையோ, தன் குடும்பத்தையோ சுட்டிச் சொல்லாமல் பொதுவாக விட்டிருத்தலால் உலகம் முழுவதும் இடர் நீங்கி இன்பம் அடையும் என்பது இனிதுணர நேர்ந்தது. நேர்ந்துள்ள மணத்தால் நேர்வன இங்ஙனம் ஓர்ந்து கொள்ள வந்தன.]

[வில்லேற்றிச் சீதையை இராமன் மணந்தால், அரக்கரால் அல்லற்பட்டுள்ள எல்லாரையும் இடர்க்கடல் கடத்தி அவன் இன்புறுத்தியபடி யாம் எனப் பின்புறுவது முன்புற அறிய நின்றது.

ஏற்றுமேல் இடர்க்கடல் ஏற்றும் என்ற சொற்போக்கால் இராமன் வில் ஏற்றின் அரக்கரெல்லாரும் அல்லற் கடலில் ஏறுவர் என்பதும் பெறப்பட்டது.

எப்படியும் சீதை திருமணம் நல்லோர் வாழ அல்லோர் ஆழ அமைந்துள்ளதென்பது குறிப்பு.

மங்கல மொழிகள் பேசும்பொழுது மன்னன் வாயில் இடர்ச் சொல் எறியது அறத்திற்கு ஏற்றமாய் அரண் ஆற்றி நின்றது.

பேசுவதில் சதுரராகிய கோசிகர் எதிரே இவ்வாறு பதமாக அரசன் பதிலுரை கூறினன்.

“நான் எவ்வளவு எடுத்துச் சொல்லியும் வில்லை வளைத்தால் தான் பெண்ணைக் கொடுப்பேன் என்று நீ பிடிவாதமாகப் பேசுகின்றாயே!” என முனிவர் முனியா வண்ணம் சனகன் உரையாடியிருக்கும் வினயம் எண்ணுந்தோறும் இன்பம் சுரந்து வருகின்றது. உரைகள் உள்ளத்தின் உயர்வை உணர்த்தி நிற்கின்றன.

## வில் வந்தது

இவ்வண்ணம் கூறிய மன்னன் உடனே அங்கே வில்லைக் கொண்டு வரும்படி அமைச்சரிடம் குறித்தான். அவர் ஏவலரை ஏவினர். கார்முகச் சாலையை நோக்கி நால்வர் ஓடினர்.

அந்த வில் அழகிய பெரிய மணி மண்டபத்தில் வைக்கப் பட்டுள்ளது. பலவீரர்கள் பாதுகாவ லுடையது. சீதை கன்னி மாடத்தில் இருத்தல்போல் அது அங்கே மன்னி யிருக்கின்றது.

ஏவலர் வந்து சொல்லவே வில்லின் காவலர் அதிசய மிக அடைந்து உரிய சுமையாளரை உவந்து அழைத்தார். அனைவரும் வந்தார். சிலையைத் துதி செய்து தூக்கினர். அதன் உருவத் தோற்றமும் கனமும் உரையிட லரியன. பாரம் எவ்வளவு இருக்கும்? எனின், அதனைச் சுமந்து வந்தவரது அளவும் நிலையும் தெரியின் அதன் உளவறிந்து கொள்ளலாம். ஆகவே சுமையாட்களை முதலில் பார்ப்போம்.

ஒத்து வந்த அவர் எத்தகைய உருவினர்? எத்திற நிலையினர்? எத்துணை வலியினர்? எத்தனை பேர்? எப்படிக் கொணர்ந்தார்? இப்படி வரும் கேள்விகளுக்கெல்லாம் விடையாக அடியில் வருகின்றது. உறுவதை உய்த்து நோக்குங்கள்.

உறுவலி யானையை ஒத்த மேனியர் :
செறிமயிர்க் கல்எனத் திரண்ட தோளினர்
அறுபதி னுயிரார் ; அளவில் ஆற்றலர் ;
தறிமடுத் திடையிடை தண்டில் தாங்கினார்.

(கார்முகப்படலம், 3)

வில்லைத் தூக்கி வருகின்றவரை இங்கே நாம் நோக்கி நிற்கின்றோம்.

சுமந்து வந்தவர் மிகுந்த தேகபலம் உடையவர் என்பதை முதலடியில் அறிகின்றோம். மதயானையை ஒப்புரைத்தது அவர் தம் உடல்வலியும் பருமனும் திண்மையும் தெரிய.

சிலர் பருத்த தேகமுடையராயிருப்பர் ; சிறுத்த ஒரு சுமையும் சுமக்க முடியாமல் உடற் சுமையாளராய் உள் மூச்சு வாங்கி உலைந்து நிற்பர் ; இவர் அந்நிலையினர் அல்லர் ; [எத்துணைப் பாரத்தையும் எளிதில் எடுக்க வல்லவர் ; சுமை எடுத்தலை நாளும் பழகிப் பயின்று தோள்வலி ஏறினவர் என்பார், " செறிமயிர்க் கல் எனத் திரண்ட தோளினர் " என்றார். சுமந்து காய்ப்பேறித் திமில் கொண்ட திண்ணிய தோளினர் என்றபடி.]

அவ்வாறான ஆட்கள் எவ்வளவு பேர்? எனின், அறுபதினாயிரர் என்க. [கூட்டம் அதிகம் ஆனமையால் பலர் வலி குறைந்திருப்பரோ? என்று ஐயுறுவார்க்கு, ஒவ்வொருவரும் அளவில் ஆற்றலர் என்பதைத் தெளிவாக வலியுறுத்தினார்.]

பெருவலியுடைய இவ்வளவு பேரும் ஒரு முகமாய்த்திரண்டு அந்த வில்லுக்கு ஓர் மதிப்பாக இடை தொட்டுப் புடைசூழ்ந்து ஒப்பனை செய்துள்ளாரோ? எனின், அப்படி அன்று ; எல்லாரும் தனித்தனியே ஊக்கி உறுதியுடன் தூக்கிப் போந்தார் என்பதை இறுதியில் உரைத்தார்.

" தறிமடுத்து இடையிடை தண்டில் தாங்கினார் "

என்றதனால் வில்லைக் கொண்டு வருவதில் அவர் பட்டுள்ள பாடுகள் கண்டு கொள்ளலாம். தறி = குறுந்தடி.

நீண்ட தண்டாயுதங்களைப் பிணைத்துவைத்து வில்லை அதன் மேல் ஏற்றி இருமருங்கும் வரிசையாய் நெடிதுநின்று கடிதுசுமந்து இடை இடையே தாங்கு தடிகளில் நிறுத்தித்தகையாறிப் பெரும் பிரயாசையோடு மெல்ல மெல்லக் கொண்டு வந்திருக்கிறார்கள்

என்று தெரிகிறது. அதன் ஆற்றலும் பெருமையும் தெய்வத் தன்மையோடு செறிந்து எண்ணுந்தோறும் இறும்பூது விளைத்து வருகின்றன.

வில்லின் வருகை இங்கே அதிசய நிலையில் துதிசெய்யப் பட்டுள்ளது. அறுபதினுயிரர் என்றது உயர்வு நவிற்சியாகத் தோன்றுகிறது. இந்தத் தொகை இக்காவியத்தில் ஒரு மங்கல மரபாக அங்கங்கே குறிக்கப்பட்டு வருகிறது.

எட்டுச் சக்கரங்களையுடைய ஒரு பெட்டி வண்டியில் இவ் வில்லை வைத்து ஐயாயிரம் பேர் ஈர்த்துக்கொண்டு வந்ததாக வால்மீகர் சொல்லி யிருக்கிறார்.

கம்பர் இங்கே அறுபதினுயிரர் என்கின்றார். வில்லுக்கு மகிமை தர ஆளை அதிகப்படுத்தி யிருக்கிறார் என்று சொல்ல நேர்கின்றோம். ஆயினும், மூல நூலில் சொல்லியுள்ள படியே தாமும் சொல்லியிருப்பதாகக் குறித்த தொகை பொருத்தமுற அமைந்துள்ளது. என்னை? அறுபதினுயிரம் என்பது சம பாதியா அறுபட்ட பதினுயிரம் எனப் பிரிந்து ஐயாயிரம் எனக் கருத நின்றது.

கவி கருதியோ கருதாமலோ ஈண்டு இவ்வாறு இசைவாக இது மருவி யுள்ளது. அரிய பொருள்களை உலகம் வியந்து போற்றும்படி பெருமித நிலையில் கவிகள் புனைந்து கூறுவது மரபு.

இக்காலத்தில் ஒரு யந்திரத்தைக் குறித்துக் கூறுங்கால் அது அறுபது குதிரைகளுடைய ஆற்றல் அமைந்தது என்று சாற்றுவதுபோல வில்லையும் இங்கே போற்றிக் கொள்க.

தோள்வலம் நிறைந்த அறுபதினுயிரம் ஆள் வலி கொண்டது அப்பாரவில் என்று பாராட்டிய படியாம்.

இத்தகைய பெருவில்லை ஆயுதசாலையிலிருந்து அரசவைக்குத் தூக்கி வருதலை அறிந்ததும் நகரிலுள்ள மாந்தர் பலர் வியந்து வெளி வந்தார். இதுவரை வெளியேறாத அதனைக் கண்டதும் ஆண்களும் பெண்களும் அதிசயமுடன் துதிசெய்து பேசினர். அந்த உரையாடல்கள் அவ்வில்லின் பெருமையை விளக்கிப் பொதுமக்களின் மதி நலங்களை வெளிப்படுத்தி உரிமை சுரந்துள்ளன. சில மொழிகளை இங்கே கண்டு செல்வோம்.

சங்கொடு சக்கரம் தரித்த செங்கைய
சிங்கவே றுஅல்லனேல் இதனைத் தீண்டுவான்
எங்குளன் ஒருவன்? இன்று ஏற்றின் இச்சிலை
மங்கைதன் திருமணம் வாழுமால் என்பார். (1)

கைதவம் தனுவெனல் கனகக் குன்று என்பார்;
எய்தவன் யாவனோ ஏற்றிப் பண்டு என்பார்;
செய்ததத் திசைமுகன் தீண்டி யன்றுதன்
மொய்தவப் பெருமையின் முயற்சி யால் என்பார்; (2)

திண்ணெடு மேருவைத் திரட்டிற்றோ என்பார்;
வண்ணவான் கடல்பண்டு கடைந்த மத்தென்பார்;
அண்ணல்வாள் அரவினுக்கு அரசனோ என்பார்;
விண்ணிடு நெடியவில் வீழ்ந்த தோளென்பார்; (3)

என்னிது கொணர்கென இயம்பினான் என்பார்;
மன்னவர் உளர்கொலோ மதிகெட்டார் என்பார்;
முன்னையூழ் வினையினால் முடிக்கிலாம்என்பார்;
கன்னியும் இச்சிலை காணுமோ என்பார். (4)

இச்சிலை உதைத்தகோற்கு இலக்கம் யாது என்பார்;
நச்சிலை நங்கைமேல் நாட்டும் வேந்து என்பார்;
நிச்சயம் எடுக்கும்கொல் நேமியான் என்பார்;
சிற்சிலர் விதிசெய்த தீமைதான் என்பார்; (5)

மொய்த்தனர் இன்னணம் மொழிய மன்னன்முன்
உய்த்தனர் நிலமுது குளுக்கிக் கீழுற
வைத்தனர் வாங்குநர் யாவ ரோஎனக்
கைத்தலம் விதிர்த்தனர் கண்ட வேந்தரே. (6)
(கார்முகப்படலம், 5-10)

மிதிலை மக்கள் வில்லைக்குறித்துப் பேசியுள்ளவற்றுள் எத்தனை கருத்துக்கள், எவ்வளவு குறிப்புக்கள் வெளிப்பட்டிருக்கின்றன! ஊர்ப்பேச்சுகளில் உண்மை யுணர்ச்சிகள் பல ஒளிவீசி வெளி வருகின்றன. அவர்களுடைய பழக்க வழக்கங்களும் பயிற்சி நிலைகளும் இயற்கை அமைதிகளும் தெரிகின்றன.

ஊர்வாய் உரைகள்

சங்கு சக்கரங்களையுடைய திருமாலை அன்றி இவ்வில்லைத் தொட வல்லவன் வேறு எங்கு உளன்? இதனை வில் என்று சொல்

வது வீண்; மேருமலையே இப் பார வில்லாய் இப்பாரில் வந்துள்ளது. பிரமா கையினுல் செய்யாமல் கற்பனையால் படைத்திருக்கிறுன். கடல் கடைந்த மத்தோ, ஆதிசேடனே, வானவில்லோ, யாதோ ஒன்று இந்த வடிவில் வந்துள்ளது. ஏதோ ஒரு நல்ல காலம் ஈண்டு எய்தி யிருக்கிறது!

இதனை ஏன் மன்னர்பிரான் இன்று எடுத்துவரச் சொன்னுர்? நம் பெண்ணரசிமேல் ஆசையாய் யாராவது அரச குமரர்கள் வளைப்பதாக வளைந்து வந்திருக்கிறுர்களோ? அப்படி வந்தால் அவர் அறிவீனர்களே யாவர்; அவமானம் அடைந்து போவர்.

மன்னவர் உளர்கொலோ மதி கெட்டார்?

என்றது முன்னம் பலர் வில் வளைக்க விழைந்து வந்து மானம் அழிந்து போயுள்ளமையால் இன்னமும் அப்படி மதி கெட்ட மன்னவர் உளரோ? என்றவாறு. அரச திருவுடைய வீரமரபினரையன்றி வேறொருவர் வரமுடியாது என்பது ஊரார் எண்ணம் ஆகலின் மன்னவர் என மதித்துக் கூறினுர்.

இன்னவாறு பல பல பேசிப் பொது மக்கள் அதிசயித்து நிற்க வில்லைக் கொண்டு வந்து அரசவை முன்னே வரிசையுடன் வைத்தார்.

உய்த்தனர் நிலம் முதுகு உளுக்கிக் கீழ் உற

என்றதனுல் வில்லைக் கீழேவைத்த பொழுது அந்த இடம் அடைந்துள்ள நிலைமை அறிய நின்றது. முதுகு உளுக்கல் என்றது பெருஞ் சுமை எடுத்து வருந்தி வருகின்ற ஒரு மனிதனது காட்சியை எதிரே காட்டி யுள்ளது. காட்சி யெல்லாம் சிலையின் மாட்சியைத் தலைமையாகப் போற்றி வந்துள்ளன.

பெரும்பாரமான அந்த அற்புத வில்லைக் காணவே, "அம்மா! இதனை வளைக்க இம் மாநிலத்தில் யார் உளர்?" என்று அங்கே குழுமியிருந்த அரசர் அனைவரும் அஞ்சி அலமந்தார்.

"கைத்தலம் விதிர்த்தனர் கண்ட வேந்தரே" என்றமையால் அவருடைய அச்சநிலை அறிய வந்தது.

ஊராரும் அரசரும் இவ்வாறு பேராச்சரியமடைந்து உள்ளம் அஞ்சி உளைந்திருக்க வில் வந்து சேர்ந்தது. அவையில் விசாலமான இடம் பெற்று வியனிலையில் அது வீற்றிருந்தது.

வில்லைக் காணவே இராமன் உள்ளத்தில் வீர ஒளி வீறிட்டெழுந்தது. எல்லார்க்கும் அச்சத்தை விளைத்துள்ள அதனைத் துச்சமாக எண்ணித் துணிவு மீக்கொண்டான். பசித்த சிங்கம் உரிய இரையைக் கண்டு உவந்து கொண்டதுபோல உளங் களிகூர்ந்து இளங்குமரன் அங்கு விறைந்திருந்தான்.

வீர நாயகனான இப்பேரழகனைச் சனக மன்னன் ஆர்வமீதூர்ந்து பார்த்தான். அதன் பின் வில்லை நோக்கினான்; வேதனை அடைந்தான். சீதையை நினைந்தான்; தெருமாலுழந்தான். அரசன் கருதியுள்ளவதை அருகில் இருந்த அமைச்சர் தெரிந்தார்; அமைதியுடன் உறுதி கூற நேர்ந்தார். மானசமான இந்த விசித்திரக் காட்சிகளைக் கவிப்படத்தில் கண்டு களிப்போம்.

போதகம் அனையவன் பொலிவு நோக்கி, அவ்
வேதனை தருகின்ற வில்லை நோக்கித், தன்
மாதினை நோக்குவான் மனத்தை நோக்கிய
கோதமன் காதலன் கூறல் மேயினான். (கார்முகப்படலம், 11)

சனகனுடைய மனநிலைகளை இனிமையாக வெளியிட்டிருக்கும் இக்கவியின் கவினைக் கண்ணூன்றிக் காண்க.

வில் வந்தது; எல்லாரும் வியந்தார். அப்பொழுது மன்னன் எப்படியிருந்தான்? யாது செய்தான்? ஏது நினைந்தான்? என்ன பேசினான்? என இன்ன வண்ணம் யாரும் எண்ண நேர்வர். அவ்வண்ணங்களை யெல்லாம் கவி இங்கே வடித்துக் காட்டியுள்ளார்.

போதகம் அனையவன் பொலிவு நோக்கி

என்றது அரசு நோக்கின் அமைதி நோக்கி. போதகம் = யானைக் கன்று. காளைப்பருவமாய் வேள் விரும்பு அழகுடன் வந்துள்ள வேழம் என்க. திருமணத்துக்குரிய உருவச்செவ்வி கருதி வந்தது.

வில்லைக் கண்ட வேந்தர் சித்தம் திகைத்துக் கைத்தலம் விதிர்க்கவே சனகன் இராமனைக் கண்ணூன்றிக் கவனித்தான். அவ்வண்ணல் வியப்பும் விம்மிதமும் யாதும் இன்றி வீரப்பொலிவோடு அமைதியாய் வீற்றிருந்தான்; அந்தக் கம்பீர நிலையைக் கண்டு வியந்து கருதி மகிழ்ந்தான்.

அடுத்து வில்லைப் பார்த்தான்; உள்ளம் துடித்தான்;

"இளமை நலம் கனிந்த சுகுமாரனான இந்தக் கட்டழகன் வலிய பெரிய அந்த முரட்டு வில்லை எப்படி வளைப்பான்? இப்படி மூளும் என்று தெரிந்தால் இக்கொடிய நியமனத்தை முன்னமே குறியாமல் விட்டிருக்கலாமே! உலகம் அறிய உறுதிசெய்துள்ளோமே! திருமணப் பணயமாய் நெடிது நிலைத்துவந்த இது இன்று எனக்குக் கொடிய துயரமாய் நேர்ந்ததே! இக் குலமகன் இதனை வளையாது போனால் என் குலமகள் நிலைமை என்னும்?" என மன்னன் இங்ஙனம் பல பல நினைந்து நெஞ்சம் அலைபாய நிலை துளங்கி யிருந்தான் ஆதலால்,

"வேதனை தருகின்ற வில்லை நோக்கித், தன்
மாதினை நோக்குவான்"

என்றார். இராமனையும் வில்லையும் மாறி மாறிப் பார்த்துச் சீதையை நினைந்து சனகன் மறுகி யுள்ள மனச் சலனங்களை இங்கே நாம் கண் எதிரே காண்கிறோம்.

வலிய வந்து வாய்த்துள்ள கோமகனைத் தன் மாமகளுக்கு மண மகனாக்கி மருமகன் எனக் கண்டு களிக்கக் காதல் மூண்டுள்ள சனகனுக்கு இடையே தடையாய் வில் அல்லலை விளைத்திருக்கலால், வேதனை தருகின்ற அவ்வில் என நோதலோடு நுவல நேர்ந்தது. சுட்டு அதன் அரிய ஆற்றலையும் உலகறி தோற்றத்தையும் உணர்த்தி நின்றது. சிலையை அத்தலைமகன் வளைத்தால் தன் குல மகள் நலமிகப் பெறுவாள் ஆதலால் வில்லை நோக்கி, வீரனைப் பார்த்து, மகளை நினைந்து மறுகினான் என்க.

இங்ஙனம் அலமரலுறுகின்ற மன்னனது நிலைமையைக் குறிப்பால் உணர்ந்த சதானந்த முனிவர் காரியத்தை விரைந்து முடிக்கக் கருதி விசுவாமித்திரரோடு வில்லைக் குறித்து விநயமாகப் பேசத் தொடங்கினார்.

"மாதினை நோக்குவான் மனத்தை நோக்கிய
கோதமன் காதலன் கூறல் மேயினான்"

என்றமையால் அம்மாதவனது குறிப்பறியும் திறனும் கூரியநீர்மையும் குணசாதுரியமும் உணரவந்தன. கோதமன் காதலன் என்றது சதானந்தரை. காதலன் = மகன்.

கௌதம புத்திரர் ஆகிய அவர் சனகனுக்கு மந்திரியாயும் குருவாயும் மருவி யுள்ளார். மதிநுட்பமும் நூலறிவும் நன்கு வாய்ந்தவர் ஆதலால் அரசனது குறிப்பையும், அமைந்துள்ள கருமநிலையையும் அதிநுட்பமாக உணர்ந்து காரியமுடிவு கருதிக் கோசிகரை நோக்கிப் பேசத் தொடங்கினர்.

புறத்தே சனகன் இராமனை நோக்கியதும், வில்லைப் பார்த்ததும், அகத்தே சீதையைச் சிந்தித்ததும், அந்நோக்கங்களைச் சதானந்தர் நோக்கிக் கோசிகரை நோக்கியதும், அவ்வெல்லாவற்றையும் கவி நோக்கி நம் நோக்கு எதிர்வைத்து நம்மை நோக்கி யுணரும்படி ஊக்கியுள்ளதும் பலவகை நோக்குகளோடு உணர்வுக் காட்சிகளாய் இதில் உவகை சுரந்துள்ளன.

மன்னன் மனத்தை நோக்கிய மந்திரி மாதவன் முகத்தை நோக்கிப் பேசினன். அப்பேச்சின்வளத்தை நாம் நோக்குவோம்.

## வில்லின் வரலாறு

இப்பொழுது இங்கே வந்துள்ளவில் முன்னம் சிவன் அமிசமாய்த் தோன்றிய வீரபத்திர மூர்த்தி கையில் பிடித்துப் போர் ஆற்றியது; போராற்ற லுடையது; சிவபெருமானை மதியாமல் தக்கன் மதமீறி ஒரு வேள்வி செய்தான். அமரர் பலர் அங்கே குழுமி யிருந்தனர். உமாபதி அறிந்தார்; உள்ளம் கடுத்தார். அந்தக் கோபத்தீ நெற்றிக்கண் வழியே ஒளி வீசியது; அதிலிருந்து வீரபராக்கிரமம் உடைய ஒரு விக்கிரம உருவம் தோன்றியது. அது உக்கிர வீரபத்திரன் என உயர்பேர் பெற்றுப் படைக்கலங்கள் பல ஏந்தித் தக்கனது யாகசாலையை அடைந்தது. தேவர் யாவரும் அஞ்சி ஓடினர். கோபமீதூர்ந்து வந்த வீரன் நேரே நேர்ந்தவரைத் தொலைத்துத் தக்கன் தலையைத் துணித்து வீழ்த்தினன். வேள்வியை அழித்து வீரவெறியோடு வில்லும் கையுமாய் நின்ற அவன் மேருமலையை நோக்கி மீண்டு வந்தான். விண் வழியே விரைந்து வருங்கால் அக்காலத்தில் மிதிலையில் அரசு புரிந்து வந்த தேவராதன் என்னும் அரசன் தவராசயோகியாய்ச் சிவபத்தியில் சிறந்திருந்தான். தன் கையில் உள்ள வில்லைக் கண்டு விண்ணவர் நடுங்குதலால் அதனை அவ் வண்ணலிடம் கொடுத்து அவ்வீரமூர்த்தி அகன்று போனன். மந்திர முறையில் தந்து போனமையால் அச்சிலையை வந்தனையுடன் வாங்கிப்

பூசித்து வந்தான். வழிமுறையே குல பரம்பரையாக விழுமிய நிலையில் அது விளங்கி வருகின்றது. முக்கட் பரமன் அருளால் கிடைத்துள்ளமையால் இதற்குத் திரியம்பகம் என்று பெயர். திரி = மூன்று. அம்பகம் = கண். மூவுலகங்களையும் வெல்ல வல்லது என்பதாம். வில்லின் சரிதத்தை இங்ஙனம் சொல்லி முடித்துப் பின்பு சீதை தோன்றிய நிலையைப் பேசலானார்.

## சீதையின் தோற்றம்

எங்கள் மன்னர் பெருமான் புத்திரப்பேறு கருதி இருபது ஆண்டுகளுக்கு முன்னர் ஒரு வேள்வி செய்யத் தொடங்கினர். யாகசாலைக்கு உரிய நிலத்தை விதி முறைப்படி முதலில் உழுதோம். ஏழாவது சால் உழுது வருங்கால் அக்கொழுமுகத்திலிருந்து ஓர் எழில் உருவம் ஒளிவிட்டு எழுந்தது. கிளைத்து நோக்கினோம்; கண் கொள்ளாகக் கட்டழகுடைய பெண் குழந்தையைக் கண்டோம். பெருமகிழ்ச்சி கொண்டோம். "மகவை விழைந்து மகம் செய்ய நேர்ந்தோம், பரமன் அருளால் திருமகள் அனைய ஒரு மகளைப் பெற்றோம்" என்று அரசு உள்ளம் பூரித்து உவந்து கொண்டுபோய் அரசியிடம் கொடுத்தார். ஆனந்த பரவசராய் யாவரும் களித்தார். ஊரும் நாடும் உவகை மீக்கூர்ந்தன. சீரும் சிறப்பும் செய்து, தெய்வம் தொழுது கண்மணி எனக் கருதி அப்பெண்மணியை வளர்த்து வருகின்றோம் என மேலும் தொடர்ந்து சொல்லி வந்தார். அவருடைய உரைகளைக் கவிகளில் காண்போம்.

இரும்பனைய கருநெடுங்கோட் டிணையேற்றின் பணையேற்ற
பெரும்பியலில் பளிக்கு நுகம் பிணைத்ததனோடு அணைத்திர்க்கும்
வரம்பில்மணிப் பொற்கலப்பை வயிரத்தின் கொழுமடுத்திட்டு
உரம்பொருவில் நிலம்வேள்விக்கு அலகில்பல சால்உழுதேம்.

வேள்வி செய்தற்கு உரிய இடத்தில் முன்னதாக நல்ல பயிர்களை வளர்த்து அவற்றை அப்படியே பசுக்களுக்கு ஊட்டி அதன்பின் அங்கே யாகசாலை அமைப்பது வழக்கம். அந்த மரபின்படி விளைவு புரிய முதலில் உழுதார். உழுத காளைகளின் நிலை, நுகத்தின் திறம், கலப்பை கொழுக்களின் சிறப்பு இதில் குறிக்கப் பட்டுள்ளன. தங்கக் கலப்பையில் வயிரத்தால் செய்த கொழுவைப் பூட்டி உழுதார் என்றது அரசனது திருவின் பெரு

மையையும், கருதிய கருமத்தின் பதிப்பையும் உணர்த்தி நின்றது. அழகிய திரு ஓர் விளைவாய் விளைந்து வரும் செழுதகைமையும் தெளிவுற உழுதகைமை வந்தது. இங்ஙனம் உழுது வருங்கால் நிகழ்ந்ததை அயலே மொழிகின்றார்.

உழுகின்ற கொழுமுகத்தின் உதிக்கின்ற கதிர்ஒளிபோல்
பொழிகின்ற புவிமடந்தை உருவெளிப்பட் டெனப்புணரி
எழுகின்ற தெள்ளமுதோடு எழுந்தவளும் இழிந்தொதுங்கத்
தொழுகின்ற நன்னலத்துப் பெண்ணரசி தோன்றினாள்.
(காமுகப்படலம், 17)

சீதை உதித்த காட்சியை இதில் நாம் கண்டு களிக்கின்றோம். அந்த இளங் குழந்தை தோன்றிய பொழுது பால சூரியன்போல் மேல் எங்கும் செஞ்சோதி வீசியது. பூமிதேவியே ஒரு குழவி உருவில் வெளி வந்ததுபோல் ஒளி மிகுந்து இலட்சுமிதேவியும் இலட்சையுறும்படியான பேரழகோடு அது பெருகி எழுந்தது. உலகமெல்லாம் உவந்து தொழத்தக்க விழுமிய நிலையில் வெளி வரவே அரசன் உழுவலன்போடு அவ் இளங் குழவியைத் தழுவி எடுத்துத் தன் குலவிளக்காக உளமிகக் களித்துப் பேணிவருகின்றான் என்க.

தெய்வ திருவருளால் எய்திய அப்பெண்ணரசியை மன்னனது செய் தவப் பயனாக எண்ணி விதேக நாடு முழுவதும் விழைந்து போற்றி வருகின்றது.

"புணரி எழுகின்ற தெள் அமுதோடு எழுந்தவள்"

என்றது இலக்குமியை. புணரி = கடல். அமிர்துடன் பாற்கடலில் பிறந்த அத்திருமகள் உழு புழுதியோடு நிலத்திற் பிறந்த இவ் ஒரு மகளுக்கு இழிந்து ஒதுங்கியது, உருவ எழிலை மட்டும் நோக்கி யன்று; உலகம் நலமுற உதித்திருக்கும் அருமையும் அமைதியும் கருதியாம்.

அன்னவளது அம்சமாகவே தோன்றியிருப்பினும் இது பொழுது இன்னவள் உலகு உயிர்கள் உய்ய வந்துள்ள ஒரு குல மகனுக்கு உரியதாரமாய் நேர்ந்து அரியன செய்ய மூண்டிருக்கும் நிலைமையும் தலைமையும் ஓர்ந்து, பதவி நீங்கிய பழைய கிழவியாய் உளமிக நாணி அயலே அவள் ஒதுங்கினாள் என்க.

புவிமகளையும் பூமகளையும் இணைத்துக் கூறியது இம் மாமகளின் மகிமை அறிய. இங்ஙனம் தோன்றிய இக்குலமகளுடைய குணநலங்களையும் எழில் நிலைகளையும் இனி எடுத்துக்கூறுகின்றார்.

குணங்களைஎன் கூறுவது? கொம்பினைச்சேர்ந் தவையுய்யப்
பிணங்குவன ; அழகுஇவளைத் தவம்செய்து பெற்றதுகாண்!
கணங்குழையாள் எழுந்ததற்பின் கதிர்வானிற் கங்கைஎனும்
அணங்கிழியப் பொலிவிழந்த ஆறொத்தார் வேறுற்றார். 18

ஒரு நல்ல குலமகனுக்குப் பெண் தேடி வந்தவர், அம்மணமகளின் குணநலங்களையும் அழகையும் குறித்து ஆர்வத்தோடு முதலில் விசாரிப்பது வழக்கம்; அந்த முறையில் வந்திருக்கும் விசுவாமித்திரரிடம் பெண்ணின் சார்பாகச் சதானந்தர் இவ் வண்ணம் பேசியுள்ளார்.

சீதையின் குணங்கள் எப்படி? என்று மாதவர் கேட்க அதற்குப் பதில் கூறியதுபோல் மொழிகள் வந்திருக்கின்றன.

குணங்களை என் கூறுவது? என்று கூறியிருக்கும் கூர்மையை நோக்குக. உரையிடலரிய பெருநீர்மையள் என்பதாம்.

உயர்ந்த பெண்மைக் குணங்களெல்லாம் இப்பெண்ணரசியிடம் ஒருங்கே நிறைந்து உவந்து குடிகொண்டிருக்கின்றன என்பார், "கொம்பினைச் சேர்ந்து அவை உய்யப் பிணங்குவன" என்றார். பிணக்கம் இணக்கத்தின் ஆவலை உணர்த்தி நின்றது.

அன்பு அடக்கம் அருள் அமைதி நிறை பொறை முதலிய இனிய நீர்மைகள் யாவும் இப்புனிதவதியைச் சார்ந்திருப்பதில் நீ முந்தி, நான் முந்தி என ஒன்றினும் ஒன்று விரைந்துபோராடி புலந்து வந்து புகுந்து கலந்து மகிழ்ந்திருக்கின்றன என்றவாறு.

அழகு எப்படி? என்று வினவ அது இவளைத் தவம் செய்து பெற்றது காண்! என்றார். உரைகளில் மிளிர்கின்ற உணர்வின் இரசனைகள் உணருந்தோறும் உவகை யருள்கின்றன.

மக்களின் புண்ணியப் பேறு என யாண்டும் புகழ் மிகப் பெற்றுக் கண்ணியம் வாய்ந்துள்ள அழகும் அரிய பெரிய புண்ணியங்களைச் செய்து இப்பெண்ணரசியை நண்ணியுள்ளது என்பதாம்.

அமுதுக்குச் சுவைபோல் அழகுக்கு அழகு அருளும் அதிசய அழகினள் என உருவ நிலையைத் துதிசெய்த படியிது.

* அழகு எனும் அவையும் ஓர் அழகு பெற்றவே

என முன்னம் சொன்னதை இங்கே விரித்துத் தவசி வாய் மொழியால் மேலும் அழகுபடுத்தி இப்படி அழகாக விளக்கியிருக்கிறார். செயற்கை அழகு பெற்ற சீர்மை அது; இயற்கை அழகு பெற்ற நீர்மை இது. அதற்கும் இதற்கும் உள்ள அமைதி அறிக.]

[அழகினும் குணத்தை முதலில் குறித்தது அதன் உயர்வும் தகவும் கருதி. குணம் உயிரின் மணமாய் உள்ளே ஒளிர்வது அழகு புறத்தே உடலில் இனிதாய் மிளிர்வது என்க.

அழகும் குணமும் மணமகளுக்கு அவசியமே; ஆயினும் முன்னதாக எண்ணியுணர வேண்டியது இன்னதாம் என நுண்ணிதாகக் குறித்தார். பெண் கொள்வார் கண் கொள்ள வைத்த படியிது.]

உத்தம குணங்களும் உயர் பேரழகும் ஒருங்கே வாய்ந்த இக்குல மகள் தோன்றிய பின் உலகில் நிலவியிருந்த அழகிய மகளிரெல்லாரும் வெயில் எதிர் நின்ற விளக்காய் இயல் இழிந்து உயர்வழிந்து பொலிவிழந்து போயினர்.

[ஆகாய கங்கை இம்மண்ணுலகில் வந்தபின் மற்றை நதிகளெல்லாம் தாழ்ந்து நிற்க அது தலைமை எய்தியுள்ளது போல் உலக மங்கையர் எவரினும் சீதை உயர்ந்து ஒளி பெற்றுள்ளாள். இக்குலமகளின் நிலைமையைக் கூர்ந்து ஓர்ந்து கொள்க என்பது குறிப்பு.

புண்ணிய நதியாகிய கங்கையோடு எதிர் எண்ணியது தண்ணிய நீர்மை வாய்ந்த இப்பெண்ணரசியின் சீர்மை நோக்கி. உலக பாவங்களை யெல்லாம் ஒழிக்க வந்துள்ள புண்ணியவதி என்பதைக் கண்ணியமாகக் காட்டியருளினார். கங்கை வந்தது போல் இங்கு இம்மங்கை வந்துள்ளாள் என்பதாம்.]

இங்ஙனம் உதித்துள்ள இக்குலமகளை நிலைமை தெரியாமல் அரசர் பலர் விழைந்து வந்து அலமந்து உழன்றதையும், அதனால் விளைந்த விளைவுகளையும் இனிமேல் உரைக்கின்றார்.

சித்திரமிங் கிதுஒப்பது எங்குண்டு செய்வினையால்
வித்தகமும் விதிவசமும் வெவ்வேறே புறங்கிடப்ப
அத்திருவை அமரர்குலம் ஆதரித்தார் என அறிஞர்
இத்திருவை நிலவேந்தர் எல்லாரும் காதலித்தார். 19 (1)

---

* இந்நூல் பக்கம் 1014, வரி 24 பார்க்க.

கலித்தானைக் கடலோடும் கைத்தானக் களிற்றரசர்
ஒலித்தாழி எனவந்து மணம்மெழுந்தார்க் கெதிருடுத்த
புலித்தானைக் களிற்றுரிவைப் போர்வையான் போர்வில்லை
வலித்தானே மங்கைதிரு மணத்தானென் றியாம்வலித்தேம். (2)

வல்வில்லுக் காற்றூர்கள் மாரவேள் வளைகரும்பின்
மெல்வில்லுக் காற்றாராய்த் தாம்எம்மை விளிகுற்றார்
கல்வில்லோ டுலகீந்த கனங்குழையைக் காதலித்துச் (3)
சொல்வில்லால் உலகளிப்பாய் போர்செய்யத் தொடங்கினார்.

இம்மன்னர் பெருஞ்சேனை ஈவுதனை மேற்கொண்ட
செம்மன்னர் பொருளேபோல் புகழ்வாய்ப்பச் சிறந்ததால்
பொம்மென்ன வண்டலம்பும் புரிகுழலைக் காதலித்த
அம்மன்னர் சேனைதம தாசைபோல் ஆயிற்றால். (4)

மற்காக்கும் மணிப்புயத்து மன்னனிவன் மழவிடையோன்
விற்காக்கும் வாளமருள் மெலிகின்றான் எனஇரங்கி
எற்காக்கும் முடிவிண்ணோர் படையீந்தார் எனவேந்தர்
அற்காக்கை கூகையைக்கண் டஞ்சினவாம் எனஅகன்றார். (5)

அன்றுமுதல் இன்றளவும் ஆருமிந்தச் சிலையருகு
சென்றுமிலர்; போயொளித்தார் தேர்வேந்தர் திரிந்துமிலர்
என்றுமினி மணமுமில்லை என்றிருந்தேம் இவனேற்றின்
நன்றுமலர்க் குழற்சிதை நலம்பழுதா காதென்றான். (6)
(கார்முகப் படலம், 19—24)

பண்டு நிகழ்ந்த பல நிகழ்ச்சிகளை இங்கே நாம் கண்டு தெளிகின்றோம். சீதை பருவம் அடைந்து உருவநலங் கனிந்துள்ளமையை உணர்ந்து அரச குமாரர்கள் எல்லாரும் காதல்மீதூர்ந்து நோதலுழந்து மணந்து கொள்ள விரைந்து வந்து மறுகி யலைந்தார்.

தெய்வத் தேசுடன் நிலவியுள்ள இக் குல மங்கை ஆடவரெவரையும், நினையாமல் நிறை மிக நிறைந்து பெருமித நிலையில் பெருகி யிருந்தாள். தனது அருமை மகளுடைய நிலைமையை யுணர்ந்து சனக மன்னனும் மண வினை குறித்துத் தானாக யாதும் விரையாமல் ஞான நோக்குடன் நயந்திருந்தான்.

1. பெண்ணும் தந்தையும் இன்ன வண்ணம் இருப்ப மன்னர் எண்ணும் இயலு மிழந்து ஆசையால் இன்னலுழந்து திரிந்தார்.

" அத்திருவை அமரர்குலம் ஆதரித்தார் என
இத்திருவை நிலவேந்தர் எல்லாரும் காதலித்தார் "

என்றது பாற்கடல் கடைந்தபொழுது அமுதொடு பிறந்த திருவை தேவர்கள் விரும்பியதுபோல் இத்திருமகளைப் பூவேந்தர் விழைந்து நின்றார் என்றவாறு. இனம் தெரியாமல் இச்சித்து அழிந்தார் என்பதாம்.

அமரர் அவாவிய அம்மங்கை அமரர் தலைவனாகிய திருமாலுக்கே உரிமையாயினாள்; அதுபோல் அரசர் அவாவிய இம்மகளும் அரசர் பிரானாகிய இராமனுக்கே உரியளாவள் என்பது குறிப்பு. இங்ஙனம் தன்னிகரில்லாத் தலைவனுக்குரிய அரிய பொருளை மன்னவர் விரும்பி இன்னல் அடைந்து பன்முறை வந்து கொன்னே யலைந்தது நகைப்புக்கு இடமாயது என்றபடி.

வித்தகமும் விதிவசமும் வெவ்வேறே புறம் கிடப்ப என்றது மதியும் விதியும் இவ்வாறு மாறுபட்டிருத்தலால் அதிபதிகள் முயன்றது மதியீனமாயது என அவரது அவல நிலைக்கு இரங்கிக் கூறினார். வித்தகம் = அறிவு, ஞானம்.

இன்னார்க்கு உரியள் என விதி முன்னமே இசைத்திருக்கவும் மன்னர் மதி கெட்டு வீணே மறுகி அலைந்தார் என்பதாம்.

2. ஆசை வயத்தராய் அறிவு பாழ் போய் ஓயாது வரவே சனகன் ஓர் உபாயம் செய்தான். தெய்வீக நிலையில் தன்பால் எய்தியுள்ள வில்லை வளைக்கின்றவன் எவனோ அவனுக்குச் சீதை உரியவளாவள் என்று உலகறிய உரைத்தான்.

" புலித்தானைக் களிற்று உரிவைப் போர்வையான் "

என்றது சிவபெருமானை. தானை = ஆடை. புலித்தோலை அரையில் உடுத்தி, யானைத் தோலை மேலே போர்த்திருப்பவர் என்க. அப்பரமனுடைய வில் ஆதலால் போர்வையான் போர் வில் என வந்தது. புலி யானைகளை உரித்ததைக் குறித்தது அவன் வலியும் நிலையும் தெரிய.

வலித்தானே மங்கை திருமணத்தான் என்று யாம் வலித்தேம்.

மணத்தை விரும்பி வந்து தொந்தரவு செய்பவர்க்கு இந்த வீரப் பந்தயத்தை விதித்து வைத்தார். வலித்தல் இரண்டனுள் முன்னது வளைத்தல்; பின்னது என்ன? உறுதியாகச் சொன்னோம்; உடன்பட்டோம் என்னும் பொருளில் வந்துள்ளது. ஆயினும் அதன் உள்ளே ஓர் எள்ளல் இசைந்திருக்கின்றது.

"கலியாணம் கருதி வருகின்ற வீர வேந்தர்களே! முன்பு அந்த வில்லை வளையுங்கள்; பின்பு இந்த இல்லை விழையுங்கள்; இல்லையானால் சொல்லாது போய்விடுங்கள்" என்று அவர் சொல்லியுள்ளமை இச் சொல்லால் அறிய வந்தது. வில்லை எவரும் எளிதில் வளைக்க முடியாது என்னும் துணிவினால் எள்ளற் குறிப்போடு இங்ஙனம் இளித்துச் சொல்லியுள்ளார் என்க.

3. இவ்வாறு பந்தயம் விதிக்கவே வேந்தர் பலர் விரைந்து வந்தார். உள்ளக் காதலால் வில்லைப் பார்த்தார். தூக்க முயன்றார்; அசைக்கவும் முடியவில்லை. பார்த்தால் மூங்கில்; தொட்டால் கல்லினும் இரும்பினும் கடினமாயுள்ளது. எந்த வகையினும் யாதும் செய்ய முடியவில்லை. சிந்தை திகைத்தார்; சனகனை நிந்தனை செய்தார். "ஏதோ மாயவில்; வஞ்சகமாக நியமித்து நம்மை ஏமாற்றி அவமானப்படுத்திவிட்டான்; இவனை எளிதில் விடலாகாது; போரில் வென்று பெண்ணைக் கவர்ந்து நாம் வீர மணம் செய்துகொள்ளவேண்டும்; இவன் சொல்லைக் கேட்டு வில்லை வளைப்பது ஏன்? நம் வில்லை வளைத்து இவனை ஒல்லையில் தொலைத்து நல்லது காண்போம்" என்று அரசரெல்லாரும் ஒருங்கே திரண்டு பெரும் படைகளுடன் மிதிலையை வந்து வளைந்தார்.

"வல்வில்லுக்கு ஆற்றார்கள், மாரவேள் வளைகரும்பின்
மெல்வில்லுக்கு ஆற்றாராய்"

என்றது ஈசன் வில்லை வளைக்கமாட்டாமல் ஆசை நோயால் அலமந்து அறிவுகெட்டுப் போக்கற்று ஆற்றமாட்டாமல் வீணே வம்புச் சண்டைக்கு வந்தார் என்றவாறு. மாரவேள் = மன்மதன். குறித்த சோதனையில் தேறாமல் காமவேதனை மீறி ஏமவேதனையாய் ஏன்று மூண்டார் எனப் போராட நேர்ந்தவரது புலைநிலையைப் புலப்படுத்தினார்.

எம்மை விளிகுற்றார் என்றமையால் கொடிய கொலை நோக்கோடு வெம்மையாய் அவர் சினந்து வந்துள்ளமை வெளியாயது.

4. இங்ஙனம் அரசர் மூண்டு திரண்டு வரவே சனக மன்னனும் படைகளைத் திரட்டி அடலுடன் எதிர்த்தான். அருள் நலம் கனிந்த ஞானசீலனாயினும் நல்ல மான வீரன் ஆதலால் முறைகேடாய்ப் போருக்கு வந்த அவரை நேருக்குநேர் வென்று நிலைகுலைத்து விட வேண்டும் என்று நெஞ்சம் துணிந்து

உள்ள சேனைகளையெல்லாம் ஒல்லையில் ஊக்கி உருத்து எதிர் நின்றான். பெரும் போர் மூண்டது. இருதிறப் படைகளும் கைகலந்து நெடுநாள் அமராடின. அதில் சனகன் படைகள் பல மாண்டன. மன்னர் பலர் ஒருங்கு திரண்டு பெருஞ் சேனைகளோடு தொடர்ந்து கொடும்போர் ஆற்றினமையால் தனி நிலையில் நின்ற இவன் சேனை தளர்ந்து தேய்ந்தது. இப்போர் ஓர் ஆண்டு வரை நீண்டு நின்றது. பன்னிரண்டு மாதங்களாகப் பலரோடு தனியே அமராட நேர்ந்தமையால் நிறைந்து நிலைத்திருந்த இவனது படைகள் குறைந்து போயின.

"இம்மன்னர் பெருஞ்சேனை ஈவுதனை மேற்கொண்ட
செம்மன்னர் பொருளேபோல் புகழ்வாய்ப்பச் சிறந்தது."

அந்தத் தேய்வைக் குறித்து முனிவர் இவ்வாறு ஒப்புரைத்து உய்த்துணர்வு தந்துள்ளார். தம்முடைய அரசன் சேனை தேய்ந்து ஓய்ந்து மாய்ந்து போயது என உண்மையைச் சொல்லி உள்ளே ஒரு நன்மையைக் குறித்திருக்கிறார்.

செம்மன்னர் = செம்மையும் நீதியும் உடைய செங்கோல் அரசர். ஈவுதனை மேற்கொண்ட என்றது அவர்தம் வண்மை நிலை தெரிய வந்தது.

மேகம் நீரைச் சொரிவதுபோல் வள்ளல்கள் தம்பால் உள்ள வற்றையெல்லாம் பிறர்க்கு அள்ளி வீசிவிடுவர்; விடவே பொருள் தேய்ந்துபோம்; புறத்தே அது தேயினும் உள்ளே புகழும் புண்ணியமும் ஓங்கி நிற்கும்; அதுபோல் சனகன் படை ஊரில் தேய்ந்து போயினும் அவனது கீர்த்தி யாண்டும் நீண்டு நின்றது.

உண்மைக்கும் உரிமைக்கும் நீதிக்கும் மன்னன் தனித்து நின்று போராடினான் என மாற்றலரும் போற்ற நேர்ந்தமையால் இவனது ஏற்றம் தேர்ந்து கொள்ளலாம்.

புகழைக் காக்க வள்ளியோர் பொருளை வீசியது போல் தன் மகளைக் காக்க இவ் ஒள்ளியோன் படைகளை வீசினான் என்க.

படைகள் தேயினும் எதிரிகள் உள்ளே புகாதபடி தன் புண்ணிய வலியால் பெண்ணரசையும் மண்ணரசையும் பாதுகாத்துப் பெருமித நிலையில் உறுதியாயிருந்தான் என்பது கருத்து.

கொடையாளிகள் பொருள் தேயினும் புகழ் ஓங்கிப் புண்ணிய சாலிகளாய் உயர் பதவியை அடைகின்றார். பொருள் யாதும் குறையாமல் குப்பைபோல் கூட்டித் தொகுத்துப் பெருக்கி வைத்திருப்பினும் உலோபிகள் புகழ் இழந்து புண்ணியம் ஒழிந்து பழி பாவங்களை யடைந்து இழி நிலையில் அழிகின்றார் என்னும் உண்மை இங்கே நுண்மையாக உணர்த்தப்பட்டுள்ளது.

ஞான மன்னன் சேனை நிலையைக் குறித்துச் சொல்லும் பொழுது இப்படி ஒரு ஞான நலனை விளைத்து மானவர் உணர்ந்து உய்யக் கவி மோனமா அருளியிருக்கிறார்.

இனி எதிரிகளுடைய சேனை நிலைகளைக் குறிக்கின்றார்.

"அம்மன்னர் சேனை தமது ஆசைபோல் ஆயிற்றால்"

சீதையைக் காதலித்து வந்த அரசர் படைகள் மேலும் மேலும் பெருகி நின்றன என்பதை இவ்வாறு உவமை காட்டி உரைத்தருளினார்.

நச்சி நின்ற இச்சை உச்ச நிலையில் ஓங்கி யுள்ளதுபோல் சேனைகளும் நிலைமீறி ஓங்கி யிருந்தன என்பதாம். இருப்பினும், கருதிய அவாது ஆசை கைகூடாததுபோல் படைகளும் ஒரு பயனும் பெறாமல் வறிதே வளர்ந்திருந்தன என்க.

பொருள்போல் சிறந்தது; ஆசைபோல் ஆயிற்று என இரு திறச் சேனை நிலைகளையும் குறித்து வந்திருக்கும் உவம வாசகங்கள் நுனித்து நோக்கத் தக்கனவாய் உதித்திருக்கின்றன.

5. படைகள் தேய்ந்தாலும் எதிரிகளுக்கு யாதும் இடங் கொடுக்காமல் சனகன் மதி வலியால் அரசை இனிது நடத்தி வந்தான். இவனது நிலைமையை நோக்கி இரங்கித் தேவர்கள் பல திவ்விய ஆயுதங்களை இவனிடம் உவந்து தந்தார். "மழ விடையோன் விற்காக்கும் வாள் அமருள் மெலிகின்றான் என இரங்கி விண்ணோர் படை ஈந்தார்" என்றதனால் இவனுடைய புண்ணிய நிலைமையும், அமரர்கள் இவனை மதித்திருக்கும் மாட்சியும் இனிது புலனும். மழவிடையோன் என்றது அழகிய இடப வாகனத்தையுடைய சிவபெருமான் என்றவாறு.

தேவதேவனுடைய வில்லைப் பாதுகாக்கும் புண்ணியசீலன் என்று கருதி, தேவர்கள் ஆவலோடு வந்து ஆதரவுசெய்தருளினார்.

இப்படித் தெய்வபலம் பெற்றதை அறிந்ததும் முன்னம் பகைத்து நின்ற அரசரெல்லாரும் அச்சம் அடைந்து சிதறி அகன்று போயினர்.

" அற்காக்கை கூகையைக் கண்டு அஞ்சினவாம் என அகன்றார் "

அரசர் உடைந்து ஓடிப்போனமையை இவ்வாறு உரைத்திருக்கிறார்.

காகமும், கூகையும்.

காக்கையும் கூகையும் பகைமை யுடையன. காலத்தின் உதவியால் ஒன்றை ஒன்று வென்று தொலைக்கும். கூகைக்குப் பகலில் கண் தெரியாது; இரவில் நன்குதெரியும். காக்கை பகலில் எதையும் கூர்மையாய் நோக்கும்; இரவில் யாதும் பாராது. பகலில் குருடுபட்டிருக்கும் கூகையைக் காகம்கொத்தித்துரத்திவிடும். அதுபொழுது யாதும் செய்யமாட்டாமல் அலமந்திருந்த கூகை இரவு வரவும் காக்கையைக் கொத்திக் கடுந்துயர் விளைக்கும். அச்சமயம் பல காக்கைகளும் ஒரு கூகைக்கு அஞ்சி ஓடி ஒளியும் ஆதலால் [சனகனுக்கு அஞ்சி ஓடிய அரசருக்கு அல்லின் காக்கை இங்கே உவமையாய் வந்தது. அல் = இரவு. கூகை = கோட்டான்.]

[* பகல்வெல்லும் கூகையைக் காக்கை ; இகல்வெல்லும்
வேந்தர்க்கு வேண்டும் பொழுது. (குறள் 481)

தமக்கு உரிமையான பருவ காலம் தெரிந்து பகைமேல் செல்ல வேண்டும் என அரசர்க்கு உறுதி கூறியிருக்கும் இந்த அருமைத் திருக்குறளை நினைவில் வைத்துகொண்டு மேற்குறித்த இறுதி யடியைக் கவி இங்கே இசைத்திருக்கிறார்.]

கூகையைக் காக்கை பகலில் வெல்லும் என்றமையால் காக்கையைக் கூகை இரவில் கொல்லும் எனச் சொல்ல நேர்ந்தது.

இடத்தொடு பொழுதும் நாடி எவ்வினைக் கண்ணும் அஞ்சார்
படைப்படல் இன்றிச் சூழும் மதிவல்லார்க்கு அரியது உண்டோ?
நடத்திடைக் காக்கை ஒன்றே ஆயிரம் கோடி கூகை
இடத்திடை அழுங்கச் சென்றாங் கின்னுயிர் செகுத்த தன்றே.
(சீவக சிந்தாமணி, 1927.)

* ஞாலம் புரக்கும் அரசர் கால நிலை தெரிந்து, இடவலி அறிந்து செல்லின் எதிரியை வெல்லலாம்; பருவம் தவறின் அல்லலாம் என்க. அல்லில் அலமரும் காக்கை பகலில் வெல்லுதலை எடுத்துக் காட்டியது கால உதவியைக் கருதி யுணர. பகைவரை வெல்லுதற்குரிய வகையும் வழியும் மதியும் கூறிய படியிது. இகல் = பகை, வலி, போர்.

வேலமர் தடக்கை வீரரிப் பாடி வீடுசென் றணைதலும் புறத்தோர்
ஆலமர் சினையில் பல்பெருங் காகம் அரும்பகல் அழிந்த கூகையினால்
சாலவும் இடருற் றலமரக் கண்டு தம்மிலே முகமுக நோக்கிக்
காலமும் இடனும் அறிந்தமர் செருத்தல் கடனெனக் கருதின ரன்றே.
(வில்லிபாரதம், 18ம் போர்ச்சருக்கம் 205)

அரசர் காலமும் இடமும் கருதி அமராற்றவேண்டும் என்பதற்கு அல்லினும் எல்லினும் வெல்லும் கூகையும் காகமும் அவர்க்கு முறையே இங்ஙனம் நல்ல அறிவூட்டி யுள்ளன.

வள்ளுவர் வாய்மறை உள்ளுவார் எல்லார்க்கும் பல்வேறு வகையில் இவ்வாறு உணர்வருளி வருகின்றது.

இகல் மிகுந்த காக்கை கூகைகளை அகப்பொருளிலும் கவிகள் சுவையாக இணைத்து உகப்புடன் வழங்கி யிருக்கின்றனர்.

நாகா பரணர் திருவெங்கை நாயகர் நல்லடிக்கன்
பாகா தவர்எனக் கூகூவென் றத்தி யதிலிருந்து
நீகா வலரை விலக்குகின் றாய் உயிர் நீத்திலனேல்
கூகாய்! நினதடல் காண்பேன் விடியிற் கொடிமுன்னமே.
(திருவெங்கைக்கோவை, 210)

ஒரு தலைவி கூறிய படியிது. இரவில் யாரும் அறியாமல் களவாய்த் தன் காதலன் தன்னை நோக்கி வந்தான்; வருங்கால் இடையே கூகை கூவியது; அந்த ஆந்தைச் சத்தம் அபசகுனம் என்றும், பிறர் அறிந்துகொள்வார்கள் எனவும் அஞ்சி அவன் திரும்பிப் போயினான். அதனை மறுநாள் இவள் தெரிந்து வருந்தினாள்; பின்பு ஒரு நாள் நடுச்சாமத்தில் காதலன் வரவை எதிர்பார்த்திருந்தாள். அப்பொழுது ஒரு அத்திமரத்திலிருந்து கூகை அலறியது; அதனைச் சினந்து தலைவி இவ்வாறு கூறினாள் என்க.

வெங்கை என்பது ஒரு தலம். அதில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமானைப் பாட்டுடைத் தலைவனாக வைத்து இது பாடப்பட்டது. நாக ஆபரணர் = அரவங்களை அணிந்தவர்.

சிவன் அடியை வணங்காதவர் அவநிலை யடைந்து கூ கூ என்று கூவி யுழலுதல் போல் நீ வாயலறி என் நாயகனை வர ஒட்டாமல் தடை செய்கின்றாயே! அவர் வராமையால் ஏங்கி இந்த இரவில் நான் சாகாமல் பிழைத்திருந்தேன் ஆனால் விடிந்தவுடனே பகலில் காக்கை முன் நீ படும்பாட்டை நான் பார்ப்பேன்

என்ற வஞ்சம் தீர்க்கும் கருத்தோடு அவள் உரையாடியிருக்கும் நிலையை இதில் ஊன்றிப் பார்க்க. கொடி = காக்கை. அடல் = வலி. கோவை நூல்களில் கூகை குழறுதல் என்பது ஒரு துறை.

இந்தத் துறையில் பலவகைச் சுவைகளைக் கவிகள் விசித்திரமாக விளைத்திருக்கின்றனர். மாதிரிக்குச் சில அடியில் வருகின்றன.

பேரும் உறந்தைக் குலோத்துங்க சோழன் பெருங்கிரிவாய்
மாருஇக் கங்குலின் மங்கைநல் லாய்வரும் கவ்வரிக்கே
ஆரும் எழுத்து ஒன்பதாம்எழுத் தாம்பெயர் ஆர்த்தெழுந்து
வீரும் பதினோர் எழுத்தாம் பெயரை விலக்கியதே.

(குலோத்துங்க சோழன் கோவை, 242)

ககரத்திற்கு ஆருவது எழுத்து கூ. ஒன்பதாவது எழுத்து கை. பதினோராம் எழுத்து கோ. கூகை குழறி நம் கோவை விலக்கியது என்பதாம். கோ = அரசன்; என்றது தலைவனை.

முரண்தரு வேலார்க்கு இயல்கவ் வரியின்
மொழியவரும்
இரண்டுடன் முன்னதற்கு அஞ்சு ஆறுஒடு ஒன்பது
இரைதல் வெண்ணெய்
திரண்டுறு வேலையில் தாழிச் சிதைவொக்கும்
செய்நகையால்
அரண்துகள் ஆக்கு இறை கோடீச்சுரமன்ன
ஆயிழையே. (கோடீச்சுரக்கோவை, 216)

ககர வரிசையில் இரண்டு, கா. முன்னது, க. அஞ்சு = அஞ்சுகிற. ஆறு, கூ. ஒன்பது, கை. கவ்வரியின் இரண்டுடன் முன்னதற்கு அஞ்சு ஆறோடு ஒன்பது என்றது காகத்திற்கு அஞ்சுகின்ற கூகை என்றவாறு. இரைதல் = கூவுதல்.

வெண்ணெய் திரண்டு வரும் பொழுது தாழியை உடைத்தது போல் என் காதலன் என்னை அணுகும் சமயம் கூகை கத்தித் தொலைத்ததே என்பதாம்.

ஆகவம் உற்ற மருவார் உடலை அருந்துவித்துக்
காக இனத்தை வளர்த்தார்என் றெண்ணிக் கருங்கமுகில்
மாக முகில்படர் ஆரூர்த் தியாகர் வரையணங்கே
கூகை குழறிப் பகைதீர்த்த வாநம் கொழுநரையே.

(திருவாரூர்க் கோவை, 241)

நம் காதலர் போரில் எதிர்ந்த பகைவரை வென்று காகங்களுக்கு விருந்து செய்தார் என்று கருதி அவரை நம்மிடம் வாராதபடி கூகை குழறிக் கெடுத்தது என்பதாம்.

காதல் துறையின் போக்கும் நோக்கும் ஓதற்கு இனியனவாய் உல்லாச உவகைகளை விளைத்து வருகின்றன. அகப்பொருளில் கவிகளுடைய கற்பனைகளும் விற்பன விநோதங்களும் மிகப் பெருகி யிருக்கின்றன.

அல்லிடைக் காக்கை கூகைக்கு அஞ்சும் எனப் புறப் பொருளில் வலியறிதலில் வந்துள்ள அது அகப்பொருளில் குறிதெரிதலில் கூடியிருத்தலை இதுவரை அறிந்தோம்.

6. இங்ஙனம் காலவலியாலும் தெய்வத் திருவருளாலும் சனகன் தெவ்வரை வென்று செவ்விய நிலையில் சிறந்திருந்தான். இகல்புரிந்து வந்த அரசரனைவரும் அடங்கி நின்றார். அரிய வில்லின் திறலையும், சனகனது மன நிலையையும் நன்கு தெரிந்துகொண்டமையால் மீண்டு மணம் குறித்து ஒருவரும் வரவே இல்லை.

"அன்றுமுதல் இன்றுவரை யாரும் இந்தச் சிலை அருகு, சென்றும் இலர்" என்றமையால் அந்தச் சோதனை வில் ஆதாரமாய் வந்த மன்னவருடைய வலி நிலைகளைச் சோதித்து வேதனை விளைத்து அவரை வெருட்டி விட்டுள்ளமை விளங்கி நின்றது.

வில் இருக்கும் திசையைக்கூட எட்டிப்பாராதபடி வெட்கிப் போயினர் என்பார், "போய் ஒளித்தார்; திரிந்தும் இலர்" என்றார். போனவர் மானம் போயுள்ளமை அறியவந்தது.

தேர் வேந்தர் என்றது போர் நேர்ந்து போந்த அவரது சீர் ஓர்ந்துகொள்ள. ஊர்ந்து வந்த தேர் விரைந்து ஓடிப்போவதற்குச் சாதகமாயிருந்தது என்பதாம். முன்பு தேராமல் வந்தவர் இப்பொழுது நிலைமைகளை நன்கு தேர்ந்துகொண்டார் எனவும் தேர் என்னும் பேர் கூர்ந்து காண நின்றது.

தேர்வேந்தரும் போர் வேந்தர் ஆனமையால் மங்கைக்குத் தகுதியான மணமகன் இனி இங்கு அமைவது அரிது என்று சனகன் மனம் மறுகி இருந்தான். அந்த மறுக்கம், "என்றும்

இனி மணமும் இலை என்றிருந்தேம்" என்றதனால் அறிய வந்தது.] ஆகவே அவரது உள்ளக் கவலைகள் உணரலாகும்.

நம்பிக்கை இழந்து இங்ஙனம் வருந்தியுள்ள நாங்கள் இந்த நம்பியைக் கண்டது முதல் உள்ளம் குளிர்ந்து உவகை கூர்ந்திருக்கின்றோம்.

[இந்த வள்ளல் இவ்வில்லை வளைத்தால் உலகுக்கெல்லாம் நன்மை; சீதையும் பிறந்த பயனை யடைந்து பெரிய பாக்கியவதியாய்ச் சிறந்து விளங்குவாள் என்பார், "இவன் ஏற்றின் நன்று; மலர்க் குழற் சீதை நலம் பழுது ஆகாது" என்றார்.]

[நன்று என்றது யாருக்கு? இராமனுக்கா, சீதைக்கா, சனகனுக்கா, முனிவருக்கா, மிதிலைக்கா, உலகிற்கா, இவ்வாறு பலவும் ஆராய்ந்துகொள்ள அது பொதுவாய் நின்றது.

இவன் வில் ஏற்றின் உலகத்தையெல்லாம் நன்மையில் ஏற்றிய படியாம் என மேலே படிய வுள்ள நலங்கள் படி யறிய வந்தன.]

[இராமன் வில் ஏற்ற வில்லையானால் சீதை என்றும் மணம் இல்லாதவளாய் முடிவு வரையும் குமரிருந்தே காலம் கழிப்பாள்; ஏற்றின் அவனை மணந்து தனது எழில் நலங்களெல்லாம் இனிமை யுற விழுமிய நிலையில் உவந்து கெழுதகைமையுடன் வாழ்வள் ஆதலால் நலம் பழுது ஆகாது என நயந்து குறித்தார்.

ஏற்றாது ஒழியின் நலம் பல அழியும்; அக் குல மகளைப் பழுது படுத்திய பழியும் சாரும் என்பது குறிப்பு.]

மலர்க் குழல் என்றது மணமகளா யுள்ள மங்கலம் மருவி வந்தது. தெய்வத் தேசுடன் தோன்றிவிளங்கும் இத்திருமகளை மணந்து உலகையெல்லாம் உய்யச் செய்ய ஒரு செயலை ஐயன் விரைந்து செய்தருள வேண்டும் என்பதாம்.

[அழகும் குணமும் எவ்வளவு அமைந்திருந்தாலும் இது வீர மணம் ஆதலால் குறித்த சோதனையில் மணமகன் தேற வேண்டும் என மன்னனும் மாதவனும் நன்னயமாக இங்ஙனம் உரைத்து நின்றார்.]

வில்லைக் குறித்துச் சதானந்த முனிவர் இப்படி ஒரு பெரிய பிரசங்கம் செய்து உரிய நிலையை உணர்த்தி முடித்தார்.

## கோசிகர் குறித்தது.

அவருடைய உரைகளைக் கவனமாய்க் கேட்டு வந்த விசுவா மித்திரர் என்ன செய்தார்?

நினைந்தமுனி பகர்ந்தவெலாம் நெறியுன்னி அறிவனும்தன்
புனைந்தசடை முடிதுளக்கிப் போரேற்றின் முகம்பார்த்தான்
வனைந்தனைய திருமேனி வள்ளலும்அம் மாதவத்தோன்
நினைந்தவெலாம் நினைந்து அந்த நெடுஞ்சிலையை நோக்கினன்.
(கார்முகப் படலம், 25)

மதி நலம் கனிந்த அருமைக் காட்சிகள் இங்கே அதி விநய மாய் நிகழ்ந்திருக்கின்றன. நிலைமைகளைக் கூர்ந்து நோக்குங்கள்.

சதானந்தர் பேசிவந்தவற்றை யெல்லாம் கோசிகர் கேட்டு வந்தார். பேச்சுமுடிவில் வாய்திறந்து யாதொரு வார்த்தையும் கூறாமல் சீரிய தவ நிலையில் வாரிமுடிந்துள்ள தமது அழகிய சடைமுடியை அசைத்து அயல் இருந்த இராமனைப் பார்த்தார்; அப்பார்வையை எதிர்நோக்கி யிருந்த அக்கோமகன் உடனே இராச சபையின் இடையே நெடிது நீண்டு கிடக்கின்ற அவ் வில்லைப் பார்த்தான். இது என்ன பார்வை? எத்துணை வித்தக நிலையில் விசித்திர நோக்கங்கள் ஈண்டு விளையாடியுள்ளன? மிகவும் உய்த்துணரத் தக்கன.

நினைந்த அமுனி பகர்ந்த எலாம் என்றது சதானந்தர் கருதி உரைத்த அந்த உறுதி மொழிகள் யாவும் என்றவாறு.

வில்லையும் இராமனையும் விரைந்து விழைந்து பார்த்துச் சீதையை நினைந்து தியங்கிய சனகனது மன நிலைமைகளை உணர்ந்து, வில்லின் தெய்வீகத்தையும் அதனை வளைக்க முடியாமல் அரசர் இளைத்துப்போய் மீண்டு வந்து வலிந்து அமராடி மெலிந்து தொலைந்த பழைய கதைகள் யாவும் சிந்தித்து, வந்துள்ள குமரனது மகிமையையும் நிலைமையையும் தெரிந்து, வில் வளைவால் நிகழவுள்ள நல் விளைவுகளை யெல்லாம் நாடிப் பேசியிருத்தலால் நினைந்து பகர்ந்த என்றார். நினைந்த என்று கொண்டால் யாவும் எண்ணித் தெளிந்த முனி என்று கொள்க.

அவர் கருத்துடன் உரைத்த குறிப்புக்களை யெல்லாம் கூர்ந்து ஓர்ந்துகொண்டமை நெறி உன்னி என்றதனால் அறிய வந்தது. உன்னல் = முன்னும் பின்னும் ஆய்ந்து எண்ணல்.

ரிஷிகளை இங்கே அறிவன் என்றது தத்துவ ஞானி என்பதை மட்டும் குறியாமல், உலக நிலைகளையெல்லாம் ஓய்த்துணர்ந்து காரியங்களை அதி சாதுரியத்துடன் இனிது முடிக்கும் அமைச்சு மதியூகத்தையும் உணர்த்தி நின்றது.

அவருடைய அறிவின் திறமே "என்றும் இனி மணமும் இல்லை" என்று ஏங்கி யிருந்த மிதிலையாளரது ஏக்கத்தை நீக்கி, சீதைக்குப் பல ஆக்கங்களை விளைக்க மூண்டு முனைந்து ஈண்டு மேன்மைய நலங்களை ஊக்கிக்கொண்டிருக்கின்றது. அவரது அறிவும் ஆற்றலும் வினை செயல் வகையும் விதிமுறையும் யாண்டும் அதிசய முடையன. யாவும் நினைந்து போற்றத் தக்கன.

புனைந்தசடை முடிதுளக்கிப் போர் ஏற்றின் முகம் பார்த்தான் இங்கே விசுவாமித்திரரை நாம் நேரே பார்க்கின்றோம்.

அவரது உருவமும், சடைமுடியும், காசாய உடையும், அரச சபையில் அமர்ந்திருக்கும் கம்பீரமும், தலையசைப்பும், இராமனைக் கடைக்கண்ணால் கனிந்து பார்த்த பார்வையும், கருமக்குறிப்பும் கண் கொள்ளாக் காட்சியாய்க் கழிபேருவகையை விளைத்துள்ளன. பல முடிபுகள் ஒரு முடி அசைவில் முடிந்திருக்கின்றன.

சதானந்தர் பேச்சைக் கேட்டு முடிந்ததும் இவர் தலையை அசைத்தது எதற்கு? சடை முடிபுனைந்த அந்தத் தலை அசைப்பில் எத்தனை பொருள்கள், எவ்வளவு எண்ணங்கள் இடைமிடைந்துள்ளன! உன்னி நோக்கி உவகையுறலாமே யன்றி அந்நிலைமையை முழுவதும் மொழிகளால் வெளியிடல் அரிது.

சனக குரு வில்லைக் குறித்துப் பேசி வந்த பிரசங்கத்தில் அது பல்லாயிரம் அரசர்களை அவமானப்படுத்தி யுள்ளது; வளைக்க வந்தவ ரெல்லாரும் அஞ்சி ஓடிப்போயினர்; போனவர் ஒருவராவது திரும்பி வரவே இல்லை என அச்சமும் திகிலும் வர அச்ச நிலையில் உரையாடி யிருந்தலால் அவரது குறிப்பையறிந்த இவர் அப்படியா! என்று அதிசயித்து ஆமோதிப்பவர் போல் வெளியே இப்படித் தலை அசைத்தார். அசைப்பினும் தம்முடன் வந்துள்ள வீர மகனால் இன்று அதன் முடிவு தெரியும் என்று உறுவதை எண்ணிப் பெருமித நிலையில் முடிதுளக்கி யுள்ளார் என்க. துளக்கல் = அசைத்தல், விளக்கல்.

இராமனை இங்கே போர் ஏறு என்றது மேலே விளங்கப் போகும் வீரத்திறலைக் குறித்து வந்தது. பின்னை * கார் வண்ணப் பேர் பெறுகின்றவன் முன்னை போரேறு என்னும் பேர் அதிகம் உடையவன். ஏறும் பேர் எல்லாம் இசை ஏறி வந்தன.

இந்தப் போர் ஏற்றின் முகத்தை முனிவர் ஏன் நேர் ஏற்றுப் பார்த்தார்? கூரிய அப்பார்வையால் கூறியுள்ள குறிப்புகள் பல.

"இராமையா! உன் குலம், குணம், வீரம் முதலிய நிலைகளைக் குறித்துச் சனகனிடம் மிகவும் உரிமையுடன் கூறினேன்; நீயும் கூட இருந்து கேட்டு வந்தாய்! அவ்வளவு எடுத்துப் பேசியும், வில்லை வளைத்தால்தான் தன் மகளைக் கொடுக்க முடியும் என்னும் பிடிவாதத்தோடு அதனைக் கொண்டு வந்து ஊரறிய இப் பேரவையில் வைத்து விட்டான். பாரவில்; யாராலும் அசைக்க முடியாது; வந்த மன்னவரெல்லாரும் வளைக்க மாட்டாமல் அவமானப்பட்டு ஓடிப்போயினர் என்று சதானந்தர் உரைத்திருக்கிறார்; இங்கே வருவதாக உன் தந்தையிடமும் சொல்லவில்லை; எனது யாக காரியத்துக்கு மட்டும் உன்னை அழைத்து வந்தேன்; ஈண்டு விவாக காரியம் இப்படி விவாதமாய் மூண்டுள்ளது; நாடும் நகரமும் காண அரிய பரிசோதனையில் இப்பெரியவர் நம்மை இழுத்துவிட்டாரே! என்று என்மேல் குறை கூறலாகாது; ஏதோ காரியம் இலகுவாய் முடிந்துவிடும் என்று கலியாணம் கருதி முயன்றேன்; இவ்வாறு நேர்ந்துள்ளது!. உன் கருத்து என்ன? வில்லை வளைத்துப் பார்க்கின்றாயா? அல்லது ஒன்றும் வேண்டாம் என்று மீண்டு போய்விடுவோமா?" என இவ்வண்ணம் கோசிகர் பல பேச வேண்டிய இடம் இது. அவ்வண்ணம் யாதும் பேசாமல் கண்ணால் மட்டும் இராமனைப் பார்த்தார்; அங்ஙனம் பார்க்குங்கால், அந்தச் சுந்தரன் இருந்த நிலைமையை இனிப் பார்க்க வருகின்றோம்.

"வனைந்தனைய திருமேனி வள்ளலும்" அந்த இராச சபையில் இராமன் அமர்ந்திருந்த அமைதியும் கம்பீரமும் இதில் காட்சி தருகின்றன. ஓவியத்தில் எழுதிவைத்த அழகிய சித்திரப் பதுமைபோல் [யாதும் அசையாமல் நிமிர்ந்த நோக்குடன் அவ் வுத்தமன் உறைந்துள்ளமையை வனைந்து அனைய என்ற தொட

* அயோத்தியா காண்டம், கைகேசி சூழ்வினைப் படலம், 109.

[illegible] காட்டியிருக்கிறார். வனைதல் = வனப்பு அமைய எழுதல். அங்க நூலை நன்கு தெளிந்த ஓவியப் புலவன் தலைசிறந்த பூரண சவுந்தரியம் யாவும் பொருந்தக் கண்ணூன்றி [illegible] அமைத்த வண்ண ஓவியம்போல் அண்ணல் அங்கு அமைந்திருந்தமையை அறிவித்த படியிது. இந்த இருப்பில் அறிவின் [illegible] பெருமிதமும் அரச கோலமும் மருவியுள்ளன.

மேனி வள்ளல் என்றது அருமையாக அமைந்துள்ள தனது [illegible] நலனை ஒரு பருவ மங்கைக்கு வாரி வழங்க வந்துள்ள வண்மை நிலை கருதி. திருவுக்கு உரிய மேனி என இங்கே இனிமையான அமைதி தெரியத் திருமேனி என நேர்ந்தது.

கண் கொள்ளாக் கட்டழகோடு இங்ஙனம் கம்பீரமாயிருந்த அக் கோமகன் கோசிகர் தன்னைத் திரும்பிப் பார்க்கவே, விரும்பி எதிர்நோக்கினன் என்றமையால் முன்னதாகவே அவர் முகத்தை அதிவினயமாய் மெல்ல நோக்கி யிருந்தான் என்று தெரிகின்றது.

சனக மன்னனிடம் முன்னம் அறிமுகம் செய்யும்பொழுது “ [illegible]னுடைய வில்லும் காண்பார்” என இலக்குவனையும் சேர்த்துப் பொதுவாகப் பன்மையில் சொல்லியிருத்தலால், இந்த வில்லை இளையவனைக் கொண்டே வளைக்கச் செய்வோம் என்று [illegible] உல்லாச விநோதமாக முனிவர் உரைக்கவும் கூடும் அதனால் அது கூடாவகை நாடியிருந்த படியாய் நயன நோக்கங்கள் பயன் நோக்கி ஊக்கி நயன் அறிய நின்றன.

கோசிகர் கண்ணோக்கவே அதன் உள்நோக்கங்களையெல்லாம் ஒருங்கே உணர்ந்துகொண்டான் ஆதலால், “அம் மாதவத்தோன் நினைந்த எல்லாம் நினைந்து” என்றார். நினைந்தன முன்னம் குறித்துள்ளன. இன்னும் எண்ணியன எவையோ? அவை அவ்விருவருக்குமே தெரிய உரியன ஆதலின் ஒருவருக்கும் தெரியாமல் நின்றன.

எண்ணங்கள் மொழிகளாலேயே வெளியாகின்றன. பொதுவாக நாளும் உலகில் இவை நிகழ்ந்து வருகின்றன. மொழிகள் போலவே முகம், கண், பார்வைகளாலும் பிறருடைய மன நிலைகளை அறியலாகும். இவை நுண்ணிய நிலையின ஆதலால் எல்லாராலும் எளிதாகத் தெரியமுடியா. அதிநுட்ப முடைய மதிமான்களே அரிதின் உணர்வர்.

" கண்ணுடி உள்ளக் கருத்தெல்லாம் கண்டுகொண்டேன்
கண்ணுடி என்னக் கவர்ந்து " (அரும்பொருளமுதம்)

என்றபடி அதிமேதைகளால் காணுகின்ற அற்புதக் காட்சியை இங்கே இராமனிடம் கண்டு நாம் ஆச்சரியம் அடைகின்றோம்.

முனிவர் முகநோக்கால் அவரது அகநோக்கங்களையெல்லாம் நன்கு தெரிந்த இக்குலமகன் பின்பு என்ன செய்தான்? அந்த நெடும் சிலையை நோக்கினான். அருங் கலை வினைதமாய் நேர்ந்துள்ள இந்த அருமை நோக்கம் இப் பெருந்தகையின் அருந்திறலாண்மையில் விளைந்திருக்கின்றது.

வில்லைக் கண்டு அரசரெல்லாரும் அஞ்சி அயரவும், முனிவர்கள் திகைக்கவும், சனகன் மறுகவும், அனைவரும் இரங்கவும் மூண்டிருக்கின்ற அரிய பெரிய வீர சோதனையில் ஒரு சிறிதும் தளராமல் இக் கோமகன் பேரூக்கத்துடன் அடலாண்மையில் ஆர்வமீதூர்ந்து விரைந்தான். தன் உள்ளக் கருத்தை வாய் திறந்து சொல்லாமலே வில்லை நோக்கிய அந்தப் பார்வையிலேயே எல்லாவற்றையும் கோசிகரிடம் சொல்லியிருக்கிறான்.

" அடிகள் பல பல நினைந்து யாதும் கவல வேண்டா; இந்த வில்லை நான் வளைத்து விடுவேன்; ஒல்லையில் உத்தரவு அருளுங்கள் " என்று சொல்லுவனவெல்லாம் நெடுஞ் சிலையை நோக்கிய அந்நிலையிலேயே தெளிவாய் நின்றன. வினையாண்மை புரியும் வீர ஆர்வம் பார்வையின் தீர்மையாய் நேரே பார்க்க நேர்ந்தது. கரும நிகழ்ச்சிகள் அருமைக் காட்சிகள் ஆயின.

நினைந்த முனி பகர்ந்தது, அறிவன் மூடி துளக்கி ஏற்றின் முகம் பார்த்தது, வள்ளல் சிலையை நோக்கியது ஆகிய இம் மூவகைக் காட்சிகளும் உணர்வொளி வீசி உவகை விளைத்துள்ளன. கூர்த்த மதிகள் குறிப்பு நிலையில் கூத்தாடியிருக்கின்றன.

முதிய தவஞானியர் இருவர், இளைய வீர மகன் ஒருவன் இம்மூவரும் இப்பாவில் தோன்றி நடித்திருக்கின்றனர். கண் நோக்காலேயே எண்ணங்களை அறிந்து இனிது பேசி மதி மாட்சியையும் நாகரீகத்தையும் நன்கு வெளிப்படுத்தி யுள்ளனர். இது ஒரு மௌன நாடகமாய் நுண்ணிய குறிப்பில் கண்ணியம் கனிந்து மதியூகிகளின் மரபுமுறை துலங்கியுள்ளது.

* நுண்ணியம் என்பார் அளக்கும்கோல் காணுங்கால்
கண்ணல்லது இல்லை பிற. (குறள், 710)

என்ற பொதுமறைக்கு இவர் பொருள் செய்துள்ளனர்.

இராமன் இங்ஙனம் வில்லை நோக்கிய குறிப்பை அறிந்ததும் கோசிகர் உள்ளம் களித்து ஒல்லையில் செய்க என்று நோக்கால் ஊக்கி யருளினர். உடனே இக்குமரன் எழுந்தான். அந்த இராச சபையில் இந்த வீர மகன் எழுந்த பொழுது நிகழ்ந்தன விழைந்து நோக்கற் பாலன.

## இராமன் எழுந்த நிலை.

பொழிந்தநெய் ஆகுதி வாய்வழி பொங்கி
எழுந்த கொழுங்கனல் என்ன எழுந்தான்
அழிந்தது வில்லென விண்ணவர் ஆர்த்தார்
மொழிந்தனர் ஆசிகள் முப்பகை வென்றார். (1)

மங்கையர் மயங்கியது

தூய தவங்கள் தொடங்கிய தொல்லோன்
ஏயவன் வல்வில் இறுப்பதன் முன்னம்
சேயிழை மங்கையர் சிந்தைதொறு எய்யா
ஆயிரம் வில்லை அநங்கன் இறுத்தான். (2)

இரங்கி நின்றது

காணும் நெடுஞ்சிலை கால்வலி தென்பார்
நாணுடை நங்கை நலங்கிளர் செங்கேழ்
பாணி இவன்படர்! செங்கை படாதேல்
வாணுதல் மங்கையும் வாழ்விலள் என்பார். (3)

பரிந்து நொந்தது

கரங்கள் குவித்திரு கண்கள் பனிப்ப
இருங்களிறு இச்சிலை ஏற்றிலன் ஆயின்
நரந்தை நறைக்குழல் நங்கையும் நாமும்
முருங்கெரி யிற்புக மூழ்குதும் என்பார். (4)

---

* நுண்ணிய மதியுடையார் பிறர் கண் நோக்கால் அவரது உள்ளக் கருத்துக்களை உணர்ந்து கொள்வர் என்பதாம். நிலத்தின் அளவை அளவுகோலால் நிலையறிந்து கொள்ளுதல்போல் மனிதன் உள நிலையை அவன் நோக்கால் உணர்ந்துகொள்ளலாம் என்பார் கண் அளக்கும் கோல் என்றார். குறிப்பறிவுக்குக் கூரிய கருவி கூறிய வாறிது.

மன்னனை இகழ்ந்தது

வள்ளல் மணத்தை மகிழ்ந்தனன் என்றால்
கொள்ளென முன்பு கொடுப்பதை அல்லால்
வெள்ளம் அணைத்தவன் வில்லை எடுத்திப்
பிள்ளைமுன் இட்டது பேதைமை என்பார். (5)

மாதவனை வைதது

ஞான முனிக்கொரு நாணிலை என்பார்;
கோன் இவனிற்கொடி யாரிலை என்பார்
மானவன் இச்சிலை கால்வளை யானேல்
பீன தனத்தவள் பேறிலள் என்பார். (6)

நம்பி நடந்தது

தோகையர் இன்னன சொல்லிட நல்லோர்
ஓகை விளம்பிட உம்பர் உவப்ப
மாக மடங்கலும் மால்விடை யும்பொன்
நாகமும் நாகமும் நாண நடந்தான். (7)

(கார்முகப்படலம், 26-32)

இப்பாடல்கள் ஏழையும் கண்ணூன்றி நன்கு படித்துப் பாருங்கள். உயிரினங்களுடைய உள்ளுணர்ச்சிகள் உரைகள் மூலம் வெளி வருகின்ற அற்புத நிலைகளை அறிந்து மகிழலாம்.

இராமன் வில் வளைக்க எழுந்த பொழுது அங்கே சூழ்ந்து நின்ற மங்கையரும் மைந்தரும் இக்கோமகனை நோக்கி ஆராமை மீதூர்ந்து போரவலோடு பல பேசியுள்ளனர். அப்பேச்சுகள் அவருடைய உள்ளக்களிப்பையும் உழுவலன்பையும் உணர்ச்சி நிலைகளையும் விளக்கி நிற்கின்றன.

1. அரசவையி லிருந்து இந்தக் குல மகன் எழுந்த நிலைக்குத் தந்துள்ள உவமை இங்கே சிந்திக்கத் தக்கது. யாக குண்டத்தில் மந்திரமுறையோடு நெய்யைப் பெய்யுங்கால் அதிலிருந்து பொங்கி எழுந்த தீ என நம்பி எழுந்தான் என்றார். இருவகைக் காட்சிகளையும் ஒருமுகமாய் நோக்க இதில் ஊக்கி யிருக்கிறார்.

இனிய மண எழுச்சியில் இன்னாத கனல் எழுச்சியை எதிர் காட்டியது அதன் நன்னயங்களையெல்லாம் நயந்து கண்டு உவந்து கொள்ள. கோசிகர் பார்வை ஆகுதி நெய்போல் பாயவே குமரன் வேள்வித்தீபோல் வேகமாய் எழுந்தான்.

யாகத்தில் கனல் வலம் சுழித்து எழின் அமரர்க்குப் பெரு நலமாம். ஆகவே தேவர்கள் பேருவகையாளராய் நேர்நிறைந்து அருள்கின்றார். அதனால் மழைவளம் சுரந்து மாநிலம் தழைகின்றது. இந்நனம் வானும் வையமும் நலம் பெற வளர்ந்து உளங்களி கூர எழுந்தமையால் அது கொழுங்கனல் என வந்தது.

அடுங் கனலினும், கொடுங் கனலினும் வேறுபாடு தெரிய அடைமொழிகள் அடர்ந்து நின்றன.

இவ் அண்ணல் எழுந்தது, மண்ணும் விண்ணும் மகிழ நேர்ந்துள்ளமையால் புண்ணியக் கனலோடு எண்ண வந்தது. எழுந்த பொழுது நிகழ்ந்தது என்ன ?

அழிந்தது வில் என விண்ணவர் ஆர்த்தார். தெளிந்த அறிவுடையராதலால் தேவர்கள் இன்னவாறு துணிந்து மொழிந்தார். அவரது ஆரவாரமும் பேருவகையும் உரைகளில் ஒளிர்கின்றன. வில் அழிந்தது என்னுமல் அழிவு வினையை முதலில் குறித்தது துணிவுணர வந்தது. அவசரமும் ஆக்கிரமும் பொங்கி நின்றமையால் வார்த்தைகள் முறைமாறி வந்தன.

அமரர் இவ்வாறு துள்ள, முனிவரர் ஆசிகள் மொழிய, அனைவரும் வியந்து துதிக்கக் குமரன் எழுந்தான்.

2. இந்த அழகன் எழவே அங்கே குழுமி நின்ற மங்கையரெல்லாரும் விழி களிப்ப நோக்கி வெங்காதல் கூர்ந்தார். எவ்வளவு பேர்? எப்படி ஆதரம் மீதூர்ந்தார்? எவ்வாறு பரிவு கூர்ந்து நின்றார்? என அறிய ஆவலுறுவார்க்குக் கவி ஓர் இனிய அளவு கருவியை இங்கே இசைத்திருக்கிறார்.

ஆயிரம் வில்லை அனங்கன் இறுத்தான்

இஃது உல்லாச வாசகமாய் உவகை விளைத்துள்ளது. இராமன் ஒரு வில்லை ஒடிக்கு முன்னர் மன்மதன் ஆயிரம் வில்லுகளை ஒடித்து எறிந்தான் என்றது அங்கே விளைந்த காமப் பூசலை விளக்கி நின்றது.

இக்கட்டழகனைக் காணவே கண்கள் களிகூர்ந்து பெண்கள் அளிமீதூர்ந்தார். அந்த ஆர்வப் பெருக்குக் காதல் என நேர்ந்தது. நெஞ்சங்கள்தோறும் பூங்கணைகளை ஓயாது பெய்தமை

யால் எய்த வில்லுகள் பல்லாயிரம் ஒடிய லாயின. ஒடிந்த சிலை களின் அளவினால் உள்ளத்தின் நிலைகள் தெரிந்தன.

பெண்ணுக்காக ஒருவன் நேரே ஒரு வில்லை முறிக்குமுன் கண்ணுக்குத் தெரியாமல் வேறே ஆயிரம் விற்கள் முறிந்து போயின என்றமையால் முறிக்க எழுந்தவனது பேரழகும் முடிவும் ஓரளவு உணர வந்தன. மணவினைக்கு உரிய வில் விரைவில் முறிபடும் எனப் பந்தய வெற்றியை முந்துற விளக்கிய விந்தையும் விநயமும் சிந்தனைக்கு உரியன.

3. இந்த அழகனை நோக்கிய மகளிர் உளம் மிக உருகிப் பல பல பேசினர். "இக்குலமகன் கை தீண்ட வில்லையானால் சீதையின் வாழ்வு பாழாம். இந்த நீண்ட சிலையை இங்கு ஏன் கொண்டு வந்து போட்டார்" எனத் தருண மங்கையர் தவித்து மொழிந்தார்.

4. வில்லை இவன் வளைக்க வில்லையானால் சீதையும் நாமும் தீயில் பாய்ந்து மாய்ந்து போகவேண்டும் என்று மறுகி நின்றார்.

"கரங்கள் குவித்து இரு கண்கள் பனிப்ப"

என்றதனால் பெண்கள் அங்கே உள்ளன்பு மண்டி உருகி நின்ற நிலை உணரலாகும். கைகள் குவித்துக் கண்கள் நீர் மல்கி நம்பியை வியந்து நங்கையை நினைந்து நைந்து கலங்கினார். விதித்துள்ள சோதனையை வெறுத்து வேதனை அடைந்தார்.

5. தனது அருமை மகளுக்குத் திருமணம் செய்யவேண்டும் என்று உண்மையாகவே சனக மன்னன் எண்ணியிருந்தால் இந்தக் கொடிய வில்லின் கடுவிதியை ஏற்படுத்தியிரான். சொந்த மகளானால் அல்லவா சிந்தை உருகும்; கண்டு எடுத்தது; எப்படிப் போனால் என்ன? கொஞ்ச மாவது அன்போ, அறிவோ இருந்தால் இந்தக் கோமகனைக் கண்ட வுடனேயே சீதையைக் கொடுத்திருக்க வேண்டாமா? ஒரு கொடிய நெடிய வில்லை இடையே கொண்டுவந்து போட்டு இப்படிக் கெடுத்திருக்க லாமா? என்ன மதி இது! என இகழ்ந்து பேசினார்.

"வெள்ளம் அணைத்தவன் வில்லை எடுத்து இப்
பிள்ளைமுன் இட்டது பேதைமை என்பார்."

மாதர் இப்படித் தீர்மானித்திருக்கின்றார். வெள்ளம் அணைத்தவன் என்றது சிவனை. உலகம் எல்லாம் தாங்கமுடியாத ஆங்

ஊராத்தோடு ஆர்த்துவந்த கங்கையைத் தன் சடையில் அடக்கிய பரமன் செங்கையில் பிடித்த வில் என அதன் தெய்வப்பெற்றியை விளக்கிய படியிது.

அத்தகைய அரிய பெரிய வில்லை இந்தச் சிறிய பிள்ளையை வளைக்கும்படி செய்திருப்பது மிகவும் கொடுமை என்பதாம்.

ஐயோ! இந்த மடத்தனத்தைச் செய்ய லாமா? என வைத்து இரக்கத்தின் அடியாய் எழுந்தது.

கலியாணம் செய்ய உரிய காளைப் பருவத்தனாய் வந்துள்ள இராமனை இங்கே பிள்ளை என்றது உள்ளம் உருகி வந்த உரிமை மொழி. பெற்ற தாயின் பேரன்பு நேரே பெருகியுள்ளமை உய்த் துணர நின்றது. அருமை மகன்மேல் ஆர்வத்தால் இருவரையும் சீறினர்.

6. மன்னனை இங்ஙனம் வைதவர் பின்பு மாதவனை இகழ்ந்தார்.

ஞான முனிக்கு ஒரு நாண் இலை

எனக் கோசிகனை ஏசி யிருக்கும் வாசகம் இது.

"இராமன் வில்லை வளையாது போனால் பெரிய அவமான மாகும். அளவுக்கு மீறிய இந்தக் கொடிய சோதனையில் இளங் குமரனை விடாமல் இவர் தடுத்திருக்க வேண்டும். அரச சபை யில் பலர் அறிய ஒரு குல மகன் நிலை தவறிவிடின் அது எவ்வளவு மானக் கேடாம்? நல்ல அறிவாளியா யிருந்தும் இதற்கு இவர் உடன்பட்டிருக்கிறார்; இவருக்கு என்ன! துறவி; உலக மதிப் பையும் மான அவமானங்களையும் கருதாதவர்; ஏதேனும் ஈனம் நேரின் மானபரனை கோமகன் குலைதுடித்துப் போமே!" என மாதர் மனம் துடித்துப் பேசியிருக்கிறார்.

ஞான முனி என்றது ஞானத்தையுடைய முனிவராயிருந் தும் நாணம் இல்லையே என்றவாறு. மெய் யுணர்வு வாய்ந்தும் தம் உடன்வந்துள்ள பையனுக்கு நேரும் வெய்யநிலையை ஓர்ந்து வெட்கப்படவில்லை என்பதாம். ஒரு என்றது சிறிதும் என்ற படி.

இந்த வாக்கியம் சிலேடையாகவும் அமைந்துள்ளது.

முனி என்பது வில்லுக்கும் ஒரு பெயர். நாண் = கயிறு. ஞானம் இன்றிச் சடமாய்க் கிடக்கும் வில்லாகிய அந்த முனிக்குக்

கூட ஒரு நாண் இருக்கின்றதே; ஞானமுடைய இந்த முனிவருக்கு யாதொன்றும் இல்லையே எனவும் சொற்கள் இங்கே இசைந்துள்ளமை காண்க.

உலக நிலை தெரியாத முனிவன் எப்படியேனும் ஒழியட்டும்; குல நலம் தெரிந்த நமது அரசனுமா இப்படி ஆக வேண்டும்? நெஞ்சில் இரக்கம் இன்றி வஞ்சகமாய் இந்தக் கொடுமையைச் செய்திருக்கின்றான் என்பார், "கோன் இவனிற் கொடியார் இலை" என்றார். பிள்ளைத் துரோகம் பெரிய கேடாயது.

கோசிகனையும் சனகனையும் மகளிர் இவ்வாறு கூசாது வைதது இராமன்பாலும் சீதைமீதும் அவர் கொண்டுள்ள ஆசையால் என்க. ஆத்திரம் மீறி வார்த்தைகள் வந்துள்ளன.

பேரழகுடைய அந்த அரிய உருவங்கள் இரண்டும் மருவி மகிழ்தற்கு இந்த இருவர் செய்கையும் இடையூறு யுள்ளதே! என்று அவர் மறுகி யுள்ளமையால் இங்ஙனம் உரைகளாட நேர்ந்தனர். எதிர்வதை எண்ணி முதிர் சினம் மூண்டது.

"மானவன் இச்சிலை கால்வளை யானேல்
பீன தனத்தவள் பேறு இலள்"

என ஆராமை மீதூர்ந்து பேசி யிருக்கிறார்.

அரசன் அரிய சுல்கம் விதித்தது பெரிய பேதைமை. முனிவன் அதற்கு இசைந்தது முழுதும் மூடம். அவ்விருவருக்கும் இதில் என்ன வந்தது? குமான் வில் வளையானேல், குமரி பாக்கியம் இழந்தவளாய்ப் படுதுயரடைகின்றாள் எனப் பரிவுரையாடி அயலெங்கணும் மகளிர் மறுகி நின்றார். பீனம் = பருமை.

தனத்தவள் என்றது எய்தியுள்ள பருவத்தின் இன்ப நலங்களை நினைந்து. இனத்தவ ராதலால் பரியதனத்திற்குப் பெரியதனமாக உரிய நாயகனை உவந்து உல்லாசமாய்ப் பேசினர்.

அரிவையர் இங்ஙனம் பரிவுரைகள் கூறிப் பிரியம் மீதூர்ந்து நிற்க அவ் வீரமகன் வில்லை நோக்கி நேரே சென்றான். அன்று அவன் அங்கே நடந்து சென்ற நிலைக்கு நான்கு உவமைகள் தொடர்ந்து வந்துள்ளன.

மாக மடங்கலும், மால்விடையும், பொன்
நாகமும், நாகமும், நாண நடந்தான்.

தலை எடுப்போடு நடந்து சிலை எடுக்கச் சென்ற தலைவனது நிலையைக் குறித்த படியிது. நடை அழகைக் காட்டி வந்துள்ள இந்த அடிகளின் நடையழகைக் காண்க. நாணுதலை நான்கு றைடும் தனித்தனியே கூட்டி நோக்குக.

மடங்கல் = சிங்கஏறு. விடை = இளங்காளை. பொன் நாகம் = மேரு மலை. நாகம் = மதயானை. மாகம், மால் என்பன பெருமைக் குறிப்பில் அடைகளாய் வந்தன.

வீரம், பெருமிதம், திண்மை, கம்பீரம், ஆகிய இந்த நான்கு தன்மைகளும் அந்த நடையில் இடைமிடைந்திருந்தன ஆதலால் அந்நிலைமைகளை முறையே உவமைகள் விளக்கி நின்றன. வீரம் முதலியவற்றில் யாரும் நேர் எதிராவகை இராமன் தலைசிறந் துள்ளமையான் அந்நிலைகளைக் கண்டு மடங்கல் முதலியன நாண நேர்ந்தன. காண நேர்ந்தவர் களிப்பு மீதூர்ந்தனர்.

எல்லாரும் அஞ்சி அயர்ந்த அந்த அரிய வில்லை வளைக்கச் செல்லுங்கால் யாதொரு அச்சமும் இல்லாமல் உச்ச நிலையில் கம்பீரமாய் இராமன் நடந்து சென்றிருக்கின்றான். அக்காட்சி யைக் கண்டு நாம் இங்கே களிப்பூர்ந்து நிற்கின்றோம்.

## வில்லை எடுத்தது.

இவ்வாறு சென்றவன் வில்லை அணுகினான். அது நீண்டு கிடக்கும் நிலையை நோக்கினான். தனது வலது கையால் அதன் நடுவே பிடித்து மிகவும் எளிதாக எடுத்து நிறுத்தினான்.

ஆடக மால்வரை அன்னது தன்னைத்
தேடரு மாமணி சீதை எனும்பொற்
சூடக வால்வளை சூட்டிட நீட்டும்
ஏடவிழ் மாலையி தென்ன எடுத்தான். (கார்முகம், 33)

மேரு மலைபோல் வீறு அமைந்து கிடந்த அப்பார வில்லை இவ் வீரமகன் தூக்கிய சீர்மையை இவ்வாறு தூக்கிக் காட்டி யிருக்கிறார். சீதைக்குச் சூட்டுதற்கு ஒரு பூமாலையை எடுத்தது போல் சிலையை மிகவும் எளிதாக எடுத்தான் என உவமை காட்டியது அந்த எடுப்பிலுள்ள இன்பமும் விளைவும் இனிது தெளிய. ஒரு வருத்தமும் இன்றி உல்லாச விநோதமாய் வில்லை ஒரு கையால் தூக்கினான் என்றதனால் இந்த வல்லாளனது அற்புத நிலைமையும், அருந்திறலாண்மையும் அறிய வந்தன.

எடுத்த வில்லுக்கு இனிய மலர் மாலையை ஒப்புரைத்தது மங்கலமாய்த் திருமணம் நன்கு நிறைவேறியது என்பதை முன்புற உணர்த்திய படியாம். மணமகள் பரம பாக்கியமாய் வந்து அமைந்துள்ளமையால் தேடரு மா மணி என அப்பாடறிய வந்தது. மணி அணிய மணி வண்ணன் மருவி நின்றான் என்க.

சீதை சூட்டிட நீட்டும் மாலை எனப் பாட்டு அமைந்திருத்தலால் இராமனுக்கு அவள் சூட்டிட நீட்டிய பூமாலைபோல் வில்லை அக்கோமகன் ஒல்லையில் தூக்கி எல்லாரும் காண உல்லாசமாய் நீட்டினான் என்க. மணமக்கள் இருவரும் மணமாலையை மாற்றிச் சூட்டிக்கொண்டபடி பாட்டு அமைந்து பரிசு அறியவுள்ளது.

சூடக வால் வளை = கங்கணமாக வெள்ளிய சங்கவளையல்கள் அணிந்த செங்கையை யுடையவள். சனகியை இங்ஙனம் குறித்தது மங்கலம் கருதி. கழுத்தில் தாலிபோல் கையில் வளையல் பெண்களுக்கு ஒரு மங்கலமாம். இதுபொழுது நிகழவுள்ள திருமண நலனைப் பெருமணம் வீசப் பேசி யிருக்கிறார்.

ஏடு = பூவிதழ். அரும்பு மாலை அன்று; அலர்ந்த மாலை எனப் பருவம் கனிந்துள்ள உருவம் காண வந்தது.

கன்னிக்குச் சுல்கமா யிருந்த வில்லைத் தூக்கவே கலியாணக் காட்சியை இங்ஙனம் மங்கலமாக நோக்க வைத்தார்.

## வில் வளைத்த விறல்.

இவ்வண்ணம் இராமன் வில்லை எடுக்கவே அயல் எங்கணும் சூழ்ந்து நின்றவர் எல்லாரும் அதிசய பரவசராய் விழித்த கண் இமையாமல் விழைந்து பார்த்தார். தொடுத்துப் பார்த்த அப் பார்வைகளை அடுத்துப் பாருங்கள்.

> தடுத்திமை யாமல் இருந்தவர் தாளின்
> மடுத்ததும் நாணுதி வைத்ததும் நோக்கார்
> கடுப்பினில் யாரும் அறிந்திலர் கையால்
> எடுத்தது கண்டனர் இற்றது கேட்டார். (கார்முகம், 34)

இராமன் வில் வளைத்த காட்சியை இங்ஙனம் இது காட்டியுள்ளது. நிகழ்ச்சிகளை விளக்கி யிருக்கும் நிலை நுனித்து நோக்கத் தக்கது. ஒரு வீரக்காட்சியை ஈண்டு வியந்து பார்க்கின்றோம்.

அரசரும் முனிவரும் நகர மாந்தரும் ஆகிய பல்லாயிரம் பேர் புடைசூழ்ந்து இடை இமையாமல் விழைந்து நோக்க நடு நின்று இவ் வீரமகன் அப் பாரவில்லை அதி விநோதமாக எளிது தூக்கினன்; தூக்கவே எல்லாரும் வியப்பும் விம்மிதமும் அடைந்து மேலே ஐயன் செய்யப் போகும் செயலை ஆர்வத்தோடு ஊன்றி நோக்கினர். உள்ளக் காதலோடு ஊக்கி நோக்கியுள்ள அவரது நிலையைக் கவி நேரே நம்மை நோக்க வைத்திருக்கிறார்.

தடுத்து இமையாமல் இருந்தவர் என்றதனால் அவருடைய இருப்பும் பரபரப்பும் விருப்பும் விழிப்பும் வெளிப்பட்டு நின்றன. தடுத்து என்றதனால் பல வழிகளிலும் விரைந்து ஓடுகின்ற மனத்தை அங்ஙனம் ஓடாதபடி மடக்கி ஒருமுகப்படுத்தி இமை கொட்டாமல் எதிர் நோக்கி யிருந்தமை தெளிவாம். ஆகவே அப்பார்வையின் கூர்மையும் ஆர்வமும் அறியலாகும்.

இங்ஙனம் ஆர்த்தியோடு பார்த்திருந்த அவர் நேரே கண்டது ஏதேனும் உண்டோ? எனின், ஒன்றும் காணவில்லை என்கின்றார்.

தாளில் மடுத்ததும், நாண் நுதி வைத்ததும், நோக்கார்.

சிலை வளைத்த நிலை குறித்த படி யிது. வில்லை வளைக்குங்கால் இராமன் செய்த வேலைத் திறங்களை இது வெளிப்படுத்தியுள்ளது. இடது கையால் சிலையை நடுவில் பிடித்தான்; வலது கையால் நாணை எடுத்தான்; அங்ஙனம் ஈர்த்து வில்லின் குதையில் ஏற்றும் பொழுது அடிக் கோடியில் தனது இடது தாளை மிதித்து அழுத்தி நேரே வளைத்து நாணை மேலே இழுத்தான் ஆதலால் கையும் காலும் அங்கே வேலை செய்துள்ள நிலைகளை விளக்கி யருளினர்.

இவ்வாறு ஐயன் செய்தன வெகு துரிதமான அதிசயங்கள் ஆதலால் யாரும் அறிந்துகொள்ள முடிய வில்லை. "கடுப்பினில் யாரும் அறிந்திலர்" என்றது எடுப்பினில் நிகழ்ந்த இயல்பு தெரிய வந்தது. கடுப்பு = விரைவு, வேகம்.

விழித்த கண் இமையாமல் கூர்ந்து நோக்கியும் ஒன்றையும் எவரும் கண்டு கொள்ளவில்லை. பின்னர்க் கண்டதுதான் என்ன? எனின், இறுதியில் காட்டி யிருக்கிறார்.

எடுத்தது கண்டனர்; இற்றது கேட்டார். இந்த விளக்கம் வியப்பு மிக வுடையது. கதா நாயகனது அதி சாதுரியமான

வில்லாற்றலைக் காட்டியுள்ள இதில் கவியினது சொல்லாற்றலையும் காட்டியிருக்கிறார்.

பல்லாயிரம் கண்கள் ஏக காலத்தில் ஒருமுகமாய் எதிர் விழித்திருந்தும் உள்ளே செய்த வில் வேலைகளை ஒன்றும் உணராது போயின என்றமையால் வீரனது வினையாண்மையும் சாகச சாதுரியங்களும் எனைவரும் எவ்வழியும் நினைவரும் நிலையில் நேர்ந்துள்ளமை ஓர்ந்துகொள்ள வந்தது.

சிலையை எப்படி வளைத்தான், நாணை எவ்வாறு ஏற்றினன் என்பதை யாரும் காண முடியாமல் செப்படி வித்தைபோல் செயல் நிகழ்ந்துள்ளது. அவ்வுண்மையைக் கவி இப்படி விளக்கியுள்ளார்.

கையால் வில்லை எடுத்ததை மட்டும் பார்த்தார்; உடனே இடி முழக்கம்போல் ஒரு பேர் ஒலியைக் கேட்டார் என்றதனல் வில் ஒடிந்து வீழ்ந்தமை உணர்த்தப்பட்டது.

கண்டனர் கேட்டார் என்றது கண்ணும் காதும் முன்னும் பின்னும் தொழில்பட்டுள்ள முறை தெரிய வந்தது. காட்சியில் கண்ணூன்றியிருந்த நிலைமையை விளக்கி வினையாலணையும் பெயர் எழுவாயாய் அமைந்தது.

ஒடித்தது என்னமல் இற்றது என்றது உய்த்துணர வுற்றது. ஒடித்தது என்று உரைத்தால் அங்கே வந்துள்ள நியாயவாதிகள் பெண்ணைக் கொடுக்கக்கூடாது என்று தடுக்க நேர்வர். என்னே தடை? எனின், பின்னே காண்க.

வில்லை வளைக்க விதியே அன்றி, ஒடிக்க அன்று. பந்தயத்தில் குறித்த விதியைக் கடந்து வரம்பு மீறி ஒடித்துவிட்டான்; ஆதலால் வளைத்தவனுக்கே பெண் என்ற அம்மரபு மாறிப் போயது. ஆகவே உரிய பரிசை உதவலாகாது என வழக்கறிஞர் இடையே வழி மறிப்பார்; அம்மறியல் நேராவகை அறிவுரை நேர்ந்தது.

இந்தத் தடையை அடியோடு நீக்கவே இற்றது என்னும் மொழியை மோன நிலையில் மோனமாக வைத்துள்ளார்.

இச் சொல்லில் அந்த வல் வழக்கு வெல்லாது நின்றது.

ஒடித்தது என்ருல் அவ்வினைக்கு இராமன் கருத்தா ஆகின்ருன். இற்றது எனின், அக்கருமம் வில்லின் தலைமேல் ஏறுகின்றது.

வீரன் வில்லை வளைக்கத்தான் செய்தான்; அது தானாகவே இற்றுப் போயது; இறுது வளையும் படியான உள்ளுறுதி அதனிடம் இல்லை; ஆதலால் இற்ற குற்றம் வில்லின்பால் அன்றி வில்லியின்மேல் செல்லாது என்க.

இக்குறிப்பு மொழி இக்கருத்தோடு அமைந்துள்ளமையைக் காவியத்துள் பல இடங்களிலும் இனிமேல் காணலாகும்.

## நகர மாந்தர் உவகை நிலை

வில் இவ்வாறு இற்று விழவே இராமனது வெற்றி நிலையை வியந்து எல்லாரும் பெருமகிழ்ச்சி யடைந்தார். மலர்களை வாரி வீசினர். பல நலங்கள் பேசினர். "சனகன் பெரிய புண்ணியவான்; சீதை நல்ல பாக்கியவதி; இவ்வூர் உயர்ந்த சீர் அடைந்தது" என இவ்வண்ணம் உவகை யுரைகள் ஆடினர். சொல்ல முடியாத உள்ளக் களிப்புகளும் ஆரவாரங்களும் எங்கணும் துள்ளி எழுந்தன.

இராமனைப் புகழ்ந்து பாராட்டி நகர மாந்தர் பேசிய ஆர்வ மொழிகள் பேருவகையோடு பெருகி விளைந்தன. பொது மக்கள் புகழுரைகள் மதிநலம் கனிந்து மாண்பு சுரந்துள்ளன. பண்பும் பயனும் கலந்த அந்த இனிய பேச்சுகள் அயலேவருவன.

தயரதன் புதல்வன் என்பார்; தாமரைக் கண்ணன் என்பார்;
புயல்இவன் மேனி என்பார்; பூவையும் பொருவும் என்பார்;
மயல்உடைத்து உலகம் என்பார்; மானுடன் அல்லன் என்பார்;
கயல்பொரு கடலுள் வைகும் கடவுளே காணும் என்பார்.

நம்பியைக் காண நங்கைக்கு ஆயிரம் நயனம் வேண்டும்;
கொம்பினைக் காணும் தோறும் குரிசிற்கும் அன்னதேயாம்;
தம்பியைக் காண்மின்! என்பார்; தவம்உடைத்துஉலகம்என்பார்;
இம்பர் இந் நகரில் தந்த முனிவனை இறைஞ்சும் என்பார்.
(கார்முகப்படலம், 42, 43)

அன்பு சுரந்து நண்பு நிறைந்து மிதிலைவாசிகள் பேசியுள்ள இந்த இன்ப வாசகங்கள் உலக மாந்தர் உள்ளங்களில் படிந்து என்றும் உவகை சுரந்து வருகின்றன. பலபேர் கூடிப் பேசியுள்ளமையால் உரைகள் பலபடியாகப் பரவி உதித்திருக்கின்றன.

பாரவில்லை ஒடித்த இந்த வீரமகன் யார் அம்மா! என்று கூறநேர்ந்தபோது தந்தையின் பேர் எழுந்தது. தசரத மன்னனுடைய அருமைத் திருமகன் என்று ஒருத்தி கூறியபொழுது அந்த அழகனது கண்ணைப் பார்த்தீர்களா? செந்தாமரை மலர் போல் செவ்வி வாய்ந்துள்ளது என மற்று ஒருத்தி மகிழ்ந்து பேசினள். உருவ நிலையை வியந்தும், பருவ நலனை விழைந்தும், பண்புடைமையைப் புகழ்ந்தும், வீரப்பொலிவைக் குறித்தும், பலரும் பலவாறு பரிவுகூர்ந்து பாராட்டி நின்றார்.

உலகம் மயல் உடைந்து என்றது இவனை மனிதன் என்று எண்ணுவது மடமை என்றபடி. திருமாலே இந்த உருவில் வந்துள்ளான்; இதில் சந்தேகமே இல்லை என்று பலர் உறுதி மொழிகள் கூறினர். இறுதியில் பருவ மங்கையர் சிலர் "அம்மா! இந்தக் கட்டழகனைக் கண்டு மகிழ நாம் தரமா? சீதை தான் காணத் தக்கவள்" என்றார். "அந்தப் பேரழகியும் தனக்கு வாய்த்துள்ள இரண்டு கண்களால் இந்தச் சுந்தரனைக் கண்டு களிக்க முடியாது; ஆயிரம் கண்கள் இருந்தால் ஒருவாறு உருவ எழிலைப் பருகி மகிழலாம்" என எதிர் உரைகள் பதில் எழுந்தன.

நம்பியைக் காண நங்கைக்கு ஆயிரம் நயனம் வேண்டும்

இதில் இராமன், சீதை என நேரே பேர் குறியாமல் நம்பி, நங்கை என்றது சிறப்பும் சீர்மையும் தெரிய வந்தது. இவன் ஆடவர் திலகன்; அவள் அரிவையர் குல திலகம் என்க.

"நம்பியும் நங்கையும் நாமச் சிறப்பே."

என்பது இங்கே காணத்தக்கது.

"நாடிய நம்பியோடு நங்கை என்று இரண்டாண் பெண்ணைத்
தேடிய கவிகளெல்லாம் சிறப்பிக்கும் நாமமாமே." (நிகண்டு)

இரு பால்களுக்கும் உயர் நிலையமாய் உருவ நலம் எய்தி ஒளிசெய்துள்ளமை தெளிய இந்த இனிய நாமங்களை இயம்பியருளினர். மனித சாதி மகிமையுற வந்த புதியவர் என்பதாம்.

சீதையே ஆயிரங் கண்களால் காணத் தக்க பேரழகன் என இராமனது பேரெழிலை வியந்து பேசச் சிலர் எதிர்ந்து பேசினர். "அது என்ன அம்மா அப்படிச் சொல்லுகிறாய்! இவருக்கும்

அவளைப் பார்க்க அவ்வளவு கண்களோடு பின்னும் எவ்வளவோ வேண்டுமே" என நீண்ட ஆவலோடு நேரே கூறினர்.

"கொம்பினைக் காணும் தோறும் குரிசிற்கும் அன்னதே யாம்" முன்னதினும் இது எற்றமுற்று வந்தது. என்னை? இராமனைக் காணுவதற்குச் சீதைக்கு ஆயிரம் கண்கள் போதும்; ஆனல் சீதையின் அழகை முழுதும் பார்த்து மகிழ்தற்கு இராமனுக்கு ஆயிரம் நயனங்கள் போதா; காணும் தோறும் புதிது புதிதாக ஆயிரம் ஆயிரம் வேண்டும் என்க. தோறும் என்பது குறித்த நிலையைப் பன்மைப்படுத்தும் தன்மை யுடையது.

காணும்போதெல்லாம் கழிபேருவகையை விளைத்து அத்திவ்விய சவுந்தரியம் ஒளி வீசி யுள்ளமை உணர வந்தது. திருமாலே பெருமால் கொள்ளும்படியான திருவே இவ்வுருவாய் மருவியிருத்தலால் அது பேரெழில் நிலையமாய்ப் பெருகி உள்ளது.

கொம்பு என்றது பூங்கொடி என்றபடி. குண மலர் பூத்து அழகொளி தவழ்ந்து ஒரு மணம் கமழ்ந்து ஒல்கி ஒசியும் மெல்லியல் என அந்நல்லியல்பு தோன்றச் சொல்லினர்.

பெருமாளினும் பிராட்டி பேரழகி என ஓரளவு காட்டி உரிமை பாராட்டலாயினர். பெண்மை இனம் அபிமானமாய்ப் பேசி யிருப்பினும் அம்மொழிகளில் உண்மை ஒளி ஊடுருவி யுள்ளது. பரமான்வுக்குப் பரமானந்த நிலையமாய்ப் பரவியுள்ள உறவும் உரிமையும் அறிய வந்தது.

இங்ஙனம் நம்பி நங்கைகளைக் குறித்துப் பேசினவர் பின்பு தம்பி பக்கம் திரும்பினர். அன்பு மீதூர்ந்து ஆர்வ மொழிகள் ஆடினர். மொழிகளுள் கெழுதகைமைகள் கெழுமி யுள்ளன.

தம்பியைக் காண்மின்! என இலக்குவனை இலக்கு வைத்தார். முன்னவர் இருவரைப் பார்த்து நாம் பன்னிப் பன்னிப் பேசுவதால் யாது பயன்? நங்கை செய்த புண்ணியத்தால் நம்பியைப் பெற்றுள். இனி அங்கிருந்து நமக்கு யாதொரு ஊதியமும் இல்லை. சும்மா வாயூறுவதால் என்ன வரும்? நம்முள் யார் ஏனும் நல்ல தவம் செய்திருந்தால் ஒரு வேளை இத்தம்பியைப் பெற்றாலும் பெறலாம். ஆகவே இவனைப் பாருங்கள் எனத் தம்முள் அவர் உவகை கூர்ந்து உருகியுள்ளபடி உரைகள் வந்துள்ளன.

தவம் உடைத்து உலகம் என்றது கால் தரைதோய வந்துள்ள அவரது காட்சியை வியந்து. நம் கண்கள் பண்ணிய புண்ணியமே இன்று இவரைக் கண்டு மகிழ நேர்ந்தது எனப் பெண்டுகள் பேசி நின்றனர். தங்கள் நாட்டை மட்டும் குறியாமல் உலக முழுவதையும் ஒருங்கே குறித்தது அவரால் அகிலமும் அடையும் பயனினை கருதி.

இவ்வளவு காட்சி யின்பங்களைக் கையோடு கொண்டு வந்து தந்தவர் கோசிகர் ஆதலால் அவரை இறுதியில் பேசலானார்.

"இம்பர் இந் நகரில் தந்த முனிவனை இறைஞ்சும் என்பார்" நம்பியைக் காண, தம்பியைக் காண என்றவர் முனிவரையும் அங்ஙனம் கூறாமல் இறைஞ்சும் என்றார். இறைஞ்சுதல் = வணங்குதல். அம்முதியவர் தொழுது வணங்கத் தக்கவரே யன்றி விழி களிப்ப விழைந்து நோக்க வுரியர் அல்லர் ஆதலால் இம் மொழிகளை வழங்கினார். சொல்விலையே அவர் உள்ள நிலைகள் உணர வந்தன.

செல்ல மகன் வில்லை வளைத்து வெற்றிப் பொலிவுடன் விளங்கி நிற்க, ஊரவரெல்லாரும் உவகையில் ஓங்கி இவ்வாறு உரைகள் பல பேசினார்.

சனக மன்னன் பெரு மகிழ்ச்சியுடன் சபையிலிருந்து எழுந்து கோசிகரையும் குமாரரையும் அழைத்துக்கொண்டு அரண்மனைக்குப் போயினன். மேல் ஆவதை ஆய்ந்து வந்தான்.

திருமண நாளை எதிர் நோக்கி அனைவரும் ஒருமனமாய் உவந்து நின்றார். கலியாணப் பேச்சும் களிப்பும் எங்கனும் பொங்கி எழுந்தன. தேசம் முழுவதும் ஆசை கூர்ந்து நின்றது.

வெளியே இங்ஙனம் உவகை நலங்கள் பரவி மிளிர, உள்ளே ஒன்றும் உணராமல் கன்னி மாடத்தில் கவன்றிருந்த பெண்ணின் நிலைமையை இனி நாம் காண வருகின்றோம்.

## சனகியின் மன நிலை.

இராமனைக் கண்டது முதல் காதல் மீக்கொண்டு யாதொரு வகையிலும் தேறாமல் நோதலுழந்து அமளியில் சீதை அயர்ந்து கிடந்தாள். அம்மையல் நிலைகளை யெல்லாம் முன்னம் அறிந்துள்ளோம். ஐயன் நீங்கி அரண்மனையை அடைந்தபின் ஆசை

நோயால் உருகி யுளைந்து மறுகி மயங்கிய அவளது அலமரல்கள் அளவிடலரியன. இரவு கழிந்த பின் சிறிது தெளிந்தாள்.

பாங்கு சூழ்ந்து பரிந்து உபசரித்த பாங்கியர் எல்லாரையும் "நீங்கள் போங்கள்" என்று அயல் ஒதுக்கித் தனியே தனித்திருந்தாள். பின்பு பிற்பகலில் கன்னி மாடத்து அருகே பூம்பொழில் இடையே சந்திரகாந்தக் கற்களால் அமைந்த இனிய மணிமாளிகையில் போய் உலாவி அமர்ந்தாள். எதிரே இருந்த தாமரைத் தடாகத்தை நோக்கினாள். தெளிந்த நீரில் படர்ந்திருந்த அந்தப் பசிய இலைகளைப் பார்த்து இராமனது திருமேனியை நினைந்து நெஞ்சம் உருகினாள். செந்தாமரை மலர்களைக் கண்டு கண்கள் போல் உள்ளனவே என்று கருதி மகிழ்ந்தாள். பார்த்தன எல்லாம் இராமமயமாய் ஆர்த்தியைவிளைத்தன.

இந்த ஆணழகனுடைய உருவ நலங்களை எண்ணி எண்ணி உள்ளம் உருகித் தன்னந் தனியளாய் உரைகள் பல கூறினாள். ஆசை மீதூர்ந்து அவள் பேசிய வாசகங்கள் சில அடியில்வருவன.

நாண் உலாவு மேருவோடு நாணுலாவு பாணியும்
தூண் உலாவு தோளும்வாளி யூடுலாவு தூணியும்
வாணிலாவின் நூல்உலாவு மாலைமார்பும் மீளவும்
காணலாகும் ஆகின்ஆவி காணலாகு மேகொலாம். (1)

விண்டலங் கலந்திலங்கு திங்களோடு மீதுசூழ்
வண்டலம் புலங்கல்தங்கு பங்கியோடும் வார்சிலைக்
கொண்டல்ஒன் றிரண்டுகண்ணின் மொண்டுகொண்டு என் ஆவியை
உண்டதுண்டு என்நெஞ்சினின்றும் உண்டதென்றும் உண்டரோ. (2)

பஞ்சரங்கு தீயின்ஆவி பற்றநீடு கொற்றவில்
வெஞ்சரங்கள் நெஞ்சரங்க வெய்யகாமன் எய்யவே
சஞ்சலம் கலந்தபோது தையலாரை உய்யவந்து
அஞ்சல்அஞ்சல்! என்கிலாத ஆண்மைஎன்ன ஆண்மையே? (3)

இளைக்கலாத கொங்கைகாள்! எழுந்துவிம்மி என்செய்தீர்!
முளைக்கலா மதிக்கொழுந்து போலும்வாள் முகத்தினான்
வளைக்கலாத விற்கையாளி வள்ளல்மார்பின் உள்ளுறத்
திளைக்கலாகும் ஆகில்ஆன செய்தவங்கள் செய்மினே. (4)

அடர்ந்துவந்து அனங்கனெஞ் சழன்றுசிந்தும் அம்பெனும்
விடங்குடைந்த மெய்யினின்று வெந்திடா தெழுந்துவெங்
கடந்துதைந்த காரியானை அன்னகாளை காலடைந்து
உடன்தொடர்ந்து போனஆவி வந்தவாறென் உள்ளமே! (5)

விண்ணுளே எழுந்தமேகம் மார்பினூலின் மின்னொடும்
மண்ணுளே இழிந்ததென்ன வந்துபோன மைந்தனுர்
எண்ணுளே இருந்தபோதும் யாவர்என்று தேர்கிலேன்!
கண்ணுளே இருந்தபோதும் என்கொல் காண்கிலாதவே? (6)

பெய்கடற் பிறந்துஅயல் பிறக்கொணு மருந்துபெற்று
ஐயபொற்கலத்தொடங்கை விட்டிருந்த ஆதர்போல்
மொய்கிடக்கும் அண்ணல்தோள் முயங்கிடாது முன்னமே
கைகடக்க விட்டிருந்து கட்டுரைப்பது என்கொலோ? (7)

(கார்முகப் படலம், 47—54)

காதல் மீதூர்ந்த சீதை தனியே இருந்து இப்படிப் பேசி யிருக்கிருள். உரிமையாளன்பால் உள்ளம் உருகி யுள்ளது.

ஆர்வ நலங்களும் ஆற்ருமைகளும் பாசுரங்களில் ஊற்றெடுத்து ஓடுகின்றன. கதா நாயகியினுடைய காம வேட்கையைத் தம் உள்ளத்தே கொண்டு உயிர் உருக்கத்துடன் உல்லாச விநோதமாய்க் கவி சல்லாபங்கள் செய்துள்ளார். சந்தப் பொலிவும் தாள அமைதியும் தழுவி வந்துள்ளமையால் பாடல்களை வாய் விட்டுப் பாடின், இசையின் இனிய சுவையை நன்கு காணலாம்.

1. இராமனுடைய கைகளையும் தோள்களையும் மார்பையும் நினைந்து முதலில் மறுகினுள். மேரு மலையும் நாணும்படியான பார வில் எனக் கோதண்டத்தின் வீர நிலையை வியந்தாள். வில், அம்பருத்தூணி, பூணூல்களைக் குறித்தது, முன் காணும் பொழுது அவை கண்ணுள் படிந்துள்ளமையால் எண்ணுள் எழுந்து இவ்வண்ணம் விளைந்து எளிது வெளி வந்தன.

“பாணியும் தூணியும் மாலைமார்பும் மீளவும் காணலாகும் ஆகின் ஆவி காணலாகும்” என்றது இராமனது திவ்விய உருவத்தை மறுபடியும் கண்டால் அன்றித் தன் உயிரைக் காண முடியாது என்றவாறு. தனது உயிர் நிலையை இதில் உணர்த்தி யருளினுள். தன் ஆவி இன்னவண்ணம் உள்ளது என்க.

2. சந்திர மண்டலம் போன்ற திருமுகமும், இந்திர நீலம் ஒத்த மயிர் முடியும், சுந்தரமான நீண்ட வில்லும் பொருந்திய காளமேகம் ஒன்று நேருநல் மாலை வந்து தாமரை மலரனைய தனது இரண்டு கண்களால் எனது உயிரை மொண்டுகொண்டு உண்டது; அது என் நெஞ்சில் இன்றும் உண்டு; என்றும் உண்டு என உற்றுள்ள உண்மையை உலகு அறிய உரைத்தாள்.

"கொண்டல் ஒன்று இரண்டு கண்ணின் மொண்டுகொண்டு என் ஆவியை உண்டது" என்றதனால் இராமனது கள்ளப் பார்வையில் சீதையை அள்ளி விழுங்கியுள்ளமை அறிய வந்தது.

3. பஞ்சை எரிக்கின்ற தீ போல் படுபாவியான காமன் என் நெஞ்சை எரிக்கின்றான். யாதொரு துணையுமின்றி அல்லலுழந்து நான் அலமருகின்றேன். பஞ்சையான என்னைப் பஞ்சபாணன் கொஞ்சமும் இடைவிடாது கொடுந்துயர் செய்கின்றான். ஒரு பெண் பேதை கண் கலங்கி இங்ஙனம் கலுழ்ந்துழல்வதைக் கண்டிருந்தும் கருணைசெய்து வந்து "அஞ்சாதே!" என்று ஆறுதல் சொல்லவில்லையானால் வில்லும் கையுமாயுள்ள அந்த வீரம் என்ன வீரம்? நானும் ஒரு ஆண் பிள்ளை என்று சும்மா ஒரு வில்லை ஏந்தி வெளி வந்தால் போதுமா? வழி வகை தெரியாமல் அழுது அயரும் எளிய பெண் பிள்ளையை அளி செய்து ஆதரித்தலே ஆண்மையாகும் என ஆணை விதித்தாள்.

"சஞ்சலம் கலந்தபோது தையலாரை உய்யவந்து
அஞ்சல்! அஞ்சல்! என்கிலாத ஆண்மை என்ன ஆண்மையே?"

உண்மையான ஆண்மை இன்னதாம் எனப் பேசியிருக்கும் இதில் பெண்மை மணம் பெரிதும் வீசுகின்றது. ஆணுக்கு அழகு பெண்ணுக்கு இரங்குதல் என அறிவு கொளுத்தினாள்.

பெரிய அபாயத்தில் அகப்பட்டு உபாயம் ஒன்றும் தெரியாமல் ஓயாது அயாயமிட்டுக் கிடக்கின்றேன்; இந்த ஆபத்தில் வந்து ஆதரிக்கவில்லையானால் வீரமான அந்த ஆண் பிறப்பால் யாது பயன்? என்பாள், ஆண்மை என்ன ஆண்மையே? என்றாள். சிந்தை புலந்து நொந்து கூறிய படியிது. அஞ்சல்! அஞ்சல்! என்று அடுக்கியதால் நெஞ்சின் கவலையும் நிலைமையும் தெரிந்தன. இராமன் திருவாய் திறந்து தன்னை நோக்கி ஒரு வார்த்தை

யேனும் பேசவேண்டும் என்னும் ஆசை பெருகி யுள்ளமை இதனால் அறியலாகும். கண்ணே! மணியே! அமிர்தே! என்று காதலர் கொஞ்சிப் பேசும் இன்ப மொழிகள் எனக்கு இசையாது போயினும், அஞ்சல் என்றுவது அஞ்சலில் வாலாகாதா? என்று மறுகியிருக்கிறாள். தூர வரும்போதே, "சீதா! அஞ்சாதே! இதோ வந்துவிட்டேன்" என்று சொல்ல வாய் திறந்து சொல்லாடி ஒல்லையில் ஓடி வர வேண்டாமா? இப்படி நான் அல்லலடைய நீங்கள் அகன்றிருக்கலாமா? ஆடவர் திலகமே! ஆருயிர் அமுதமே! என உள்ளம் உளைந்திருக்கிறாள்.

அஞ்சுதல் பெண்மை இயல்பு; அஞ்சாமை ஆண்மைத் தன்மையாம்; ஆகவே அஞ்சினாரை அச்சம் நீக்கி ஆதரித்து ஆளுவோரே ஆண்மையாளர் எனத் தன் கேண்மையாளரைக் கிளர்ந்து கூறினாள்.

4. காதலனை நினைந்து இங்ஙனம் கருத்து நொந்தவள் பின்பு தன் உறுப்புக்களை நோக்கி வெறுப்புரை யாடினாள்.

இளைக்கலாத கோங்கைகாள்! எழுந்து விம்மி என்செய்தீர்?
தன் மார்பை நோக்கிச் சனகி நொந்து பேசியிருக்கும் இந்த வாசகம் காமச் சுவை கனிந்து, நகைச் சுவை சுரந்து, கலைச் சுவை நிறைந்து, புலத்துறை பொலிந்து, நலத்திடை தவழ்ந்து நிலத்திடை வந்துள்ளது. நிலைகளை நினைந்து நோக்குக.

தோள் முதலிய வேறு அவயவங்களை விளியாமல் முலைகளை விளித்தது, இன்ப நுகர்வில் முன்புறத் தலைசிறந்து நிற்கும் நிலைமை கருதி. பெண்மைக்குப் பேரழகாய் அவை பெருகி யுள்ளமை அறிய வந்தது.

நல்ல பருவ மங்கை என்பதைக் கொங்கையின் உருவ நிலையால் நேரே உணர வுரைத்தாள். "சும்மா விம்மிப் புடைத்து அண்ணாந்து ஏங்கி ஏன் அலந்து நிற்கின்றீர்கள்! அந்த அண்ணலை அடைந்து மகிழ வேண்டுமாயின், அதற்கு ஆன தவங்களைச் செய்யுங்கள். அரிய புண்ணியப் பேற்றாலன்றி அக்கட்டழகனைக் கட்டித் தழுவிக் களித்து இன்புற முடியாது" என்று குறித்தாள்.

அஞ்சல்! என அவன் வந்தருளவில்லையே என்று நெஞ்சம் கவன்றாள்; உடனே அவன் வருவதற்கு நல்ல தவம் செய்யவில்லை

எனத் தன்னை நொந்து கொண்டாள். தம் பெண்மை நலம் கொங்கைகள் மேல் கொழுத்திருத்தலால் இன்னுயிர்த் துணையான அவற்றை முன்னிலைப்படுத்தி இன்னனம் பேசினாள்.

“உள்ளே உருகி நைவேனை உளளோ இலளோ என்னாத
கொள்ளை கொள்ளிக் குறும்பனைக் கோவர்த்தனனைக் கண்டக்கால்
கொள்ளும் பயன்ஒன் றில்லாத கொங்கை தன்னைக் கிழங்கோடும்
அள்ளிப் பறித்திட்டு அவன் மார்பில் எறிந்துஎன் அழலைத்தீர் வேனே.

கொம்மை முலைகள் இடர்தீரக் கோவிந்தற்கு ஓர்குற்றேவல்
இம்மைப் பிறவி செய்யாதே இனிப்போய்ச் செய்யும் தவம்தான்என்?
செம்மையுடைய திருமார்வில் சேர்த்தானேனும் ஒருஞான்று
மெய்ம்மை சொல்லி முகம்நோக்கி விடைதான் தருமேல் மிகநன்றே”

(நாச்சியார் திருமொழி, 14)

கண்ணனை நினைந்து ஆண்டாள் பாடியுள்ள இப் பாசுரங்கள் ஈண்டு எண்ண உரியன. கொங்கைகளின் பயனை விழைந்து பொங்கிய ஆவலோடு அந்நங்கை குறித்திருக்கும் நயனை அறிக.

“கொங்கைகாள்! வள்ளல் மார்பின் உள் உறத் திளைக்கலாகும்” என்ற இதில் உள்ள நிலை உணர நின்றது. முயக்கில் உள்ள மோக மயக்கம் ஏகபோகமாய் ஈண்டு வெளிப்பட்டுள்ளது. திளைத்தல்=மூழ்கிக் களித்தல். ஆற்றாமையோடு ஆசைதீரப் பேசியிருக்கிறாள், புல்லித் திளைப்பதைச் சொல்லிக் களித்தாள்.

5. மதன விதனம் மண்டியுள்ளமையால் போக உறுப்புகளோடு தனியே ஏகமாய் இங்ஙனம் இனிது பேசினாள்.

“அனங்கன் நெஞ்சு அழன்று சிந்தும் அம்பு எனும் விடம் குடைந்த மெய்” என்றமையால் இது பொழுதுள்ள விரக தாபத்தின் நிலைமை தெரியலாம்.

காளை கால் அடைந்து தொடர்ந்துபோன ஆவி

இராமன் பின்னே தன் உள்ளமும் உயிரும் போயிருத்தலை உணர்த்திய படி யிது. போன ஆவி அப்படியே அம்மானவனிடம் இருந்துவிடாமல், மீளவும் திரும்பி வந்துள்ளதே! இது என்ன அதிசயம்! போன உயிர் மீளாது என்பார்களே! மீளாமல் அங்கேயே இருந்துவிடின் அந்த ஆளை நினைந்து மாளாத் துயருடன் இவ்வாறு இங்கே வாளா வருந்தி நான் மறுக நேர்ந்திராதே என்று உருகி நொந்து உரையாடி யிருக்கிறாள்.

இராமன் திருவடியை மருவின் இன்பமும், ஒருவின் துன்பமும் உயிர்கட்கு உண்டாம் என்னும் தத்துவ நிலையும் இதில் உய்த்துணர வுள்ளது.

6. அந்த அண்ணல் என் கண்ணுள்ளும் எண்ணுள்ளும் இருக்கின்றான்; இருந்தும், நேரே காணுமல் நான் தட்டழிகின்றேன் என்று தவித்து இறுதியில் தன்பிழைபாட்டைவெறுத்தாள்

7. நல்ல தேவாமிர்தம்; பாற்கவிடல் அன்றி வேறெங்கும் பெறமுடியாது; அத்தகைய அரிய அமுதம் வலிய வந்து எளிதே கிடைத்தது; அதனை உடனே அள்ளி எடுத்து அருந்தி மகிழாமல் வீணே ஒதுங்கி இருந்துவிட்டு இப்பொழுது அழுது புலம்புகின்றேனே! இது முழு மூடத்தனம் அல்லவா! என்று தன்னையே இகழ்ந்து கொண்டாள். ஆதர் = மூடர்.

"மொய்கிடக்கும் அண்ணல் தோள் முயங்கிடாது முன்னமே
கைகடக்க விட்டிருந்து கட்டுரைப்பது என் கொலோ?"

ஆளை அயலே அகலவிட்டது மடமை என்றபடி.

கண்டவுடனே விரைந்து புகுந்து கட்டி அணைத்துத் தூக்கிக் கொண்டு வந்து கன்னிமாடத்தில் பூட்டி வைத்திருக்கவேண்டும்; அங்ஙனம் செய்யாமல் மதிமோசம் போனேனே! என்று மறுகியுள்ளமை இதனால் அறியலாகும்.

கட்டுரைப்பது = வாய்ச்சாலகமாய் வட்டித்துப் பேசுவது. செய்யவேண்டிய இடத்தில் காரியத்தைச் செய்துகொள்ளாமல் கை நழுவவிட்டு இதுபொழுது அதை விழைந்து பன்னிப் பன்னிப் பேசுவதில் யாது பயன்? என்று தன் அறிவையும் விதியையும் நொந்து ஆறுதலடையுமுறையில தேறுதல் அடைந்தாள்.

## சிலையுற்ற செயதியைச் சீதை அறிதல்

இன்னவாறு இன்னலுழந்து தன்னந்தனியளாய்ச் சானகி தவித்து இருக்கும்பொழுது அயண்மனையிலிருந்து ஓர் அழகிய இளமங்கை விரைந்து ஓடி வந்தாள். அவளுடைய பெயர் நீலமாலை. இராமன் வில்லை முறித்த செய்தியைச் சொல்லுதற்காகவே உள்ளங் களித்து அவ்வாறு அவள் ஒல்லையில் அடைந்தாள்.

அவள் ஓடிவந்த நிலையும் உரைத்த முறையும் உவப்பு மிக உடையன. ஓடிவரும்போதே உள்ள மகிழ்ச்சி வெளியே துள்ளி வந்தது.

வடங்களும் குழைகளும் வான வில்விடத்
தொடர்ந்துபூங் குழல்களும் துகிலும் சோர்தர
நுடங்கிய மின்னென நொய்தின் எய்தினள்
நெடுந்தடங் கிடந்தகண் நீல மாலையே. (1)

வந்தடி வணங்கிலள் வழங்கும் ஓதையள்
அந்தமில் உவகையள் ஆடிப் பாடினள்
சிந்தையுள் மகிழ்ச்சியும் புகுந்த செய்கையும்
சுந்தரி சொல்எனத் தொழுது சொல்லுவாள். (2)

(கார்முகப் படலம், 56, 57)

வந்தவளுடைய விநய சாகசங்களை இங்கே நாம் விழைந்து காண்கிறோம். கலனும் குழலும் கலையும் குலைய வந்தமையால் அவளது உவகைநிலை உணர வந்தது.

முத்து வடங்களும், வயிர மாலைகளும், இரத்தினக் கம்மல்களும் அயலெங்கும் ஒளி வீச எய்தினள் என்றதனால் செல்வச் சிறப்பும் அழகமைதியும் அறியலாகும்.

அத்தகைய கட்டழகி சீதையின் பாதத்தில் விழுந்து பரிந்து வணங்கிப் பணிவுடன் எழுந்து விழைந்து வியந்து அகம் மிக மகிழ்ந்து முகம் மலர்ந்து நின்றாள்.

அங்ஙனம் நின்றவளை நோக்கி, "என்ன உள்ளக் களிப்புடன் ஓடிவந்துள்ளாய்! விளைந்தது என்ன? நிகழ்ந்ததைச் சொல்லு" என்று சானகி விரைந்து கேட்க அவள் உவந்து சொல்லலானாள்.

சுந்தரி! சொல்எனத் தொழுது சொல்லுவாள்.

என்றதனால் வந்தவள் கொண்டுள்ள மரியாதையும் மதிப்பும் குறிப்பறிந்து பேசும் கூர்மையும் கோமகளிடம் பழகும் சீர்மையும் தெரிய நின்றன.

சுந்தரமான மங்கள காரியம் சொல்ல வந்திருத்தலால் அந்தச் சோபன நிலையின் இயல்பால் சுந்தரி என நேர்ந்தது. பாங்கிகளுடைய பாங்கும், அரசிளங் குமரி அவர்களோடு அளவளாவி வரும் அமைதியும் விழுமிய நிலையில் கெழுதகைமை தோய்ந்துள்ளன.

வந்த செய்தியைச் சொல்லுக என்று சீதை சொல்லியபின் அவள் தொழுது நின்று உழுவலன்புடன் உற்றதைச் சொல்லினாள். சொன்னது என்ன? பின்னே காண்க.

நீலமாலை கூறியது.

*கயரத துரகமாக் கடலன் கல்வியன்*
*தயரதன் எனும்பெயர்த் தனிச்செல் நேமியான்*
*புயல்பொழி தடக்கையான் புதல்வன் பூங்கணை*
*மயல்விளை மதனற்கும் வடிவு மேன்மையான். (1)*

*மராமரம் இவைஎன வலிய தோளினன்*
*அராவணை அமலன்என்று அயிர்க்கும் ஆற்றலான்*
*இராமன்என் பதுபெயர் இளைய கோவொடும்*
*பராவரு முனியொடும் பதிவந்து எய்தினன். (2)*

*பூணியல் மொய்ம்பினன் புனிதன் எய்தவில்*
*காணிய வந்தனன் என்னக் காவலன்*
*ஆணையின் அடைந்தவில் அதனை ஆண்டகை*
*நாண்இனிது ஏற்றினன் நடுங்கிற் றும்பரே. (3)*

*மாத்திரை யளவில்தாள் மடுத்து முன்பயில்*
*சூத்திரம் இதுஎனத் தோளின் வாங்கினன்*
*ஏத்தினர் இமையவர் இழிந்த பூமழை*
*வேத்தவை நடுக்குற முறிந்து வீழ்ந்ததே. (4)*

(கார்முகப்படலம், 58—61)

ஓடிவந்த சேடி இவ்வாறு உரைத்து நின்றாள்.

"உங்கள் திருமணம் குறித்து வீரப்பணையமா வைத்திருந்த பார வில்லை ஒரு குமரன் வந்து வளைத்து முறித்தான்" என்று சுருக்கிச் சொல்ல வேண்டியவள், இப்படி விரித்து விளக்கியிருக்கிறாள். குமரன் என்று மாத்திரம் சொன்னால், அவன் யார்? எந்த ஊர்? என்ன சாதி? நிறமும் குணமும் அழகும் எப்படி? என இன்னவாறு பலவும் அறிய விரும்புவள் ஆதலால் அவ் வினாக்களுக்கெல்லாம் உரிய பதிலை எதிர் அறிந்து மதி நலம் கனிய அதிசயமாக இங்ஙனம் கூறலானாள்.

அவளது காரிய விசாரணையும், கேள்வியின் ஆழமும், செய்திகளைத் தெளிவாகப் புனைந்து சொல்லும் திறமும், இதனால் அறியலாகும். இராமனைக் குறித்து அரச சபையில் கோசிகர் கூறியுள்ளன ஊர் முழுதும் பரவியிருத்தலால் அவனது வரலாற்று நிலையை இவ்வாறு நிரலாற்ற நேர்ந்தது. கயம்=யானை.

"தேர் கரி பரி முதலிய நால்வகைச் சேனைகளும் கடல் என உடையவன்; சிறந்த கல்விமான்; உயர்ந்த நீதிமான்;

பெருங் கொடையாளி; அருந்திறலாளன்; ஆழி உருட்டி அகிலமும் புரப்பவன்; தசரதன் என்னும் பேரினன்; அந்தச் சக்கிரவர்த்தியினுடைய அருமைத் திருமகன்; இராமன் என்பது நாமம். காமனும் நாணும் கட்டழகு உடையவன்; திரண்டு உருண்ட திண்ணிய தோளினன்; திருமாலே இவ்வுருவில் வந்துள்ளான் என உலகம் கருதி மகிழும் பெருமித நிலையினன்; அருமைத் தம்பியுடன் ஒரு முனிவரோடு கூடி நேற்று இந் நகருக்கு வந்தான்; நம் மன்னனைக் கண்டு பேசினான்; வில்லைக் கொண்டு வந்தார்; அதனை ஒல்லையில் வளைத்து ஒடித்து எறிந்தான்; அம்மா! அந்த அழகனுடைய ஆண்மைத் திறமும் உருவ நலனும் பருவ நிலையும் அருமை அமைதிகளும் உரையிடலரியன" என்று உரைத்து நின்றாள்.

## சீதை உள்ளம் துணிந்தது.

இவ் வுரைகளைக் கேட்டதும் சானகி உள்ளம் களித்து உயிர் தளிர்த்தாள். சொன்ன அடையாளங்களை யெல்லாம் சூழ்ந்து நோக்கிக் கன்னி மாடத்திலிருந்து தான் கண்ட குமரனேயாம் என்று கருதிக்கொண்டாள். அங்ஙனம் கொண்டவள் தன் உள்ளத்தே ஓர் உறுதியும் பூண்டாள்.

இல்லையே நுசுப்பென்பார் உண்டுண்டு என்னவும்
மெல்லியல் முலைகளும் விம்ம விம்முவாள்
சொல்லிய குறியின்அத் தோன்ற லேஅவன்
அல்லனேல் இறப்பன்என்று அகத்துள் உன்னினாள்.

(கார்முகம், 63)

நீலமாலை வந்து சொல்லிய பொழுது சீதை உள்ளம் பூரித்து நின்ற நிலையை இஃது உணர்த்தியுள்ளது. நுசுப்பு = இடை. சீதைக்கு இடை இல்லை என்று முன்னம் சொன்னவர் இப் பொழுது உண்டு உண்டு என வியந்து சொல்லும்படி உடல் பூரித்தது என்பதாம். உயிர் அடைந்த உவகைப் பெருக்கை உடல் நிலையால் விளக்கிய படியிது. அதிசயக் காட்சியைக் கண்ட போது உண்டாகும் உரைத் துடிப்பை அடுக்கு ஒலித்து நின்றது.

"குறித்த அடையாளங்களைக் கூர்ந்து நோக்கின் நெருநல் நான் கண்ட கட்டழகன் ஆகவே இருக்க வேண்டும்; அப்படி அச்சுந்தரன் அல்லாமல் வில்லை வந்து வளைத்தவன் வேற்றாளா

யிருந்தால் நான் உயிர்வைத்து இரேன்; உடனே இறந்து மடிவேன்" என்று தனக்குள்ளேயே துணிந்து கொண்டாள்.

அவன் அல்லனேல் இறப்பன்

என்றது அவளது உழுவலன்பையும் உத்தமக் கற்பையும் உணர்த்தி நின்றது. உள்ளத் தூய்மை உலகறிய வந்தது.

தான் நேரே கண்டு காதலித்த கார்வண்ணனை அன்றி ஓர் எண்ணமும் தன் உள்ளத்தில் இல்லாதவள் என்னும் உண்மையை இவ்வாய்மொழி தெள்ளத் தெளித்தது.

சீதை இங்ஙனம் ஆதரவடைந்து ஆவதை எதிர் நோக்கி அகமகிழ்ந்திருந்தாள். இனி அரசன் செய்ததை அறிவோம்.

## சனகன் மணம்புரிய விரைந்தது.

அரசவையிலிருந்து குமாரர்களை அழைத்துக் கொண்டு பெரு மகிழ்ச்சியுடன் அரண்மனையை அடைந்த சனகன் கோசிகரோடு உவகையுரையாடி உள்ளம் களித்தான். விவாகத்தை விரைந்து செய்ய விழைந்தான். முனிவரை உசாவினன்.

சனகன் வினவியது.

உரைசெய்எம் பெருமஉன் புதல்வன் வேள்விதான்
விரைவினின்று ஒருபகல் முடித்தல் வேட்கையோ?
முரசெறிந் ததிர்கழல் முழங்கு தானைஅவ்
அரசையும் இவ்வழி அழைத்தல் வேட்கையோ?

முனிவர் பதில் உரைத்தது.

மல்லலான் அவ்வுரை பகர மாதவன்
ஒல்லையில் அவனும்வந் துறுதல் நன்றெனா
எல்லையில் உவகையான் இயைந்த வாறெலாம்
சொல்லுகென்று ஓலையும் தூதும் போக்கினான்.

(கார்முகப் படலம், 65, 66)

சனகன் விசுவாமித்திரரை வினவியதும், அதற்கு அவர் விடை கூறியுள்ளதும் விநயம் மிக உடையன. அரசும் தவசியும் விவாக முறையை உசாவி உள்ளே உரையாடியிருக்கும் இதில் அறிவுமணம் பெரிதும் கமழ்ந்து உறவுரிமை இனிது மிளிர்கின்றது.

எம்பெரும! என்றது உவகைமீதூர்ந்து வந்தது. எனக்கும் என் குடிக்கும் என் குலத்திற்கும் எனது நாட்டிற்கும் பெரு மையைத் தந்துள்ள பேரருளாளரே! என்று நன்றியறிவோடு கூறிய படியிது. அருமை மருமகனை உதவியிருக்கும் நிலைமையை நினைந்து உள்ளம் உவகையில் பெருகியிருக்கிறது.

உன் புதல்வன் என்றது அன்புரிமையில் விளைந்தது. இராம னுக்கு முன்பு நீர் குருவாயிருந்தீர்; இன்று தந்தையும் தாயு மாய்த் தனியமைந்துள்ளீர் என்பதாம். மைந்தனுக்கு இதம் செய்வது தந்தையின் கடனும்; அந்த உரிமையில் தலைசிறந் துள்ளமையாலும், ஆசிரியன் என்னும் நிலைமையாலும் பிதா என நேர்ந்தார்.

தந்தையின் தானத்திலிருந்து நீங்கள் இந்தக் கலியாணத்தை முடித்து வைக்க வேண்டும் என்பது கருத்து.

வேள்வி என்றது திருமணத்தை. விரும்பிச் செய்யப்படுவது என்பது அதற்குப் பொருள். வேள் = விருப்பம்.

"கலியாணத்தை நீங்களே நடத்திவிடுகிறீர்களா? அல்லது திருவயோத்தியிலிருந்து சக்கரவர்த்தியையும் அழைத்துக் கொள்ள வேண்டுமா? உங்கள் கருத்து என்ன! உரைத்தரு ளுங்கள்" என்று அரசன் வினவியிருக்கிறான்.

தசரத மன்னன் வந்துதான் இந்தத் திருமணத்தைச் செய்ய வேண்டும் என்று முன்னுறத் தானாக ஒன்றும் சொல்லாமல் தவசியை உசாவியது. எல்லாம் அவர் பொறுப்பில் விட்டுள்ள தனி உரிமை இனிதுணர வந்தது.

ஒருவருக்கும் அறிவியாமல் இதுபொழுதே திருமணத்தை நடத்திவிடுவோம் என்று சனகன் துரிதப்படுத்தினால், இடையே ஓர் ஐயமும் எழும்; என்னை? தசரதன் அறிந்தால் தன் தலை மைக்கும், தனது அருமை மகனது நிலைமைக்கும் இந்தச் சம்பந்தம் தகாது; ஆதலால் வேண்டாம் என்று சொல்லவும் கூடும் என்று அரசன் இப்படி அவசரப்படுகின்றான் எனப் பொல்லாதார் சிலர் புறம் தூற்றவும் நேர்வர் என்க.

பெண் அகம் எவ்வளவு நல்ல இடமாய் இருந்தாலும் மாப்பிள்ளை வீட்டார் தம் தகுதியை அளவுக்கு மீறி மிகுதிப்

படுத்தி வீண் செருக்குக் கொண்டாடுதல் வழக்கம்; அங்ஙனம் இருக்கப் படி அரசெல்லாம் தொழும் முடி மன்னன் கடி மண நிலையில் கருதி நிற்பது பெரிதும் கருத வந்தது.

தலைமையான ஞானசீலனாயிருந்தாலும் உலக நிலைகளை உய்த்துணர்ந்து மானமும் மதிப்பும் பேணி, சனகன் இவ்வாறு விநயமாக உரையாடலானான்.

இவ்வாசகத்தைக் கேட்டதும் கோசிகர் என்ன சொன்னார்?

ஒல்லையில் அவனும் வந்து உறுதல் நன்று.

என உரிமையுடன் உரைத்தார். உடனே சனகன் பெரு மகிழ்ச்சி அடைந்து திருமண நிலைகளை விளக்கி ஓலை ஒன்று எழுதுவித்துத் தன் கை ஒப்பம் இட்டுச் சிறந்த தூதுவரிடம் அதனை உவந்து கொடுத்து உறுதி பல கூறித் திருவயோத்திக்கு அனுப்பினான். அவர் விரைந்து சென்றார்.

மன்னர்பிரானுடைய வரவை எதிர் நோக்கிச் சனகன் முதலிய அனைவரும் மனமகிழ்ந்திருந்தார். மங்கல நாளை எதிர் பார்த்து நாடும் நகரமும் ஆவல் மீதூர்ந்து ஆர்வம் பொங்கி நின்றன.

இவ்வளவோடு கார்முகப் படலம் முடிகின்றது.

கார்முகம் = வில். மழைக்காலத்தில் ஆகாயத்தே பச்சையாய் நீண்டு வளைந்து தோன்றுவதை இந்திர வில் என்பர். கார்முகத்தே படிந்துள்ளமையால் அவ்வானவில் கார்முகம் என வந்தது. பின்பு பாரிலுள்ள வில்லுக்கு அது பேராய் நேர்ந்தது.

"கார்முகக் கடுமுகில் ஊர்தி யாக" (பெருங்கதை, 3—20) என்னும் இதில் கார்முகம் குறித்து நிற்கும் பொருளை ஓர்க.

போர் முகத்தே பொருது வெல்ல வல்ல மன்னர் எல்லாரையும் பின்னடைச் செய்து பெரு மகிமையோடு சீர்முகந்து நின்ற கார்முகத்தைக் கார்வண்ணன் நேர் வளைத்த செய்தியை உரைத்தலால் இப்பகுதி கார்முகப் படலம் எனப் பேர் எய்தி நின்றது.

முன்பு சென்ற தூதுவர் அயோத்தியை அடைந்ததும், தசரதனைக் கண்டதும், மண ஓலை தந்ததும், நிகழ்ந்ததை அறிந்து மன்னர் பிரான் மகிழ்ந்ததும், குடி படைகளோடு எழுந்து மிதிலை

நோக்கி வந்ததும், சனகன் எதிர் கொண்டு கண்டு முதிர் அன்புடன் அழைத்து வந்து அரண்மனையில் உபசரித்து வைத்ததும், தசரதன் வரலாற்றுப் பகுதியில் * முன்னம் உரைக்கப்பட்டுள்ளன. அவற்றை மீண்டும் தொடர்ந்து பார்த்து ஈண்டு எண்ணிக் கொள்க.

எழுச்சி, வரைக் காட்சி, பூக்கொய், நீராட்டு, உண்டாட்டு, எதிர்கோள் என இடையே ஆறு படலங்களைப் பரப்பிக் கலியாணத்துக்கு வருகின்ற ஆடவர் மகளிருடைய உல்லாசமான சல்லாபங்களையும், கூடல் ஊடல்களையும் காதல் களிப்புகளையும் கலை நலங்கனிய விளக்கிப் பலவகைச் சுவைகளையும் கவி அங்கே இனிது விளைத்திருக்கிறார். காவியத்தின் சீவியமான சிருங்கார வருணனைகளும், காம இரசனைகளும் அப்பகுதிகள் எங்கணும் பரந்து மிளிர்கின்றன. அவற்றை உரிமையுடன் உள்ளே உவந்து விடுத்துக் கதாநாயகனை மாத்திரம் நாம் தொடர்ந்து பார்ப்போம்.

தசரதன் மிதிலை அடைந்த பொழுது இராமன் எதிர் நடந்து போய் அவன் அடியில் விழுந்து தொழுதான். தொழுது கிடக்கும் அருமை மகனை உழுவலன்புடன் தழுவி எடுத்து உச்சி மோந்து பிள்ளைக் காதலோடு மன்னன் பேருவகை பூத்து நின்றான். அதன்பின் இராமனைத் தனியே சிறந்த இரதத்தில் ஏற்றி நகரிடையே பவனி வரச் செய்து, தசரதனைச் சனகன் தனது அரண்மனைக்கு அழைத்துச் சென்று உயர்ந்த உபசாரங்களை உரிமையுடன் புரிந்தான். அரசர்பிரான் அகமகிழ்ந்திருந்தான்.

## இராமன் மிதிலையில் பவனி வருதல்

இராமனது ஊர்கோலம் சீரும் சிறப்பும் நிறைந்து பேர் ஆரவாரமாய்ப் பெருகி எழுந்தது. பரதன் முதலிய தம்பிமார் மூவரும் உத்தம இலக்கணம் வாய்ந்த உயர்ந்த குதிரைகளை ஊர்ந்து அருகுவர, மந்திரி பிரதானிகள் தானைத் தலைவர்களெல்லாரும் புடைசூழ்ந்து தொடர, நடுவே அழகிய பரிகள் நான்கு பூண்ட விழுமிய தேரில் பசிய ஒரு புதிய இளஞ் சூரியன்போல் மரகத ஒளி தவழ இராமன் இனிது அமர்ந்து உலா வந்தான்.

---

* இந்நூல் பக்கம் 350 முதல் தொடர்ந்து பார்க்க.

அந்த அருமைக் காட்சியைக் கண்டு மகிழ ஊரிலுள்ள எல்லாரும் ஒருங்கே திரண்டு இடங்கள் தோறும் குழுமி நிறைந்தார்.

பருவ நலங் கனிந்த மங்கையரனைவரும் உருவநலங் கனிந்த இந்தக்குலமகனைக் காண விழைந்து வீதிகள் எங்கணும் விரைந்து புகுந்தார். ஆதாமீதூர்ந்து அவர் வந்த வகைகளையும், மகிழ்ச்சி நிலைகளையும் அடியில் வரும் கவிகளில் கண்டு மகிழலாம்.

மங்கையர் வந்தது.

மானினம் வருவ போன்றும் மயிலினம் திரிவ போன்றும்
மீனினம் மிளிர்வ போன்றும் மின்னினம் மிடைவ போன்றும்
தேனினம் சிலம்பி ஆர்ப்பச் சிலம்பினம் புலம்ப எங்கும்
பூநனை கூந்தல் மாதர் பொம்மெனப் புகுந்து மொய்த்தார். (1)

ஓடி வந்த நிலை.

வீரிந்துவீழ் கூந்தல் பாரார்; மேகலை அற்ற நோக்கார்;
சரிந்தபூந் துகில்கள் தாங்கார்; இடைதடு மாறத் தாழார்;
நெருங்கினர் நெருங்கிப் புக்கு நீங்குமின் நீங்குமின் என்று
அருங்கலம் அனைய மாதர் தேனுகர் அளியின் மொய்த்தார். (2)

ஆர்வக் காட்சி

கண்ணினால் காதல் என்னும் பொருளையே காண்கின் றேம்இப்
பெண்ணின்நீர்மையினால்எய்தும்பயன்இன்றுபெறுதும்என்பார்;
மண்ணிநீர் உலர்ந்து வான மழையற வறந்த காலத்து
உண்ணும்நீர் கண்டு வீழும் உழைக்குலம் பலவும் ஒத்தார். (3)

உள்ளக் களிப்பு.

பள்ளத்துப் பாயும் நன்னீர் அனையவர் பானல் பூத்த
வெள்ளத்துப் பெரிய கண்ணார் மென்சிலம்பு அலம்ப மென்பூத்
தள்ளத்தம் இடைகள் நோவத் தமைவலித் தவன்பாற்செல்லும்
உள்ளத்தைப் பிடித்தும் நாம்என்று ஓடுகின்றாரும் ஒத்தார். (4)

உரைத்து மொய்த்தது.

அரத்தமுண் டனைய மேனி அகலிகைக்கு அளித்த தாளும்
விரைக்கருங் குழலிக் காக வில்லிற நிமிர்ந்து வீங்கும்
வரைத்தடந் தோளும் காண மறுகினில் வீழு மாதர்
இரைத்துவந்து அமிழ்தின் மொய்க்கும் ஈயினம் என்னலானார்.

வீதிவாய்ச் செல்கின் ருன்போல் விழித்திமை யாதுநின்ற
மாதரார் கண்கள் ஊடே வாவுமான் தேரில் செல்வான்
யாதினும் உயர்ந்தோர் தன்னை யாவர்க்கும் கண்ணன் என்றே
ஓதிய பெயர்க்குத் தானே உறுபொருள் உணர்த்தி விட்டான்.
(உலாவியற் படலம், 1—6)

பவனி வருகின்ற இராமனைக் காண விழைந்து மகளிர் திரளாக ஓடி வந்த நிலைமையும், கூடிக் கண்டு குலாவி நின்ற வகைமையும் இங்கே குறிக்கப்பட் டுள்ளன. கவிகளைக் கண் ணூன்றி நோக்கின் காட்சிகள் நன்கு விளங்கும்.

1. மான், மயில், மீன், மின், தேன் என்றமையால் காத லோடு காணவந்த மாதரது மென்மை சாயல் கண்ணழகு உருவ நலம் பருவச் சிறப்பு இன்ப நிலை முதலிய இனிமைப் பண்புகள் தெரிய வந்தன.

2. ஓடிவரும்பொழுது நிகழ்ந்த நிலைகளால் அவர்தம் வேட்கை நிலை வெளிப்பட்டு நின்றது. "தேன் நுகர் அளியின் மொய்த்தார்" என்ற உவமை வாசகம், பொருளின் இனிமை யைத் தெளிவு படுத்தியது. தேன் இராமனுக்கும், வண்டுகள் பெண்டுகளுக்கும், நுகர்ச்சி காட்சிக்கும் ஒப்பாம்.

3. நீண்ட நாளாகத் தண்ணீர் கிடையாமல் தாகத்தால் தவித்து நின்ற மான்கூட்டங்கள் இனிய நீர்நிலையைக் கண்டு மொய்த்தது போல் மங்கையர் இராமனைக் கண்டு களிகூர்ந்து மொய்த்தார். கண் பெற்ற பயனையும் பெண் பிறந்த பலனையும் இன்றே பெற்றோம் என்று பெரு மகிழ்ச்சி யடைந்தார்.

4. வள்ளலை நோக்கி ஓடிவந்த தருண மங்கையர் பள்ளம் பாயும் புனல் போல் பல இடங்களினு மிருந்து துள்ளி வந்தார். அவருடைய உள்ளங்கள் அவரினும் முந்திப் பாய்ந்தன.

5. அகலிகைக்கு அளித்த தாளையும், அரசிளங் குமரிக்காக வில்லை வளைத்த தோளையும் காண்போம் என்று கருதி வந்த மாதர் அமிழ்தினை மொய்க்கும் ஈயினம் போல் எம்மருங்கும் சூழ்ந்து நின்றார். தாளையும் தோளையும் வியந்து விழைந்து உவந்து பேசி ஆளை நோக்கி விரைந்து வந்தது, தம் சாதிக்கெல்லாம் யாண்டும் இனியன் என்னும் ஆதரவு கனிந்தது. பெண் இனங்

களுக்கு இன்னருளோடு இதம் புரியும் தண்ணளியாளன் என உரிமை மீதூர்ந்து இவ்வண்ணம் எண்ணி யடைந்தார்.

6. வீதிகள் எங்கணும் குழுமி நின்று விழி களிப்ப விழைந்து நோக்கிய பெண்களுடைய கண்கள் வழியே சென்றமையால் கண்ணன் என்று மேலோர் இவனுக்கு இட்ட பெயர்க்கு இனிய பொருளை இன்று தெளிவு படுத்தினன்.

கண்ணன் என்பது திருமாலுக்கு ஒரு பெயர். செந்தாமரை மலர் போன்ற அழகிய கண்ணை யுடையவன், யாண்டும் கண்ணோட்டம் புரிபவன், எல்லா உயிர்கட்கும் கண்போன்றவன், எங்கணும் உள்ளவன் என இன்னவாறு பல பொருள்களைக் குறித்து அந்நாமம் சேமமாய் நின்றது. அப்பழைய பெயர்க்கு இங்கே ஒரு புதிய பொருள் கூறப்பட்டுள்ளது.

பல்லாயிரக் கணக்காய் வீதியில் திரண்டு பார்த்த எல்லா மகளிர் கண்களுக்கும் களிப்பு ஊட்டி உள்ளே இராம உருவம் புகுந்து நிற்றலால், யாவர்க்கும் கண்ணன என முன்னம் இட்டிருந்த பெயர்க்கு உரிய காரணத்தை உலகம் அறிய ஈண்டு உணர்த்திவிட்டான் என்பதாம்.

வேட்கை மீதூர்ந்த அப்பெண்களது கண்காட்சியை விளக்கியிருக்கும் இவ்விந்த நிலை உய்ந்துணர்வை விளைந்து உவகை சுரந்துள்ளது. தலைமைக் காட்சியில் புலமைச் சுவை பொங்கி மிளிர்கின்றது.

தேரில் ஏறி இராமன் வீதிவழியே சென்றான் என வெளி அறிய நின்றாலும், உண்மையில் அவன் சென்ற வழி இன்னதாம் என நன்னயமாக நவின்றார்.

விழித்து இமையாது நின்ற மாதரார் கண்கள் ஊடே செல்வான்.

என்றமையால் ஆதரமீதூர்ந்து அவர் கண்டு நின்ற காதல் காட்சி நிலை காணலாகும். இடையே இமைத்தால், பேரழகாகிய அந்த ஆரமிர்த நுகர்ச்சி பிழைபடும் என்று கருதி இமையா நாட்டமுடையராய் அனைவரும் அமைந்து நின்றார்.

தங்கள் அரச குமாரிக்கு உரிய நாயகனாய் வந்துள்ள அரிய மணமகனை ஊரிலுள்ளவர் யாவரும் ஆவலோடு கண்டு மகிழ்வது

இயற்கை. இயல்பான அந்த ஆர்வக் காட்சியைக் காவியச் சுவை ததும்பக் கவி இவ்வாறு அமைத்திருக்கிறார்.

கதை நிகழ்ச்சியில் இடம் வாய்த்த போதெல்லாம் கதா நாயகனைப் புகழ்ந்து பாடுவது கவிகளின் மரபா யுள்ளது. அங்ஙனம் பாடுங்கால், உருவ அழகைப் பருவ மங்கையர் வாயிலாகக் காமச்சுவை கனிய இனிது புகழ்கின்றார்.

இலக்கணையின் மணமகனான சீவகன் யானை மேல் பவனி வருங்கால் மாதர் சூழ்ந்து பார்த்த நிலையைத் திருத்தக்கதேவர் பல விருத்தங்களால் விளக்கி யிருக்கிறார்.

வெள்ளைமை கலந்த நோக்கிற் கிண்கிணி மிழற்றி ஆர்ப்பப்
பிள்ளைமை காதல் கூரப் பிறழ்ந்துபொற் றோடு வீழத்
துள்ளுபு செலீஇய தோற்றம் தொடுகழற் காமன் காமத்து
உள்ளுயிர் அறியப் பெண்ணாய்ப் பிறந்ததோர் தோற்றம் ஒத்தார். (1)

பெரும்பொருள் நீதிச் செங்கோற் பெருமகன் ஆக்கம் போலப்
பரந்திட மின்றி மேலாற் படாமுலை குவிந்த ; கீழால்
அரும்பொருள் நீதி கேளா அரசினிற் சுருங்கி நந்தும்
மருங்குநொந்து ஒழிய வீதி மடந்தையர் இடங்கொண்டாரே. (2)

சாந்தகம் கிழிய மாலைத் தடமுலை ஞெமுங்கப் புல்லிச்
சேர்ந்தெழு நங்கை மாரே திருநங்கை மார்கள் ; அல்லார்
கூந்தலும் முலையும் முத்தும் கோதையும் சுமந்து நைவான்
போந்தஅந் நங்கைமார்கள் பொய்ந்நங்கை மார்கள் என்பார். (3)

இடம்பட அகன்று நீண்ட இருமலர்த் தடங்கண் என்னும்
குடங்கையின் நொண்டு கொண்டு பருகுவார் குவளைக் கொடியின்
உடம்பெலாம் கண்கள் ஆயின் ஒருவர்க்கும் இன்றி ஒப்ப
அடங்கவாய் வைத்திட்டாரப் பருகியிட் டீமின் என்பார். (4)

(சீவகசிந்தாமணி)

இந்தப் பாடல்களின் சொல் நோக்கும், பொருள் நோக்கும், இசை நோக்கும், முன் வந்துள்ள நம் கவிகளோடு இணைத்து நோக்கத் தக்கன. பல துறைகளிலும் சிந்தாமணி நம் காவியத்திற்கு இனிய துணையாய் இசைந்திருக்கின்றது. அந்த மூல நூல் செவ்விய நிலையில் இணைந்து திருந்திய கலங்களுடன் விளைந்து இனிமை சுரந்து வருந்துறைகளை நுணுகி உணர்ந்து கொள்க. உணர்வுரைகள் உயிர்நிலைகளை ஒளி செய்கின்றன.

சிவபெருமான் வழுதிமரபில் சோமசுந்தர பாண்டியன் ஆய் அவதரித்துத் தடாதகைப் பிராட்டியை மணந்து கொள்ளுங்கால் பவனி வந்ததைக் குறித்துப் பரஞ்சோதி முனிவர் வருணித்திருப்பது அடியில் வருவது.

நங்கைஎன் நோற்ருள் கொல்லோ நம்பியைத் திளைத்தற்கு என்பார்;
மங்கையை மணப்பான் என்ஞே வள்ளலும் நோற்ருன் என்பார்;
அங்கடி மதுரை என்ஞே ஆற்றிய தவம்தான் என்பார்;
இங்கிவர் வதுவை காண்பான் என்னநாம் நோற்ருேம் என்பார். (1)

நங்கைதன் நலனுக் கேற்ப நம்பியைத் தந்தது இந்தத்
துங்கமா மதிநூல் வல்ல சுமதிதன் சூழ்ச்சி என்பார்
அங்கவள் தவப்பே றென்பார்; அன்னைதன் கன்னிக் கன்றி
இங்கிவன் மருக ஞகை எத்தவம் உடையாள் என்பார். (2)

கலையொடு நாணம்போக்கிக் கருத்தொடு வண்ணம் வேருய்
உலையொடு மெழுகிட்டென்ன உருகுகண் ணீர ராகிக்
கொலையொடு பயில்வேற் கண்ணுர் குரிசில்தன் பவனி நோக்கி
அலையொடு மதியம் சூடும் ஐயன்மெய் யன்பர் ஒத்தார். (3)

உழைவிழி ஒருத்தி தன்கண் உருவெளி யாகித் தோன்றும்
குழகனை இரண்டு செம்பொற் கொங்கையும் ஒன்ருய் வீங்கத்
தழுவுவாள் ஊற்றம் காணுள் தடமுலை இரண்டே யாகி
இழையிடை கிடக்க நீங்கி இருக்கைகண் டிடைபோல் எய்த்தாள். (4)

விதுக்கலை மிலைந்து செங்கண் விடையின்மேல் வருமானந்த
மதுக்கடல் தனைக்கண் வாயால் முகந்துண்டு மகளிர் எல்லாம்
புதுக்கலை சரிவது ஓரார்; புரிவளை கழல்வது ஓரார்;
முதுக்குறை அகல்வது ஓரார்; மூழ்கினர் காம வெள்ளம். (5)

(திருவிளையாடற் புராணம், திருமணப் படலம்)

கம்பருடைய வாக்கையும் நோக்கையும் இவை கவர்ந்து வந்துள்ளன. கவிகளைக் கண்ணூன்றி நோக்கின் உண்மை நிலை புலனும்.

கதாநாயகரது வடிவழகை மங்கையர் வாய்மூலம் இங்ஙனம் புகழ்ந்து போற்றித் தம் உள்ளன்பையும் உணர்ச்சி நலங்களையும் கவிகள் வெளிப்படுத்தி யருள்கின்றனர்.

ஒரு பேரழகன் பவனி வருங்கால் ஊரார் எல்லாரும் உவந்து நோக்கினும் தருண மங்கையர் நோக்கமே காதலின்பம் கனிந்து

ஓதி உணருந்தோறும் உவகை சுரந்து வரும் ஆதலால் அதனைத் தனியே விதந்து கூற நேர்ந்தது.

மாதர் காட்சியால் காதை நாயகன் மாட்சியே பல வகையிலும் போற்றப்பட்டு வருகின்றது. சுவைகள் பல தோய்ந்து உவகை நிலையமாய் அது ஒளி மிகுந்துள்ளது. சில பாடல்களை மட்டும் பார்த்துவிட்டு மேலே போவோம்.

எண்கடந்து அலகி லாதின்று ஏகுறும் இவன்தேர் என்று
பெண்கள் தம்தம்மில் நொந்து பேதுறு கின்ற காலை
மண்கடந்து அமரர் வைகும் வான்கடந்தானைத் தான்தன்
கண்கட வாது காத்த காரிகை பெரிய ளேகாண். (1)

பயிரொன்று கலையும் சங்கும் பழிப்பரு நலனும் பண்பும்
செயிரின்றி அலர்ந்த பொற்பும் சிந்தையும் உணர்வும் தேசும்
வயிரம்செய் பூணும்நாணும் மடனும்தன் நிறையும் மற்றும்
உயிர்ஒன்றும் ஒழிய எல்லாம் உகுத்து ஒரு தெரிவை நின்றாள். (2)

பஞ்சணி விரலி னார்தம் படைநெடுங் கண்கள் எல்லாம்
செஞ்செவே ஐயன் மெய்யின் கருமையைச் சேர்ந்தவோ தாம்
மஞ்சன மேனி யான்தன் மணிநிறம் மாத ரார்தம்
அஞ்சன நோக்கம் பார்க்க இருண்டதோ அறிகி லேமால். (3)

மாந்தளிர் மேனி யாள்ஓர் வாணுதல் மதனன் எங்கும்
பூந்துணர் வாளி மாரி பொழிகின்ற பூசல் நோக்கி
வேந்தர்கோன் ஆணை நோக்கான் வீரன்வில் ஆண்மை பாரான்
ஏந்திழை யாரை எய்வான் யாவனோ ஒருவன் என்றாள். (4)

சொன்னலங் கடந்த காமச் சுவையை ஓர் உருவம் ஆக்கி
இன்னலந் தெரிய வல்லார் எழுதிய தென்ன நின்றாள்
பொன்னையும் பொருவும் நீரார் புனைந்தன எல்லாம் போகத்
தன்னையும் தாங்க லாதாள் துகில்ஒன்று தாங்கி நின்றாள். (5)

விற்றங்கு புருவம் நெற்றி வெயர்வரப் பசலை விம்மச்
சுற்றெங்கும் எறிப்ப உள்ளம் சோரஓர் தோகை நின்றாள்
கொற்றம்செய் கொலைவேல் என்னக் கூற்றெனக் கொடிய கண்ணாள்
மற்றொன்றும் காண்கி லாதாள் தமியனோ வள்ளல் என்றாள். (6)

மைக்கருங் கூந்தற் செவ்வாய் வாணுதல் ஒருத்தி உள்ளம்
நெக்கனள் உருகு கின்றாள் நெஞ்சிடை வஞ்சன் வந்து
புக்கனன் போகா வண்ணம் கண்எனும் புலங்கொள் வாயும்
சிக்கென அடைத்தேன் தோழி சேருதும் அமளி என்றாள். (7)

வரிந்தவாள் அனங்கன் வாளி மனங்கழன் றனவும், மாதர்
எரிந்தபூண் இனமும், கொங்கை வெயர்த்தபோ திழிந்த சாந்தும்,
சரிந்தமே கலையும், முத்தும், சங்கமும், தாழ்ந்த கூந்தல்
விரிந்தபூந் தொடையும் அன்றி வெள்ளிடை அரிதவ் வீதி. (8)

தோள்கண்டார், தோளே கண்டார்; தொடுகழற் கமல மன்ன
தாள்கண்டார், தாளே கண்டார்; தடக்கைகண் டாரும்அஃதே;
வாள்கொண்ட கண்ணார் யாரே வடிவினை முடியக் கண்டார்!
ஊழ்கொண்ட சமயத்து அன்னான் உருவுகண் டாரை ஒத்தார். (9)
(உலாவியற் படலம்)

மிதிலை மங்கையரை முன்னிலையாக வைத்துக்கொண்டு இராமனது வடிவழகைக் கவி இங்ஙனம் பாராட்டி யிருக்கிறார். பாடல்கள் யாவும் காதல் நலம் கனிந்து வந்துள்ளன. ஐயன்பால் மையல் மீதூர்ந்து தையலார் அடைந்துள்ள மெய்ப்பாடுகளையும் செய்கை நிலைகளையும் தனித்தனி ஊன்றி நோக்கி இனித்த பல நலங்களையும் நுனித்து உணர்ந்து கொள்க. காமச் செவ்வி படர்ந்து, நகைச்சுவை தொடர்ந்து, கற்பனைக்காட்சிகள் அடர்ந்து உரைகள் எல்லாம் உவகையில் ஊறி வந்திருக்கின்றன.

பொருட் குறிப்புக்களை விளக்கப் புகின் பெரிதும் விரியும் ஆதலால் நீவிரே உரிமையுடன் கருதி யுணர்தல் மிகவும் இனிதாம்.

கவிகளைக் கண் ஊன்றிப் பல முறையும் படித்தால் காதல் களிப்புகளின் நுணுக்கங்கள், நெஞ்சங்கள் விழையும் நிலைமைகள், ஆர்வம் கனிந்த அவச மொழிகள், உவகை நலங்கள் பலவும் புலனும்.

உருவ அழகைப் பலவகையிலும் உரிமை மீதூர்ந்து உரைத்து வந்த கவி இறுதியில் இராமனது பரம நிலைமையை விளக்கியிருக்கிறார். விளக்கம் வியனிலையில் மதி நலம் கனிந்து வந்துள்ளது.

தோள் கண்டார் தோளே கண்டார்;

என்றது, தோள் அழகைப் பார்த்தவர் அதனையே பார்த்து நின்றார்; வேறு ஒன்றையும் பார்க்கவில்லை என்றவாறு.

மது உண்ணும் வண்டுகள் போல் வைத்த கண்களை வாங்க முடியாமல் கண்டதையே கண்டு களி கூர்ந்து நின்றனர். ஒவ்வொரு அவயவமும் அளவிடலரிய பேரொளியுடன் விழுமிய நிலையில் பொலிவெய்தி யுள்ளமையால் விழிகள் வெளி வராமல் கழிபெருங் காதலோடு கவ்விக்குழுமிக் களிக்கலாயின.

பெண்களுடைய கண்கள் இராமனது உருவ உறுப்புகளில் பதிந்து அமுத வாரியில் அளிகள் மொய்த்தபடி களிமிகுத்து ஞகர, அவர் உளமும் உயிரும் உருகிப் பரவசராய் நின்ற நிலைமையை இங்கே நாம் பார்த்து நிற்கின்றேம்.

தன்னைக் கண்ட கண்களைப் பின்னே அயல் ஒன்றும் காணுதபடி களிப்பூட்டியுள்ளமையால் ஒவ்வோர் உறுப்புக்களும் தனித் தனியே அற்புத அழகுடன் அதிசய நிலையில் விதி செய்து நின்றமை வெளியாயது.

சீதையே * ஆயிரம் கண்களால் அன்றிக் காணமுடியாத பேரழகை இரண்டு கண்களைக் கொண்டு மாதர் எங்ஙனம் காண முடியும்? கண்டநிலேயே மூழ்கிக் கரைகாணுதவ ராயினர்.

தலைமையான முகம் கண்களைக் குறியாமல் தோள் தாள்களைக் குறித்தது, ஆள் அளவில் வெறும் அழகன் அல்லன்; அரிய பெரிய வீர அழகன் என்பது விளங்க.

இராமனது எழில் நலங்கள் எல்லாம் வீரத் தொழில் புரியவே விளைந்து வந்துள்ளன என்பதை இடங்கள் தோறும் கவி விளக்கி வருகிறர். தோள் வலியில் ஆள் நிலை தொடர்ந்து வருகிறது.

நோக்கிய நோக்கு தோளில் ஆழ்ந்தன என்று முன்னம் கன்னிமாடத்தில் நின்று சீதை இந்த ஆளைக் கண்டபோது தோளையே கண்டு காதலித்துள்ளமை காண்க.

கோலாகலமாய்க் குதூகலித்து வருகின்ற இப்பவனிக் கொண்டாட்டத்திற்கும், அழகுக் காட்சிக்கும் தோளே காரணம் ஆதலால் அந்நிலைமை தெரிய அது தலைமையாய் வந்தது. என்னை நிலைமை? எனின், இத்தோள் வலியால் வில்லை வளைத்தமையினுலே தான் இவ்வளவு சீரும் சிறப்புமாய் இந்தப் பெரிய ஊர்கோலம் நேர்ந்தது; இல்லையாஞல் யாதொரு காட்சியும் இல்லாமல் மாட்சி யிழந்து போயிருக்கும் என்க.

எந்த அவயவ ஆற்றலால் இந்த மகிமையும் மாட்சியும் விளைந்தனவோ, அது சுந்தரக் காட்சியாய் முந்துற வந்தது.

---

* இந்நூல் பக்கம் 1167 வரி 23 பார்க்க.

பவனியைக் காண விரைந்து மங்கையர் ஓடி வரும் போது என்ன பேசி வந்தனர்? "அகலிகைக்கு அளித்த தாளும், வில் இற நிமிர்ந்த தோளும்" காண்போம் என்று களிப்பூர்ந்தே வேணவா வுடன் விரைந்து புகுந்தனர்.

"இரைத்து வந்து அமிழ்தின் மொய்க்கும் ஈ இனம் என்ன லானர்" என முன்னம் சொன்னபடியே அளிகள் அமுதை மொய்த்தது போல் விழிகள் அழகை மொய்த்து நுகர்ந்தன என்க.

கண் கொள்ளாக் கட்டழகு ஆதலின் அக்காட்சி தெவிட்டாது திளைத்தன. அவ்வளவு விழிகளுக்கும் அமுத வெள்ளமாய் உருவ அழகு பெருகி யிருந்தது; ஒன்றும் பருகி மீளாமல் யாவும் உருகி வீழ்ந்து உள்ளே மூழ்கிக் கிடந்தன.

வாள்கொண்ட கண்ணார் யாரே வடிவினை முடியக் கண்டார்? இந்தக் கேள்வி நிலையைக் கண்ணூன்றி உணர்க.

பெண்கள் ஆவலோடு ஓடி வந்தார்; ஆர்த்தி மீதூர்ந்து பார்த்தார். அழகைப் பருகி அவசமாகி விழித்த கண் விழித்த படியே வியந்து நிறைந்தார்.

தோளைப் பார்த்தவள், தோளையே கண்டாள்; வேறொன்றையும் காணவில்லை. கையைப் பார்த்தவள் வேறு மெய்யைப் பார்க்கவில்லை. தாளைப் பார்த்தவளும் அப்படியே மற்ற ஆளைப் பார்த்திலள். முகத்தைப் பார்த்தவள், அந்த முகத்தில் பதித்த கண்களைப் புறத்தே திருப்பவில்லை. கண்ணைக் கண்டவள் கண்ணையே கண்டு களிப்புற்று நின்றாள். இவ்வண்ணம் ஒவ்வொரு உறுப்பிலும் ஊன்றிய கண்ணை வாங்க மாட்டாமல் உவந்து நோக்கி அனைவரும் வியந்து நினைவரும் நிலையில் நிலைத்து நின்றார். அந்நிலைகள் காட்சியின் அற்புதத்தைக் காட்டி நின்றன.

தனித்தனி உறுப்பே இனித்த சுவையில் இன்பூட்டியருளினமையால் ஒருத்தியாவது வடிவ முழுவதையும் காண முடியாது போயது.

இங்ஙனம் கண்டதையே கண்டு களித்து நின்றார் என்றமையால் அந்தப் பெண்கள் கண்களில் ஏதேனும் பார்வைக் குறைவு உண்டோ? என்னும் ஐயுறவு உண்டாகலாம் ஆதலால் அதனை

ஒழித்தற்கு வாள் கொண்ட கண்ணார் என அவ் விழி ஒளியை விளக்கி யருளினார்.

வாள் = ஒளி, பிரகாசம். வாளை ஒத்த கண் எனின், உவமை வாசகமாய்ப் புற வடிவில் படிந்து பொலிவிழந்து போம்; அங்ஙனம் போகாமல் அக ஒளியின் தகவுணர மிக நுணுகி வந்துள்ள உயரியல்பினை ஊன்றி யுணர்ந்து கொள்க.

மிதிலை மங்கையர் யாவரும் நல்ல கூரிய சீரிய பார்வை யுடையவரே; அந்த ஒளி மிகுந்த கண்ணழகிகளும் இராமனது வண்ண வடிவங்களை முழுவதும் காண முடியாமல் கண்ட அளவி லேயே மண்டிக் களிப்புற்று நின்றார் என்க.

அந்த அதிசய அழகை இங்ஙனம் துதி செய்த கவி முடிவில் குறித்துள்ள முடிவு நெடிதுணர வந்தது.

ஊழ்கொண்ட சமயத்து அன்னான் உருவு கண்டாரை ஒத்தார்.

இது ஆழ்ந்த உணர்வுக்காட்சி. அதிமதி நுட்பமான தத்துவ நோக்குடையது. உலக அனுபவங்கள் பலவும் நிறைந்தது.

இராமனது வடிவழகை முழுதும் காணமாட்டாமல் கண்ட ஒவ்வொன்றிலேயே கண்டமாய் மகளிர் களித்து நின்றமைக்கு அகண்ட உவமையாய் வந்துள்ள இதனை ஓரளவு கண்டு மேலே போவோம்.

## கடவுளும் சமயமும்.

உயிரினங்களுள் மனிதன் பெரிதும் அறிவுடையவன். முன்னும் பின்னும் எண்ணி நோக்குகின்றான். கண்கண்டதை எண்கொண்டு கருதி ஆய்கின்றான். சீவ கோடிகள் பல தோன்றி மறைதலை ஊன்றி ஓர்கின்றான். சூரிய சந்திரர்கள் நேரிய முறையில் நேர்ந்து ஒளிசெய்தலையும், காரியங்கள் யாவும் சீரிய நிலையில் நிகழ்ந்து உலகம் இயங்கி வருதலையும் பார்க்கின்றான். தான் விரும்பியன பல விலகி ஒழிதலையும், விரும்பாதன விரைந்து புகுதலையும் அறிகின்றான். இப்படி அரிய நிலைகள் பலவும் நோக்கி அதிசயித்து இவற்றிற்கெல்லாம் மூலமுதலாய் எல்லை கடந்த பேராற்றலை யுடைய ஒரு பொருள் எவ்வகையினும் திவ்விய நிலையில் இருக்கவேண்டும் என்று முடிவு செய்து கொண்டான். அந்த மதியின் கொள்கையே மதம் என வந்தது.

## மதம்.

மதம் என்பது கடவுளுக்கும் உயிர்களுக்கும் உள்ள உறவுரிமைகளை உறுதிபெற உணர்த்தும் நெறிமுறை யாகும். மதிநலமுடையார் மதித்துச் செய்தது மதம் என நேர்ந்தது. தத்துவவுணர்வுடைய உத்தமர்கள் சிலர் காலம் தோறும் தோன்றித் தத்தமக்குத் தெரிந்த அளவில் சில விதிகளை வகுத்து இதுவே நல்ல முத்திநெறி என முறைப்படுத்திப் போயினர். மனித சமூகம் பெருகி வரவே கால இடங்களுக்கு ஏற்பச் சமயங்களும் பலவாறு மருவி வரலாயின. சமயம் என்பதற்குப் பொருள் பருவமான காலங்களில் பக்குவிகள் சிலரிடமிருந்து தோன்றியது என்பதாம். பல பிரிவுகளுடையனவாயினும், ஆறுவகையாகச் சமயங்கள் முன்னோரால் கூறுசெய்து வகுக்கப்பட்டுள்ளன. ஒரு ஊருக்குப் பலவழிகள் இருத்தல்போல் பேரின்ப நிலையத்திற்கும் நெறிகள் ஆறு என உரைகள் ஆடினர்.

" ஒன்றது பேரூர் வழிஆறு அதற்குள
என்றது போல இருமுச் சமயமும் ;
நன்றிது தீதுஇது என்றுரை யாளர்கள்
குன்று குரைத்தெழு நாயைஒத் தார்களே. (1)

நூறு சமயம் உளவாம் நுவலுங்கால்
ஆறு சமயமவ் வாறுட் படுவன
கூறு சமயங்கள் கொண்ட நெறிநில்லார்
ஈறு பரநெறி இல்லா நெறியன்றே. (2)

ஆயத்துள் நின்ற அறுசம யங்களும்
காயத்துள் நின்ற கடவுளைக் காணிலா
மாயக் குழியில் விழுவர் மனைமக்கள்
பாசத்தி லுற்றுப் பதைக்கின்ற வாறே. (3)

ஆன சமயம் அதுஇது நன்றெனும்
மாய மனிதர் மயக்க மதுவொழி
கானம் கடந்த கடவுளை நாடுமின்
ஊனம் கடந்த உருவது வாமே, " (திருமந்திரம்) (4)

சமய நிலைகளைக் குறித்துத் திருமூலர் கருதியுள்ள உறுதி நிலைகள் இதனால் அறியலாகும். உரைகளில் பொதிந்திருக்கும் உணர்வு நலங்களை நுணுகி உணர்ந்து முடிவு தெரிந்து கொள்க.

முழுமுதல் பரமனை அடைதற்கு வழிகளாகப் பேரறிஞர் சிலர் ஓரோர் காலத்தில் வகுத்த முறைகளே சமயங்கள் என நின்றன. அந்த அளவிலேயே இறைவன் அமைந்துள்ளதாக நினைந்து தந்தம் மதமே சிறந்தது எனத் தருக்கி உரைத்தல் அவனை நிந்தை செய்தபடியாம். மனிதன் குறித்த எல்லைகளை யெல்லாம் கடந்து எங்கும் பரந்து விரிந்து சமயாதீதப் பழம் பொருள் என விளங்கி நிற்கின்ற ஒன்றைப் பலபடியாகப் பகர்ந்து சமய வாதிகள் இழிந்து உழல்கின்றனர்.

"இருமுச் சமயத்து ஒருபேய்த் தேரினை
நீர்நசை தரவரு நெடுங்கண் மான்கணம்
தவப்பெரு வாயிடைப் பருகித் தளர்வொடும்
அவப்பெருந் தாபம் நீங்காது அசைந்தன." (திருவண்டப்பகுதி)

சமய வாதிகளைக்குறித்து வாதவூரடிகள் இவ்வாறு ஓதியுள்ளார். குறித்த உவமையால் சமயங்களின் நிலைமைகளை உணர்ந்து கொள்ளலாம். பேய்த்தேர் = கானலில் தோன்றும் மாயநீர்.

"சமய கோடிகள் எலாம் தம்தெய்வம் என்தெய்வம் என்று
எங்கும் தொடர்ந்து எதிர்வழக்கிடவும் நின்றது எது?"

அது என் கருத்திற்கு இசைந்தது எனக் கடவுள் உண்மையை அதி சாதுரியமாகத் தாயுமானவர் விளக்கி யிருக்கிறார். பரம்பொருள் நிலை வரம்புமீறி யுள்ளமையால் மதங்கள் பல விதங்களாய் விரியலாயின.

ஒன்றொடுஒன்று ஒவ்வா மதங்கள்ஒன்று ஒன்றினால்
பொன்றுவ தில்லையேல் உந்தீபற
பொய்யென்பது எத்தைநாம் உந்தீபற. (அவிரோதவுந்தியார்)

சமய வாதிகள் தத்தம் மதங்களே
அமைவ தாக அரற்றி மலைந்தனர். (போற்றித்திருவகவல்)

உரைத்தது உரையா துரைக்கும் சமயம்
பரத்தை அறிவுற்ற பான்மை—மரத்தின்
அவயவத்தில் ஒரொன்று அறிந்தார் மரமா
அவயவத்தைக் கொண்டவா றும். (அமுதசாரம்)

அன்றென்றும் ஆமென்றும் ஆறு சமயங்கள்
ஒன்றுஒன்றொடு ஒவ்வாது உரைத்தாலும்—என்றும்
ஒருதனையே நோக்குவார் உள்ளத் திருக்கும்
மருதனையே நோக்கி வரும். (திருவிடைமருதூர்க் கோவை)

தலைபலவாப் பெயர்பலவா நதிகள் எல்லாம்
சாகரத்தின் ஒருநீராம் தன்மை போலப்
பலபலவாய்ச் சொல்லுநெறி எல்லாம் சொல்லப்
பட்ட ஒரு பொருளினையாம் பணிதல் செய்வாம் :
அழியாத வீடென்னும் பழைய ஊர்கண்டு
அறியாதார் அதுகாண வேண்டி ஆறு
வழியாகும் சமயங்கள் கொண்டு தம்மில்
வழக்குப்பேசும்சழக்கு மாழ்க வென்றே.

(அஞ்ஞவதைப்பரணி)

இறைவிதன் முலைப்பால் அயின்றசீ காழிக்கு
இறைவனும், இறைவனைப் பரிமேல்
நறைமலர்ப் பொழில்சூழ் மதுரையம் பதியில்
நடத்திய ஒருபெருந் தவனும்
புறநிலைச் சமண மாதியைச் செயித்தார்
பொருந்துதெய் வீகத்தெனில் எவரே
மறைசொல்சட் சமயத்து ஒன்றுகொண்டு ஒன்றை
வாக்குவாதத்தில்வெல் பவரே. (உண்மை நிலயம்)

சாதியிலே மதங்களிலே சமயநெறி களிலே
சாத்திரச்சந் தடிகளிலே கோத்திரச் சண்டையிலே
ஆதியிலே அபிமானித்து அலைகின்ற உலகீர்!
அலைந்தலைந்து வீணேநீர் அழிதல் அழகலவே.

(திருவருட்பா)

இலனென் றினிச்சென் றிரக்கின்றிலேன் இங்கு யாவரையும்;
குலனென்று கோத்திர சாத்திரக் கத்துக்கள் கூறுகிலேன்;
அலம்வந்து மற்றை அறுசமயத்தினு மாயகிலேன்;
தலம்வந்த தத்துவ ஞானமெய்யேயின்று சார்ந்தனரே.

(தத்துவராயம்)

சமயா சார சங்கற்ப விகற்பமும்
அமையா தாம்குல ஆசாரமானதும்
இமையா தாரும் விடாத இல் வாழ்க்கையும்
அமையார் தோளாய் விடுதல் ஆசாரமே. (தேவிகாலோத்தரம்)

காமாதி விட்டுக் கரமே கலமாகிப்
பூமீதே கைகாலைப் போர்த்துறங்கி—நாமகுணம்
சாதி கருமமெனும் வாதனையில் தாக்கற்றார்க்கு
ஏது சமயம்என லாம். (ஒழிவிலொடுக்கம்)

ஓரோர் சமயத் துயிராய்ச் சிலபல உண்டு சொன்னும்
ஆராயின் முத்திஒன் றேயெனின் எங்கும் அதைவிரும்பித்
தேராமல் எம்மதம் இம்மதம் என்றென் றில் சிக்கியிந்தப்
பார்மீ துழல்வதென்? நீர்தெளிந் தோர்செயும் பண்பிதன்றே.
(அருட்பிரகாசம்)

எடுத்தஎம் மதம்எந் நூல்கள் யாவையும் தமதா அங்கு
வடித்தநற் பொருளே கொண்டு வளம்பட மகிழ்வதல்லால்
படித்தொரு பொருளைப் பற்றிப் பாங்கினல் அதில் ஒதுங்கிப்
பிடித்தது பிடித்துக் காதும் பேதைமை பெரியோர்க்கின்றே.
(அவிரோதபோதம்)

கூறுபல பேருடைய ஆறுபல வும்போய்க்
கோத்தபர வைக்கண்ஒரு நீத்தமெனு மாபோல்
வேறுபல வானசம யங்கள்முடி விற்போய்
வேறற அடைந்தவது வேதநெறி வீடே.
(மோகவதைப் பரணி)

யாவரும் எவையும் தானாய் அவரவர் சமயந்தோறும்
தோய்விலன்; புலனைந்திற்கும்சொலப்படான்; உணர்வின்மூர்த்தி
ஆவிசேர் உயிரின் உள்ளல்! ஆதுமோர் பற்றிலாத
பாவனையதனைக் கூடில், அவனையும் கூடலாமே. (திருவாய்மொழி)

சமயங்களும், அவற்றைச் சார்ந்து நின்று கடவுளைக் காண்பாரது திறங்களும் இங்ஙனம் குறிக்கப்பட்டுள்ளன. பாடல்களை ஊன்றிப் படித்துப் பொருள் நிலைகளை ஓர்ந்துகொள்ளுக.

நம்மாழ்வார், பட்டணத்தார், மாணிக்கவாசகர் முதலிய மகான்கள் அன்புமீதூர்ந்து அகம் கரைந்து ஆன்ம வுருக்கத்தால் ஆண்டவனைக் கூடி அனுபவித்துள்ளமையால் சமய வாதங்கள் வீண் விவாதங்களாய் அவர் முன் மதிப்பிழந்து நின்றன.

## யானை கண்ட குருடர்.

தாம் கண்டதே காட்சியாய்ச் சமயவாதிகள் களித்துப் பேசுதலால் யானைகண்ட குருடர் என அவரை ஈனமாக ஞானிகள் எண்ணலாயினர். குறுகிய நோக்கம் குருட்டு மார்க்கமாயது.

ஆறு குருடர்கள் ஒரு நாள் ஓர் யானையைக் காண விரும்பினர். அது இருக்கும் இடத்தை அடைந்தனர். பாகனைத் துணைக்கொண்டு பாகமாய்ப் பார்க்கத் தொடங்கினர். காலை ஒருவன்

தடவிப் பார்த்தான் ; வாலை ஒருவன் பிடித்தான் ; செவியை ஒருவன் தொட்டான் ; துதிக்கை, முதுகு, வயிறுகளை முறையே மற்ற மூவரும் ஆவலோடு தடவிப் பார்த்தார். பின்பு அனைவரும் கூடிநின்று தாம் கண்டதைக் குறித்துக் களித்துப் பேசினர். காலைப் பிடித்துப்பார்த்தவன், யானை உரல் போன்றது என்றான். வாலைப் பிடித்தவன், வாருகோல் என்றான். செவியைத் தொட்டவன், முறம் என்றான். துதிக்கையைத் தழுவினவன், உலக்கை என்றான். முதுகைத் தடவினவன் மெத்தை, என்றான். வயிற்றைத் தொட்டவன், மிடா என்றான். பக்கத்தே கேட்டு நின்ற பாகன் சிரித்தான். "ஐயா! குருடுகளா! நீங்கள் தொட்டுப் பார்த்தது யானையின் ஒவ்வோர் உறுப்புகளை ; அவை யாவும் சேர்ந்த கம்பீர உருவமே யானையாம்" என அவன் உண்மையை உணர்த்தினான். அவர் உணர்ந்து நாணி அகன்று போயினர்.

கடவுளைக் கண்டதாகப் பிதற்றும் சமயிகள் இந்தக் குருடரை ஒத்துள்ளனர். பரந்த நோக்கமுள்ள தெளிந்த தத்துவ ஞானி யானை அருகே நின்ற பாகன் போல் பரமனை உரிமையோடு இனிது கண்டு தனியே உவந்து நிற்கின்றான்.

"ஒத்த சமயங்கள் ஓராறு வைத்திடும்
அத்தன் ஒருவனும் என்பது அறிந்திலர்;
அத்தன் ஒருவனும் என்பது அறிந்திடின்
முத்தி விளக்கும் முதல்வனும் ஆமே. (1)

முதல்ஒன்றும் ஆனை முதுகுடன் வாலும்
இதமுறு கொம்பு செவிதுதிக் கைகால்
மதியுடன் அந்தகர் வகைவகை பார்த்தே
அதுகூறல் ஒக்கும் ஆறு சமயமே." (2)

இந்த மந்திரப் பாடல்கள் ஈண்டுச் சிந்திக்கத் தக்கன.

இதுவரை கூறியவாற்றால் சமயங்களின் நிலைமையும், கடவுளின் தலைமையும் தெரியவந்தன. இத்தகைய சமயத்தாரை மிதிலை மங்கையர்க்கு இங்கே கவி உவமை கூறியிருக்கிறார்.

ஒவ்வொரு சமயமும் தனித்தனியான விதி நியமங்கள் உடைமையானும், ஒன்றோடு ஒன்று மாறுபாடு கொண்டு வேறுபாடுகள் மண்டியுள்ளமையானும் "ஊழ்கொண்ட சமயம்." என்றார். ஊழ் = ஒழுங்கு, முறை, பகை.

"காலையில் நறுமலர் ஒன்றக் கட்டிய
மாலையின் மலர்புரை சமய வாதியர்
சூலையின் திருக்கலால் சொல்லுவோர்க்கெலாம்
வேலையும் திரையும்போல் வேறு பாடிலான்."
(இரணியன்வதைப்படலம் 77)

சமயவாதிகளைப் பின்னரும் இன்னவாறு நம்கவி குறித்திருக் கின்றார். சூலை = ஒருவகை நோய். திருக்கு = மாறுபாடு. மனக் கோட்டமும் விபரீத புத்தியும் உடையவர் என்றபடி.

பரமனுக்கும் உயிர்களுக்கும் உள்ள உறவுமுறையை வேலையும் திரையும் என உணர்த்தியுள்ளார். உவமையின் அமைதியை ஊன்றி நோக்குக.

"*பல்பெரும் சமயம் சொல்லும் பொருளும்போல் பரந்தது"
என முன்னரும் சமய உவமை வந்துள்ளமை காண்க.

பேதை பெதும்பை மங்கை மடந்தை அரிவை தெரிவை எனப் பருவ நிலையில் பலவகை மகளிர் குழுமி யுள்ளமையால் பல திறச் சமயங்கள் உவமையாய் நின்றன.

சமயவாதியர், மங்கையர்க்கும்; நூல்களோடு பழகி ஒளி மிகுந்து தெளிந்துள்ள அவரது கூரிய அறிவு, வாள்கொண்ட கண்ணுக்கும்; அந்தஞானக்காட்சி, இவருடைய கண்காட்சிக்கும்; தோள் முதலியன, பல தெய்வங்களுக்கும்; இராமன், முழுமுதல் கடவுளுக்கும் இங்கே ஒப்பாக வைத்துள்ளமையை உய்த்துணர்க.

அன்னான் என்றது திருமாலை. அவதார மூர்த்தியாய் மண் ணிலையில் வந்துள்ளமையால் இவனது அந்த ஆதிமூல நிலைமை யைச் சேய்மைச்சுட்டால் குறித்தருளினர்.

சமயத்தவர் பரமனை முழுதும் காணமுடியாமல் தத்தமக்கு இயன்றபடி ஓரளவே கண்டு அவ்வளவில் உவந்திருத்தல் போல், மிதிலை மாதர் இராமனது சில அவயவங்களைப் பார்த்தே உள்ளம் பூரித்து இன்பவெள்ளத்தில் ஆழ்ந்து நின்றார்.

சமயச்சார்பின்றி விரிந்த நோக்கத்துடன் பத்தியும் ஞான மும் உத்தம நிலையில் ஓங்கியுள்ள தத்துவ சீலன் ஒருவன் இறை வனை முற்றும் அறிந்து மகிழ்தல்போல், உழுவலன்பும் உயர் பண்

---

* இந்நூல் பக்கம் 109. வரி 5 பார்க்க.

பும் நிறைந்த சீதை ஒருத்தியே இராமனை முழுதும்கண்டு தழுவிப் பேரின்பத்தை அனுபவிக்க வுரியவள் என்பதாம்.

பருவமங்கையர் அனைவரும் இராமனது உருவ எழிலைப் பருகி இங்ஙனம் உளமுருகி நின்றவர் பின்பு பரவசராய்த் தம்மை மறந்து உரைகள் பல பேசினர். ஆசைமீதூர்ந்து அவர் பேசியுள்ள வாசகங்கள் அடியில் வருவன.

மகளிர் உரைத்தன.

அருப்பு மென்முலை யாளங்கொர் ஆயிழை
இருப்பு நெஞ்சினை ஏனும் ஓர் ஏழைக்காப்
பொருப்பு வில்லைப் பொடிசெய்த புண்ணியா!
கருப்பு வில்லிறுத்து ஆட்கொண்டு காஎன்றாள். (1)

மாதொருத்தி மனத்தினை அல்லதோர்
தூது பெற்றிலள் இன்னுயிர் சோர்கின்றாள்
போதரிக்கட் பொலன்குழைப் பூண்முலைச்
சீதை எத்தவம் செய்தனளோ? என்றாள். (2)

பழுதி லாஒரு பாவையன் னாள்பதைத்து
அழுது வெய்துயிர்த்து அன்புடைத் தோழியைத்
தொழுது சோர்ந்தயர் வாளிந்தத் தோன்றலை
எழுத லாம்கொல்இம் மன்மத னால் என்றாள். (3)

வண்ண வாயொரு வாணுதல் மானிடற்கு
எண்ணுங் காலிவ் இலக்கணம் எய்திட
ஒண்ணுமோ? இதுணர்த்துகின்றேன் இவன்
கண்ணனேயிது காண்டிரும்பின் என்றாள். (4)

கனக நூபுரம் கைவளை யோடுக
மனநெ கும்படி வாடியொர் வாணுதல்
அனகன் இந்நகர் எய்தியது ஆதியில்
சனகர் செய்த தவப்பயனால் என்றாள். (5)

ஆம்பல் ஒத்தமு தூறுசெவ் வாய்ச்சியர்
தாம் பதைத்துயி ருள்தடு மாறுவார்
தேம்பு சிற்றிடைச் சீதையைப் போற்சிறிது
ஏம்பல் பெற்றிலர் எங்ஙனம் உய்வரே? (6)

வேர்த்து மேனி தளர்ந்துயிர் விம்மலோடு
ஆர்த்தி யுற்ற மடந்தையர் ஆரையும்
தீர்த்தன் இத்தனை சிந்தையிற் செங்கணில்
பார்த்தி லன்உட் பரிவில னோஎன்றாள். (7)

மருள்மயங்கு மடந்தையர் மாட்டொரு
பொருள் நயந்திலன் போகின்ற நேயிவன்
கருணை என்பது கண்டறி யான்பெரும்
பருணி தன்கொல்? படுகொலையான் என்றாள். (8)

பூக ஊசல் புரிபவர் போலொரு
பாகின் மென்மொழி தன்மலர்ப் பாதங்கள்
சேகு சேர்தரச் சேவகன் தேரின்பின்
ஏகும் மீளும்இது இன்செய்த வாறரோ? (9)

பெருத்த காதலில் பேதுறு மாதரின்
ஒருத்தி மற்றங்கு ஒருத்தியை நோக்கி என்
கருத்தும் அவ்வழிக் கண்டதுண் டோஎன்றாள்
அருத்தி யுற்றபின் நாணம்உண் டாகுமோ? (10)

நங்கை அங்கொரு பொன்னயந் தார்உய்யத்
தங்கள் இன்னுயிரும் கொடுத் தார்தமர்
எங்கள் இன்னுயிர் எங்களுக்கு ஈகிலா
வெங்கண் எங்ஙன்விளைந்தது இவற்கு என்றாள். (11)

நாமத் தாலழி வாளொரு நன்னுதல்
சேமத் தார்வில் இறுத்தது தேருங்கால்
தூமத் தார்குழல் தூமொழித் தோகைபால்
காமத் தாலன்று கல்வியி னால்என்றாள். (12)

ஆர மும்துகி லும்கலன் யாவையும்
சோர இன்னுயிர் சோரும் ஓர் சோர்குழல்
கோர வில்லிமுன் னேஎனைக் கொல்கின்ற
மார வேளின் வலியவர் யார்என்றாள். (13)

(உலாவியற் படலம்)

காதல் களிப்பில் மூழ்கி மையல் மீதூர்ந்து மாதர் இவ்வாறு பேசியிருக்கிறார். உரைகள் அவருடைய உள்ளங்களை வெளிப் படுத்தி நகை வகையில் தொகை புரிந்துள்ளன.

தனித்தனியே இராமனை நோக்கி அவர் உரைத்த மொழி களில் உருக்கமும் மறுக்கமும் பெருகி இருக்கின்றன.

1. பெரிய மலைபோல் வலிமிகுந்து கிடந்த நெடிய வில்லை ஒரு நொடியில் பொடிசெய்து அருளிய ஓ புண்ணிய மூர்த்தியே! கொடிய மன்மதனுடைய மெல்லிய கரும்பு வில்லையும் ஒடித்து

எறிந்து என்னைக் காத்து அருள வேண்டும் என ஒருத்தி வேண்டினுள். அருப்பு மென் முலையாள் என்றது கோங்கு அரும்பையும், தாமரை முகிழையும் ஒத்த அழகிய தனத்தினையுடையாள் என அவளது பருவ வனப்பும் உருவச் சிறப்பும் உணர வந்தது.

அரும்பு இரும்பு கரும்பு என்பன வலிந்து நின்றன.

இருப்பு நெஞ்சினை என்றதில் அவளது நெஞ்சு நிலையும் விருப்பும் சினக் குறிப்பும் தெரிகின்றன. தெரியவே, அவனது இருப்பும் இயல்பும் ஒருங்கே உணர நேர்ந்தன.

"பேரழகுடைய தருண மங்கையர் இருமருங்கும் திரண்டு அமிர்தை அளிகள் மொய்த்தது போல எம்மருங்கும் நுழைந்து நுழைந்து விழைந்து பார்க்கின்றோம். உரிமை கனிந்து உள்ளம் உருகிப் பேராவலோடு இங்ஙனம் வியந்து பார்க்கின்ற மகளிருள் ஒருத்தியையாவது அவன் உவந்து நோக்கவில்லை. மரகதத்தால் எழில் ஒழுகச் செய்த விழுமிய ஒரு சித்திரப் பதுமைபோல் தேரில் விசித்திரமாய் வீற்றிருக்கின்றான். இது என்ன இருப்பு? ஆணழகனாய்ப் பிறந்திருந்தும் பெண்மைச் சுவையை உணராமல் இப்படி வன்மை மண்டியிருப்பது எவ்வளவு கொடுமை! இவன் நெஞ்சம் என்ன கல்லா? இரும்பா?" என்று தன்னுள்ளேயே எண்ணி வருந்தினுள். உடனே அவன் வில்லை முறித்துள்ளதை நினைத்தாள்: "சீதையின் மீது ஆசையினுலேதான் அந்த அரிய வில்லையைத் துணிந்து செய்திருக்கிறான்; ஆகையினுல் நல்ல காதல் நலம் உள்ளே உள்ளவன் என்றே தெரிகின்றது. பெண்மை பால் உண்மையில் இவன் சுவை கெட்ட ஆள் அல்லன். பெரிய சுக போகியே; ஆயினும் ஏகதார விரதன் போலும்? சீதை ஒருத்தியைத் தவிர வேறு மாதரை விரும்பாதவன் என்று விளங்குகின்றது" எனத் தெளிந்து கொண்டாள். அத்தெளிவு அவளுடைய மொழிகள் வழியே ஒளி வீசி யுள்ளது.

"இருப்பு நெஞ்சினை ஏனும்,ஓர் ஏழைக்காப்
பொருப்பு வில்லைப் பொடிசெய்த புண்ணியா!"

என்று கண்ணியமாக எண்ணி விளித்தாள்.

தங்களை விரும்பி நோக்காமையால் நெஞ்சம் இரும்பு என்றாள். பொதுவாக மங்கையர்பால் இரங்காத வன்னெஞ்சனு

யிருந்தும் ஒரு குல மகளுக்கு மட்டும் தனியே அருள் செய்துள்ளான் என்பதாம்.

அரச குமாரியாகிய சீதையை இங்கே ஏழை என்றது மணம் இன்றி மறுகியிருந்த அவளது நிலைமையை நினைந்து. வில்லைப் பொடி செய்த புண்ணியா! என்ற சொல்லைப் பார்க்க. அவனது வீரத்தை வியந்து புகழ்ந்திருக்கிறாள்.

அந்த ஏழைக்கு இரங்கியருளியது போல் அந்த இனத்தைச் சேர்ந்துள்ள இந்தப் பேதைக்கும் கொஞ்சம் உன் நெஞ்சம் இரங்கி அருள் ஐயா! என்கின்றாள்.

ஏழையா யிருந்த அவள் உன்னைப் பெற்று இன்று பரம பாக்கிய வாட்டியாய் உலகம் துதிக்க உயர்ந்து நின்றாள். அந்த நிலையை அடைதற்கு நான் தவம் செய்யவில்லை. அவளோடு கூடி ஊழியும் இன்பமாய் நீ உவந்து வாழ்க. உங்கள் அரண்மனையில் நான் ஒரு ஊழியக் காரியாய் ஊழியம் புரிந்து வருகின்றேன். மன்மதப் பயலால் எனக்கு இதுபொழுது நேர்ந்துள்ள இன்னலை நீக்கி என்னை ஏற்றருள் அண்ணலே! என்று கண்ணீர் சொரிந்து கருத்துருகி நின்றாள்.

"கருப்புவில் இறுத்து ஆட்கொண்டு கா"

தன்னைக் காத்தருள வேண்டிய குறிப்பை இங்ஙனம் குறித்திருக்கிறாள். தலைவியாக முன்னமே ஒருத்தியை உவந்துகொண்டான். இனிமேல் அந்த நிலைமைக்கு யாதும் இடம் இல்லை. ஆள் மிகவும் உத்தம ஒழுக்கம் உடையவன். எத்திறத்தும் வேறு எண்ண முடியாது. ஆதலால் வீட்டு வேலைகளைப் பார்த்தற்காவது ஓர் அடியவளாகத் தன்னை அமைத்துக்கொள்ள வேண்டும் என முடிவாக முடிவு செய்து "ஆட்கொண்டு கா" என்றாள். எப்படியாவது ஒட்டிக்கொள்ள உறுதி பூண்டாள்.

அடிமையை ஆண்டவன் பாதுகாத்தருளுவதுபோல் எனக்கு நீ அருள்புரியவேண்டும் என வேண்டியிருத்தலால் இவளது ஆவலும் பணிவும் அருகமர்ந்து பணிபுரியும் துணிவும் அறியலாகும்.

2. அயல் ஒருத்தி மயல் மிகுந்தாள். செயல் இழந்தாள். உள்ளம் பறிபோய்ப் பெருமூச்சு விட்டாள்; இந்தக் கட்டழகனை

மணமகனைப் பெறுதற்குச் சீதை என்ன தவம் செய்தாளோ? என்று ஏங்கி நின்றாள்.

**3.** அழகிய பாவை போன்ற மற்று ஒருத்தி, இராமனை விழிகளிப்ப நோக்கி உளம் மிக உருகினாள். எழில் ஒழுக வீற்றிருக்கின்ற இனிய திவ்விய உருவையும், திருமுக மண்டலத்தில் மிளிர்கின்ற தெய்வப் பொலிவையும், அருள் கனிந்த நோக்கோடு கம்பீரமாய் அமர்ந்திருக்கும் அந்த அமைதியையும் கண்டு கண்டு கண்ணீர் மல்கினாள். அன்புமண்டி அயலே நின்ற தொழியைப் பார்த்தாள்.

"இத்தோன்றலை எழுதலாம்கொல் இம்மன்மதனால்"

என மறுகி வினவினாள். இம்மதன் என அண்மையில் சுட்டியதனால் காமதாபத்தால் அவள் கருத்தழிந்துள்ளமை புலனாயது.

**4.** இப்புனித மூர்த்தி மனிதன் அல்லன். அங்கங்களின் அமைப்பும், அவயவ வனப்பும் எங்கும் இல்லாதன. மானிடனுக்கு இத்தனை உத்தம இலக்கணங்கள் ஒருங்கு அமையுமோ? பரமபத நாதனே இந்த உருவில் இங்கே வந்துள்ளான். இதில் சந்தேகமே இல்லை; இதனை நீங்கள் பின்னே பார்க்கலாம் என்று ஒருத்தி தன் இனத்தோடு தத்துவம் பேசினாள்.

5. அதன்பின் ஒருத்தி, இப்புண்ணிய சீலன் இவ்வூர்க்கு வந்தது யார் செய்த புண்ணியமோ? நமது அரசனுடைய முன்னோர் பலரும் பன்னெடுங்காலமாகப் பண்ணியிருந்த அருந்தவப் பயனே இப்பெருந் தகையை இன்று இங்கே கொண்டுவந்துள்ளது; நாம் கண்டு மகிழ்கின்றோம் மிதிலையும், விதேகமும் அதிசய பாக்கிய முடையனவாய் எங்கும் துதிசெய்ய நின்றன என்று தொழுது நின்றாள்.

**6.** ஆம்பல் பூவை ஒத்த சிவந்த வாயும் கருவிழியும் திருமுகமும் அதிசய நிலையில் அமைந்துள்ள உயர்ந்த மகளிர் பலர் இராமனை விழைந்து நோக்கி வேட்கை மீதூர்ந்து உள்ளம் தடுமாறி உருகி நின்றார். அந்நிலை பரிதாபமாய்ப் பெருகியிருந்தது.

"சீதைபோல் சிறிது வம்பல் பெற்றிலர்; எங்ஙனம் உய்வரோ?"

என்று கவி இங்ஙனம் அம்மகளிர்க்கு இரங்கி யிருக்கிறார்.

இராமனைக் கண்டு காதல்மீக் கொண்டு சானகியும் நோதலுழந்தாள் ஆயினும், அவனது கண்ணோட்டம் சிறிது காணப்பெற்றாள்; அதுவுமன்றி வில்லை இறுத்து மணமகனாய் நேர்கின்றதையும் எண்ணி அவள் சிறிது ஆறுதல் அடைந்து அமைந்துள்ளாள்; அந்த விதமான ஆதரவு யாதும் இல்லாமையால் மாதர் மயலுழந்து செயலிழந்து உய்வது ஒன்றும் உணராமல் இங்கே வெய்ய துயரில் வீழ்ந்து ஆழ்ந்தார் என்க. ஏம்பல் = ஆதரவு, உதவி.

7. செவ்விய அழகுடைய பருவ மங்கையர் எவ்வளவோ பேர் அயலெங்கும் நெருங்கி ஆசை கூர்ந்து பார்த்து நேசமீதூர்ந்து நிற்கின்றோம். ஒருவரையாவது அவன் உவந்து பார்க்காமல் போகின்றான்; உள்ளத்தே பரிவு ஒரு சிறிதும் இல்லாதவன் என ஒருத்தி கருத்து உளைந்து உரையாடி வருந்தினாள்.

8. மற்று ஒருத்தி, காதல் மிகுதியால் இக் கட்டழகனை நாம் கண்டு கண்டு களிக்கின்றோம்; அவன் ஒன்றையும் கவனியாமல் ஒருத்தியையும் பாராமல் இப்படி வன்கண்ணனாய்ச் செல்கின்றானே! இது என்ன நெஞ்சு அம்மா! அழகுக்கு உரியபடி அருள் இல்லையே! என்று இன்னலுழந்தாள்.

"கருணை என்பது கண்டு அறியான்; பெரும்
பருணிதன் கொல்? படுகொலை யான்."

என இங்ஙனம் கொடுமொழி கூறியிருத்தலால் அவளது காதலும் நோதலும் நெடிது ஓங்கியுள்ள நிலை தெரிய நின்றது.

தான் ஆவலோடு பார்த்தும் தன்னைக் கடைக்கண்ணால்கூட கனிந்து நோக்கவில்லையே என்று சினந்திருக்கிறாள். அவள் பேச்சில் மண்டியிருக்கும் கோபக் குறிப்பையும், அக்குறிப்பின் கருத்தையும் கொஞ்சம் கூர்ந்து பாருங்கள். நெஞ்சின் நிலையை நேரே காணலாம். பருணிதன் = மனப் பண்பு உடையவன். அன்பு இருக்கும் என்று நம்பி நெருங்கியது வம்பு என்பதாம்.

நல்ல அழகனான இவன் உள்ளம் அருள் நலம் கனிந்தால் எவ்வளவு நலமாயிருக்கும்? என்று உவகையில் ஓங்கியிருக்கிறாள்.

கண்ணையும் கருத்தையும் கவர்ந்துகொண்டு தண்ணளி ஒரு சிறிதும் புரியாமல் உள்ளம் அழிந்து உயிர்பதைக்கும்படி பெண்

களை நடுவீதியில் அடுதுயர் செய்கின்றானே! இது கொடிய பாவம் என்பாள் படுகோலையான் என்றாள்.

தன்னளவில் தனியே கூறாமல் மடந்தையர் என இனம் தழுவிக் கொண்டது, தன்னலங் கருதிப் பேசவில்லை; பொது நலங்குறித்தே என்பது புலனுற. அவளது மதிநலமும் சாதுரியமும் அதிசயமுடையன. மருள் = காம மயக்கம்.

கண்களை மயக்கி உள்ளங்களைக் கொள்ளைகொண்டு ஒரு தவியும் புரியாமல் போழகு போகின்றதே! என்று பெண்கள் பெருமூச்சு விட்டு ஏங்கி நின்றுள்ள பாங்கு பகர்ந்த படியிது.

கடுத்துவைதன எல்லாம் அழகன்மேல் மண்டிய விழைவையும், உரிமையையும் விளக்கி நின்றன. மாதரிடம் காதல் களிப்பில் விளைகின்ற நோதல்களும், உரைத்துடிப்புகளும், உள்ளக் குறிப்புகளும் நகைச்சுவை ததும்பி உவகை புரிந்து மிளிர்கின்றன.

பின்னும் பேசியுள்ள மங்கையருடைய வாக்குமூலங்களையும் நோக்கங்களையும் பொருட் குறிப்புக்களையும் நுனித்து நோக்கிக் காவிய இரசனைகளைக் கருத்தூன்றி உணர்ந்து கொள்ளுக.

கதாநாயகனுடைய பேரழகும், பவனிவரும்பொழுது அவன் தேரில் அமர்ந்து வந்த சீர்மையும், பருவமங்கையர் பலர் அருகு சூழ்ந்து ஆர்வமுடன் நோக்கிய கூர்மையும், அந்த அழகிகள் யாரையும் விழைந்து பாராமல் அவ்வீரன் வீற்றிருந்த சீலமும், ஞாலம் அறிந்து மகிழ இங்கே நன்கு விளக்கப்பட்டு உள்ளன.

சபாமண்டபம் சார்ந்தது.

இன்னவாறு மாதர் எல்லாரும் கண் குளிரக் கண்டு களித்து ஆதர மீதூர்ந்து கொண்டாடி மகிழ மிதிலை வீதிகள் வழியே பவனிவந்து அரச மாளிகையை அடைந்து இரதத்தின் நின்றும் இறங்கிப் பலவகை ஆடம்பரங்களுடன் இராமன் சபாமண்டபத்துள் புகுந்தான். புகவே, அங்கே நிறைந்திருந்த அரசகுமாரங்கள் அனைவரும் பரவசராகி மகிழ்ந்தார். அரியணை அருகே வசிட்டரும் விசுவாமித்திரரும் அருந்தவ உருவங்களாய் அமர்ந்திருந்தனர். அம்மாதவர் இருவரையும் முறையே வணங்கி இராமன் ஓர் சிறந்த ஆதனத்தில் அழகு மிளிர்ந்து ஒளிர அமர்ந்தான். இளையவர் உழுவலன்புடன் உழையிருந்தார்.

திருவின் நாயகன் மின்திரிந் தால்எனத்
துருவின் மாமணி ஆரம் துயல்வரப்
பருவ மேகம் படிந்தது போல்படிந்து
இருவர் தாளும் முறையின் இறைஞ்சினன். (1)

இறைஞ்ச அன்னவர் ஏத்தினர் ஏவலார்
நிறைஞ்ச பூந்தவி சேறி நிழல்கள்போல்
புறஞ்செய் தம்பிய ருட்பொலிந் தானரோ
அறஞ்செய் காவற்கு அயோத்தியில் தோன்றினன். (2)

(உலாவியல் 43, 44)

இராமநாதன் முனிவரை வணங்கி எழுங்கால் மார்பில் அணிந்திருந்த வயிரப்பதக்கம் மேகத்தில் மின்னல் மிளிர்ந்தது போல் தன் ஆகத்தில் ஒளி வீசியது. ஊர் கோலத்தில் சிறந்த அலங்காரங்களுடன் வந்துள்ளமை தெரியவந்தது. துருவு இல் மாமணி என்றது ஒப்பு அற்றது, விலை மதிக்க முடியாதது, கிடைத்தற்கு அரியது என மணிகளின் மாட்சியை விளக்கியது.

திருமணம் முடியும் முன்னரே திருவின் நாயகன் என்றது பரமநிலைமை தெரிய. முன்னம் அங்கே மருவியிருந்த திருவே வேறொரு உருவில் இங்கே உதயமாயுள்ளது. தணந்த திருவை உரிய நாயகன் பருவம் அறிந்து மணந்துகொள்ள வந்துள்ளான் என்பதாம்.

கவி இங்ஙனம் பூர்வ நிலையை ஓர்ந்து ஆர்வமீதூர்ந்து குறிப்பினும், தன்னை ஒரு அரசகுமாரனாகவே இராமன் எண்ணியுள்ளமையால் முனிவரைப் பணிந்து இனிய பண்புகளுடன் மனித சமூகம் மாட்சியுற மருவி யிருந்தான்.

வசிட்டரும் கோசிகரும் தவநிலையில் இயல்பாகவே பகைமையுடையாராயிருந்தும், இராமனது உரிமையில் மிகவும் உறவு கொண்டு உவகை மண்டியிருந்தார். ஒரு உத்தமனால் எத்தனையோ உள்ளப் பிணக்குகள் நீங்கும் என்பது இங்கே உணர வந்தது.

திறையோடும் அரசிறைஞ்சும் செறிகழல்கால் தசரதனும்
பொறையோடும் தொடர்மனத்தான் புதல்வர்எனும் பெயரே காண்
உறையோடும் நெடுவேலாய்! உபநயன விதிமுடித்து
மறையோடு வித்திவரை வளர்த்தானும் வசிட்டன்காண்.

(குலமுறை கிளத்து, 24)

சனக மன்னனிடம் விசுவாமித்திரர் கூறியபடி யிது.

பெற்ற தந்தை என்ற அவ்வளவே தசரதனுக்குப் பெருமை; இராமன் முதலிய நால்வருக்கும் அரிய கலைகள் பலவும் கற்பித்து உரிமையுடன் இளமையிலிருந்தே வளர்த்து வந்தவர் வசிட்ட முனிவரே என்று கோசிகர் மனங் கனிந்து இங்கே பேசியிருக்கிறார்.

காண் என்ற முன்னிலை அசைச் சொல்லில் பல நுண் பொருள்களைக் கண்டு தெளியும்படி குறிப்பாகக் காட்டியுள்ளார்.

வசிட்டரை இடையே ஒருமுறை கண்டு மாறுபாடுகொண்ட எனக்கே உலகம் முழுவதும் வியந்து போற்றும் படியான இத்தனை மகிமைகள் கிடைத்திருக்கின்றன; அத்தகைய அருந் தவக் குரிசில் விழைந்து பேணி உவந்து வளர்த்துள்ள இந்த இராமனிடம் எவ்வளவு திவ்விய மகிமைகள் நிறைந்திருக்கும் என்பதை நீ நுணுகி உணர்ந்து கொள்க என்பதாம்.

புறத்தே பகையாயிருந்தும், அகத்தே அவரை இவர் இவ்வாறு மதித்துப் பாராட்டியிருக்கிறார். இவரையும் அவர் புகழ்ந்து போற்றியுள்ளார். வேள்விக்கு இராமனைத் துணைவேண்டி வந்த பொழுது தசரதன் மறுகினன். அவ்வமயம் இராச சபையில் எல்லாரும் வியந்து புகழக் கோசிகருடைய அருமை பெருமைகளை அரசர் பிரானிடம் நேரே கூறிப் புதல்வனை அனுப்பி யருளும்படி வசிட்டர் உணர்த்தி யுள்ளமை ஈண்டு உணரத் தக்கது.

மாறுபாடுடையவர் என வெளியுலகில் வேறுபாடு கொண்டும், தம்முள்ளே ஒருவரை ஒருவர் மதித்து வந்திருக்கும் நிலை அவரது மனப் பண்பையும் செம்மையையும் நன்கு விளக்கி நின்றது. பேரறிவாளரது இகல் என்றும் பெருமிதமுடையது.

ஞானசீலரான இருவரும் நம் மான வீரன்பால் பேரபிமான முடையராய்ப் பெருகி யுள்ளமையால் நேரே ஒருமுகமாய் அருகே உறைந்திருந்தனர். தம்மை வணங்கிய இராமனை மகிழ்ந்து நோக்கி உயர்ந்த ஆதனத்தில் இருக்கப் பணித்தார்.

## இராமன் அவையில் அமர்ந்திருந்தது.

தனக்கு அழகுறத் தனியே அமைத்திருந்த விழுமிய தவிசில் இக்குமரன் அமர்ந்தான். தம்பியர் மூவரும் மருங்கே மருங்குடன் அன்பின் உருவங்களாய் அமர்ந்திருந்தனர்.

"நிழல்கள் போல் தம்பியருள் பொலிந்தான்"

அன்புருவமான துணைவர்கள் அருகு சூழ ஐந் நம்பி இருந்த இன்பக் காட்சியை இங்கே நாம் கண்டு மகிழ்கின்றோம். பொலிதல்=விளங்குதல். தம்பியரோடு இணைத்துச் சொல்லும் பொழுதெல்லாம் உரிமையும் உள்ளுருக்கமும் வெளியே பெருகி வருகின்றன. கிழமை தழுவிய கெழுதகைமைகள் வளமை கொழித்து மிளிர்கின்றன.

உருவம், பருவம், எழில், உழுவலன்பு முதலிய உயர் நலங்களெல்லாம் ஒரு நிகராயமைந்துள்ள தம்பியர் மூவர் நடுவே ஓர் அண்ணன் அமர்ந்திருந்த வண்ணம் கண்ணுறு காட்சியாய் எண்ணம் இனிக்க வந்தது.

அறம்செய் காவற்கு அயோத்தியில் தோன்றினன்.

மிதிலையில் சனகன் மணி மாளிகையில் அரசகுமாரனாய் இது பொழுது எழுந்தருளி யிருப்பவன் இன்ன காரியத்திற்காக வந்துள்ளவன் என்னும் உண்மை நிலையை நினைவுறுத்தினர்.

இந் நிலவுலகத்தில் தருமத்தைப் பரிபாலிக்கும் பொருட்டுத் தனது பரம பதமாகிய வைகுண்டத்தை விட்டுத் திருமால் திருவயோத்தியில் ஒரு மனித வுருவில் தோன்றியிருக்கிறான்; அந்தப் புனித மூர்த்தியே தான் வந்துள்ள காரியத்திற்கு உரிய துணை ஒன்றை இனிது சேர்க்க ஈண்டு வந்திருக்கின்றான் என்க.

இந்தத் திருமணம் இராமாவதாரத்திற்கு ஒரு பெருமணமாய் மருவியிருத்தலை நுணுகி யுணர இறுதி யடி உறுதியுற வந்தது.

இங்ஙனம் அறம்செய் காவலுக்குத் தோன்றினவன் புறஞ்செய் கோலத்துடன் மணமகனாய் இனிய பூந்தவிசில் எழுந்தருளி அனைவரும் மகிழ அமர்ந்திருந்தான்.

தனது அருமைத் திருமகன் பவனி வந்து சேர்ந்தான் என்று அறிந்த வுடனே தசரதன் தான் அமர்ந்திருந்த மாளிகையில் நின்று எழுந்து அரசர் புடை சூழ அரிய பல மரியாதைகளுடன் கலியாண மண்டபத்திற்கு வந்தான். சக்கரவர்த்தியைக் கண்டதும் சனகன் முதல் அனைவரும் உவந்து பணிந்து உபசரித்து நின்றார். முனிவரை வணங்கி எல்லாரையும் கண்குளிரக் கனிந்து நோக்கிச் சிறந்த அரியணையில் தசரதன் எழுந்தருளியிருந்தான்.

அந்த அரசவை இந்திர சபை போல் பெருமகிமையாய் விளங்கி யிருந்தது. அரும்பெறலமைதிகள் அதிசய நிலையில் விதி செய்து துலங்கின.

அவ்வமயம் வசிட்ட முனிவர் சனக மன்னனை இனிது நோக்கிச் சீதையை அங்கே அழைத்து வரும்படி பணித்தார். அவன் பெரு மகிழ்ச்சி யடைந்து அமைச்சரை நோக்கினான். அவர் செவிலித் தாயரிடம் உரைத்தார்; அவ் வுரைகளைக் கேட்டு உள்ளங் களித்துப் பெண்ணை அலங்கரிக்கச் செய்தார்.

சீதையைச் சிங்காரித்தது.

அரசிளங் குமரியைச் சூழ்ந்து உழுவலன்புடைய தோழியர் அழகு செய்யத் தொடங்கினர். விலைமதிக்க முடியாத அரிய பெரிய மணியணிகளை இனிமையுறப் புனைந்தார். இந்த அலங்கார நிலையை ஒரு கலையாக வருணித்துத் தலைமையாக விளக்கி யிருத்தலால் கோலம் காண் படலம் என அப் பகுதி ஞாலம் காண வந்தது.

கவியினது புலமைக் காட்சி ஒவ்வொரு பகுதியிலும் உணர்வு நலம் சுரந்து உவகை கனிந்து மிளிர்கின்றது. தந்தை மகளை அழைத்து வரச் சொன்னான்; தாதியர் பெண்ணை அலங்கரித்தனர். மகளிரிடம் இயல்பாக நிகழ்கின்ற இதில் உயர்வாக வேறு என்ன நாம் எதிர் பார்க்க முடியும்? எண்ணிப் பாருங்கள். கதாநாயகியினுடைய இந்த அலங்காரத்தில் கவி செய்துள்ள அலங்காரங்கள் அதிசயக் காட்சிகளாய்த் துதிகொண்டு உள்ளன. சில நிலைகளை இங்கே கண்டு செல்வோம்.

அணிகலன்கள் அணிந்தது.

அமிழ்இமைத் துணைகள் கண்ணுக்கு அணிஎன அமைக்கு மாபோல்
உமிழ்சுடர்க் கலன்கள் நங்கை உருவினை மறைப்பது ஓரார்
அமிழ்தினைச் சுவைசெய் தென்ன அழகினுக்கு அழகு செய்தார்
இமிழ்திரைப் பரவை ஞாலம் ஏழைமை உடைத்து மாதோ!

(கோலம் காண்படலம், 3)

சீதையின் திருமேனியில் உயர்ந்த மணி அணிகளைப் புனைந்ததைக் குறித்து இவ்வாறு கவி வருந்தி யிருக்கிறார்.

மாகதம், பவளம், மாணிக்கம், முத்து, வயிரம் முதலிய சிறந்த இரத்தினங்களை நல்ல தங்கத்தில் மருவிச் செய்துள்ள

அரிய ஆபரணங்களை உரிய அவயவங்களில் அணிந்தனர்; அவை அந்தத் திவ்விய உருவத்தின் எழிலையும் பொலிவையும் மறைத்து மாசுபடுத்தினவேயன்றி வேறொரு நலனும் செய்யவில்லை.

இங்ஙனம் அணிகலன்களால் நேர்கின்ற குறைபாடுகளை ஒரு சிறிதும் உணராமல் தோழியர் தொழில் புரிந்தனரே! என எழிலின் கழிவை நினைந்து அளி புரிந்து இரங்கினர்.

ஒளி மிகுந்த அழகிய விழிகளைப் புறத்தே மூடி மறைப்பதாயிருந்தும் இமைகளைக் கண்ணுக்கு அழகு என்று எண்ணுவது போல இப் பெண்ணுக்கு அணிகள் பிழையாய் நின்றன. இப் பிழைபாடு தெரியாமல் வழி முறை வழக்கமாய்த் தாதியர் வழிபாடு செய்தனர்.

"அமிழ்இமைத் துணைகள் கண்ணுக்கு அணிஎன அமைக்கு மாபோல்
உமிழ்சுடர்க் கலன்கள் நங்கை உருவினை மறைப்பது ஓரார்"

இந்த உவமை நுண்ணிய நிலையில் எண்ணி மகிழ வந்தது.

கண், பெண்ணுக்கும்; இமை, அணிக்கும் ஒப்பாம்.

எல்லாவற்றையும் காணுகின்ற கண், தன் அயலே கவிந்துள்ள இமைகளைக் காணமாட்டா. இமைக் குற்றம் கண்ணுக்குத் தெரியாது என்னும் பழமொழியால் இவற்றின் அமைப்பும், இணைப்பும் அறிய நின்றன. அதிசய நிலையில் இங்ஙனம் துணை அமைந்துள்ள இமையும் கண்ணும் இங்கே உவமைகளாய் வந்தன.

அமிழ் இமை என்றது அதன் இயல்பு நிலை தெரிய. அமிழ்தல் = ஆழ்ந்து கவர்தல்.

ஒளி நிறைந்த கண்ணை வெளி அறியாவகை இடையிடையே இமைகள் மறைத்தல் போல் சீதையின் எழில் நிறைந்த மேனியை அணிகள் மறைத்தன. சீதையைக் கண் என்றது அருமையும் உரிமையும் உணர.

"கண்ணினைக் காக்கின்ற இமை" என இராமனை * முன்னம் குறித்தார். அந்த இமை, தனக்கு உரிய கண் அனைய பெண்ணை மருவ வந்துள்ளது என்னும் உண்மையையும் நுண்மையாக உணர்ந்து கொள்ள இங்கே உவமை புணர்ந்து நின்றது.

---

* இந்நூல் பக்கம், 940 வரி 16 பார்க்க.

கண்ணும் இமையும் போல் பெண்ணும் துணையும் பிணைந்து மகிழ விதி இணைந்து வந்துள்ளது.

இயற்கையாகவே பேரழகுடைய சீதைக்குச் செயற்கையாக வேறு அணிகலன்கள் அணிய வேண்டா; ஆயினும் உலக வழக்கத்தை ஒழிக்க முடியவில்லையே என்று முடிவில் நிலைமையை விளக்குகின்றார்.

உமிழ் சுடர் என்றது அணிகளின் ஒளி நிலை உணர. ஒளிகளை வெளியே வீசுகின்ற உயர்ந்த சாதி இரத்தினங்களால் அமைந்த ஆபரணங்கள் என்க.

அத்தகைய உத்தமமான மணியணிகளும் உருவின் எழிலை மறைத்துச் சிறுமைப்படுத்தின என்றதனால் அந்தத் திருமேனியின் பெரு மகிமை உணரலாகும்.

அமிழ்தினைச் சுவை செய்து என்ன அழகினுக்கு அழகுசெய்தார். இந்த அழகிய தொடரில் நிறைந்திருக்கும் சுவையை நுகர்க.

சீதைக்கும் அணிகளுக்கும் உள்ள தகைமையை முதலில் குறித்தார்; இதில் அக்குலமகளை அலங்கரிக்கத் துணிந்தவரது நிலைமையை உரைக்கின்றார்.

கண்ணும் இமையும் என்ற அவ்வண்ண உவமையோடு அமையாமல் உண்ணும் அமிர்தம் என இவ்வண்ணம் குறித்தது காட்சியில் கண்டதோடு கருத்திலும் கண்ணூன்றி உணர்ந்து மகிழ. இன்ப நிலையமான பொருளை இனிமை புரிகின்றனர்.

அமிழ்தம் பெருஞ்சுவை யுடையது; அதற்கு மேலான சுவை வேறு யாதும் இல்லை; அதனைச் சுவையுறுத்த விரும்பி இடையே ஏதாவது கலந்தால் அதன் இயல்பான உயர் சுவை சிதையுமே யன்றிப் புதிதாக அதிகம் ஒன்றும் விளையாது. அது போல் பேரெழிலுடைய சீதையை அணிகளால் அழகு செய்யப் புகுந்தது, அவ் அரிய உருவ நலனை இழிவு படுத்த நேர்ந்த படியாம். படுவதை உணராமல் பாடு படுகின்றார்.

பாலுக்குச் சீனிபோல் பிறமகளிர்க்கு அணிகள் சேரின் அழகாம்; அமிர்த மயமான இத்திருமகளுக்கு அவை ஒரு சுவை ஆகுமேயன்றிச் சுவை ஆகாது என்க.

மணப் பெண் என்றால் அணிகள் பூட்டுவது மரபு. பொதுவான இந்த உலக வழக்கத்தை அதிசய அழகுடைய திவ்விய உருவிலும் செவ்வி குலைவதை ஓராமல் செய்யத்துணிந்தாரே! ஐயோ! இது என்ன மடமை? என வையநிலையை வையலானார்.

இமிழ்திரைப் பரவை ஞாலம் ஏழைமை உடைத்து மாதோ

நன்றாகப் பகுத்துணர்ந்து பாராமல் மூடப் பழக்க வழக்கங்களைக் குருட்டுத்தனமாகப் பின்பற்றி விடாப் பிடியராய் நடக்கும் மடவோர் நிறைந்தது இவ்வுலகம் என்றவாறு.

எவ்வளவோ மடமைகளையும் குறைபாடுகளையும் கவி நேரே கண்டு வருந்தி யுள்ளமையை இவ்வுரைகள் உணர்த்தி யுள்ளன.

அமிழ், உமிழ், இமிழ் என்பன முறையே இமை கலன் திரைகளுக்கு அடைகளாய் அவற்றின் நிலைகளை விளக்கி நின்றன.

"அழகு எனும் அவையும் ஓர் அழகு பெற்றவே" என முன்னம் சொன்னபடி அணிகளுக்கு அணியான சனகியின் உருவ நலனை இவ்வாறு உவகை நிலையமாய் உணர்த்தியருளினார்.

"கற்றோர்க்குக் கல்வி நலனே கலனல்லால்
மற்றோர் அணிகலம் வேண்டாவாம்—முற்ற
முழுமணிப் பூணுக்குப் பூண்வேண்டா யாரே
அழகுக்கு அழகுசெய் வார்?" (நீதிநெறி விளக்கம், 13)

பொன்னணியும் வேந்தர் புனையாப் பெருங்கல்வி
மன்னும் அறிஞரைத்தாம் மற்றொவ்வார்—மின்னுமணி
பூணும் பிறவுறுப்புப் பொன்னே அதுபுனையாக்
காணும்கண் ஒக்குமோ காண். (நன்னெறி, 40)

அணிகலன் குறித்து வந்துள்ள இவை ஈண்டு எண்ணற்கு உரியன. காணும் கண்ணுக்குப் பூண் புனைவது போல் கண் கொள்ளாக் கட்டழகிக்குப் பொன் பொடிகளை ஒட்ட வைத்தார்.

கண்ணினும் அமுதினும் அருமையும் இனிமையு முடைய புண்ணியஉருவை வண்ணம்செய்தவகையை இன்னம்காண்போம்.

கூந்தலில் மாலை சூட்டியது.

கண்ணன்தன் நிறம்தன் உள்ளக் கருத்தினை நிறைத்து நீடிட்டு
உண்ணின்றும் கொடிகள்ஓடி உலகெங்கும் பரந்தது என்ன
வண்ணம்செய் கூந்தற்பார வலயத்து மழையில் தோன்றும்
விண்ணின்ற மதியின் மென்பூஞ் சிகழிகைக் கோதை வேய்ந்தார். (1)

## காதில் குழை அணிந்தது.

வெள்ளத்தின் சடிலத் தான்தன் வெஞ்சிலை இறுத்த வீரன்
தள்ளத்தன் ஆவி சோரத் தனிப்பெரும் பெண்மை தன்னை
அள்ளிக்கொண்டு அகன்ற காளை அல்லன்கொல்? ஆம்கொல்? என்பாள்
உள்ளத்தின் ஊசல் ஆடும் குழைநிழல் உமிழ விட்டார் (2)

## மார்பில் ஆரம் புனைந்தது.

மொய்கொள்சீர் அடியைச் சேர்ந்த முளரிக்கும் செம்மை ஈந்த
தையலாள் அமிழ்ந்த மேனி தயங்கொளி தழுவிக் கொள்ள
வெய்யபூண் முலையிற் சேர்ந்த வெண்முத்தம் சிவந்த என்றால்
செய்யரைச் சேர்ந்து ளாரும் செய்யராய்த் திகழ்வர் அன்றோ' (3)

## கையில் கடகம் இட்டது.

தளையவிழ் கோதை ஓதிச் சானகி தளிர்க்கை என்னும்
முளரிகள் இராமன் செங்கை முறைமையில் தீண்ட நோற்ற
அளியன கங்குற் போதும் குவியல வாகும் என்றுங்கு
இளவெயில் சுற்றி யன்ன எரிமணிக் கடகம் இட்டார். (4)

## கண்ணுக்கு மை தீட்டியது.

நஞ்சிடை அமிர்தம் கூட்டி நாட்டங்கள் ஆன என்னச்
செஞ்செவே நீண்டு மீண்டு சேயரி சிதறித் தீய
வஞ்சமும் களவும் இன்றி மழைஎன மதர்த்த கண்கள்
அஞ்சன நிறமோ அண்ணல் வண்ணமோ அறிதல் தேற்றும். (5)

## மகளிர் மயங்கி நின்றது.

கஞ்சத்துக் களிக்கும் இன்தேன் கவர்ந்துணும் வண்டு போல
அஞ்சொற்கள் கிள்ளைக்கு எல்லாம் அருளினள் அழகை மாந்தித்
தஞ்சொற்கள் குழறித் தத்தம் தகைதடு மாறி நின்றார்
மஞ்சர்க்கும் மாதரார்க்கும் மனம் என்பது ஒன்றே யன்றோ. (6)

## சானகி இராமன் என விளங்கியது.

சங்கம்கை யுடைமையாலும், தாமரைக் கோயிலாலும்,
எங்கெங்கும் பரந்து வெவ்வே றுள்ளத்தின் எழுதிற்று என்ன
அங்கங்கே தோன்ற லாலும் அருந்ததி யனைய கற்பின்
நங்கையும் நம்பி ஒத்தாள் நாமினிப் புகல்வது என்னோ? (7)

(கோலம் காண் படலம்)

பெண்ணின் அலங்கார வருணனை இவ்வண்ணம் வந்துள்ளது. கவிகளைக் கண்ணூன்றிப் படித்து உவமைக் குறிப்புக்களையும் பொருள் நயங்களையும் நன்கு உணர்ந்து கொள்க.

1. கருமையாய் அடர்ந்து படர்ந்து நெறிந்து செறிந்து நீண்டு வடிந்துள்ள கூந்தலை வாரி முடித்து நல்ல மல்லிகை மாலையை வனைந்து புனைந்தார். சிகழிகை = மாலை. சிகையில் சூட்டுதற்கு வகையாகத் தொடுத்தது என்க. பாரவலயம் என்றது சும்மையாக வளைத்து முடித்திருக்கும் மயிர்க் கொண்டையை. வலயம் = வட்டம்.

கூந்தலைக் குறித்துள்ள நயம் கூர்ந்து நோக்கத் தக்கது.

"கண்ணன்தன் நிறம் தன் உள்ளக் கருத்தினை நிறைத்து மீதிட்டு
உள்நின்றும் கொடிகள் ஓடி உலகு எங்கும் பரந்தது என்ன கூந்தல்"

அஞ்சன வண்ணனை இராமனைச் சீதை தன் நெஞ்சில் நெடுங் காதலுடன் நினைந்துள்ளமையால் அந்த எண்ணங்கள் பெருகி உள்ளே அடங்க முடியாமல் வெளியே விரிந்து பரந்து வார் வார் ஆக நீண்டு நெடிது உலாவியதுபோல் தலைமயிர் நிலை நிமிர்ந்து நின்றது.

கொடிகள் ஓடி உலகு எங்கும் பரந்தது என அந்த உரோம பந்திகளுடைய நீள விரிவுகளை விளக்கியிருக்கும் இதன் ஆழம் அறிக. ஒருவருக்கும் தெரியாமல் கள்ளத்தனமா உள்ளே எண்ணிய எண்ணங்கள் உலகம் காண விரைந்து பறந்து வெளிப்படும் என்பதும் இங்கே நுனித்துணர வந்தது.

கார்வண்ணமாய்க் கனிந்து செறிந்துள்ள கோதைக்கு உவமை காட்ட வந்தவர், கார்வண்ணனைச் சீதை உள்ளே ஒளித்து வைத்திருக்கும் உண்மையை இவ்வண்ணம் வெளிப்படுத்தியருளினர். கருமையின் அருமையும் உரிமையும் உணர வந்தது.

"மழையில் தோன்றும் மதியின் வேய்ந்தார்"

கரிய முடியில் வெண்மையான மலர் மாலை சூட்டியது மேகத்துள் நுழைந்திருக்கும் சந்திரனைப்போல் சுந்தரம் சுரந்திருந்தது. இருவகைக் காட்சிகளையும் இனிது காண்க.

2. உயர்ந்த மணிகளால் அமைந்த சிறந்த குழைகளைக் காதில் அணிந்தார். அவை தோள் நோக்கித் தூங்கி அயலெங்கும் ஒளி வீசி ஊசல் ஆடி நின்றன.

கன்னியா சுல்கமாக வைத்திருந்த அந்த வில்லை வளைத்தவன் தன் உணர்வையும் உயிரையும் கவர்ந்துகொண்டுபோன வள்ளல் தானோ? அல்லனோ? என்று தனது உள்ளம் ஊசல் ஆடுவது போல் குழைகள் செவியில் அசைந்து தொங்கின.

வெள்ளத்தின் சடிலத்தான் என்றது சிவபெருமானை. கங்கை தங்கிய சடாமகுடத்தை யுடையவன் என்பதாம். சடிலம் = சடை. தனிப் பெரும் பெண்மைதன்னை அள்ளிக்கொண்டு அகன்றகாளை.

என்றது சீதை இது பொழுதிருக்கும் இயல்புணர வந்தது.

"உள்ளத்தின் ஊசல் ஆடும் குழை நிழல் உமிழ விட்டார்"

வெளியே ஊசலாடுகின்ற குழைக்கு உள்ளே ஊசல் ஆடும் உளம் உவமையாய் வந்தது. நிழல் உமிழ என்றதனால் குழையின் ஒளி நிலையும் உயர்வும் உணரலாகும். நிழல் = ஒளி. உள்ளமும் காமம் கனிந்து காதல் ஒளி வீசியுள்ளமை பொருட் குறிப்பால் புலப்பட்டு நின்றது.

3. கழுத்தில் முத்து மாலையை அணிந்தார்கள். அது மார்பில் படிந்தது; படியவே, வெண்ணிறமான அது செந்நிறமாய் மிளிர்ந்தது. சிவந்த நிறமுடைய திருமேனி ஆதலால் அதனை மருவியவுடனே தன்னிறமாறி அந்நிறம் ஆயது.

"வெய்ய பூண் முலையில் சேர்ந்த வெண்முத்தம் சிவந்த என்றால்,
செய்யவரைச் சேர்ந்துளாரும் செய்யராய்த் திகழ்வர் அன்றே"

இயற்கையில் என்றும் வெள்ளையாயுள்ள முத்து இன்று சேர்ந்த இடத்தால் செம்மையாயது. ஆகவே அந்தச் சேர்க்கையின் நன்மையை உலக அனுபவமாய்த் தெளிந்த ஓர் உண்மையோடு இணைத்து உறுதி நலம் கனிய விளக்கியருளினர்.

இறுதி அடி வேற்றுப் பொருள் வைப்பு என்னும் அணி அமைந்தது. கதா நாயகியின் அலங்காரத்தைக் கூறுவதில் காவிய அலங்காரமும் கலந்து வந்தது.

செம்மை நிறத்தைச் சேர்ந்தமையால் வெண்மை நீங்கிச் சிவந்த வண்ணம் தோய்ந்தது. இந்த உருவக் காட்சியில் ஓர் உணர்வுக் காட்சியை உலகிற்கு உதவியுள்ளார்.

செய்யவள் என்பது இலக்குமிக்கு ஒரு பெயர். உருவச் செம்மையோடு உள்ளமும் செவ்வியள் என்பதாம். அச் செய்ய

வள் அமிசமாய் வந்துள்ள சீதையின் திவ்விய மேனியை இவ்வாறு பாராட்டலாயினர்.

செய்யர் என்றது செவ்விய குணநலங்களுடைய மேலோரை. ஒள்ளிய உணர்வின்றி வெள்ளைகளா யிருப்பவரும் தெள்ளிய செவ்வியோரைச் சேரின் உள்ளம் திருந்திச் செவ்விய சீரராய்ச் சிறந்து விளங்குவர் என்பது வெண்முத்தம் சிவந்த என்றமை யால் தெரிந்தது. இன நலத்தின் இயல்பு குறித்தபடி யிது.

மனம் மொழி மெய்களைச் செம்மைப்படுத்துங்கள்; அங்ஙனம் பண்பட்ட செம்மையாளரைச் சேருங்கள்; அவ்வாறு சேரின் திவ்விய மகிமைகள் உளவாம்; திரு அருள் பெருகும்; அரிய புதிய நிலையில் சீரும் சிறப்பும் பெறுவீர் என உலகர்க்கு ஓர் உறுதிநலன் இங்கே உணர்த்தப்பட்டுள்ளது.

அமைந்த இடமெல்லாம் நல்ல நீதிகளை விழைந்து சொல்லி வருதலால் நம் கவியின் உள்ள நிலை உணர நின்றது. உயர்ந்த மேதைகளிடம் சிறந்த போதனைகள் இயல்பாகவே விளைந்து வருகின்றன.

" A right moral state of heart is the formal and scientific condition of a poetical mind." (Newman)

" கவியின் இதயம் நீதி நிலையம்" என மேல் நாட்டுப் பேரறிஞராகிய நியூமன் என்பவர் கூறியுள்ளார்.

4. இளம் தளிர் அனைய அழகிய கைகளில் வயிரங்கள் பதித்த சிறந்த வளையல்களை அணிந்தனர். இராமபிரானுடைய அருமைக் கையைப் பிடிக்கும் பெருமை யுடையது என உரிமை யுடன் அலங்கரித்தார்.

" இராமன் செங்கை முறைமையில் தீண்ட நோற்ற "
என்று சானகி கைகளைக் கொண்டாடி யிருக்கிறார்.

தீண்ட நோற்ற = தொடுதற்குத் தவம் செய்துள்ளன.

முறைமை என்றது விதிமுறைப்படி உலகம் அறிய மணமகனைக் கைக்கொள்ளும் வகை யுணரவந்தது. இந்தக் கைகள் என்ன புண்ணியம் பண்ணினவோ அந்த அண்ணல் மேனியைத் தீண்டு தற்கு என ஆவலித்துள்ளனர்.

"இளவெயில் சுற்றி அன்ன எரி மணிக் கடகம் இட்டார்" என்றமையால் அவ்வயிர வளையல்களின் ஒளிநிலை உணர வந்தது.

5. கருமை கனிந்து, வெண்மை பொலிந்து, செவ்வரி படர்ந்து, கருணை சுரந்து களித்து விளங்கிய கண்களுக்குப் பெண்கள் மை எழுதினர்.

"வஞ்சமும் களவும் இன்றி மழைஎன மதர்த்த கண்கள்
அஞ்சன நிறமோ! அண்ணல் வண்ணமோ! அறிதல் தேற்றும்."

பெண்ணின் கண்ணழகைக் குறித்து வந்துள்ள இது எண்ணி இன்புறற்பாலது. சில கண்கள் அழகாயிருக்கும். அவை வஞ்சமும் களவும் உடையனவாய் வெஞ்செயல் புரியும். நெஞ்சில் வஞ்சம் உள்ள மாதர் விழிகளில் அழகு ஏற ஏற மைந்தர் உயிர்கள் சூறையாடப்படும். உலகத்தைத் துறந்தவரையும் அக் கலக விழிகள் நிலைகுலைத்துவிடும்.

கிளைத்துப் புறப்பட்ட சூர்மார் புடன்கிரி யூடுருவத்
துளைத்துப் புறப்பட்ட வேற்கந்தனே! துறந்தோர் உளத்தை
வளைத்துப் பிடித்துப் பதைக்கப் பதைக்க வதைக்கும் கண்ணார்க்கு
இளைத்துத் தவிக்கின்ற என்னைஎந் நாள்வந்து இரட்சிப்பையோ?
(கந்தர் அலங்காரம், 32)

கண் களவு கொண்ட பொழுது அதனால் விளையும் இழவை இது காட்டியுள்ளது. வஞ்சம், ஆடவரை மயக்கி மோசம் செய்வது. களவு, உளவறியாமல் உயிரைக் கவர்வது. பெரும்பாலும் வஞ்சியர் கண்களில் வஞ்சமும் களவும் மருவியிருக்கும் ஆதலால் அவை இல்லாதன என்று அருமை தோன்ற விதந்து கூறினர். அதிசய அமைதிகளைத் துதி செய்தபடியிது.

வஞ்சமும் களவும் இன்றி என்றது நெஞ்சின் பரிபூரண பரிசுத்த நிலைமையை விளக்கி நின்றது. புனிதமான அந்த அழகிய கண்களுக்குத் தோழியர் அஞ்சனம் தீட்டினர். அது அண்ணல் வண்ணம் போல் அழகமைந்து விளங்கியது. அண்ணல் என்றது இராமனை. இந்த அஞ்சன வண்ணனைக் கண்ணுள்ளே மேய கொண்டு களித்திருக்கும் பெண்ணரசியின் புண்ணிய நீர்மையை இவ்வண்ணம் உணர்த்தினர்.

6. இயல்பாகவே பேரழகுடைய சீதை அணிகள் புனைந்து நின்றபொழுது அயலிருந்த மகளிர் எல்லாரும் விழி களிப்ப

விழைந்து நோக்கி உளமிக உருகினர். மாதரும் ஆதர மீதூர்ந்து காதலுறும்படி அம்மாதரசி மருவி நின்றாள். அஃது அரிய ஒரு அற்புத நிலையாதலால் அதனை ஆராய நேர்ந்து முடிவில் நெஞ்சில் ஓர் முடிவு கொண்டார்.

மஞ்சர்க்கும் மாதரார்க்கும் மனம் என்பது ஒன்றே அன்றே? இந்த விளக்கம் நினைந்து சிந்திக்கத் தக்கது.

பெண்ணழகைக் கண்டு ஆண் மயங்குவது இயல்பு; பெண்களே கண்கொள்ளாக் காட்சியாக் களித்து நோக்கி நெஞ்சம் கரைந்து நின்றது என்னே? என அதிசயித்து வியந்து கவி இங்ஙனம் ஆறுதல் கூறினர்.

மஞ்சர் என்றது ஆடவரை. மைந்தர் என்பதன் மரூ.

பெண் ஆண் என வெளியே உருவங்களில் வேறுபாடு காணப்படினும் உள்ளே மனத்தில் மாறுபாடு இல்லை ஆதலால் சீதையின் அழகில் இருபாலாரும் ஒருமுகமாகவே ஈடுபட்டு உருகலாயினர் என்க. பேரெழிலின் அற்புத நிலையை இப்படி விற்பன நலங்கனிய விளக்கி யருளினர்.

7. திருமால் கையில் சங்கு இருக்கிறது; அடியார்களுடைய உள்ளத் தாமரையில் உறைந்திருக்கிறார்; உயிர்களின் எண்ணங்கள் தோறும் பரந்து அங்கு அங்கே அமர்ந்துள்ளார்.

திருமகள் கையிலும் சங்க வளையல் இருக்கின்றது; தாமரை மலரில் வசிக்கின்றாள்; பேரெழிலால் எல்லார் உள்ளங்களிலும் ஆர்வம் புரிந்துள்ளாள். ஆகவே திருமால் அமிசமான இராமனும் திருவின் உருவான சீதையும் ஒரு நிகராய் நிறை ஒத்திருந்தார் என்பார், நங்கையும் நம்பி ஒத்தாள் என்றார்.

அணிகளெல்லாம் பூட்டி அலங்கரித்து நிறுத்தி அழகமைதியைப் பலவாறு பாராட்டி முடிவில் இவ்வாறு முடித்திருக்கிறார்.

பெண்கள் நாயகம் ஆகிய சீதைக்கு ஆண்கள் நாயகமாகிய இராமனே ஒப்பு என்பதாம். அவளுக்கு அவனே உவமை என உவகை கனிய நின்றனர். தலைவியும் தலைவனும் எவ்வகையிலும் ஒத்த நிலையினர் என்பதை இவ்வகை உய்த்துணர வைத்தார்.

அவயவங்கள் தோறும் அணிகள் புனையுங்கால் இராமனை உடன் இணைத்துச் சீதையின் எழில் நலனை விழுமிய நிலையில் விளக்கியிருக்கிறார்.

காவிய நாயகனை ஆவியும் அமுதமுமாகப் பாராட்டி உழுவலன்புடன் கவி உளம் உருகி வருகின்றார். இவரது கலைஞானமும் தலைமைப்பத்தியும் கவிகள் தோறும் கனிந்து புவிமகிழ்ந்து புகழச் சுவைகள் சுரந்து சுடர் வீசி யுள்ளன.

## சீதை கொலு மண்டபத்திற்கு வருதல்.

விலை வரம்பில்லாத அரிய மணி அணிகளால் அலங்கரித்த பின்னர்க் கண் எச்சில் கழித்துக் காப்பிட்டுத் தெய்வம் பாவிச் சீதையை அரசவைக்கு அழைத்து வந்தார்.

அமிர்த கிரணங்களை உலகெங்கும் வீசி நட்சத்திரங்கள் நடுவே பூரண சந்திரன் எழுந்ததுபோல் அழகிய தோழியர் இடையே அரண்மனையிலிருந்து விதான நீழலில் சானகி நிதானமாக நடந்து வந்தாள். அந்தக் கட்டழகி வந்த அதிசய நிலை கண்கொள்ளாக் காட்சியாய்த் துதி செய்ய நின்றது. அந்நிலையைக் குறித்துச் சொல்லியுள்ளன அயலே வருவன.

வல்லியை உயிர்த்தநில மங்கைஇவள் பாதம்
மெல்லிய உறைக்கும்என அஞ்சிவெளி எங்கும்
பல்லவ மலர்த்தொகை பரப்பினள் எனத்தன்
நல்லணி மணிச்சுடர் தவழ்ந்திட நடந்தாள். (1)

தொழுந்தகைய மென்னடை தொலைந்துகளி அன்னம்
எழுந்திடை விழுந்துயர்வ தென்னஅயல் எங்கும்
கொழுந்துடைய சாமரை குலாவஒளிர் கலாபம்
வழங்க நிழல் மின்னவரு மஞ்ஞைஎன வந்தாள். (2)

மண்முதல் அனைத்துலகின் மங்கையருள் எல்லாம்
கண்மணி எனத்தகைய கன்னிஎழில் காண
அண்ணல்மர பிற்சுடர் அருந்ததியொடு தானவ்
விண்ணிழிவ தொப்பதெரி விதானநிழல் வந்தாள். (3)

கற்றைவிரி பொற்கடை மயிர்த்துறு கலாபம்
சுற்றுமணி புக்கவிழை மிக்கிடை துவன்றி
விற்றவழ வாள்நிமிர மெய்யணிகள் மின்னச்
சிற்றிடை நுடங்கஒளிர் சீறடி பெயர்த்தாள். (4)

பொன்னின்ஒளி பூவின்வெறி சாந்துபொதி சீதம்
மின்னினிழல் அன்னவள்தன் மேனிஒளி மான
அன்னமும் அரம்பையரும் ஆரமிழ்தும் நாண
மன்னவை இருந்தமணி மண்டபம் அடைந்தாள். (5)

சமைத்தவரை இன்மைமறை தானும்என லாமச்
சுமைத்திரள் முலைத்தெரிவை தூய்வடிவு கண்டார்
அமைத்திரள்கொள் தோளியரும் ஆடவரும் எல்லாம்
இமைத்திலர்; உயிர்த்திலர்கள்; சித்திரம் எனத்தாம். (6)
(கோலம் காண் படலம், 24—29)

[மணப்பெண் சபைக்கு வரும் விசித்திரத்தை இங்கே வியந்து காண்கின்றோம். கவிகளில் கனிந்துள்ள உணர்வின் சுவைகளும், கற்பனை நிலைகளும் உவகை சுரந்து மிளிர்கின்றன.]

1. அதிசயமான அலங்கார கோலத்துடன் சீதை நடந்து வருங்கால் உடம்பில் அணிந்திருந்த மணியணிகளின் ஒளிகள் அயலே அடித்தலம் எங்கும் சிதறித் திகழ்ந்தன. வழியிடை மிளிர்ந்த ஒளித்திரள்கள் முதலியன இங்கே எழிலுற வருணிக்கப் படுகின்றன. [வருணனைகள் மணமகளின் மகிமையில் எழுகின்றன

தனது அருமை மகளுடைய பாதங்கள் மிகவும் மிருதுவானவை என்று கருதி அவை வருந்தாமல் நடக்கும்படி பசிய தளிர்களையும், இனிய மலர்களையும், வழி முழுவதும் பூமிதேவி பரப்பிவைத்திருந்தது போல் மரகதம் முதலிய மணிகளாலமைந்த அணிகள் அயலெங்கணும் ஒளி வீசி மிளிர்ந்தன.

வல்லி = கொடி. பூங்கொம்பு போன்றவள் எனச் சீதையை இங்கே அது குறித்து நின்றது. வல்லியை உயிர்த்த நிலமங்கை என்றது பூமிதேவியை. உரியதாய் இனிய மகளுக்கு இதம் புரிந்து தனியே அருள்சுரந்துள்ளாள்.]

2. இருபுறமும் தோழியர் வெண்சாமரைகள் வீசி வந்தனர். தனது அழகிய நடைக்குத் தோற்ற அன்னங்கள் சனகி முன்னே விழுந்து தொழுது முறை முறையாய் எழுந்து பணிவதுபோல் அவை விளங்கி நின்றன.

3. கன்னிமாடத்திலிருந்து கலியாண மண்டபம் வரையும் மேற்கட்டிகள் அமைத்துச் சிறந்த ஆடைகளால் அலங்கரித்

திருந்தனர். அந்த அழகிய விதான நிழல்வழியே சிவந்த சோதி வீசச் சீதை உவந்து வந்தாள்.

4. இரத்தினுபரணங்களிலிருந்து பக்கம் எங்கணும் மிக்க ஒளிகள் பரவி மிளிரத் தக்க தோழியரிடையே அழகுற நடந்து விழுமிய நிலையில் அடைந்தாள்.

5. * பொன் ஒளி, பூமணம், சந்தன சீதளம், மின்னின் நிழல் என்னும்படி பலவகை எழில் நலங்கள் மருவிய திருமேனி யுடையாள் விண்ணும் மண்ணும் வியந்து மகிழ அண்ணல் இருந்த அவையை அணுகினள்.

''அன்னமும் அரம்பையரும் ஆர் அமிர்தும் நாண''

நடையழகும், உருவப் பொலிவும், இன்பச் செவ்வியும் தலை சிறந்துள்ளமையை இஃது உணர்த்திநின்றது. யாரும் எவை யும் எவ்வழியும் நேரில்லாப் பேரழகி என்பதைப்பலவகையினும் விளக்கிப் பாராட்டி வருகிருர்.

6. அதிசய எழிலுடைய இக்குலமகள் அரசவை அடை யவே அங்கே இருந்தவரனைவரும் பரவசமுடையராய் விழைந்து நோக்கி விழித்த கண் இமையாமல் வியந்து நின்ருர்.

''இமைத்திலர் உயிர்த்திலர்கள் சித்திரம் என''

சீதையைக் கண்டபொழுது அந்த மணி மண்டபத்திலிருந்த வர்கள் எல்லாரும் இன்னநிலையை அடைந்தார் என விளக்கி யிருக்கும் இந்த நன்னய சித்திரத்தை நயந்து பார்க்க.

இதுவரையும் கண்டறியாத அதிசய அழகைக் காணவே பெருவியப்பு உண்டாயது. ஆகவே, உயிர் இயக்கம் இன்றி ஓவியங்கள் போல் அசைவற்று இருந்தனர் என்க.

உயிர்த்திலர் என்றதனுல் உயிராதாரமான மூச்சும் கூட விடாமல் உவப்பினும் வியப்பினும் உள்ளம் பறிபோய் உள்ளமை உணர வந்தது.

சீதைக்கு இதில் வேதத்தை ஒப்பு உரைத்திருக்கிருர். ஒருத்தி வயிற்றிலிருந்து பிறவாமல் தானுக உதித்துள்ள சுயம்பு நிலை தெரிய இங்ஙனம் இயம்பியருளினர்.

---

* இந்த உவமைகள் முன்னும்வந்துள்ளன. இந்நூல் பக்கம் 1001 பார்க்க.

"சமைத்தவரை இன்மை மறை தானும் எனலாம்"

இதனால் அவளது புனித நிலை புலனும். சமைத்தல்=படைத்தல், உண்டாக்கல். யாரும் அமைத்துச் செய்யாமல் தானாகவே ஒலித்து எழுந்தமையால் செய்யாமொழி என மறை வையம் வழங்க வந்தது.

செய்யாளைச் செய்யாமொழி என்றது திவ்விய மகிமைகருதி. வேதநாயகனான திருமால் இங்கே சீதை நாயகனாய் வந்துள்ளமையால் அந்தப் பழைய உரிமைகள் கிழமைபுரிய நேர்ந்தன.

## இராமன் கண்டு களித்தது.

இந்தப் புனித அழகி மணி மாளிகையுள் புகுந்தபொழுது அனைவரும் அதிசய பரவசராய் மதிமறந்து இருந்தார்.

தருண மங்கையர் புடை சூழ்ந்து வர இடையே அருண சோதிபோல் வருண ஒளி வீசி வந்த அரசகுமரியை ஆசார வாசலில் வரும்போதே இராமன் ஆவலோடு விழைந்து பார்த்தான். அயல் அறியாமல் கண்டு மகிழ்ந்த அக் காதல் காட்சியைக் கவி நமக்கு நன்கு காட்டியிருக்கிறார்.

### ஐயம் நீங்கி மகிழ்ந்தது.

அன்னவளை அல்லள்என ஆம்என அயிர்ப்பான்
கன்னிஅமிர் தத்தைஎதிர் கண்டகடல் வண்ணன்
உன்னுயிர் நிலைப்பதொர் அருத்தியொடு உழைத்தாண்டு
இன்னமிழ் தெழக்களிகொள் இந்திரனை ஒத்தான். (1)

நறத்துறை முதிர்ச்சியுறு நல்லமுது பில்குற்று
அறத்தின்விளை வொத்துமுக டுந்தியரு குய்க்கும்
நிறத்துவர் இதழ்க்குயில் நினைப்பினிடை அல்லால்
புறத்தும் உளதோஎன மனத்தொடு புகன்றான். (2)

(கோலங்காண் படலம், 30, 31)

அதி இரகசியமாய் மறைந்திருந்த இராமனது எண்ணங்கள் இங்கே வெளிப்பட்டுள்ளன. உள்ளப் போராட்டங்கள் உரைகளில் தொனித்திருக்கின்றன.

தான் வில்லை வளைத்து வீரப்பரிசாக இதுபொழுது கொள்ள நேர்ந்துள்ள பெண் முன்னம் கன்னி மாடத்தில் கண்ட கட்ட

முகியோ? அல்லது வேறு ஒருத்தியோ? என்ற ஐயம் ஐயன் நெஞ்சில் புகுந்து அல்லற்படுத்தி யிருந்தது.

"அன்னவளே அல்லள் என, ஆம்என அயிர்ப்பான்."

என்றமையால் ஐயுறவோடு இவன் அலமந்துள்ளமை அறியலாகும். அயிர்ப்பு = சந்தேகம். உயிர்ப்பெல்லாம் அயிர்ப்பில் ஊறியுள்ளமை வினைப் பெயரால் விளங்கி நின்றது.

கலியாணம் உறுதிசெய்ததிலிருந்து மணமகனுக்கு மன நிம்மதியில்லை. தான் முதலில் கண்டு காதலித்த கன்னிதான் மணப் பெண்ணாக அமைந்துள்ளாள் என்பது தெளிவாகாமையால் உளம் ஊசலாட நேர்ந்தது.

அயலே யாரும் அறியாது இருவரும் நேரே பார்த்து ஒருவரை ஒருவர் காதலித்து உடனே பிரிந்தார். பின்பு வில் இற்றது; விவாகம் உற்றது. உறவே, காதலர் இருவரும் ஐயத்தால் அலமந்தார். வேறு ஒருவருக்கும் தெரியாமல் உள்ளே கள்ளக் காதல் புரிந்துள்ளமையால் அதனை வெளியே காட்டாமல் மான சீலர் இங்ஙனம் மறுகலாயினர். தலைமையான குலமக்களுடைய ஆர்வக்காதல்கள் பார் அறியப் பார்வைக்கு வந்துள்ளன.

கண் கண்ட உருவமே எண்கொண்டு உள்ளமையால் வேறு ஏதேனும் இடைபுகுந்துவிடுமோ? என்று இரண்டு உயிர்களும் திண்டாடி யிருக்கின்றன. மாறுபடின், உயிர் வேறுபட்ட படியாம். ஆகவே மீளவும் கண்டு தெளிய அவா மண்டி நின்றன.

உருவங்கள் இரண்டாயினும் உயிர் ஒன்றாய் ஊடுருவியிருந்த லால் வேறுபாடின்றி விழைவூறி விரைந்தன. நிகழ்ந்துள்ள நிகழ்ச்சிகளையும் நிலைமைகளையும் நோக்கி ஒருவாறு இருவரும் உறுதிபூண்டிருப்பினும், முன்கண்ட பொருள்தானா? என்று மீண்டும் நேரே கண்டு தெளியும் வரையும் ஐயம்தீர ஆவல் நீண்டு நின்றது. அந்நிலை இருவழியும் தலையாய்ப் பெருகியிருந்தது.

"தன் ஆவி சோரத் தனிப்பெரும் பெண்மை தன்னை, அள்ளிக்கொண்டு அகன்ற காளை அல்லன்கொல்? ஆம் கொல்?"

என்று அவள் உள்ளம் ஊசலாடி ஆசை மீதூர்ந்துள்ளது போல் இவன் உள்ளமும் பாசம் ஓடிப் பரிந்துள்ளது.

இது, பெண்; இது, மாப்பிள்ளை; என உலகமெல்லாம் தெளிந்து உவந்து நிற்க அந்த உரிமையான அரிய உயிர்கள் இரண்டும் இங்ஙனம் பரிவு மண்டி மறுகி நின்றன.

"அவன் அல்லனேல் இறப்பன்" என அவள் உறுதி செய்துள்ளது போல், இவன் உரைக்கவில்லை. அது, இவனது வாய் அடக்கத்தையும், பெருமிதத்தையும் உணர்த்தியுள்ளது. ஆயினும், "அவள் அல்லளேல் துறப்பன்" என்பதே இவன் உள்ளக் கிடையாம். உரிமையின் எல்லை உரையிடலரியது.

இங்ஙனம் பொருவரும் காதலோடு மறுகியிருந்த இத் தலைமகன் அக்குல மகள் வரவே அளவில் ஆவலோடு விநயமாக நோக்கினன். உண்மை தெளிந்தான். உள்ளம் களித்தது; உயிர் பூரித்தது. கண்டவுடன் உண்டான அந்த ஆனந்த பூர்த்தியைக் கவி உவமையால் விளக்கி யிருக்கிறார்.

"கன்னிஅமிர் தத்தை எதிர் கண்ட கடல்வண்ணன்
இன்னமிழ்து எழக் களிகொள் இந்திரனை ஒத்தான்."

இந்த வாசகங்கள் நன்கு சிந்திக்கத்தக்கன.

சனகியை அமிர்தம்என்றது இராமனது ஐம்புலன்களுக்கும் ஆரா இன்பமாய்ப் பெருகியிருக்கும் அமைதி கருதி. தையலாள் அமிழ்த மேனி என உருவநலன் முன்னரும் உரைக்கப்பட்டுள்ளது. எவரும் தீண்டாத திவ்விய மகிமையுடைமையால், அந்தப் புனிதமும் இனிமையும் புதுமையும் உணரக் கன்னி அமிர்தம் என்றார்.

கடல் வண்ணன் என்றது உடல் வண்ணம் காண. கடலுக்கும் அமிர்தத்திற்கும் எவ்வளவு உரிமையோ, அவ்வளவினும் அதிகமாக இராமனும் சீதையும் மருவி யுள்ளனர். என்றும் தனக்குரிய இனியபொருளே இன்று வேறொரு உருவில் உலகம் காண நேரே வந்திருக்கின்றது.

அமரரும் அசுரரும் திரண்டு ஒரு முகமாய் நின்று கடல் கடைந்தபொழுது அமிர்தம் எழுந்தது; அதனைக் கண்டு அமரர் கோன் உளங்களித்தான்; அதன் பயனாக அற்புத ஆற்றலடைந்து வெற்றி மிகப் பெற்று வீரவேந்தனாய் வியன்பயன் அடைந்தான்.

அமரர் செய்த புண்ணியமும் அரக்கர் ஆற்றிய பாவமும் ஒருங்கு கூடி உருப்படுத்தவே, இக் கன்னி அமிர்தம் உலகினின்று மன்னி எழுந்து இன்னவாறு எதிர்வந்தது; வரவே உரிய முதல்வன் உவந்து கொண்டான்; கொள்ளவே, இத் திருமண நலம் இருநிலம் முழுவதுக்கும் பெருமகிழ்வாம் என்பது பெற்றும்.

பெண்ணமுதத்தை விண்ணமுதத்தோடு ஒப்பவைத்து அதனை உண்டு மகிழும் தலைவனது நிலையையும், அவனால் உலகம் அடையும் பயனையும் இவ்வாறு உணர்த்தி யருளினர்.

அமிர்தத்தைக் காணும் வரையும் உயிர் ஊசலாடி இந்திரன் உலர்ந்திருந்ததுபோல் இந்தச்சுந்தரனும் உளைந்திருக்கிறான்.

2. அரிய புண்ணியம் விளைந்து வந்ததுபோல் இளமைஒளி தவழ எழில் ஒழுக அரசவை நண்ணிய பெண்ணமுதத்தைக் காணவே இராமன் உள்ளமும் உயிரும் உவகையில் துள்ளியுள் ளன. தன் உள்ளத்தே படிந்துள்ள வண்ணமே புறத்தே கண் எதிர் வந்தது என எண்ணி மகிழ்ந்தான்.

"நிறத்துவர் இதழ்க் குயில் நினைப்பின் இடை அல்லால்
புறத்தும் உளதோ? என மனத்தொடு புகன்றான்."

கன்னி மாடத்தில் கண்ட உருவம் அப்படியே தன் உளத் தில் பதிந்திருந்தது; அந்தக் கன்னியை இப்பொழுது மீண்டும் கண்டான்; அகத்திலே யன்றிப் புறத்திலும் உண்டோ? என்று உவப்புமிகுந்து தனக்குள்ளேயே சொல்லிக்கொண்டான்.

தன் எண்ணம் முழுவதும் பெண்ணுருவமாகவே பெருகி யுள்ளமை இவ்வண்ணல் மொழியால் அறிய நேர்ந்தது.

துவர் = பவளம். ஒளி நிறைந்த பவளம் போன்ற இதழை யுடைய குயில் என்றது வாயழகிலும் சொல்லினிமையிலும் உள் ளம் பறிபோயுள்ளமை உணர வந்தது. முன்னம் முகம் கண்ட பொழுது அகம் கொண்டது புறம் கண்டு மகிழ ஈண்டு உரை கொண்டு தந்தது.

உழுவலன்பு கனிந்த காதல் உள்ளம் இங்ஙனம் களித்திருந்தது.

வந்த மணமகளை நோக்கி வசிட்டர் வியந்தார். தமது சக்க ரவர்த்தித் திருமகனுக்குத் தக்க துணை என மிக்க மகிழ்ச்சி யடைந்தார். அவரது உவகையில் ஞான ஒளி வீசியுள்ளது.

"எங்கள்செய் தவத்தினில் இராமன்என வந்தோன்
சங்கினொடு சக்கரம் உடைத்தனி முதற்பேர்
அங்கணர சாதலின்அவ் அல்லிமலர் புல்லும்
மங்கையிவள் ஆமென வசிட்டன்மகிழ் வுற்றான்."

சங்கு சக்கரதாரியாகிய திருமாலே எங்கள் அருந்தவத்தின் பயனாக இராமன் என வந்து இங்கே அமர்ந்திருக்கிறான்; ஆதலினால் அந்தத் திருமகளே சீதை என இந்த உருவில் வந்துள்ளாள் எனச் சிந்தை மகிழ்ந்தார்.

சிறந்த தத்துவ ஞானி யாதலால் நிலைமைகளை இங்ஙனம் உய்த்துணர்ந்துகொண்டார். அவரது யோகக்காட்சியே இராமாவதாரத்திற்கு மூலமாய் நின்றது. அந்நிலைமையைக் காவியத்தின் *முதலிலேயே கவி குறித்திருக்கிறார்.

எங்கள் என்றது தசாதனையும், அரிய தவசிகளையும் உரிமையுடன் தழுவி நின்றது. நல்லோர் பல்லோருடைய பெரும் புண்ணியப் பயனாக நண்ணியுள்ள அப்புண்ணிய மூர்த்திக்கு உரிய துணை பிரியமுடன் மருவ வந்தது. அல்லி மலர் என்றது தாமரையை. எங்கள் அரசுக்கு என்றும் மங்களமான மங்கை என மாதவர் மகிழ்ச்சி மீதூர்ந்தார்.

தனக்கு அமைந்துள்ள அருமை மருமகளைக் கண்டதும் தசரதன் பெருமகிழ்ச்சி கொண்டதைக் குறித்து முன்னமே கூறியுள்ளது; † ஆண்டுக் காண்க.

சீதை கொலு மண்டபத்துள் வந்தபொழுது அங்கு இருந்தவர்களுடைய மனமகிழ்ச்சியும் உணர்ச்சி நிலைகளும் பரவசமாய்ப் பெருகி எழுந்தன.

அவையின் உவகை நிலை.

நைவளம் நவிற்றுமொழி நண்ணவர லோடும்
வையநுகர் கொற்றவனும் மாதவரும் அல்லார்
கைகள் தலை புக்கன கருத்துளதும் எல்லாம்
தெய்வமென உற்றவுடல் சிந்தையவை யன்றே. (1)

* இந்நூல் பக்கம் 239 பார்க்க †பக்கம், 388, வரி 15.

சனகி வணங்கி அமர்ந்தது.

மாதவரை முற்கொள வணங்கிநெடு மன்னன்
பாதமல ரைத்தொழுது கண்கள்பனி சோரும்
தாதையரு கிட்டதவி சில்தனி இருந்தாள்
போதினை வெறுத்தரசர் பொன்மனை புகுந்தாள். (2)

கோசிகர் நினைந்தது.

அச்சென நினைத்தமுதல் அந்தணன் நினைந்தான்
பச்சைமலை ஒத்தபடி வத்தடல் இராமன்
நச்சுடை வடிக்கண்மலர் நங்கையிவள் என்றால்
இச்சிலை கிடக்கமலை ஏழையும் இருறோ? (3)
(கோலம் காண் படலம், 34—36)

சானகி அரசவையுள் வந்ததும், ஆண்டு நிகழ்ந்ததும், ஈண்டு நாம் கண்டு மகிழ்கின்றோம். நிகழ்ச்சிகள் வியனிலையில் விளைந்து உவகை நிலையமாய் உணர்வு சுரந்துள்ளன.

நைவளம் நவிற்று மொழி எனப் புதுமணப் பெண்ணை அதி மணமாகக் குறித்திருக்கிறார். நைவளம் என்பது ஒரு பண். மெல்லிய இசை நலம் கனிந்தது. யாழின் நரம்பிலிருந்து எழுவது. மென்மையான இனிய கீதம் ஆதலால் சீதை மொழிக்கு இங்கே அது உவமையாய் வந்தது.

"நைவளம் பூத்த நரம்பு." (பரிபாடல், 18)

"நைவளமிகு சாயல் நங்கை" (சீவகசிந்தாமணி, 2435)

இவற்றுள் அது குறித்து நிற்கும் பொருளை அறிக. பண்ணினும் இனிய மென்மொழியாள் என்றது பெண் இனிமை தெரிய வந்தது.

சீதை வாய் திறந்து பேசினால் அரிய வீணா கானம் போல் அதி மாதுரியமாயிருக்கும் என்பதாம்.] உருவ எழிலை நோக்கி எல்லாரும் உள்ளம் உருகியிருக்கும் இந்த இடத்தில் சொல்லைக் குறித்தது, கண்ட ஒன்றிலேயே களிப்பூர்ந்து நிற்கும் மானிடங்களுக்குக் காணாத நிலைகளையும் கருதியுணருமாறு காட்டியபடியாம். சொல்வினை, உள்ளப் பண்பின் உயர் விளைவு ஆதலால் நல்லியல்புகள் அமைந்த இம்மெல்லியலுக்கு ஓர் மேதகவாக அது ஓத நேர்ந்தது.

கண்ணுக்கு இனிய காட்சிபோல் காதுக்கு இனிய பேச்சும் உடையாள் என்க. இங்ஙனம் பலவகை மாட்சிகளும் இனி தமைந்த அரசிளங்குமரி அவையுள் வரவே அனைவரும் நினைவு மறந்து நேரே தொழுதனர்.

யாவரும் தொழுத அக்குழுவுள் மூவர் மாத்திரம் தொழா திருந்தனர். அவர் யார்? இராமன், வசிட்டர், விசுவாமித்திரர் என்க. பேர் குறியாமல் சீர்குறித்துள்ளார்.

வையம் நுகர் கொற்றவன் என இராமனை இங்கே குறித்தது, உலகம் உண்ட பழைய நிலைமை கருதி. மாதவரினும் தலைமையாக அவனை முதலில் வைத்தமையால், அந்த ஒருவன் மட்டும் பூரண மாகத் தொழாமல் உள்ளம் பூரித்திருந்தான். மாதவரும் மனத் துள்ளே தொழுவாராயினர் என்பது குழுவாக நின்றது.

"கைகள் தலைபுக்கன; கருத்து உளதும் எல்லாம்,
தெய்வம்என உற்ற; உடல் சிந்தைவயம் அன்றே?"

தொழுதவர் நிலைமைகளை இவ்வாறு அழகுற விளக்கி யிருக்கிறார். தம் வசமழிந்து பரவசப்பட்டுள்ளார் என்பதாம்.

பெண்ணைப் பார்த்த உடனே உலக நிலையில் வேறு எண்ணம் தோன்றவில்லை; எல்லாருடைய உள்ளங்களும் தெய்வமாகவே கருதின; கருதவே, கைகள் தாமாகவே குவிந்து தொழுதன.

தலை புக்கன என்றது தொழுத அந்நிலைமை தெரியவந்தது. மார்பு அளவு நிற்பதினும் தலைக்குமேலே கைகூப்பித் தொழுதல் பேரன்பால் நிகழ்வதாம். தொழ வேண்டும் என்று எண்ணிச் செய்யாமலே தொழுகை நிகழ்ந்துள்ளது.

தெய்வ புத்தியால் பத்தியில் பரவசராயினர்.

தன்னை மறந்து இன்னவாறு ஒவ்வொருவரும் தொழுத மைக்கு உரிய காரணத்தை விளக்கி இறுதியில் ஓர் உறுதியை உணர்த்தித் தேக தத்துவ நிலையைத் தெளிவுறுத்தினர்.

உடல் சிந்தை வயம் அன்றே?

என்றது மிகவும் சிந்தனைக்கு உரியது. அகத்தே மனம் கருதியபடியே புறத்தே உடல் தொழில் படுகின்றது. கயிற்றின் வழி ஆடும் பாவைபோல அந்தக் கரணத்தின் வழியே தேகம் இயங்கி வருகின்ற விந்தை இங்கே விளங்கியுள்ளது.

உள்ளங்கள் தெய்வம் என்று எண்ணவே உடல்களில் வழி பாடுகள் நிகழ்ந்தன. அழகிய மங்கை, அரசிளங்குமரி, சனகன் மகள் என இதுவரையும் பொதுவாக உலகம் நினைந்து வந்திருப் பினும், இங்கே தனியாக ஓர் உண்மை வெளிப்பட்டு நின்றது.

தெய்வத் திருமகளே இந்த உருவில் ஒரு மகளாய் வந்துள் ளாள் என்பதை இங்ஙனம் ஞாபக மூட்டி யருளினர்.

சீதை தந்தை அருகே அமர்ந்தது.

கண்டவர் கைதொழ இவ்வண்ணம் திவ்விய மகிமையோடு வந்தவள் வசிட்டர், விசுவாமித்திரர், தசரதன் ஆகிய மூவரையும் முறையே வணங்கி சனகன் அருகே உரிமையுடன் அமர்ந்தாள்.

சானகியின் அறிவும் விநயமும் மரியாதையும் இங்கே உவகை சுரந்து ஒளி மிகுந்துள்ளன. சிறிய கன்னி பெரிய அரச சபை யிலே ஒருவரும் உரையாமல் தானாகவே வரிசை தெரிந்து நடந்திருப்பது எண்ணுந்தோறும் எவர்க்கும் இன்பம் தருவதாம். முடி மன்னர் பலரையும் அடக்கியாளும் பெரிய சக்கரவர்த்தி ஆதலால் தசரதன் "நெடு மன்னன்" என நின்றான்.

பாதமலரைத் தொழுது என்றமையால் தசரதனுடைய அடி களில் சீதை தலை வணங்கி எழுந்துள்ளமை அறியலாம். தனக்குப் பிராண நாயகனைப் பெற்றருளிய பெருமான் ஆதலால் அந்த அருமை மாமனை உரிமைமீதூர்ந்து உவந்து தொழுதாள். புதிய மருமகள் முதிய மாமன்முன் பணிவும் பண்பும் கொண்டு நிற்கும் இனிய காட்சியைக் கண்டு இங்கே நாம் பெரு மகிழ்ச்சி யடைகின்றோம்.

கண்கள் பனி சோரும் தாதை என்றமையால் சனகன் அது பொழுது மனமுருகி யிருந்த நிலை தெரிய வந்தது. அந்தப் பெண்ணமுதத்தால் விளைந்துள்ள கண்ணிய நிலைகளையும் புண் ணிய விளைவுகளையும் எண்ணி எண்ணி உள்ளம் பூரித்து மன்னன் உருகியுள்ளமையை விழிகளில் பெருகிய நீர் வெளியறிய விளக்கி நின்றது. அன்பு கனிந்த இன்ப வுணர்வில் எழுந்தமையால் இது ஆனந்தக் கண்ணீர் என்க.

இங்ஙனம் சிந்தை நெகிழ்ந்துள்ள தந்தை யருகே வந்த மகள் அமர்ந்தாள். "தாதை அருகு இட்ட தவிசில் தனி இருந்தாள்"

இங்கே தனிமையை விதந்து சுட்டியது இனிமேல் துணைமை தோய்ந்திருக்கும் இனிமை காண வந்தது. கன்னிமை காத்துத் தனியிருந்த காட்சி இவ்வளவில் முடிகின்றது; இனி உரிய சோடியோடு கூடி உவந்து வாழும் திவ்விய நிலைமையின் செவ்வியை உணர்த்திப் பழமையின் கிழமை அளவைக் கிளத்தி யருளினார்.

"போதினை வெறுத்து அரசர் பொன்மனை புகுந்தாள்"

இது பொழுது ஈண்டு மணமகளாய் வந்துள்ள சீதை இன்ன நிலையினள் என்பதை நன்னயமாக விளக்கிய படியிது.

போது என்றது தாமரை மலரை. தனக்கு இனிய வீடாகிய பூவினை வெறுத்தது, உரிய கோவினைப் பிரிந்துள்ளமையால் ஆண்டு இருக்க முடியாமல் கடுத்து எழுந்தாள் என்க.

கொழுநன் சக்கரவர்த்தித் திருமகனாய் அவதரித்திருத்தலால் அதற்கு இசைய அரசர் மனையில் புகுந்தாள். தகுதி தெரிந்து வரிசையோடு வந்துள்ளாள். கருதி வந்த பலன் கை நெருங்கியுள்ளது.

விசுவாமித்திரர் வியந்தது.

இந்த அருமைத் திருமகளைக் கண்டதும் விசுவாமித்திரர் பெரு மகிழ்ச்சி கொண்டார். தமக்குள்ளேயே வியந்து மொழிந்தார். மாதரசியைக் குறித்து மாதவர் நினைந்தது மேதகவமைந்தது.

அச்சு என நினைத்த முதல் அந்தணன் எனக் கோசிகனை இங்ஙனம் குறித்திருக்கிறார். முன்னம் திரிமூர்த்திகளும் நேரே வந்து இவரது தவ நிலையை வியந்து, "வேத பாரகர் வேறிலர் நீயலால், மாதபோதன!" என உவந்து பாராட்டிப் புகழ்ந்து போயிருத்தலால் அந்தத் திவ்விய மகிமையை ஈண்டு எண்ணி இசைத்தார். "வண்டிக்கு அச்சுப்போல உலக இயக்கத்திற்கு இவன் தலைமையான உறுதியாளன்" எனத் தலைமைத் தேவர்களே இவரை எண்ணியுள்ளனர். அத்தகைய புண்ணிய முனிவர் இப்பெண்ணரசியைக் குறித்து எண்ணியது என்ன?

வில்லை வளைத்தற்கு உரிய பரிசாக இத் தகைய அற்புதத் திருவைத் தருவதாயின் நமது வீரன் ஒரு சிலையை மட்டுமா வளைப்பான்? ஏழுமலைகளையும் ஒருங்கே ஒடித்து எறிவான்என்று உவகை மீக்கூர்ந்தார்.

இச்சிலை கிடக்க ; மலை ஏழையும் இருனே ?

முனிவர் இவ்வாறு உற்சாகமாயுரையாடியுள்ளார். உள்ளக் களிப்பின் உச்சநிலை உரையில் மிளிர்கின்றது. உலகில் பெயர் பெற்றுள்ள உயர்மலைகள் எட்டு. அவை அட்டகுல பருவதங்கள் எனப் பட்டம் பெற்றுள்ளன. இமயம், மந்தரம், கைலை, விந்தம், நிடதம், ஏமகூடம், நீலம், கந்தமாதனம் என்னும் எட்டனுள் இமயமலையின் அமிசமான சிலை முதலில் முறிபட்டுள்ளமையால் அதன் இனமாய் அடுத்துள்ள ஏழுமலைகளையும் எடுத்துப் பேசினர்.

பந்தையமாக அமைந்த பெண் இந்த விதமான பேரழகுடையது என்றால், மாப்பிள்ளை என்னதான் செய்யமாட்டார்? என மாதவர் சடைமுடியை அசைத்து மனமிக மகிழ்ந்திருக்கிறார்.

தாம் அழைத்து வந்த சக்கரவர்த்தித் திருமகனுக்குத் தக்க வாழ்க்கைத் துணை வாய்த்துள்ளதை நினைந்து கோசிகர் பேசியுள்ள வாசகங்களில் உல்லாச விநோதமும் நேசப் பண்பும் நிறைந்து கமழ்கின்றன. மைத்துனமுறை உரை மருவியுள்ளது.

பெண்ணைப் பார்த்துப் பிள்ளை வீட்டார் சம்மதித்து உள்ளம் களித்துள்ள நிலைகளைக் கவி இவ்வாறு உலகம் அறியக் காட்டியுள்ளார். உரைகளில் மணமக்களுடைய அருமை பெருமைகள் அதிசய நிலையில் பெருகி ஒளிர்கின்றன.

## சீதையின் கண் நோக்கம்.

பிள்ளை இனத்தார் பெரு மகிழ்ச்சியை உள்ளம் குளிர உணர்ந்தோம். இனி மாப்பிள்ளையை மணப்பெண் நோக்கி மகிழ்ந்த வண்ணமும் உவந்து காண வருகின்றோம்.

அரசர்களும் அருந்தவர்களும் நிறைந்துள்ள திவ்வியமான கலியாண மண்டபத்தின் இடையே தந்தை அருகில் சனகி மருவியிருந்தாள். கண்களெல்லாம் அக்கட்டழகியை வியந்து நோக்கி விழைந்து நின்றன.

இந்த நிலையில் தனக்கு வாய்த்துள்ள சுந்தரனைக் கண்டு கொள்ள விழைந்து இச்சுந்தரி உள்ளம் துடிக்கின்றாள். ஆசை வெள்ளம் கரை புரண்டு எழுகின்றது. நாணம் தடுக்கின்றது. உயிர் ஊசல் ஆடுகின்றது. கன்னிமாடத்தில் கண்ட அப் புண்ணிய உருவம் தானோ? என்று நேரே பரிசோதனை செய்யப்

போாவல்; ஆயினும் பக்கச் சூழலை நினைந்து வெட்கம். காணுமையும் தீராது; கண்டு தெளிந்த பொழுதுதான், உயிர் வாழ்வு உண்டு என உறுதி பூண்டுள்ளாள். தருமசங்கடமான இந்நிலைமையில் யாருக்கும் தெரியாமல் காரியசித்தி அடையவேண்டும். பெருஞ் சபையிடையே என்ன செய்யலாம்? கையில் அணிந்திருந்த வயிர வளையல்களை விரல்களால் உருட்டத் தொடங்கினுள்; அதி சாதுரியமான அந்த உபாயத்தை மேற்கொண்டு தனது இனிய நாயகனைப் புதுமணப்பெண் கண்டு தெளிந்து கழி பேருவகையளாய் விழியொளி வீசி அளிபுரியலாயினுள். அக்காட்சி நிலைகளை அயலே வரும் கவிகளில் காணலாம்.

எய்யவில் வளைத்ததும் இறுத்ததும் உரைத்தும்
மெய்விளை விடத்துமுதல் ஐயம்விடல் உற்ருள்
ஐயனை அகத்துவடி வேயல புறத்தும்
கைவளை திருத்துபு கடைக்கணின் உணர்ந்தாள். (1)

கருங்கடை நெடுகண்ஒளி யாறுநிறை கண்ணப்
பெருங்கடலின் மண்டவுயிர் பெற்றினி துயிர்க்கும்
அருங்கலன் அணங்கரசி ஆரமிழ் தனைத்தும்
ஒருங்குடன் அருந்தினரை ஒத்துடல் தடித்தாள். (2)

கணங்குழை கருத்திலுறை கள்வன்என லானுன்
வணங்குவில் இறுத்தவன் எனத்துயர் மறந்தாள்;
அணங்குறும் அவிஞ்சை கெட விஞ்சையின் அகம்பா
டுணர்ந்தறிவு முற்று பயன் உற்றவரை ஒத்தாள். (3)

(கோலங்காண் படலம், 37—39)

சீதை மறுகியிருந்த மனநிலைகளும், உறுதி தெளிந்து உவகை கொண்டதும், உணர்வமைதிகளும் இங்கே இனிது கண்டு இன்புறுகின்றேம். ஆர்வக்காட்சியில் சீர்மை சுரந்துள்ளது.

கன்னிமாடத்தில் கண்ட பொழுது எந்த உருவம் தன் உள்ளத்தில் பதிந்திருந்ததோ அதனையே மீண்டும் ஈண்டுத் தெள்ளத் தெளிய நோக்கிச் சிந்தை களித்தாள்.

"ஐயனை அகத்து வடிவேஅல, புறத்தும்
கைவளை திருத்துபு கடைக்கணின் உணர்ந்தாள்."

அம்மாள் அகத்தில் ஐயாவை ஒளித்துவைத்துள்ள உண்மை வெளிப்பட்டு நின்றது. அல என்று பன்மையில் குறித்தமையால்

பலவகை அவயவங்களும் நிலைபெற்றுள்ள நிலை தெரிய வந்தது. முகம் கண்கள் தோள்கள் மார்பு புன்முறுவல் முதலியன முன்னம் பன்னியபடியே மனத்துள் மன்னியுள்ளன.

அகத்தில் அமைந்திருந்த அந்த அழகிய வடிவத்தையே இது பொழுது இந்த அரசவையில் விழி களிப்ப வெளியே கண்டாள். கண்ட முறையைக் கருதும்தோறும் நகையும் உவகையும் பெருகி வருகின்றன.

[கைவளையல்களைத் திருத்திச் செம்மைப் படுத்தும் பாவனையில் பாசாங்கு செய்து கடைக்கண்ணால் பார்த்திருக்கிறாள். பெண்மையின் இயல்பு இங்கே உண்மையாக ஒளி வீசியுள்ளது. கடைக்கண் பார்வையில் மகளிர் தலைசிறந்தவர். நேரே காண முடியாமல் நாணம் தடை செய்தமையால் கோணல் வழியில் காண நேர்ந்தது.]

(கண்டாள் என்னாமல் உணர்ந்தாள் என்றது முன்னமே பார்த்திருந்த ஆளைச் சரிபார்த்துத் தெளிந்துகொண்டமை தெரிய. காட்சியின் குறிக்கோள் கூர்ந்து நோக்க வந்தது.

தான் பார்ப்பதை யாரும் பாராதபடி தன் பார்வையை விநயமாகச் செலுத்தி வியன்பயன் கொண்டுள்ளாள்.

[கருங்கடை நெடுங்கண் ஒளியாறு என்றமையால் விழி பாய்ந்து ஒளி வீசியிருக்கும் எழில் காண வந்தது.

கண்ணப் பெருங் கடல் என்றது இராமனை.

நதி கடலில் பாய்வது போல் சீதையின் பார்வை இராமன் பால் புகுந்தது என்றது இருவருக்கும் உள்ள உறவுரிமையை இனி விளக்கி நின்றது.

நதி, சதிக்கும்; நீர் ஓட்டம், கண் பாய்ச்சலுக்கும்; கடல், பதிக்கும் ஒப்பாம். உரிய பதியைக் கண்டு தெளியவே அமிழ்தம் உண்டவர்போல் உள்ளம் களித்து உடல் பூரித்தாள்.

வில்லை வளைத்தவன் தன் உள்ளத்தில் உறைந்துள்ள கள்வனே என்று தெளியவே சீதை பேரின்ப நிலையளாயினாள். அந்நிலையை ஓர் உவமையால் விளக்கியிருக்கிறார்.

“அணங்குறும் அவிஞ்சை கெட விஞ்சையின் அகம்பாடு
உணர்ந்து அறிவுமுற்று பயன் உற்றவரை ஒத்தாள்.”

உற்ற மயக்கம் நீங்கித் தத்துவ ஞானம் பெற்ற பொழுது உயிர் பரமானந்தம் உறுதல்போல் சீதை இங்கே ஆனந்தப் பேற்றில் அமைந்து நின்றாள். அவிஞ்சை = அஞ்ஞானம். விஞ்சை = ஞானம். அகம்பாடு உணர்தலாவது உலகம் உயிர் பரம் என்னும் மூன்று பொருள்களின் நிலைகளை ஆராய்ந்து தெளிதல்.

தன்னை மறந்துள்ள அஞ்ஞான நிலையில் அல்லல்கள் பல நிறைந்திருக்கும் ஆதலால் "அணங்குறும் அவிஞ்சை" என்றார். அணங்கு = துன்பம். சிலேடையாகவும் இஃது இணங்கி யுள்ளது.

தன் பதியாகிய இராமனை நேரே கண்டு தெளியும் வரையும் சீதையின் உள்ளத்தில் பெருங் கவலைகள் மண்டியிருந்தன; கண்டவுடனே அவலங்கள் யாவும் தொலைந்தன; கரை காணாத ஆனந்தமுடையளாய்க் களித்திருந்தாள்.

பரம பதியாகிய தம் தலைவனை உண்மையாகக் காணும் வரையும் சீவகோடிகள் துன்பத் தொடர்களில் தோய்ந்து உழலு கின்றன; தத்துவ நோக்காய் நேரே காணின், நேர்ந்து நின்ற துயரங்களெல்லாம் பேர்ந்து தொலையும்; தொலையவே அவை பேரானந்த மயமாய்ப் பெருகி எழுகின்றன.

ஐயம் நீங்கி மெய்யுணர்வடைந்து தெய்வ தரிசனம் செய்த திவ்விய ஆன்மா இங்கே சீதைக்கு உவமையாய் வந்தது.

அரசவையில் சீதை இராமனைக் கண்டு மகிழ்ந்தது போல் உலகில் சீவன் கடவுளைக் கண்டு மகிழவேண்டும் என்பதாம். சீதைக்கும் இராமனுக்கும் உள்ள உறவுரிமை போல், சீவனுக்கும் பரமனுக்கும் அநாதியாகவே சம்பந்தம் அமைந்துள்ளது; தன் பதியை மதியீனமாய் மறந்திருக்கும் வரையும், அதி யீனங்களை அடைந்து அது வருந்துகின்றது. உரியவனை அறிந்து கொண்ட பொழுது ஆனந்த மயமாய் உயர்ந்து திகழ்கின்றது என்க.

அரிய உறுதி நலன்களை உரிய சமயங்களில் பக்குவமாகக் கவி உணர்த்திச் செல்கின்றார். ஒல்லும் வாயெல்லாம் நல்ல உண்மைகளைச் சொல்லியருளுதலால் அவரது உள்ள நிலை உணர நின்றது. பரமபதியை மருவி மகிழ்க என்கின்றார்.

## முகூர்த்தம் குறித்தது.

மண மகள் வந்து அமர்ந்தபின் பெரு மகிழ்வடைந்த தசரத மன்னன் அருகேயிருந்த கோசிக முனிவரை நோக்கித் திருமணம் செய்தற்குரிய நல்ல நாள் எது? என்று மெல்ல வினவினன். அம்மாதவர் "நாளை முற்பகல் எழு நாழிகைக்கு நல்ல ஓரை உள்ளது" என்றார். அவ்வேளையில் மங்கலம் செய்துகொள்வோம் என்று மன்னன் சனகன் முகம் நோக்கினன். அவன் இனிய முகத்தனாய் எதிர் மகிழ்ந்தான். மகிழவே சக்கரவர்த்தி எழுந்து தக்க மரியாதைகளுடன் தனது மணிமாளிகையை அடைந்தான். அனைவரும் அகன்றார்.

*அன்னம் அரி நிற்பிரிய, அண்ணலும் அகன்றப்*
*பொன்னி னெடு மாடவரை புக்கனன்; மணிப்பூண்*
*மன்னவர் பிரிந்தனர்கள்; மாதவர்கள் போனார்;*
*மின்னுசுடர் நாயகனும் மேருவில் மறைந்தான்.*

(கோலம் காண், 43)

கொலு மண்டபத்தில் குழுமியிருந்த அனைவரும் பிரிந்தார். சூரியனும் மறைந்தான். மறுநாள் திருமணம் என்ற பெருமகிழ்ச்சியால் குடி சனங்கள் எல்லாரும் பரவசம் அடைந்திருந்தனர்.

அன்னம் என்றது சீதையை. நடை அழகும் பகுத்தறிவும் மென்மை மேன்மைகளும் கருதி வந்தது. அரிதில் பிரிய என்றதனால் இராமனை ஒருவி நீங்குவதிலுள்ள பரிபவ நிலை தெரிய நின்றது.

மணம் முடியும் முன் சக்கரவர்த்தி எதிரே சனகியை வசிட்டர் கொண்டு வரும்படி செய்தது, மாப்பிள்ளை வீட்டார் பெண்ணை முதலில் கண்டு தெளியும் வழக்கத்தைக் காட்டியுள்ளது.

மனித சமுதாயத்தின் இனிய நாகரீக நிலைகள் மதிநலம் கனிந்து அதி விநயமாகக் கதையில் மருவி வருகின்றன.

உழுவலன்புடைய விழுமிய காதலர் களவு முறையில் முன் கண்டதோடு அமையாமல் மறுபடியும் உலகம் அறிய ஒருவரை ஒருவர் எதிர் நோக்கி உளம் மிக மகிழுமாறு இக் கொலுச் சந்திப்பு அருளி நின்றது. அகவுணர்ச்சிகள் உவகையில் விளைந்து உணர்வு நலம் சுரந்துவரக் கதை நிகழ்ச்சி சுவை கனிந்து

வருகின்றது. எவ்வழியும் அன்பும் அறிவும் பெருகிப் பாய்கின்ற இன்பவூற்றுக்கள் பண்பமைந்து பரந்திருக்கின்றன.

### மணமகள் இரவு மறுகியிருந்தது.

மறுதினம் நிகழும் கலியாண வைபவங்களைக் கருதி மகிழ்ந்து அனைவரும் இனிது உறங்கினர். காதலர் இருவரும் கண் துயிலாமல் உள்ளம் உருகி ஆசை வெள்ளத்தில் அலமந்து கிடந்தார்.

தன்னைச் சூழ்ந்திருந்த தோழியர் யாவரும் தூங்கச் சீதை மாத்திரம் கண் உறங்காமல் தனியே விழித்திருந்தாள். இடையாமம் கழிந்தும் துயில் இன்றி மயலுழந்தாள். இராமனை நினைந்து விரக வேதனையால் வெதும்பி இரவு முதலியவற்றை வெறுத்து வைதாள்.

### இரவை வைதது.

உரவேது மிலார்உயிர் ஈர்து மெனக்
கரவே புரிவார் உளரோ கதிரோன்
வரவே எனையாள் உடையான் வருமே
இரவே கொடியாய்! விடியாய் எனுமால். (1)

### மனத்தை நோந்தது.

கருநாயிறு போல்பவர் காலொடு போய்
வருநாள் அயலே வருவாய் மனனே!
பெருநாள் உடனே பிரியா துழல்வாய்
ஒருநாள் தரியாது ஒழிவார் உளரோ? (2)

### அன்றிலை வெறுத்தது.

கனையேழ் கடல்போல் கருநாழிகைதான்
வினையேன் வினையால் விடியா விடில்நீ
தனியே பறவாய் தகவேது மிலாய்
பனைமேல் உறைவாய் பழிபூ ணுதியோ? (3)

### காதலரைக் கடிந்தது.

தெருவே திரிவார் ஒருசேவகனார்
இருபோதும் விடார் இதுஎன் னைகொலாம்?
கருமா முகில்போல் பவர்கன் னியர்பால்
வருவார் உளரோ குலமன் னவரே. (4)

பலவும் பழித்தது.

பண்ணோ ஒழியா ; பகலோ புகுதாது ;
எண்ணோ தவிரா ; இரவோ விடியாது ;
உண்ணோ ஒழியா ; உயிரோ அகலா ;
கண்ணோ துயிலா இதுவோ கடனே. (5)

(கடிமணப் படலம்)

இன்னவாறு பன்னிப் புலம்பிப் பரிவு மீதூர்ந்து உருகியுள்ளமையால் அந்த மையலின் அளவு நிலை தெளிவாம். அன்புருக்கமும் ஆசைப் பெருக்கமும் உரைகளில் ஓசை பெற்று ஒளி பரந்துள்ளன.

1. வலி ஏதும் இல்லாத அபலையாகிய என்னை வாட்டுகின்றாயே! ஓ கொடிய இரவே விரைவில் விடியாயா? சூரியன் உதயமான உடனே என் ஆண்டவர் வந்தருளுவாரே! அந்த அருளாளரை நான் விரைந்து கண்டு மகிழமுடியாதபடி இடையே நீ வீணே நீண்டு கிடக்கின்றாயே!

கதிரோன் வரவே, எனைஆள் உடையான் வருமே!

மறுநாள் காலையில் இராமனோடு மணவறையில் ஒருமுகமாய் மருவியிருக்கலாம் என்னும் பெரு நினைவால் இவ்வுரைகள் வந்துள்ளன.

எனைஆள் உடையான் என்றதில் வலிய வந்து என்னை ஆட்கொண்டருளிய பெருமான் என உளம் உருகியுள்ளமை உணரலாகும்.

அந்தப் பேரருளாளரை யடைந்து நான் பேரானந்தம் உறுவதை நீ பாரிமுவாய் விரிந்திருக்கிறாயே! விரைந்து தொலைந்து போ என இரவைச் சினந்திருக்கிறாள். வெகுளி வேணவாவால் விளைந்தது.

விரக வேட்கை யுடையராய்ப் பிரிவில் மறுகி இருப்பவர்க்கு இரவு பெரிதும் பரிபவமாய் இருக்கும்; ஒரு நிமிடம் கழிவது ஒரு நாள் போல் தோன்றும்; விழி துயிலாமல் வெய்துயிர்த்திருத்தலால் அது கடிது கழியாமல் நெடிதாய் நீள்கின்றதே என்று நெஞ்சம் கவல்கின்றார்; அதனால் வஞ்சம் தீரவைய நோகின்றார்.

இரவே கொடியாய்! விடியாய்?

அன்று இரவு முடிந்து விடிந்தால் பிறவி யடைந்த பெரும் பயனைப் பெறுகின்றாள் ஆதலால் அவ்விடிவை இங்ஙனம் விழைந்து நின்றாள்.

2. மரகத ஒளி வீசியுள்ள அந்த எழில் உருவை விழி களிப்ப விழைந்து கண்டுள்ளமையால் கருநாயிறு என இராமனை இங்கே அருமை வாசகத்தால் உரிமை கனிந்து உரைத்தாள். நாயிறு = சூரியன். கால் ஒடு போய் என்றமையால் இராமன்பால் தன் உள்ளம் பறிபோயுள்ளமை உணர நின்றது. அந்தப் பாத தாமரையில் தனது மனமாகிய வண்டு எழில் மது உண்டு தொழில் மறந்து களி மயக்கம் கொண்டது.

"பிறந்தது முதல் என்னுடன் பிரியாதிருந்த ஓ மனமே! இன்று என்னைத் தனியே விட்டுப் போய் விட்டாயே! இது என்ன சுய நலம் அம்மா! விடிந்தவுடனே தான் என் காதன் வந்து விடுவாரே! அதுவரையும் பொறுத்திருக்கலாகாதா? விரைந்து பிரிந்து போய் வேற்றுமையை விளைத்து உன் சின்னப் புத்தியைக் காட்டிவிட்டாயே! இது என்ன மதி? ஒரு நாள் கொஞ்சம் அடக்கமாயிருந்தால், நெடுநாள் நிறைந்த மதிப்புடன் நிலைத்து வாழலாமே! உனக்கு நல்லமதி இல்லை; உன்னை நோவதால் யாது பயன்? என் விதியை நோகவேண்டும்; அந்த அதிபதியிடம் இப்படி வலிந்து நீ முந்திப் போகாமல் இருந்தால் நமக்கு எவ்வளவு நன்கு மதிப்பு உண்டாம்? அவ்வள வையும் உன் ஆசைத் துடுக்கால் மாசு படுத்தியுள்ளாய்! மையல் கொண்டவர்க்கு மதியில்லை என்பதை வையம் அறிய விளக்கி னாய்! நாளை முதலாவது கொஞ்சம் நல்ல மரியாதையுடன் அமர்ந் திரு" என மனத்தை நோக்கி மதியுறுத்தினாள்.

இவ்வாறே நிலவு அன்றில் தென்றல் முதலியவற்றோடு பல வும் பன்னிப்பரிவு மீதூர்ந்தாள்.

"எண்ணோ தவிரா; இரவோ விடியா;
கண்ணோ துயிலா; இதுவோ கடனே!

காதலன்பால் ஆதர மீதூர்ந்து இரவு முழுவதும் கண்ணுறங் காமல் சீதை அடைந்துள்ள விரக வேதனைகள் இதனால் அறியலாகும்.

காம மயக்கத்தால் உடல் வெதும்பிக் கடலை நோக்கிப் புலம்பினுள்.

இடையே வளை சோர எழுந்து விழுந்து
அடலேய் மதனன்சரம் அஞ்சினையோ?
உடலோய் வுற நாளும் உறங்கலையால்
கடலேஉரை நீயும்ஓர் கன்னி கொலாம்? (கடிமணம், 11)

தன்னைப் போலவே கடலும் காம தாபத்தை யடைந்து கிடப்பதாக இரங்கி உரைத்த படி யிது. சங்குகளை அயல் எறிந்து, ஒரு நிலையில் இன்றி ஓயாமல் அலைகளை மோதி, அசைந்து அலைந்து இரவெல்லாம் ஒலமிட்டுக் கிடத்தலால் தன்னைப் போலவே காதலனைப் பிரிந்து கதறுவதாகக் கழற லானுள்.

நீயும் ஓர் கன்னி கோலாம்? என்றது தான் ஒரு கன்னியா யிருந்து காதலனை நினைந்து நோதலுழந்து படுதல் போல் கடலும் படுவதாக உரிமை கொண்டு வினவினுள்.

பாய்திரை பாடுஓவாப் பரப்புநீர்ப் பனிக்கடல்!
தூவறத் துறந்தனன் துறைவன்என்று அவன்திறம்
நோய்செற உழப்பார்கண் இமிழ்தியோ எம்போலக்
காதல் செய் தகன்ருரை உடையையோ நீ? (கலி, 129)

காமுற்ற கையறவோடு எல்லே இராப்பகல்
நீமுற்றக் கண் துயிலாய்! நெஞ்சுருகி ஏங்குதியால்
தீமுற்றத் தென்னிலங்கை ஊட்டினுன் தாள்நயந்த
யாமுற்றது உற்ருயோ? வாழி கனைகடலே!

(திருவாய் மொழி, 2—1)

நம் கவியோடு இவற்றை இணைத்து நோக்கி இயைபு தெரிக. உடையவன் மீதுள்ள மோகத்தால் இரவிடை இவ்வாறு பரிவுடன் புலம்பினுள்.

கன்னிமாடத்தில் முன்னம் கண்டபொழுது கொண்ட காம வேட்கையினும் ஈண்டு மிகவும் மண்டி எழுந்தது. பலன் கைக்கு வந்துள்ளமையால் ஆசைப் பெருக்கில் உள்ளமும் உயிரும் மிதந்து ஊசலாடின.

காதலி நிலையை ஒரு சிறிது கண்டோம்; இனிக் காதலன் மன நிலைகளையும் ஓரளவு கண்டு மேலே விரைந்து போவோம்.

## இராமனது காமதாபங்கள்.

அரசவை நீங்கி அரண்மனை அடைந்த இராமன் இரவு எட்டு நாழிகை வரையும் மாதவர்களோடு பேசியிருந்தான். அதன்பின் அவர் அகன்று போயினர். தந்தையாரும் தம்பிமாரும் நன்கு உறங்கினர். இராமன் அமளியில் படுத்தான்; உறக்கம் யாதும் வரவில்லை. உள்ளம் ஊசலாடி நின்றது. அஞ்சா நெஞ்சமும் அருந்திறலாண்மையும் பஞ்சாய்ப் பறந்தன. காம வேட்கை கதித்து நின்றமையால் யாமமும் துயிலாமல் அலமந்திருந்தான்.

சீதையினுடைய உருவ நலங்களில் உள்ளம் பறிபோய் உருகலாயினன். ஆசை மீதூர்ந்து தன்னை மறந்து தனியே பேசியுள்ள மொழிகளால் அன்று இரவு அவன் என்ன நிலையில் இருந்துள்ளான் என்பதை இனிது தெரிந்து கொள்ளலாம்.

### உருவை உவந்தது.

முன்கண்டு முடிப்பரு வேட்கையினால்
என்கண் துணை கொண்டு இதயத்து எழுதிப்
பின்கண்டுமோர் பெண்கரை கண்டிலனால்
மின்கண்டவர் எங்கறி வார்வினையே. (1)

### மதியை நினைந்தது.

திருவே அனையாள் முகமே தெரியின்
கருவே கனியே விளைகாம விதைக்கு
எருவே மதியே இதுஎன் செய்தவா
ஒருவே றுடுநீ உறவா கலையோ? (2)

### இருளை இகழ்ந்தது.

கழியா உயிருந் தியகா ரிகைதன்
விழி போல வளர்ந்தது வீகிலதால்
அழிபோர் இறைவன் படஅஞ் சியவன்
பழிபோல வளர்ந்தது பாயிருளே. (3)

### மனத்தோடு மறுகியது.

நினையாய் ஒருகால் நெடிதோ நெறிதான்
வினவா தவர்பால் விடைகொண் டிலையோ
புனமான் அனையா ரொடுபோ யினஎன்
மனனே! எனை நீயும் மறந்தனையோ? (4)

காட்சியில் கரைந்தது

தன்னைக் கெரிகால் தகைவாள் அரவின்
பன்னைக்கின தென்பது பண்டு கொலாம்
என்னைக் கினும் நெஞ்சினும் என்றும் உளார்
மேன்னைக் கினதே கடுவல் விடமே. (5)

காதலியை வியந்தது

கல்லார் மலர்சூழ் கழிவார் பொழிலோடு
எல்லாம் உளவா யினும்என் மனமோ
சொல்லார் அமுதின் சுவையோ டினிதாம்
எல்லோ தியர்தாம் விளையா டிடமே. (கடிமணம், 13-18)

வில் வீரனை இராமபிரான் காமநிலையில் இவ்வாறு உள்ளம் கரைந்து உரையாடியுள்ளான். காதல் வளர நோதல்கள் விளைந்தன.

1. முதலில் ஒரு முறை நேரே கண்டேன்; மீண்டு மறுபடி இன்றும் பார்த்தேன். எனது இரண்டு கண்களாலும் முழுதும் மொண்டுகொண்டு உள்ளே பருகியுள்ளேன்; அந்த அருமைத் திருமேனி ஒருவகையிலும் வரம்பு காணமுடியாமல் அதிசய அழகில் பெருகி மிளிர்கின்றதே! என மறுகலாயினன்.

பின் கண்டும் ஓர் பெண்கரை கண்டிலன்

இருமுறை கண்டும் சீதையின் வடிவழகை முழுவதும் கண்டு தெளிய முடியவில்லையே என்று கருதியுளைந்துள்ளமையால் அந்த திவ்விய சவுந்தரியத்தின் அற்புத நிலை அறிய நின்றது. வரம்பில் பேர் அழகினள் எனக் கவி முதலில் குறித்ததைக் காவிய நாயகன் வாக்கு மூலம் இங்கே நன்கு உறுதிப்படுத்தி யுள்ளது.

2. சந்திரன் உதித்தான்; அந்த உதயம் காம தாபத்தை அதிகப் படுத்தியது. தண்ணளியுடைய நீ என்னிடம் அளி இன்றி என்னை வருத்துகின்றாயே! என்று வெண்ணிலாவை நோக்கி எண்ணி வருந்திக் கண்ணியமாக உறவு மொழி கூறினன்.

3. பின்பு இருளை நினைந்து வருந்தினன். அன்று இரவு நெடிது நீண்டு இருப்பதாகக் கடிது புலம்பினன். விரைவில் விடியவில்லையே என்று இரவின் நிலைமையை உளைந்து மறுகினன். காரிகை தன் விழி போல வளர்ந்தது என்றமையால் அகன்று பரந்து விரிந்து மிளிர்ந்துள்ள சீதையின் கண்ணழகை எண்ணி இரங்கி மையல்மீறி மாலுழந்துள்ளமை தெரியவந்தது.

" அழிபோர் இறைவன் பட அஞ்சியவன்
பழிபோல வளர்ந்தது பாய் இருளே."

தன்னை ஆதரித்த தலைவன் போரில் இறந்துபடத் தன் உயிரைப் பாதுகாத்து அஞ்சி ஓடிய ஒருவனது பழி வளர்ந்தது போல் அன்று இரவு இருள் ஓங்கி யிருந்தது என ஏங்கினன். நல்ல சுத்த வீரன் ஆதலால் ஓடி ஒளியும் பேடிகளது நிலைமையை இவ்வாறு இகழ்ந்து பேசினன். குறித்த உவமையால் கவியினது வீரப்பான்மை வெளிப்பட்டு நின்றது.

4. மனம் முதலிய கரணங்கள் யாவும் சீதையினிடமே போக்கிக் காதலன் ஆதர மீதூர்ந் துள்ளான்.

மனனே! எனை நீயும் மறந்தனையோ?

இராமன் மறுகியிருக்கும் நிலைமையை நோக்குக. உம்மை உரிமையை உணர்த்தி நின்றது. கருநாயிறு போல் பவர் காலோடு போய் வருவாய் மனனே! எனச் சீதை மறுகியுள்ளது போலவே இராமனும் தன் மனத்தை அவள்பால் இழந்து உருகி இருக்கிறான்.

பேரழகும் பெருமிதமும் நிறை ஒத்துள்ள ஈருயிரும் இவ்வாறு ஆராக் காதலோடு ஒன்றை ஒன்று அவாவி உணர் வோங்கியுள்ளன. உழுவலன்புடைய விழுமிய காதலர் இருவரும் காவிய நாயகங்களாய்க் கதித்துள்ளமையால் அவர்தம் சீவிய வுண்மைகளை ஓவியங்களா உணர்வு நலம் கனியக் கவி இனிது எழுதி வருகின்றார்.

இரண்டு முறை சந்திக்க வைத்துப் புனிதமான அன்புக் காட்சியை இங்ஙனம் வெளிப்படுத்தியது, பின்பு நிகழும் இன்ப மாட்சிகளை எண்ணி மகிழ. இருபேர் உயிர்களும் திவ்விய மகிமை கள் உடையன. செவ்விய இன்ப நலங்கள் நிறைந்தன. உள்ளம் ஒத்த உயர் பெருங் காதல்கள் வெள்ளம் எனப் பெருகி வியனிலை யில் விளைந்தன. அவ்விளைவு நிலைகள் உலகம் நலமுற ஈண்டு ஒளி செய்து நின்றன.

அன்பு ததும்பிய இன்ப நினைவுகளோடு இனிது மருவியிருந்த இராமன் கடையாமத்தில் சிறிது கண் துயின்றான். இரவு கழிந்தது. சூரியன் உதய மாயினன். அவ்வுதயவருணனை இடம் காலங்களுக்கு இயைய எழுந்து இதய நிலைகளை உணர்த்தியது.

அஞ்சன ஒளியானும், அலர்மிசை உறைவாளும்,
எஞ்சலில் மணநாளைப் புணர்குவர் எனலோடும்
செஞ்சுடர் இருள்கீறித் தினகரன் ஒருதேர்மேல்
மஞ்சனை அணிகோலம் காணிய எனவந்தான்.

(கடிமணப் படலம், 21)

சனகன் நகரில் தினகரன் வந்தது இனிமை சுரந்து நின்றது.

கதிர்மதிகளுடைய உதய வருணனைகள் யாவும் கதை நிகழ்ச்சியைத் தழுவியே கவி புனைந்து வருவது நினைந்து மகிழவுரியது. அவ்வரன்முறை காவிய நிலைக்கு ஓர் சீவிய அழகாய்த் திகழ்ந்து பாவிகம் படிந்து பயன் சுரந்து வருகின்றது.

தனது குல மரபில் பிறந்த தலைமகனுக்கு அதிசய நிலையில் இன்று திருமணம் நிகழ்வதால் அந்த அரிய பெரிய கலியாண வைபத்தைக் கண்டு மகிழ வேண்டும் என்று ஆசை மண்டி வந்தது போல் கதிரவன் அன்று உதய மாயினன்.

எஞ்சல் இல் மணம் என்றது எவ்வகையிலும் யாதொரு குறைவும் இல்லாமல் உயர் நலங்களெல்லாம் ஒருங்கே நிறைந்தது என்றவாறு. உலகில் நிகழுகின்ற மற்ற மணங்கள் எல்லாம் திரு என்னும் மங்கல மொழியை உபசாரமாகப் பெற்று வெளியே விளங்குகின்றன. இது உண்மையாகவே திருமணம் ஆதலால் அதன் பெருமித நிலை தெரிய நிருமித நிறைவு வந்தது.

## மிதிலையை அலங்கரித்தது.

பொழுது விடிந்ததும் உயிரினங்கள் எல்லாம் உள்ளக்களிப்போடு உவகையில் எழுந்தன. முதல் நாளே மங்கல முரசுகளால் எங்கணும் திருமண நிலை அறிவிக்கப் பெற்றிருந்தமையால் தேச மக்கள் யாவரும் ஆசைமீதூர்ந்து இரவே அலங்காரங்கள் செய்தனர். வீதிகள் தோறும் தோரணங்கள் கட்டினர். மனைகளில் பூரண கும்பங்கள் அமைத்துச் சிறந்த கோலங்களிட்டு உயர்ந்த காட்சிகளை விளைத்தனர். ஆடவரும் மகளிரும் பாலரும் விலை மிகுந்த ஆடை ஆபரணங்களால் தம்மை அலங்கரித்துக் கொண்டனர். எங்கே பார்த்தாலும் மங்களகரமான ஆரவாரங்கள் பொங்கி எழுந்தன. உவகை நிலையங்கள் வகை வகையாய் வளர்ந்தன.

காலை நாலு நாழிகை யாகவே பல இடங்களிலுமிருந்து சனத் திரள்கள் வந்து கொண்டிருந்தன. மிதிலைமா நகரம் எங்கும் அதிசயமான இன்பக் காட்சிகளும் மங்கல ஒலிகளும் மருவி ஓங்கின. குறுநிலக் கிழவரும், சிற்றரசர்களும், பெருநில வேந்தரும் தத்தமக்குரிய தகுதிகளோடு கலியாண மாளிகையை நெருங்கினர். வாகன வரிசைகள் வகை வகையாய் வந்தன.

தேர்மிசை வருவாரும், சிவிகையில் வருவாரும்,
ஊர்தியில் வருவாரும், ஒளிமணி நிரை ஓடைக்
கார்மிசை வருவாரும், கரிணியில் வருவாரும்
பார்மிசை வருவாரும் பண்டியில் வருவாரும்; (1)

விடநிகர் விழியாரும் அமுதெனும் மொழியாரும்
கிடைபுரை இதழாரும் கிளர்நகை ஒளியாரும்
தடமுலை பெரியாரும் தனியிடை சிறியாரும்
பெடையன நடையாரும் பிடிஎன வருவாரும்; (2)

உண்ணிறை நிமிர்செல்வம் ஒருதுறை செலஎன்றும்
கண்ணுறல் அரிதென்றும் கருதுதல் அரிதம்மா!
எண்ணுறு சுடர்வானத்து இந்திரன் முடிசூடும்
மண்ணுறு திருநாளே ஒத்தது அம் மணநாளே. (3)

இன்னவாறு எண்ணிடலரிய இன்ப நலங்களுடன் விண்ணவர் உலகம் என மிதிலைமாநகரம் அன்று விளங்கி யிருந்தது. அரச குழாம் நிறை செய்து வரவே அரசர் பிரானாகிய தசரதன் உரிய பரிவாரங்கள் புடை சூழ அரிய ஆடம்பரங்களுடன் எழுந்து, கலியாண மண்டபத்தை அடைந்து, தனக்கு என அமைத்திருந்த அரியாசனத்தில் அமர்ந்தான்.

அனையவன் மண்டபம் அணுகி அம்பொனின்
புனைமணி ஆதனம் பொலியத் தோன்றினான்
முனைவரும் மன்னரும் முறையின் ஏறினார்
சனகனும் தன்கிளை தழுவ ஏறினான். (1)

மன்னரும் முனிவரும் வானு ளோர்களும்
அன்னமென் னடையணங் கனைய மாதரும்
துன்னினர் துவன்றலிற் சுடர்கள் சூழ்வரும்
பொன்மலை ஒத்ததப் பொருவில் கூடமே. (2)

எண்தவ முனிவரும் இறைவர் யாவரும்
அண்டரும் பிறரும்புக் கடங்கிற்று ஆதலின்
மண்டபம் வையமும் வானும் வாய்மடுத்து
உண்டவன் மணியணி உதரம் ஒத்ததே. (கடிமணம், 4[illegible]-46)

கலியாண மாளிகையின் அதிசய நிலைமையை இங்கே கண்டு மகிழ்கின்றோம். இங்ஙனம் எல்லாரும் வந்து இனிது நிறைந்தனர். இனி மணமகன் வரவேண்டும்.

மாப்பிள்ளைக்கு இனிய அலங்காரங்களை உரிமையான அரசிளங் குமரர்கள் உவந்து சூழ்ந்து விழைந்து செய்தனர்.

## இராமனது திருமணக்கோலம்.

ஒரு பெரிய சக்கரவர்த்தித் திருமகன் மணமகனாக எழும் பொழுது அவன் மேனியில் அரிய மணி யணிகளும், இனிய மலர் மாலைகளும், உயரிய பொன்னுடைகளும் ஒளி செய்து மிளிரும் என இயல்பாக எதிர்பார்க்கிறோம். அந்த அற்புதக் கோலங்கள் கவியின் கற்பனைகளோடு கலந்து விற்பன நலங்களை விளைத்து விளங்குகின்றன.

கங்கை முதலிய புனித நதிகளிலிருந்து கொண்டு வந்திருந்த தீர்த்தங்களால் முதலில் மங்கல முழுக்கு நிகழ்ந்தது. அதன் பின் சிறந்த பட்டாடைகள் கட்டினர். பரிமளம் கமழ்கின்ற சந்தன களபங்கள் பூசினர். மலர்மாலைகள் சூடினர். மணி யணிகள் புனைந்தனர். அரச மரபுக்குரிய முறைமைகள் யாவும் முறையே புரிந்தனர். பேரழகனை அக்குல மகனை அலங்கரித்த சீர்மையும் சிறப்பும் தலைமைக் காட்சிகளாய்த் தழைத்து நின்றன. அந்நிலைகளில் சிலவற்றை அயலே வரும் கவிகளில் காண்போம்.

சிகையில் மாலை சூட்டியது

மங்கல முழுநிலா மலர்ந்த திங்களைப்
பொங்கிருங் கருங்கடல் பூத்த தாமெனச்
செங்கிடைச் சிகழிகைச் செம்பொன் மாலையும்
தொங்கலும் துயல்வரச் சுழியம் சூடியே. (1)

சந்தனம் பூசியது

அழிவரு தவத்திேைடு அறத்தை ஆக்குவான்
ஒழிவருங் கருணைஓர் உருவுகொண்டென
எழுதரு வடிவுகொண்டு இருண்ட மேகத்தைத்
தழுவிய நிலவெனக் கலவை சாத்தியே. (2)

காதில் குழைகள் அணிந்தது

ஏதமில் இருகுழை இரவு நன்பகல்
காதல்கண்டு உணர்ந்தன கதிரும் திங்களும்
சீதைதன் கருத்தினைச் செவியின் உள்ளுறத்
தூதுசென் றுரைப்பன போன்று தோன்றவே. (3)

### நெற்றிப் பட்டம் இட்டது

கார்விடக் கறையுடைக் கணிச்சி வானவன்
வார்சடைப் புடையினோர் மதிமி லைச்சத்தான்
சூர்சுடர்க் குலமெலாம் சூடி னானென
வீரபட் டத்தொடு திலகம் மின்னவே. (4)

### முத்துமாலை அணிந்தது

சக்கரத் தயல்வருஞ் சங்கம் ஆமென
மிக்கணி கழுத்தணி தரள வெண்கொடி
மொய்க்குமென குழலினாள் முறுவல் உள்ளுறப்
புக்கன நிறைந்துமெய் பொடித்த போன்றவே. (5)

### வாகுவலயம் வைத்தது

பந்திசெய் வயிரங்கள் பொறியிற் பாடுற
அந்தமில் சுடர்மணி அழலில் தோன்றலால்
சுந்தரத் தோளணி வலயம் தொல்லைநாள்
மந்தரம் சுற்றிய அரவை மானுமே. (6)

### கடகம் பூட்டியது

மாண்டபொன் மணியணி வலயம் வந்தெதிர்
வேண்டினர்க்கு உதவுவான் விரும்பிக் கற்பகம்
ஈண்டுதன் கொம்பிடை ஈன்ற தாமெனக்
காண்டகு தடக்கையில் கடகம் மின்னவே. (7)

### வெண்பட்டு உடுத்தியது

மண்ணுறு சுடர்மணி வயங்கித் தோன்றிய
கண்ணுறு கருங்கடல் அதனைக் கைவளர்
தண்ணிறப் பாற்கடல் தழீஇய தாமென
வெண்ணிறப் பட்டொளி விளங்கச் சாத்தியே. (8)

### உடைவாள் கட்டியது

சலம்வரு தரளமும் தயங்கு நீலமும்
அலம்வரு நிழலுமிழ் அம்பொற் கச்சினால்
குலம்வரு கனகவான் குன்றை நின்றுடன்
வலம்வரு கதிரென வாளும் வீக்கியே. (9)

### வீரக் கழல் வீக்கியது

இனிப்பரந் துலகினை அளப்பது எங்கெனத்
தனித்தனித் தடுப்பன போலும் சால்பின
நுனிப்பரு நுண்வினைச் சிலம்பு நோன்கழல்
பனிப்பருந் தாமரைப் பாதம் பற்றவே. (10)

இன்னணம் ஒளிர்தர இமைய வர்க்கெலாம்
தன்னையே அனையதோர் கோலம் தாங்கினன்
பன்னக மணிவிளக் கழலும் பாயலுள்
அன்னவர் தவத்தினல் அனந்தல் நீங்கினன். (11)

முப்பரம் பொருளிற்குள் முதலை மூலத்தை
இப்பரம் துடைத்தவர் எய்தும் இன்பத்தை
அப்பனை அப்பினுள் அமிர்தம் தன்னையே
ஒப்பனை ஒப்பனை உரைக்க ஒண்ணுமோ? (12)

இந்தப் பன்னிரண்டு பாடல்களையும் கண்ணூன்றிப் படித்து நோக்கின் உருவின் கோலங்கள் இனிது உணரலாம். அலங்கார வகைகளைக் குறித்து வருங்கால் மணமகனுடைய திவ்விய மகிமைகள் செவ்விதா விளக்கப்பட்டுத் தெய்வமணம் கமழ்ந்துள்ளன.

கற்பனைகள் யாவும் அற்புத நிலையில் விளைந்திருக்கின்றன.

1. நல்ல பிச்சி மாலையை மயிர் முடியில் சூட்டினர். அக் காட்சி, கருங்கடல் வெள்ளிய திங்களைப் பூத்ததுபோல் விளங்கி இருந்தது. கரிய கடல் என்றதனல் அக்கொண்டையின் நிறமும் பெருமையும் அறிய நின்றன. தலைமயிரை முதலில் குறித்தது அதன் நிலைமை கருதி. உச்சி முதல் உள்ளங்கால் வரையும் வருணிக்கத் தொடங்கினர். கருத்துக்கள் எல்லாம் உச்ச நிலையில் உருக்கொண்டு உணர்வு சுரந்து வந்துள்ளன.

காவிய நாயகனுடைய வடிவும் வண்ணமும் எழிலும் இயலும் கவியினுடைய உள்ளத்தைப் பரவசப்படுத்தி மிளிர்கின்றன.

2. தருமத்தைப் பரிபாலிக்கும் பொருட்டு கருணையே ஓர் உருவுகொண்டு வந்ததுபோல் இராமன் அவதரித்திருக்கின்றான். மனித உருவில் அப்புனிதன் மருவியிருத்தற்கு உரிய காரணத்தை இடங்கள்தோறும் கவி இனிமை கனிய உணர்த்தி வருகிறார். அறமும் அருளும் பெருகி ஆன்மகோடிகள் யாண்டும் மேன்மையடையவே பரம்பொருள் ஈண்டு இவ்வுருவில் ஒளி செய்துள்ளது என அளி செய்து மகிழ்கின்றார். உருவ நலனைக் கருதுந்தோறும் உள்ளம் உருகி மொழிகின்றார். உணர்வு கனிந்து உள்ளன்பு சுரந்து வருதலால் உரைகள் எங்கணும் பரம இன்பம் பெருகி எழுகின்றன. அலங்கார வசனங்கள் கவியின் உளம் காண ஒளிர்கின்றன. புயல் உருவகம் இயல் உரிமையாய் வருகின்றது.

"எழுதரு வடிவுகொண்டு இருண்ட மேகத்தைத்
தழுவிய நிலவெனக் கலவை சாத்தியே"

பசுமை சோதி வீசுகின்ற அழகிய மார்பிலே சந்தனம் பூசியதை இங்ஙனம் பேசினார். மொழிகளில் மிளிர்கின்ற அழகு இனிமைகள் உணர்வின் சுவைகளாய் ஒழுகி ஓடுகின்றன.

3. அவயவங்களின் அணி அமைதிகள் உவகை நிலையங்களாய் ஒளிவிடுகின்றன. செவிகளில் வயிரக் கடுக்கன்கள் அணிந்தனர். அந்த அழகிய குழைகள் இரண்டும் சந்திரசூரியர்கள்போல் சுந்தர சோதிகளாய்த் துலங்கி மிளிர்ந்தன. காதுகள் அருகே கவ்வித் திகழ்ந்த அவை, சீதையின் காதல் நிலையை இராமனிடம் இரகசியமாய் மெல்லச்சொல்ல வந்தனபோல் புல்லிப்பொலிந்தன.

"ஏதமில் இருகுழை இரவு நன்பகல்
காதல்கண்டு உணர்ந்தன கதிரும் திங்களும்"

ஒளிமிகுந்த அணிகளை நட்சத்திரங்களுக்கு உவமை கூறுவர். இங்கே கதிர் மதி என்றமையால் அக்காதணிகள் அதிசய ஒளியுடையன என்பது தெளிவாம்.

பகலிலும் இரவிலும் உலகிலுள்ள உயிர்களின் மனநிலைகளை உள்ளபடி நன்கு தெரிய வல்லவர் அக்காலங்களுக்குரிய கதிரவனும் சந்திரனுமே யாவார். அந்த இருவரும் செவியருகே வந்து, "இராமா! உன்பால் சீதை பேரன்புடையவள். எப்பொழுதும் உன்னையே தியானித்துக்கொண்டிருக்கிறாள். ஒரு கணமும் மறந்தறியாள். அவளுடைய உள்ளமும் உயிரும் உன் மயமாகவே உருகியுள்ளன. உழுவலன்புடைய அப்புனிதவதியை நீ உவந்து கைக்கொண்டு அருளவேண்டும்" என உரிமையுடன் உரைப்பதுபோல் குழைகள் தழுவி நின்றன என்பதாம்.

4. சிவபெருமான் ஒரு பிறைச் சந்திரனைத் தரித்துள்ளான்; நான் பல சுடர்களைச் சூடியுள்ளேன் என்று சொல்லுவதுபோல் வீரபட்டம் இராமனது நெற்றியில் விளங்கி நின்றது.

இன்னவாறே ஒவ்வொரு அணிகலனும் கவியின் கற்பனையோடு கலந்து தனித்தனியே தலைமை நிலைமையில் நிலவியுள்ளது. எல்லாவற்றையும் நுனித்து நோக்கி உருவநலனை உணர்ந்துகொள்க.

பல அலங்காரங்களையும் நலமுறச் சொல்லிவந்து முடிவில் அந்த அற்புதனுடைய அழகமைதி செப்புதற்கு அரிது என்று முடித்திருக்கிறார்.

" இப்பரம் துடைத்தவர் எய்தும் இன்பத்தை "

இராமனைக் கவி எப்படி எண்ணியிருக்கிறார்? என்பது இதில் தெளிவாகின்றது. இந்த உலக பாசத்தை அறவே துறந்தவர் அடைந்து மகிழ்கின்ற பரமானந்த நிலையன் என அவனது இயல் உரிமையான பேரின்ப நிலையை விளக்கியருளினார்.

அப்பனை என்றது எல்லா உயிர்களுக்கும் தந்தையாயுள்ளவனை என்றவாறு. சொந்த உரிமை இங்கே தொனித்து நின்றது.

அப்பினுள் அமிர்தம் தன்னையே ஒப்பனை என்றது இன்ப சொரூபத்தை. உணர்வின் சுவையாய், உயிர்க்கு உயிராய், ஆனந்த மயமாயுள்ளவன் என்பதாம். அப்பு=நீர். இங்கே பாற்கடலைக் குறித்து நின்றது. அமிழ்தினைச் சுவை செய்தது போல் அமிழ்த மயமான இராமனை அலங்காரம் செய்தார். ஒப்பனை=அணிகளால் அலங்கரிப்பது. அப்பனை; அமிழ்தனை; தன்னையே ஒப்பனை எனவும் கொள்ளலாம்.

அமிழ்தம் ஒப்பவனை ஒப்பனை செய்தார் என்றது அந்தப் பணியின் பயனின்மை உணரவந்தது. தனக்குத்தானே ஒப்பானவனை வேறொன்றால் ஒப்பனை செய்வது வீண் என்பதாம்.

தேக சவுந்தரியத்தாலும் குண இனிமையாலும் எண்ணுந்தோறும் இன்ப மயமான புண்ணிய மூர்த்தியை மண்ணியல் முறைப்படி மாப்பிள்ளைக்கு உரியமணக்கோலம்பண்ணியருளினார்.

அலங்காரம் ஆனபின் நான்கு குதிரைகள் பூட்டிய தேரில் இராமன் ஏறினான். பரதன் சாரதி யாயினான்; இலக்குவன் மெய்க் காவலனாய்ப் பின்புறம் நின்றான். சத்துருக்கன் கவரி வீசினான். தம்பியர் மூவரும் அன்புரிமையுடன் அருகு நின்று வர நம்பியின் தேர் நடந்து வந்தது.

அதிசய அலங்காரங்களோடு இப்பேரழகன் இரதத்தில் எழுந்தருளி வரும்பொழுது கண்டவரனைவரும் கரை காணாத ஆனந்தமுடையாராய்க் கைதொழுது நின்றனர். நோக்கிய கண்

இமையாமல் யாண்டும் விழைந்து நோக்கி மனிதர் வியந்து நின்ற நிலை இப்புனிதனது விழுமிய நிலையை விளக்கி நின்றது.

அமைவரு மேனியான் அழகின் ஆயதோ?
கமையுறு மனத்தினால் கருத வந்ததோ?
சமைவுற அறிந்திலம் தக்கது ஆகுக;
இமையவர் ஆயினார் இங்குளாருமே. (கடிமணம், 74)

திருமணக் கோலத்துடன் இராமன் வந்தபொழுது இடையே கண்டவர் நிலையைக் கவி இவ்வாறு நமக்குக் காட்டியிருக்கிறார்.

அமைவு அரு மேனியான் என்றது செவ்விய தேக சவுந்தரியத்தின் திவ்விய நிலைமை கருதி வந்தது. யாருக்கும் அமையாத அற்புத வடிவம் உடையவன் என்றபடி.

சாமளமான அந்தக் கோமளத் திருமேனியின் எழிலை நோக்கிய வியப்பினாலோ, அல்லது அந்தத் தரும மூர்த்தியை உரிமையோடு கண்ட புண்ணியப் பயனாலோ கண் எதிர் நின்ற மண்ணவர் அனைவரும் விண்ணவராய் விளங்கினர்.

கண்ணை இமையால் இருக்கும் இயல்பு தேவர்களுக்கு இயல்பாக அமைந்துள்ளது. அதனால் இமையவர் என்று ஒரு பெயர் ஆதிமுதல் அவர்க்கு அமைய வந்தது. அந்த அரிய பேர்க்கு உரிய நீர்மையை இன்று மிதிலை வாசிகள் அடைந்து கொண்டனர். இராம தரிசனத்தால் மனிதர் புனிதராய்த் தெய்வ பதவியை எய்தித் திவ்விய மகிமையை அடைவர் என்பது குறிப்பு.

விழித்த கண் இமையாமல் விழைந்து நோக்கி மக்கள் வியந்து போற்றச் சக்கரவர்த்தி மகன் தக்க சீருடன் தேரில் சென்றான்.

பேரழகனான அவனது நீர்மையையும் சீர்மையையும் நினைந்து புகழ்ந்து தேவர்கள் அங்கே ஆனந்தக் கூத்தாடினார். இங்கே மலர்களையும் வாசனைப்பொடிகளையும், பொற்காசுகளையும் வாரித் தூவி யாவரும் பேராவலோடு வாழ்த்திப் போற்றினர்.

விண்ணவர் விழைந்தது.

வரம்பறும் உலகினை வலிந்து மாய்வின்றித்
திரம்பயில் அரக்கர்தம் வருக்கம் தேய்வின்று
நிரம்பிய தெனக்கொடு நிறைந்த தேவரும்
அரம்பையர் குழாத்தொடும் ஆடல் மேயினார். (1)

மண்ணவர் மகிழ்ந்தது.

சொரிந்தனர் மலர் மழை; சுண்ணம் தூவினர்;
விரிந்தொளிர் காசு பொன் தூசு வீசினர்;
பரிந்தனர் அழகினைப் பருகி னர்கொலாம்
தெரிந்திலம் திருநகர் மகளிர் செய்கையே. (2)

மகளிர் மயங்கியது.-

வள்ளலை நோக்கிய மகளிர் மேனியின்
எள்ளரும் பூண்எலாம் இரிய நிற்கின்றார்
உள்ளன யாவையும் உதவிப் பூண்டவும்
கொள்ளையிற் கொள்கெனக் கொடுக்கின்றாரினே. (3)

(கடிமணம், 75 - 77)

இராமன் திருமணம் புரிய வருவதைக் கண்ட தேவர்கள் அரக்கர் வருக்கத்திற்கு இன்று அழிவு நேர்ந்தது என்று அக மிக மகிழ்ந்தனர். இக் குமரனது சரித நிகழ்ச்சியில் அமரர் மகிழ்ச்சியைப் பெரும்பாலும் இவ்வாறே குறித்து வருதலால் அவரது நிலைமை அறிய நின்றது. வந்துள்ளவனது காரிய நோக்கையும் வீரிய விளைவையும் விநயமாக நினைவுறுத்தி வருகின்றார்.

மகளிருடைய மையல் நிலையால் மணமகனது பேரழகு ஓரளவு உணர நின்றது. பார்த்த மங்கையர் எல்லாரும் ஆர்த்தி மீதூர்ந்து உள்ளம் உருகி உணர் வழிந்து நின்றனர். கண் கொள்ளாக் கட்டழகன் ஆதலால் காதலில் மூழ்கிக் கருத்துருகலாயினர்.

எள்ளரும் பூண் எலாம் இரிய நிற்கின்றார்

தாம் அணிந்திருந்த அரிய இரத்தினாபரணங்களெல்லாம் இரியல் போக வறியராகி மறுகி நின்றனர். இரிதல் = கழன்று விழுதல். கடுங் காமம் நெடி தோங்கிய பொழுது உடலில் நிகழுகின்ற மெய்ப்பாடுகளை இஃது உணர்த்தி நின்றது.

"உள்ளன யாவையும் உதவிப், பூண்டவும்
கொள்ளையில் கொள்க எனக் கொடுக்கின்ற"

வள்ளல்களைப் போலவே மங்கையர் எல்லாரும் இவ் வள்ளல் எதிரே எல்லாவற்றையும் உதிர்த்து ஏங்கி நின்றார். அகத்தே நிலைத்திருந்த நாணம் மடம் அச்சங்களும் காணாது போயின. புறத்தே பூண்டிருந்த இழைகளும் குழைகளும் நழுவி இடையே ஒழிந்தன.

அந்த ஆணழகனைக் காணவே நாணுடை நங்கையர் யாவரும் வேணவாவுடையராய் வெய்துயிர்த்துப் பரவசராகிப் பரிந்து மயங்கினர். தம் காதை நாயகனது அதிசய எழிலை வெளியறிய விளக்குதற்கு மங்கையர் பலரையும் கவி இங்ஙனம் பரிசு குலைத்து வருகின்றார்.

அரண்மனையிலிருந்து கலியாண மண்டபம் வரவே அரசிளங் குமரர்கள் பலரும் மணமகனை எதிர் கொண்டு சூழ்ந்தார்.

எஞ்சலில் உலகத்துள்ள எறிபடை அரச வெள்ளம்
குஞ்சரக் குழாத்திற் சுற்றக் கொற்றவன் இருந்த கூடம்
வெஞ்சினத் தனுவலானும் மேருமால் வரையில் சேரும்
செஞ்சுடர்க் கடவுள் என்னத் தேரிடைச் சென்று சேர்ந்தான். (1)

இரதம் ஆண்டு இழிந்த பின்னர் இரு மருங்கு இரண்டு கையும்
பரதனும் இளைய கோவும் பரிந்தனர் ஏந்தப் பைந்தார்
வரதனும் எய்தி மைதீர் மாதவர்த் தொழுது நீதி
விரதமெய்த் தாதை பாதம் வணங்கிமா டிருந்த வேலை. (2)

இராமன் இரதத்தை விட்டு இறங்கிக் கலியாண மண்டபத்துள் வந்திருந்த காட்சியை இங்கே நாம் கண்குளிரக் கண்டு மகிழ்கின்றோம்.

மேருமால் வரையில் சேரும் செஞ்சுடர்க்கடவுள்

என்னும் உருவகம் அந்த மகா மண்டபத்தின் பெருமித நிலையையும் மணமகனது அரிய மகிமையையும் கருதி யுணர வந்தது.

தந்தை அருகே தம்பியர் புடைசூழத் தலைமகன் அமர்ந்திருந்தான். மாப்பிள்ளை இவ்வாறு வந்து சேர்ந்த பின் மணமகளைக் கொண்டுவருகின்றார்.

## மணப் பெண் வருதல்.

பெண்ணின் வரவை எதிர் நோக்கி எல்லாரும் பேராவலோடு வழிமேல் விழி வைத்துக் களிமிகுந்திருந்தார். அக் குலமகள் வருகின்ற நிலைமையைக் கலைமணம் கமழக் கவி வரைந்து காட்டியுள்ளார். அயலே வரும் கவிப் படத்தைக் கண்ணூன்றிக் காண்க.

சிலையுகடக் கயல்வாள் திங்கள் ஏந்தியோர் செம்பொற் கொம்பர்
முலையிடை முகிழ்ப்பத் தேர்மேல் முன்திசை முளைத்தது அன்னாள்
அலைகடல் பிறந்து பின்னை அவனியில் தோன்றி மீள
மலையிடை உதிக்கின்றாள் போல் மண்டபம் அதனில் வந்தாள்.

(கடிமணப் படலம், 80)

பெண்வந்த நிலைமை இவ்வண்ணம் எண் வந்துள்ளது. செம்பொற் கொம்பர் என்றது சிவந்த திருமேனியைக் குறித்து நின்றது. திங்கள், கயல், சிலை என்பன முறையே முகம் கண்கள் புருவங்களுக்கு உவமைகள் ஆயின. சிலை=வில்.

முன்பு கடலில் பிறந்த திருமகள் பின்பு சீதையாய்ப் பூமியில் பிறந்தாள்; இது பொழுது அவள் ஓர் மலையில் தோன்றுவது போல மண்டபத்துள் வந்தாள். கலியாண மாளிகை விரிந்து பரந்து பேரிடங் கொண்டுள்ளமையால் அதனை மேருமலை என்றார்.

"முன்திசை முளைத்தது அன்னாள்"

கிழக்குத் திக்கில் ஒரு பாலசூரியன் உதயமாயது போல் மாளிகையின் கீழ வாசல் வழியே சிவந்த சோதி வீசிச் சீதை வந்தாள். அந்த உருவப்பொலிவின் அருமை பெருமைகளை உருவகமான அலங்கார மொழிகளால் நலங்காண வைத்தார்.

கோவிந்தன் என்னும் செம்பொற் குன்றின்மேல் பிறந்து கூர்வேல்
சீவகன் என்னும் செந்நீர்ப் பவளமா கடலுட் பாய்வான்
பூவுந்தி அமுத யாறு பூங்கொடி நுடங்கப் போந்து
தாவிரி வேள்விச் சாலை மடுவினுள் தாழ்ந்த தன்றே. (சிந்தாமணி, 2460)

கோவிந்தராசன் மகளாகிய இலக்கணை என்பவள் சீவகனுக்கு மனைவியாய் மணவறைக்கு வந்ததைக் கூறிய படியிது.

செம்பொற் கொம்பு கடலில்பிறந்து, உலகில் எழுந்து, மலையில் உதித்தது போல் மண மண்டபம் வந்தாள் எனச் சனகியைக் குறித்தது இதனோடு நினைவு கூரத்தக்கது. உவைகளை நுணுகிஅறிக.

மணமகள் உள்ளே வரவே தேவர்கள் ஆகாயத்தே ஆவலோடு கூடி ஆர்வ மொழிகள் கூறி ஆனந்தம் கொண்டாடினர்.

பாற் கடலில் தோன்றிய இலக்குமியைத் திருமால் அன்று மணமுடித்ததைக் காட்டிலும் இன்று இத் திருமணம் பேரழகுடையது என்று அவர் பேசி மகிழ்ந்தார்.

அதிசயமான இந்தக்கலியாண வைபவத்தைக்காண விழைந்து இந்திரன் முதலிய தலைமைத் தேவர்களும் அந்தரத்தே வந்து குழுமினர். அந்தச் சுந்தரக் காட்சி உவகையில் நிலவியுள்ளது.

இந்திரன் சசியொடும் எய்தினன்; இளம்
சந்திர மௌலியும் தையலாளொடன்
வந்தனன்; மலரயன் வாக்கி னொடன்
அந்தரம் புகுந்தனன் அழகு காணவே. (கடிமணம், 83)

தேவதேவர்கள் இவ்வாறு வந்துள்ளனர். இந்தக் குழுவில் மாலும் திருவும் காணோம். அவருடைய அமிசங்களே மண உருவங்களாய் மருவியுள்ளமையால் அவர்தம் தனியுரிமையை நினைவுறுத்தினர்.

தையலாள் = பார்வதி. வாக்கினள் = சரசுவதி. சசி = அயிராணி. சதிகளோடு கூடியே பதிகள் கலியாணத்திற்கு வர வேண்டும் என்னும் மரபும் மரியாதையும் இவ் வரவில் தெரிய வருகின்றன. இணைப்பும் பிணைப்பும் இனிமையில் மிளிர்கின்றன.

எய்தினன், வந்தனன், புகுந்தனன், என்றமையால் தனித் தனியே தங்களுடைய நிலைகளிலிருந்து தலைமையோடு அவர் வந்துள்ளமை புலனும்.

அழகுகாணவே என்றது அந்தரத்தே வந்துள்ளவரது விழைவு காண வந்தது. அழைப்பின் மீது வந்தவர் அல்லர்; தாமாகவே அடைந்துள்ளனர். சதிபதிகள் இருவரும் சரிநிகர் சமமாய் அதிசய அழகில் தலை சிறந்துள்ளமையால் தலைமைத் தேவர்களே அந் நிலைமையைப் பார்க்க நேரே வந்தனர்.

மண்ணவர் மணம் காண விண்ணவர் வேந்தனும், வேத முதல்வனும், தேவதேவனும் விழைந்து புகுந்தது வியந்து காண வுரியது. அந்தரம் புகுந்தவரது அதிசய வரவால், இங்கே நிகழுகின்ற மணத்தின் தகுதியும் மணமக்களுடைய மகிமையும் நன்கு புலனும்.

மனித உருவில் வந்துள்ள இப் புனித நிலையங்கள் தனி அழகில் தழைத்துள்ளன. ஆண்மையுலகமும் பெண்மையுலகமும் மேன்மை பெறும்படி பலவகை நலங்களும் நிறைந்து நிலவியுள்ள இக்குலமக்கள் திருமணம் தருமமணமாய்க் கனிந்து எங்கும் பெரு மகிழ்ச்சியை விளைத்துப் பேரதிசயமாய்த் திகழ்ந்தது.

அமரர் அதிபதிகளே தமது சதிகளுடன் இத் தம்பதிகளின் அழகுகாண விழைந்து புகுந்தமையால், இவரது எழில் நலம் எவராலும் அளவிடலரியது என்பதை அறியலாகும்.

குறித்த நாழிகை வரவே கலியாணச் சடங்குகள் பெரு மகிழ்ச்சியுடன் நிகழ்ந்தன. வேதங்களை நன்கு கரை கண்ட வேதி

யரும் மாதவரும் மறைமுறைப்படி நிரையே சூழ்ந்து மங்கல அங்கி வளர்த்து ஆகுதி முதலியன ஆர்வமொடு புரிந்தனர்.

மங்கல முழவுகள் எங்கும் பொங்கி முழங்கின. வசிட்டரே புரோகிதராய் அமர்ந்து மந்திரங்கள் செபித்து மரபுமுறை தழுவி மணவினை செய்தார். சுபநிலையங்களாய் யாவும் சொலித்து நின்றன.

அதிசய அழகுடன் அமைந்திருந்த மணத்தவிசில் இராமனும் சீதையும் கிழக்கு முகமாய் எழுந்தருளியிருந்தனர். இந்திர திசை நோக்கி அச் சுந்தர உருவங்கள் அமர்ந்த பொழுது தேவ துந்துபிகள் முழங்கின. அந்த அற்புதக் காட்சியை நோக்கி ஆருயிர்கள் யாவும் பேருவகை கூர்ந்தன.

மணவறையில் மாப்பிள்ளையும் பெண்ணும் மருவியிருந்த அருமை அமைதிகளைக் குறித்துக் கவி உரைத்துள்ள உவமை நயங்கள் அயலே வருவன.

மணமக்கள் அமர்ந்தது.

மன்றலின் வந்து மணத்தவி சேறி
வென்றி நெடுந்தகை வீரனும் ஆர்வத்து
இன்துணை அன்னமும் எய்தி இருந்தார்
ஒன்றிய போகமும் யோகமும் ஒத்தார். (1)

சனகன் தாரை வார்த்தது.

கோமகன் முன்சனகன்குளிர் நன்னீர்
பூமக ளும்பொரு ளும்என நீயென்
மாமகள் தன்னொடு மன்னுதி என்னைத்
தாமரை அன்ன தடக்கையின் ஈந்தான். (2)

பூமாரி பொழிந்தது.

வானவர் பூமழை மன்னவர் பொற்பூ
ஏனையர் தூவும் இலங்கொளி முத்தம்
தானகு நாள்மலர் என்றிவை தம்மால்
மீனகு வானின் விளங்கிய திப்பார். (3)

இராமன் சீதை கையைப் பிடித்தது.

வெய்ய கனற்றலை வீரனும் அந்நாள்
மையறு மந்திர முற்றும் வழங்கா
நெய்யமை ஆகுதி யாவையும் நேர்ந்தான்
தையல் தளிர்க்கை தடக்கை பிடித்தான். (4)

தீவலம் வந்தது.

இடம்படு தோளவன் ஒடியை வேள்வி
தொடங்கிய வெங்கனல் சூழ்வரு போதில்
மடம்படு சிந்தையள் மாறு பிறப்பில்
உடம்புயி ரைத்தொடர் கின்றதை ஒத்தாள். (5)

அருந்ததி கண்டது.

வலங்கொடு தீயை வணங்கினர் வந்து
பொலம்புரி நூலவர் செய்பொருள் முற்றி
இலங்கொளி அம்மி மிதித்தெதிர் நின்ற
கலங்கலில் கற்பின் அருந்ததி கண்டார். (6)

கலியாணச் சடங்கு முறைகள் இவ்வாறு இடங் கொண்டிருக்கின்றன. இத் திருமண நிகழ்ச்சிகள் தெய்வ மணம் கமழ்ந்து திவ்விய மகிமை வாய்ந்திருத்தலை ஒவ்வொரு நிலையிலும் உணர்ந்து கொள்ளலாம்.

1. தம்பதிகள் இருவரும் மணக் கோலத்துடன் வந்த நிலை தெரிய "மன்றலின் வந்து" என்றார். மன்றல் = கலியாணம். ஊரும் உறவும் கூடிச் சீர் அமைந்திருந்த சபை அறியச் செய்வது என்க. மணத்தவிசு = மணமக்கள் ஒரு முகமாய் இனிதமர்ந்திருத்தற்குத் தகுதியாகத் தனி அமைந்துள்ள ஆசனம்.

வென்றி நெடுந்தகை வீரன் என மணமகனை இங்கே விதந்து குறித்தது, அவன் வந்திருக்கும் வினை விளைவுகளையெல்லாம் சிந்தனை செய்து கொள்ள. போரில் எதிர்த்தவரைப் பொருது தொலைத்து அரிதில் அடையத்தக்க வெற்றித் திருவைப் பிறவியிலேயே இயல்பாகப் பெற்று வந்துள்ள பெரியான் என்க. அசகாய சூரனாய் யாண்டும் என்றும் தோலா வென்றியுடன் இக் கொற்றக் குரிசில் குலவியுள்ளமை உலகம் அறிய வந்தது. பகைவரிடத்தும் நேர்மையுடன் நடந்து சீர்மை புரியும் மேன்மையாளன் ஆதலால் நெடுந்தகை என அப்பெருந்தகைமை தெரிய உரைத்தார்.

ஆர்வத்து இன் துணை அன்னம் என்றது பெண்ணின் பேரன்பு நிலையும், நீர்மையும் கருதி வந்தது. மேற்குறித்த வீர நாயகனுக்கு ஆரா அமுதமாய் எவ்வழியும் இன்பம் சுரந்து யாண்டும் இனிய துணைவியாய் மருவியிருக்கும் உரிமை குறித்த படியிது.

புருடனுக்கு வீரமும், பெண்ணுக்கு ஆர்வமும் எண்ணுற வைத்தது, இருபாலும் பெரும்பாலும் இன்னவகையில் மன்னியிருக்கவேண்டும் என்னும் நன்னயம் உணர.

ஆண்மையின் மேன்மையும், பெண்மையின் பான்மையும் பெருமித நிலையில் மருவியுள்ள அருமைச் சோடிகள் ஒருமையுடன் கூடிய இக்கூட்டம் இருமையும் தேட்டமாய் எவ்வுயிர்க்கும் உரிமைகாட்டி ஒளி புரிந்துள்ளது.

உலக நிலையில் வெளிப்படையாக வீர ஆர்வங்களைச் சுட்டி மணமக்களின் தன்மையை விளக்கிய கவி இறுதியில் அவர்தம் அரிய தகைமையைத் தத்துவ நிலையில் உய்த்துணர வுரைத்தார்.

ஒன்றிய போகமும் யோகமும் ஒத்தார்.

இந்த ஒப்புமை நுட்ப நோக்கில் நுனித்துணர வுரியது.

வீரனும் அன்னமும் போகமும் யோகமும் என நிரலே காண்க. உருவக வாக்கியங்கள் பொருள்களின் அருமைநோக்கி வருகின்றன. போகம், இராமனுக்கும்; யோகம், சீதைக்கும் ஒப்பாம். ஐம்புலன்களும் ஆர நுகரும் இன்ப அனுபவங்களைப் போகம் என்பர். போகம் புண்ணியப் பயனால் அடைவது. அந்த அடைவுக் குரிய தகுதி யோகம் ஆம். அரிய போகங்களை இனிது அனுபவிப்பவரை யோகசாலி என்று சொல்லுகின்றோம். யோகம் = அதிட்டம். போகமும் யோகமும் இன்பமும் நுகர்வுமாய் இசைந்திருத்தலால் அவற்றின் உறவும் உரிமையும் உணரலாகும்.

பாலை அன்னம் பருகுவதுபோல் அமிழ்தமயமான இராமனை அன்னமனைய சானகி இனிது மருவிநுகர ஈண்டுத் தனி உரிமை எய்தி வந்துள்ள தகைமை யுணரவந்தது.

பேரின்ப நிலையமான பெரிய போகத்தை அரிய தவயோகிகள் அடைந்து மகிழ்வதுபோல் இராமனைச் சீதை உரிமையாகப் பெற்றிருக்கின்றாள் என்பதாம்.

இதுவரையும் குமரிருந்து கன்னிமை காத்து அரிய நோன்புகள் புரிந்தமைக்கு உரிய பயனாக இனிய கேள்வனை அந்நங்கை இங்கே மணந்துகொண்டுள்ளமையை வியந்து கூறியபடியிது.

இந்த நாதன் மெய்யைத் தீண்டுதற்குச் "சீதை எத்தவம் செய்தனளோ?" என முன்னம் மாதர் புகழ்ந்து ஆதரவோடு உவந்து கூறியவாறு போதிய பயனை அடைந்துகொண்டாள்.

அவளது யோகத்தையும் போகத்தையும் ஏகமாக ஈண்டு எண்ணி மகிழ்கின்றோம். ஈண்டுக்குள்ள வாசிவகையையும் நேசவுரிமையையும் யோசனை செய்து உணர்ந்து கொள்க.

2. இனிய தம்பதிகள் இங்ஙனம் மருவி இருக்கச் சனக மன்னன் எழுந்தான். பொற் கலசத்தை எடுத்தான். தனது அருமை மகள் கையை மருமகன் கையில் வைத்துத் தாரை வார்த்துக் கொடுத்தான். நீரை வார்க்குங்கால் அவன் உரிமை யுடன் மொழிந்த மங்கல மொழிகள் ஆர்வம் கனிந்து வந்தன.

"பூமகளும் பொருளும் என நீ என்
மாமகள் தன்னொடு மன்னுதி"

என மன்னன் மனம் உருகி உரைத்திருத்தலால் அவனது உவகை நிலை உணரலாகும். பூமகள் = இலக்குமி. பொருள் என்றது திருமாலை. பரம்பொருள் என்னும் குறிப்பில் வந்தது.

செங்கண் மாலும் செந்திருவும்போல நீ என் மகளோடு கூடி எல்லா நலங்களுமுடையனாய் இனிய போகங்களை நுகர்ந்து நெடிது வாழவேண்டும் என இராமனை நோக்கி நேரே கூறி நீரை வார்த்தருளினான். மன்னுதல் = நிலைத்து வாழுதல்.

வாழுதி என்னாது மன்னுதி என்றது யாண்டும் நிலையான வாழ்வுடையனாய் நிலைத்து நிலவவேண்டும் என்று கருதி.

என் மாமகள் என்றது அன்புரிமை சுரந்த அருமை வாசகம். ஏதோ பூமியிலிருந்து கண்டெடுத்த பிள்ளை என்று எளிமையாகக் கருதிவிடாதே; எனது அருந்தவத்தால் பிறந்த அரசிளங் குமரியே என உணர்ந்து மதித்து உவந்து கொள்க என்றவாறு.

மா என்றது தலைமைப் புதல்வி என்னும் நிலைமை தெரிய வந்தது. இளைய மகள் ஒருத்தி இருத்தலால் மூத்த மகளை இவ் வாறு குறித்தான். பெருமகிமையுடைய பெரியவள் என்பதோடு உரிய முறைமையையும் உணர்த்தி நின்றது.

"இயம் ஸீதா மம ஸுதா ஸஹதர்ம சரீதவ" (பால, 73-33)

"இந்தச் சீதை என்னுடைய மகள்; தரும காரியங்களுக்கு உனக்குத் துணைபுரிவாள்" எனச் சனகன் இராமனிடம் கூறிய தாக வால்மீகத்தில் வந்துள்ளதும் இங்கே சிந்திக்கத்தக்கது.

தன் மகளும் மருமகனும் உயர்ந்த போகங்களை அனுபவித்துச் சிறந்த கீர்த்தியாளராய் உலகம் போற்ற வாழவேண்டும் என்னும் ஆவலால் சனகன் இவ்வாறு கூறியருளினன்.

பூமகளும் பொருளும் இவ்வுருவங்களில் மாறி வந்துள்ளன; அவ்வுண்மையையும் மன்னன் வாய்மொழி நுண்மையாக உணர்த்தி நின்றது. இருவரையும் பரம உரிமையில் பரவியருளினன்.

திருவை மருவி மால் திருமால் என நிற்றல்போல் சனகியை மருவி இவன் சானகி ராமன் என விளங்கினன்.

தசரதராமன், கோசலைராமன் என இதுவரை பிறப்புரிமையோடு துலங்கியிருந்தாய்; இனிமேல் சீதாராமன் எனச் சிறப்புப் பேரால் சிறந்து விளங்கிச் சீர்புரிந்தருள்வாய்! என்பது நீ என் மாமகளோடு மன்னுதி என்னும் தொனியில் தனியே மன்னியுள்ளது. தன் புதல்வி முதல்வியாய் விளங்க உவந்து நின்றான்.

இந்த மகளை மருவியதனாலேதான் இராமன் புகழ் உலக முழுவதும் பரவி இன்றும் நிலையாய்த் தலைமை எய்தியுள்ளது.

மன்னுலகில் என்றும் மன்னி வாழ்தற்கு இன்னுயிர்த் துணையை இங்கே ஏற்று நின்றான்.

தாமரை அன்ன தடக்கையின் ஈந்தான்.

பூமகளனைய மாமகளைக்கொள்ளுதற்குத் தாமரையே உரியது ஆதலால் அஃது உவமை உருவில் உள்ளே புகுந்தது.

தடக்கை என்றது வலக்கையை. தடம்=பெருமை. செந்தாமரைமலர் போன்றதும், திவ்விய மகிமையுடையதும் என அந்தக் கையினது உருவச்செவ்வியும், உதவியின் அருமையும் உணர வந்தன. சீர்ஏற்றி வந்தது நீர் ஏற்று நின்றது.

யாண்டும் என்றும் எல்லாவற்றையும்கொடுத்தருளுகின்ற கை ஈண்டு மட்டும் இன்று ஓர் பெண்ணை எடுக்க நேர்ந்தது.

ஞானசீலனான சனகன் ஈய மான வீரனான இராமன் ஏற்றான். வண்மைக் கையால் இவ்வள்ளல் ஏற்றது அப்பெண்மைத் திருவின் பெருமையை விளக்கி நின்றது.

இராமன் பெண்கொண்டதைக் கண்டு மண்ணும் விண்ணும் கண்கொண்டதுபோல் களிப்பு மீக்கொண்டன.

3. அந்த உள்ளக்களிப்பால் இந்தத் தம்பதிகள் மீது விண்ணவர் பூமாரி பொழிந்தார். மண்ணவர் பொன்மாரி சொரிந்தார்.

மீன் நகு வானின் விளங்கியது இப்பார் என்றது மங்கலக்காட்சியை விளக்கிநின்றது. கற்பக முதலிய அற்புதத் தருக்களிலிருந்து அமரர் மலர்களை வாரிச் சொரிந்தமையாலும், இங்கே பொன்பூக்களையும் முத்துக்களையும் வாரி யிறைத்தமையாலும் அவை எங்கும் நட்சத்திரங்கள்போல் சிதறிக்கிடந்தன ஆதலால் "இப்பார் மீன்நகு வானின் விளங்கியது" என்றார்.

இந்தத் திருமணத்தில் மக்களும் தேவரும் ஒக்க நிறைந்து உவந்து கொண்டாடியுள்ள உரிமை தெரியவந்தது.

4. அருமறை முறையே ஆகுதியில் ஓமம் செய்தபின் சீதை கையை இராமன் கையுடன் இணைத்துவைத்துத் திருமணச் சடங்கை முடித்தார்.

"தையல் தளிர்க்கை தடக்கை பிடித்தான்"

இந்தப் பிடிப்பு வையம் உய்ய வாய்த்தது. இரண்டு கைகளுடைய மென்மை மேன்மைகளை அடைகள் விளக்கி நின்றன.

இந்த வையகத்தில் நீ தான் எனது வாழ்க்கைக்கு உரிய உறுதித்துணை; என்னை உன்னிடம் ஒப்பித்துள்ளேன்; உன்னை நான்யாண்டும் கைவிடேன் என்று ஆணைகூறியபடியாய் மணமகள் கையை மணமகன் பிடிக்கின்றான். இருவர் கையும் ஒருங்கே இணைத்துப் பிணைக்கப்படுதலால் ஒருவரை ஒருவர் எவ்வழியும் கைவிடாமல் பாதுகாத்துவரும் உரிமையைப் பலரறிய அவர் உரை செய்தபடியாகின்றது. இதனைப் பாணிக் கிரகணம் என்பர். பாணி = கை. கிரகணம் = பிணிப்பு.

5. இங்ஙனம் கைப்பிடித்த இருவரும் மங்கலத் தீ வளர்த்துள்ள ஓம குண்டத்தைச் சுற்றி வந்தார். நாயகன் முன்னும் நாயகி பின்னுமாகத் தொடர்ந்து வந்த அந்த அருமைக் காட்சி அனைவரையும் பரவசப்படுத்தி நின்றது

"மடம்படு சிந்தையள் மாறுபிறப்பில்
உடம்பு உயிரைத் தொடர்கின்றது ஒத்தாள்."

இந்த உவமை நயம் உய்த் துணர்ந்து ஓர்ந்து சிந்திக்கத் தக்கது. உயிர் இராமனுக்கும், உடம்பு சீதைக்கும் ஒப்பாம்-

உயிர் தனியே நின்றால் அஃது அருவமாய்க் கண்ணுக்குத் தெரியாது. உடலை மருவியபொழுதுதான் உருவநிலை அடைந்து உயிர் அரிய செயல்கள் புரியும். இராமன் பிரமச்சாரியாய்த் தனியே இருந்தால், உலகிற்கு இனிய பயன் இன்றி வறிதே போயிருப்பன்; சனகியை மணந்துகொண்டமையினாலேதான் உலகமெல்லாம் உயர்ந்த பயன் அடையும்படி அவன் சிறந்து விளங்கினான். எழில் உருவம்போல் பருவ மங்கையும் தொழில் புரிய அமைந்தது.

உயிர் உடம்பு என்ற உவமக்குறிப்பால் பொருள்களினுடைய உயர்வும் இயல்பும் உறவும் உரிமையும் உணரலாகும்.

உயிர் பெற்ற உடல்போல் இராமனைப் பெற்றுச் சீதை ஒளி பெற்று நின்றாள். அழகிய உடலமைந்த விழுமிய உயிர்போல் மணமகளை இக்குலமகன் உலகம் மகிழ்வுற ஒளிசெய்து நிலவினான். இந்த இணைப்பு யாண்டும் இன்பக் காட்சியாய் இனிமை சுரந்து மன்பதை மாட்சிபெற மருவிவந்துள்ளது.

5. மங்கல அங்கியை வலஞ் சுற்றி வந்தவர் பின்பு அம்மி மிதித்து அருந்ததி கண்டார்.

பெண்ணின் பாதத்தைத் தூக்கி மாப்பிள்ளை அம்மியில் வைப்பதும், ஆகாயத்தே அமைந்துள்ள அருந்ததி என்னும் நட்சத்திரத்தைக் காட்டுவதும் பண்டை வழக்கங்களாய்ப் பரவியுள்ளன. இவற்றிற்குத் தத்துவங்களும் வித்தகமாய்க் கூறிவருகின்றனர்.

அம்மியில் கால் வைப்பது, "கற்புடைமையில் உன் நெஞ்சம் இந்தக் கல்லைப் போல் யாண்டும் கலங்காதிருக்க வேண்டும்; அங்ஙனம் இருப்பின், மன்னுயிரெல்லாம் தொழ அருந்ததி என்னும் அந்த விண்மணி போல நீ விளங்கியிருப்பாய்!" என்று பெண்ணுக்கு நாயகன் ஓர் புண்ணிய போதனை செய்வதாக எண்ணப்படுகின்றது. வழக்கங்கள் யாவும் கண்ணியமகனிந்து வந்துள்ளன.

குளிர்மதி கொண்ட நாகம் கோள்விடுகின்றதேபோல்
தளிர் புரை கோதை மாதர் தாமரை முகத்தைச் சேர்ந்த
ஒளிர்வளைக் கையைச் செல்வன் விடுத்தவள் இடக்கை பற்றி
வளர் எரி வலங்கொண்டாய் பொற் கட்டில்தான் ஏறினானே. (1)

விளங்கொளி விசும்பிற் பூத்த அருந்ததி காட்டி ஆன்பால்
வளங்கொளப் பூத்த கோல மலரடி கழீஇய பின்றை
இளங்கதிர்க் கலத்தின் ஏந்த அயினிகண் டமர்ந்திருந்தான்
துளங்கெயிற் றுழுவை தொல்சீர்த் தோகையோ டிருந்தது ஒத்தான். (2

(சீவக சிந்தாமணி)

சீவகன் இலக்கணையை மணந்த பொழுது நிகழ்ந்த சடங்கு முறைகளைக் குறித்தபடியிது. தளிர்க்கை பிடித்துத், தீயை வலங் கொண்டு, இலங்கொளி அம்மி மிதித்து, அருந்ததி கண்டார் என்பன இக் கவிகளோடு இணைத்து நோக்க வுரியன.

இம்மைக்கும் ஏழேழ் பிறவிக்கும் பற்றுவான்
நம்மை யுடையவன் நாராயணன் நம்பி
செம்மை யுடைய திருக்கையால் தாள்பற்றி
அம்மி மிதிக்கக் கனக்கண்டேன் தோழீ! நான்.

(நாச்சியார் திருமொழி, 6)

நாராயணன் வந்து தன்னை மணந்துகொண்டதாகக் கனக் கண்ட ஆண்டாள் அதனைத் தனது தோழியிடம் கூறியவாறிது. அம்மி மிதித்தலை இதில் குறித்திருத்தல் அறிக.

மணச் சடங்குகள் எல்லாம் இங்ஙனம் நன்கு நிறைவேறிய பின் தன் மனைவியுடன் வந்து இராமன் கோசிகரையும் தந்தையை யும் வணங்கி அதன்பின் வந்து தாயரைத் தொழுதான். தொழுத முறை விநயமிக வுடையது. ஊகம் நிறைந்து உணர்வு நலம் சுரந்து நேய உரிமைகள் நினைந்துகொள்ள வந்தன.

இராமன் தாயரைத் தொழுதது.

கேகயன் மாமகள் கேழ்கிளர் பாதம்
தாயினும் அன்பொடு தாழ்ந்து வணங்கி
ஆயதன் அன்னை அடித்துணை சூடித்
தூய சுமித்திரை தாள்தொழ லோடும். (1)

சீதை வணங்கியது.

அன்னமும் அன்னவர் அம்பொன் மலர்த்தாள்
சென்னி புனைந்தனள் ; சிந்தை உவந்தார்
கன்னி அருந்ததி காரிகை காண
நன்மக னுக்கிவள் நல்லணி என்றார். (2)

மாமியர் மகிழ்ந்தது.

*சங்கவ ளைக்குயி லைத்தழி நின்றார்*
*அங்கண னுக்குரி யாருள ராவார்*
*பெண்கள் இனிப்பிறர் எங்குளர் என்றார்*
*கண்கள் களிப்ப மனங்கள் களிப்பார்.* (3)

மருமகளுக்கு வரிசைகள் செய்தது

*எண்ணில கோடிபொன் எல்லையில் கோடி*
*வண்ண அருங்கல மங்கையர் வெள்ளம்*
*கண்ணகன் நாடொடு காசுயர் தூசும்*
*பெண்ணின் அணங்கனை யாள்பெறு கென்றார்.* (4)

மணமக்கள் பள்ளியறை சேர்ந்தது.

*நூற்கடல் அன்னவர் சொற்கடல் நோக்கி*
*மாற்கடல் அன்ன மனத்தவ ளோடும்*
*காற்கடல் போற்கரு ணைக்கடல் பண்டைப்*
*பாற்கடல் அன்னதோர் பாயல் அணைந்தான்.* (5)

மணம் புரிந்த நாள்.

*பங்குனி உத்தர மான பகற்போது*
*அங்கண் இருக்கினில் ஆயிர நாமச்*
*சிங்கம் மணத்தொழில் செய்த திறத்தால்*
*மங்கல அங்கி வசிட்டன் வகுத்தான்.* (6)

தம்பியர்க்கும் திருமணம் ஆயது.

*வள்ளல் தனக்கிளை யோர்கள் தமக்கும்*
*எள்ளலில் கொற்றவன் எம்பி அளித்த*
*அள்ளல் மலர்த்திரு வன்னவர் தம்மைக்*
*கொள்ளும் எனத்தம ரோடு குறித்தான்.* (7)

*கொய்ந்நிறை தாரன் குசத்துவசப்பேர்*
*நெய்ந்நிறை வேலவன் மங்கையர் நேர்ந்தார்*
*மைந்நிறை கண்ணியர் வானுறை நீரார்*
*மெய்ந்நிறை மூவரை மூவரும் வேட்டார்.* (கடிமணம்) (8)

**திருமணம் இவ்வாறு ஒரு முகமாய் இனிது நிறைவேறியுள்ளது.**

தம்பியரும் மணம் புரிந்தது.

பங்குனி மாதம் உத்தர நாள் முற்பகலில் இராமனுக்கும் **சீதைக்கும் கலியாணம் நடந்தது; முன்னதாகவே பேசியிருந்த**

படி சனகனது இளைய மகளாகிய ஊர்மிளையை இலக்குவனுக்கும், அநத மன்னன் தம்பியாகிய குசத்துவசன் புதல்வியர் இருவருள் மாண்டவியைப் பாதனுக்கும், சுருத கீர்த்தியைச் சத்துருக்கனுக்கும் அன்றே திருமணம் செய்து தந்தனர். நான்கு குமாரர்களும் ஒரே நாளில் பெருமித நிலையில் இனிய மனைவியரைப் பெற்று இன்புறலாயினர்.

இராமன் மணமுடிந்து துணைவியுடன் வந்து தாயரைப் பணிந்துள்ளது ஆய்வினைக்கு உரியது. தன்னைப் பெற்றெடுத்த அருமைத் தாயாகிய கோசலையை முதலில் வணங்கியிருக்கவேண்டும். அவளே சக்கரவர்த்தியின் பட்டத்துத் தேவி. தந்தைக்கு அடுத்தபடியாக அந்தத் தாயே தொழத்தக்கவள். அங்ஙனம் பெற்ற தாயைத் தொழாமல் சிற்றன்னையாகிய கைகேசியின் காலில் விழுந்திருக்கிறான்.

''கேகயன் மாமகள் கேழ்கிளர் பாதம்
தாயினும் அன்பொடு தாழ்ந்து வணங்கி''

என்றது ஆழ்ந்து சிந்திக்கத்தக்கது. பிதிர்வாக்கியபரிபாலனத்தில் தலைசிறந்தவன் ஆதலால் தன் தந்தை மிகவும் பிரியமாக உரிமை புரிந்து கொண்டாடி வருகின்ற கைகேசியை அவனுக்கு உவப்பாகும்படி மரியாதை செய்து தொழுதான் எனின், அது அவ்வளவு சரியாகாது.

## இராமன் பணிந்த நிலை.

தன் தாயின்பால் பேரன்புடையவன்; பெருமகிமையாகப் பேணிவருபவன். அத்தகைய அருமை அன்னையினும் சிறிய அன்னைபால் பிரியமிகக்கொண்டு பணிந்துள்ளான். தாயை முந்துறப் பணிந்தால் சிறியதாய் சிறிது உள்ளம் மாறுபடுவள்; அங்ஙனம் படாவகை பணிவு நிகழ்ந்துள்ளது. உரியதாய் எவ்வழியும் பிரியமாவள் என்னும் தெளிவினுல் இவ்வழி அமைந்தது.

தாயினும் அன்பொடு தாழ்ந்து என்றதனுல் அந்த வணக்கத்தில் மண்டியுள்ள அன்பு நிலை அறிய நின்றது. பண்பு நிறைந்த இப் பணிவு அரிய பயன்பாடுடையதாய் வியன் தெரிய வந்தது.

'' அம்மா! நான் வந்த காரியத்திற்கு உறுதியாக இனிய துணையைச் சேர்த்துக்கொண்டேன்; இனிமேல் நீ தான் கருணை

செய்யவேண்டும். தாயார் தந்தையார் முதலிய எல்லாரும் என்னைப் பந்தத்தில் ஆழ்த்தி முடி மன்னன் ஆக்கித் திருவயோத்தியைவிட்டு ஒரு அடியும் அகலாதபடி முடிவு செய்துவிடுவர். அந்தக் கொடிய விலங்கை உடைத்தெறிந்து என்னைக் கடிது வெளி ஏற்றி என் பிறப்பிற்கு ஓர் சிறப்பான ஒளி ஏற்றியருள்க; உரிய சமயத்தில் அவ் அரிய உதவியை மறவாமல் செய்தருளவேண்டும்'' என விரகுடன் வேண்டியபடியாய் இத்தொழுகை ஈண்டு விளைந்து வந்துள்ளது.

உரியதாயினும் சிறிய தாயைத் தொழுதற்கு அரிய ஒரு பொருள் இவ்வாறு கருத நேர்ந்தது. கொழுநன் தொழுதபடியே சனகியும் குறிப்பறிந்து வணங்கியிருக்கிறாள்.

சீதையைக் கண்டு கோசலை முதலிய மாமியர் மூவரும் பேரானந்தம் கொண்டனர்; நம்பிக்கு இவள் நல்ல துணை; இவளுக்கு இணை யாரும் இல்லை என அவர் சொல்லி மகிழ்ந்துள்ளார்.

கண்கள் களிப்ப மனங்கள் களிப்பார் என்றமையால் மருமகளுடைய எழில் நிலையைக் கண் குளிரக்கண்டு அவர் உள்ளங் களித்துள்ளமை உணரலாகும். அரிய மணியணிகளையும் பெரிய பொன்னுடைகளையும் உயர்ந்த பொருள்களையும் வாரிவழங்கியது மணமகளுக்கு மாமியார் புரியும் மரியாதை மரபுகளை விளக்கி நின்றது. அன்புரிமைகள் அறிவுநலம் சுரந்துள்ளன.

"மாற்கடல் அன்ன மனத்தவள் ஓடும்
பாற்கடல் அன்னதுஓர் பாயல் அணைந்தான்"

என்றது போக நுகர்ச்சியை குறித்துவந்தது. கரைகடந்த காமவேட்கையுடையராய்ப் பெருங்காதல் மண்டி நின்ற இருவரும் ஒருங்கே ஒன்றி உயர்போகங்களை நுகர்ந்தார் என இன்பப்பேற்றில் அன்பு மணத்தை இனிது முடித்தார்.

இங்கே குறித்துள்ள கலியாண நிகழ்ச்சிகளால் கம்பர் காலத்திற்கு முன்பே இந்நாட்டில் திருமணச் சடங்குகளும் வைதிகக் கிரியைகளும் பெருகி யிருக்கின்றன என்று தெரிகின்றது.

கலியாணத்தில் மிகவும் முதன்மையாகக் கருதப்படுகிற தாலிகட்டுதலை ஈண்டு விளக்கமாகக் குறிக்கவில்லை சடங்கு முறைகளுள் உள்ளே அடங்கியுள்ளது. பெண்ணின் கழுத்தில்

மாப்பிள்ளை கையால் திருநாண் பூட்டுதல் பின்னுள் நிகழ்ச்சியாய் எண்ணவும் இடமில்லை. முன்னுளே அந்நாண் வழக்கில் உள்ளமை நூலில் வழங்கப்பட்டுள்ளது.

"மான் அணி நோக்கினர் தம் மங்கலக் கழுத்துக்கெல்லாம், தான் அணி" எனச் சீதையைக் குறித்திருத்தலால் திருமங்கலியம் பண்டே மருவியுள்ளமை அறியலாகும்.

அன்பு நலம் கனிந்த இன்பமணமாகக் கவி இதனை இசைத்திருக்கிறர். நிகழ்ச்சிகள் யாவும் தமிழியல் தழுவித்தழைத்திருக்கின்றன.

## களவும் கற்பும்

இராமனும் சீதையும் முதலில் எதிர்கண்டு முதிர்காதல் கொண்டது களவொழுக்கமாம். பின்பு பெற்றோர் கொடுக்க உற்றூர் அறிய அங்கியங்கடவுள் சான்றாக இங்கே மணந்தது கற்பொழுக்கமாய்க் கனிந்து உலகியல் நெறியை உணர்த்தியுள்ளது.

கற்பெனப் படுவது கரணமொடு புணரக்
கொளற்குரி மரபிற் கிழவன் கிழத்தியைக்
கொடைக்குரி மரபினோர் கொடுப்பக் கொள்வதுவே.
(தொல்காப்பியம், கற்பியல், 1)

கற்பு மணம் இதனுல் அறியலாகும். கரணம் என்றது வேள்விச் சடங்குகளை. முதன்மையான களவு மணத்தில் கரணங்கள் கிடையா. மக்கள் வான்முறை திறம்பி வஞ்சநெஞ்சராய் மருவிய பின்புதான் அவை பெருகி வரலாயின.

" பொய்யும் வழுவும் தோன்றிய பின்னர்
ஐயர் யாத்தனர் கரணம் என்ப." (தொல்காப்பியம்)

கலியாணச் சடங்குகள் விரிந்தமைக்குக் காரணம் இதனுல் காணலாகும். ஐயர் என்றது அரிய தவமுடைய இருடிகளை. யாத்தனர்=கட்டி வைத்தனர். பொது மக்கள் நெறிமுறை வழுவாதபடி முதுமக்கள் சில நியமங்களை விதித்து வைத்தார். அவ்வைப்புரிமைகளை வழக்கமாகக் கொண்டு வையம் வழங்கி வருகின்றது.

மதிநலம் புரிந்த விதிமுறைப்படி இங்ஙனம் திருமணம் நடந்தது. விதேகநாடு முழுவதும் பெருமகிழ்ச்சி யடைந்தது.

அதிசய அழகியாகிய சீதையோடு அமர்ந்து அரிய போகங்களை நுகர்ந்து மாமன் மாளிகையில் இராமன் உவந்திருந்தான். உயர்ந்த வரிசைகள் பல விழைந்து புரிந்து மிகுந்த ஆர்வத்தோடு சனகன் உபசரித்து வந்தான். தம்பதிகள் விண்பதிகளாய் விளங்கியிருந்தனர்.

## கோசிகர் அகன்றது.

மணம் முடிந்தவுடன் கோசிகர் இராமனுக்கு ஆசி மொழிகள் கூறித் தசரதனிடம் விடைபெற்று இமயமலைக்குச் சென்றார்.

## இராமன் திருவயோத்திக்கு மீண்டது

சிலநாள் கழிந்த பின் சனகன்பால் விடைகொண்டு தசரதன் திருவயோத்திக்கு எழுந்தருளலானான். படை பரிவாரங்கள் யாவும் உடன் எழுந்தன. அருமைக் குமரர்கள் நால்வரும் மனைவிமாருடன் இரதங்களில் அமர்ந்து தந்தை பின் தொடர்ந்தனர். சனக மன்னன் முதலாக மிதிலைவாசிகள் அனைவரும் பரிவு மீதூர்ந்து சிறிது தூரம் உடன் வந்து வழியனுப்பினர். பிரியமுடியாமல் பிரியமாய் உருகி நின்ற சனகன் முதலானவரை அரிதில் நிறுத்திவிட்டு உயர்ந்த தேரில் ஏறிச் சேனை தளங்களுடன் தசரதன் திருவயோத்தி நோக்கி வந்தான்.

## பரசுராமர் எதிர்ந்தது.

சக்கரவர்த்தி சதுரங்க சேனைகள் புடை சூழ, மக்கள் அயல் வர மிக்க மகிழ்ச்சியுடன் வருங்கால் இடையே பரசுராமர் மூதிர் கோபமாய் மூண்டு ஓடி வந்தார். அரசகுல வயிரியான அந்தப் பரசுபாணியைக் கண்டதும் மன்னன் மறுகி வணங்கி மன்னிக்க வேண்டினான். அவனது பரிவுநிலை பரிதாபமாய் இருந்தது.

அவர் யாதும் இணங்காமல் விரைந்து வந்து இராமன் எதிரே அடுந்திறலோடு சினந்து நின்றார். தம் தந்தையை அரசன் ஒருவன் கொன்றுவிட்டமையால் அன்று முதல் சத்திரிய குலத்தவர் மேல் கொடுங்கோபங்கொண்டு அம்மரபில் தலை சிறந்தவரெல்லாரையும் நிலை குலைத்துக் கருவறுத்து வந்தவர் இராமன் இங்கே வந்துள்ளதைக் கேட்டு இந்தவாறு இடையே புகுந்து கொதித்து எதிர்த்தார். கூரிய மழுவாயுதத்தை நேரே நீட்டி ஊழித்தீ போல் உருத்து வெருட்டினார். உக்கிரவீரமாய்ச்சீறி நிற்கின்ற

அவரது கோரநிலையைக் கண்டு இராமன் யாதும் அஞ்சவில்லை; ஆயினும் தன் அருகமர்ந்துள்ள அருமைக் காதலியாகிய சீதை அலமரலடைந்தாள். அவளது நிலைமையை நோக்கி இடது கையால் தட்டி யாதும் கலங்காதே என்று ஆறுதல் கூறித் தேரில் இருந்தபடியே நேரில் நிற்கும் பகையைப் புன்முறுவலோடுபுரிந்து நோக்கினன். அந் நோக்கம் "உமக்கு இது பொழுது என்ன செய்ய வேண்டும்?" என்று எதிர் வினவியது போல் எதிரிக்குத் தோன்றியது. "ஏ தசரதன் மகனே! என் நிலைமை தெரியாமல் செருக்கிச் சிறுநகை செய்கின்றாய்! அரசர் பலருடைய தலைகளைத் துமித்து எறிந்தது இம்மழு; உன்னையும் கொலை புரிய வந்துள்ளது" என்று கொடுமொழி கூறினர். அவருடைய உரைகளுள் சில அடியில் வருவன.

### பரசுராமர் உரைத்தது.

ஊனவில் இறுத்த மொய்ம்பை நோக்குவது ஊக்கம் அன்றால்
மானவ! மற்றும் கேளாய் வழிப்பகை யுடையது உம்பால்
ஈனமில் எந்தை சீற்றம் நீக்கினன் என்ன முன்னோர்
தானவன் அனைய மன்னன் கொல்லயான் சவித்து மன்னோ. (1)

மூவெழு முறைமை பாரின் முடியுடை வேந்தை யெல்லாம்
மேவெழு மழுவின் வாயால் வேரறக் களைகட்டு அன்னார்
தூவெழு குருதி வெள்ளத் துறையிடை முறையின் எந்தைக்கு
ஆவன கடன்கள் நேர்ந்தேன் அருஞ்சினம் அடக்கிப் போந்தேன். (2)

உலகெலாம் முனிவர்க்கு ஈந்தேன் உறுபகை ஒடுக்கிப் போந்தேன்
அலகில்மா தவங்கள் செய்தேன் அருவரை இருந்தேன் ஆண்டைச்
சிலையைநீ இறுத்த ஓசை செவியுறச் சீறி வந்தேன்
மலைகுவென் வல்லையாகில் வாங்கிடித் தனுவை என்றான். (3)

(பரசுராமப் படலம், 32-34)

சீறிவந்த வீரர் இவ்வாறு கூறி நின்றார். தம்மைக் கண்டும் யாதும் அஞ்சாமல் இராமன் அமர்ந்திருத்தலை நினைந்து சினந்து இங்ஙனம் பேசியிருக்கிறார். பேச்சில் அவரது வரலாற்று முறையும் வன்மமும் புலனைப் பழி தீர்க்குமுறையில் கொலை நோக்கம் குவிந்திருக்கின்றது.

"நீ இளங்குமரன்; என்னை நீ நன்கு உணர்ந்துகொள்ள வில்லை; அரிய ஒரு வில்லை வளைத்திருக்கிறோம் என்று வீணே

செருக்கி நில்லாதே; என்னைக் கண்ட அரசர் எவரும் எமனைக் கண்டவர்போல் இழிந்து தொலைந்துள்ளார்; நீயும் அழிந்து படுவாய்! புது மணம் புரிந்து வருதலைக் கண்டு இதுவரை இரங்கி நின்றுள்ளேன்; நான் உனது குலவிரோதி; என் தாதையை உன் மரபில் ஒருவன் கொலைபுரிந்தமையால், இருபத்தொரு தலை முறையாக அரசர் மரபைக் கருவறுத்து அந்த உதிர வெள்ளத்தில் பிதிர்க்கடன் தீர்த்திருக்கிறேன்; பின்பு சிறிது சினம் ஆறி நான் கவர்ந்திருந்த பூமியைக் காசிபருக்குத் தானம் செய்துவிட்டு இமயமலைச் சாரலில் தவம் புரிந்துள்ளேன்; நீ ஒருவன் இடையே தலை சிறந்த வலியுடையனாய்த் தழைத்து வருதலைக் கேள்வியுற்றேன்; ஒரு பொருளாக மதியாமல் பொறுத்திருந்தேன். மிதிலையில் நீ வில்லை ஒடித்து வீரத்திறல் செய்துள்ளதை அறிந்தேன்; அன்றே அங்கு வரமுடியவில்லை; இன்று ஈண்டு உன்னை வென்று தொலைக்க விரைந்து வந்துள்ளேன்" என்று வெகுண்டு துடித்து முனைந்து நின்றார். அவரது சினமும் சீற்றமும் தீர மொழிகளும் தேவர் முதல் யாவருக்கும் அச்சத்தை விளைத்தன. வந்தவுடனே மழுவாளை வீசாமல் இந்த அளவில் நின்று பேசியதே பெருவியப்பாயது.

"மலைகுவென் வல்லை ஆகில் வாங்கிடு இந் தனுவை"

என்று முடிவில் கூறிய இம்முடிவுரை போர்முறையில் முதலில் ஒரு வீர சோதனை புரிய அவர் விரும்பியுள்ளமையை விளக்கி நின்றது. தனு = வில். இத் தனு என்னும் சுட்டு அதன் தெய்வத் தன்மையை உய்த்துணர வந்தது. அது திருமால் கையில் இருந்தது; பெருமகிமை யுடையது. அருந் திறலாளரான அவரிடம் அது சிறந்த உரிமையாய் வந்தது. மனிதர் எவரும் அதனை வளைக்க முடியாது என்னும் உறுதியால் அங்ஙனம் துணிவுரை யாடினார்.

நீ வல்லவனாயின் இவ்வில்லை வாங்கி வளை; இல்லையானால் உன்னைக் கொல்லுவேன் என்னும் குறிப்புத் தோன்றச் சொல்லினார். வாங்குதல் = வளைத்தல். ஈங்கு அது சிலேடையாய் விழுந்தது. மலைதல் = பொருதல், கொல்லல். போர் தொடுத்து உன்னைச் சீரழிப்பேன் என்னும் பொருளோடு பேரழிப்பேன்

எனவும் அது மருவி நின்றது. வென்று தொலைத்துக் கொன்று முடிப்பேன் என்பதாம்.

சத்திரிய குலத்தவர் மேல் பரம்பரையாக அவர்க்குள்ள கோபக் கொதிப்பு இங்கே குதிகொண்டு நின்றது.

கண்டவரெவரும் காதல் மீதூர்ந்து ஆதரவுகூரத் தக்க பேரழகன்; இளமனைவியை அருகணைத்துப் புதுமணக்கோலத்துடன் அதிமணமாய் இனிமை சுரந்து வருகின்றான்; அதிசய சவுந்தரியம் நிறைந்த அந்தத் திருமுகப் பொலிவை நோக்கியும், ஒரு சிறிதும் இரங்காமல் கறுவுமீக்கொண்டு கடுத்து மூண்டார்.

## பரசுராமரை வென்றது.

அவரது சீற்றத்தையும் ஆரவாரத்தையும் ஆங்காரத் துடிப்பையும் குறித்து யாதும் கவலாமல் நகைமுகத்தனாய்த் தேரில் நின்றபடியே "தாரும் வில்லை" என்றான். அவர் கொடுத்தார். உடனே அதனை வளைத்து அம்பு ஒன்று தொடுத்து நேரே நீட்டி இவ்வென்றி வீரன் விரைந்து நின்றான். சிலை வளையவே தம் தலை விழுந்தது என்று அவர் நிலை குலைந்து மருண்டார். அப்பகையாளியை நோக்கி இக்குலமகன் கூறிய வீரமொழிகள் வியப்பும் நயப்பும் தோய்ந்து மேன்மை சுரந்து மிளிர்கின்றன.

## இராமன் வில் வாங்கியது.

என்றனன் என்ன நின்ற இராமனும் முறுவல் எய்தி
நன்றொளிர் முகத்தனாகி நாரணன் வலிதின் ஆண்ட
வென்றிவில் தருகஎன்னக் கொடுத்தனன் வீரன்கொண்டான்
துன்றிருஞ் சடையோன் அஞ்சத் தோளுற வாங்கிச் சொல்லும்

## பரசுராமனை நோக்கிச் சொன்னது.

பூதலத்து அரசை எல்லாம் பொன்றுவித்தனை! என்றாலும்
வேதவித்து ஆய மேலோன் மைந்தன்நீ விரதம் பூண்டாய்
ஆதலின் கொல்லல் ஆகாது; அம்பிது பிழைப்பது அன்றால்
யாதிதற்கு இலக்கமாவது? இயம்புது விரைவின் என்றான்.

(பரசுராமப்படலம், 35, 36)

எதிரியின் வில்லை வாங்கி வளைத்து அம்பு தொடுத்துநாண் மடுத்த கையைக் காதளவும் ஈர்த்துப் பிடித்துக்கொண்டு இராமன்

உரையாடி நிற்கும் கம்பீரமான வீரக்காட்சியை இங்கே நேரே பார்க்கின்றோம்.

1. "முறுவல் எய்தி நன்று ஒளிர் முகத்தன் ஆகி"

என்றது இவனது அகத்தையும் அற்புத அமைதியையும் விளக்கி நின்றது. முறுவல்—புன்னகை.

போர் தொடுத்து உன்னைக் கொல்லுவேன் என்று பகைவன் சொல்லவே இவன் நகை புரிந்தான்.

யாரும் அச்சமும் திகிலும் அடையவேண்டிய இடத்தில் இவன் யாதும் அஞ்சாமல் முறுவல் செய்து நின்றது பெரிய அதிசயமாகின்றது. அம்முறுவலின் கருத்தும் குறிப்பும் தெளிவாக வெளியே அறிய அரியன. பலரும் பலவகையாகப் பொருள் செய்துகொள்ளும்படி அது நிலவியுள்ளது. அந்தச் சிறு சிரிப்பு எதிராளிக்குப் பெருநெருப்பாய் முறுகி நின்றது.

என்ன கர்வம்! என்ன திமிர்! என்ன அலட்சியம்! என எண்ணச் செய்தது. வந்தவரது நிலைமையை எண்ணி எழுந்த முறுவல் நின்றவனது நீர்மையை விளக்கியருளியது.

ஒளிர் முகத்தன் என்றமையால் அதுபொழுது அம்முக மண்டலம் வீரப்பொலிவோடு விளங்கியுள்ளமை வெளியாயது.

போர்வீரத்தில் இவ்வண்ணலுக்குள்ள ஆர்வ நிலையை நகையும் உவகையும் நன்கு காட்டின ஆயினும் அவற்றின் வகையை வகுத்துணரவேண்டும். எதிரியின் அட்டகாசங்கள் இவனது மந்தகாசத்தின் முன் வெட்கி இழிந்து உட்கி விளிந்தன.

"நாரணன் வலிதின் ஆண்ட வென்றிவில்"

என்றது முன் அவர் வியந்து கூறியதை அடியொற்றி எழுந்தது. அவன் வலிதின் ஆண்டது இவன் எளிதின் ஆள வலிய வந்தது என உறவுரிமை தொனித்து நின்றது.

வில்லைக்கையில் வாங்கி ஒல்லையில் வளைக்கவே அவர் உள்ளம் கலங்கினர். நாணில்கணை தொடுக்கவே அவர் ஊணில் உயிர் துடித்தது.

"துன்று இரும் சடையோன் அஞ்சத் தோள் உறவாங்கிச் சொல்லும்" யாண்டும் எல்லாரையும் அச்சுறுத்தி என்றும் வென்றி வீரராய் வீறுகொண்டு திரிந்த பரசுராமர் ஈண்டுப் பரிசு குலைந்து